# வேர் ஊன்றி விழுதுபரப்பும் ஆலமரம்

அளவெட்டி கிராமம் பற்றிய வரலாற்றுத் தொகுப்பு



தொகுப்பு: பண்டிதர்.க.நாகலிங்கம்



வெளியீடு: அளவெட்டி மஹாஜன சபை

உ

# "வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்"

## எதற்காய் நூலுக்கு இப் பெயர் அதற்கோர் விளக்கம்!

"ஆல் போல் தளைத்து அறுகு போல் வேரூன்றி நீடு வாழ்க" என ஆன்றோர்கள் வாழ்த்துரைப்பது வழமை. "ஆலும் வேலும் பல்லுக்குறுதி நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி" என நாலடியார் மற்றும் திருக்குறள் பற்றிய மேன்மைப்படுத்தல்களிலும் ஆல் என்பது தனியிடத்தைப் பெறுகின்றது. நவீன இலக்கியவாதிகளும் குறிப்பாக திரை யிசைக் கவிஞர்களும் ஆலமரத்தை தமது பாடு பொருளாக்கத் தவறுவது கிடையாது. அத்தகைய பல்சிறப்புமிக்கது ஆலமரம். பலமான, ஆழமான, பிறர் நலன் நோக்கிய, ஒப்புவமையில்லாத விடயங்களை உருவ கிக்கும் போதே "ஆல்" எனும் பதம் எடுத் தாளப்படுவதை அவதானிக்கக் கூடியதாக வுள்ளது.

எனவே ஈழ மணித்திரு நாட்டின் எழில் மிகு ஊர்க்கோலங்களின் மத்தியபுள்ளி யாக மதிக்கப்படக்கூடிய, மதிக்கப்படும் அளவெட்டியூரைப்பற்றிய இவ் வரலாற்றுப் பதிவுக்கும் **"வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்"** எனப் பெயரிடுவதும் உவமிப்பதும் சாலப் பொருந்தும் என்றே எண்ணுகின்றோம்.

எவ்வாறு ஒரு ஆலமரம் தான் வேரூன்றி யுள்ள மண்ணிண் மையப்புள்ளியிலிருந்து வியாபித்துக் கிளைபரப்பி நிழல் பரப்பு கின்றதோ அது போன்றே அளவெட்டி மண்ணும் இலங்கையின் வடக்கு கிழக்கு மாகாணத்திலே பரப்பளவு கூடியதொரு கிரா மமாகப் பல தொலைவுக்குப் பரந்துள்ளது. அளவெட்டி எனும் பெயரும் அளவில் எட்டமுடியாதது எனும் விதத்தில் அமைந்தது எனவும் கருத்து கொள்ளத்தக்கது.

ஆலமரத்தின் விழுதுகள் போல் அள வெட்டியைத் தாங்கி நிற்கும் தூண்களாகக் கலை கலாசார பண்பாட்டு செழுமங்கள் விளங்குகின்றன. அதேபோன்று ஆலமரத்தின் விழுதுகள் தம் தாய் மரத்தில் இருந்து பெற்ற, பெறும் சத்தியை, வளத்தைக் கொண்டு எவ்வாறு பின் புதியதோர் மரமாய்ப் பொழிவு பெற்றுத் தாய்மரத்தைத் தாங்கு கின்றதோ அதே போன்றே எமது ஊர் பிறந்த குடிகள் அனைவரும் குறிப்பாக இந் நூலின் கண் இடம்பிடித்தோர் எம் ஊரின் விழுதுகளாகி நின்று புகழ் பரப்புகின்றனர்.

பெரியதொரு ஆலமரத்தை உருவாக்கும் வித்தோ மிகச் சிறிது. அது போன்றே எம் ஊரின் பெருமையை உலகில் பரவச் செய்த உத்தமர்களும் எம் கிராமத்து மண்ணிண் வாசனை மட்டுமல்ல தூசுகளும் ஒன்றாகவே ஒட்டிக் கொண்ட ஓலைக் குடிசைகளுக் குள்ளும் விவசாய குடும்பங்களிலும் இருந்தே பெரும்பாலும் வெளிப்பட்டனர்.

ஆலமரத்தின் சிறிய வித்தானது தனது மரத்தை நாடி வரும் பறவைகள் மூலம் பல தூரம் பறந்து சென்று பரவிக் கிணற்றுக் கட்டுக்களிலும் ஆலயக் கோபுரங்களிலும் என ஒவ்வாத சூழ்நிலையிலும் முளைவிட்டு வளருவது போல எமது மண்ணின் மைந்தர்களும் பூமிப்பந்தின் பக்கங்கள் எங்கும் பரவியுள்ள இடங்கள் எல்லாம் சென்று வேறு வேறு பண்பாட்டு கலாசார விழுமியங்களைக் கொண்ட அந்த மண்களிலும் எமது கலாசாரப் பெருமையை, ஊரின் பெருமையை உலகறியச் செய்து புகழ்பரப்பி வருவது கண்கூடு.

ஆலமரத்தை நாடி இளைப்பாற வரும் குருவிகளும் பறவைகளும் அம் மரத்தில் தம் கூடுகளைக் கட்டி அம் மரமே தம் தாய் வீடென எண்ணி வாழ்வது போல் எம்மூரும் பல தவப் புதல்வர்களை மருகர்களாகவும் வருகர்களாகவும் தத்தெடுத்துப் பெருமை கொண்டது.

நீண்ட தூரம் பயணித்துக் களைத்துப் போன மக்கள் இளைப்பாற ஆலமர நிழல் கிடைத்து மகிழ்வது போல அந் நாளில் மாருதப்புரவீகவல்லி தொடக்கம் சாதாரண மக்கள் வரை நாடித் தேடி வந்த நற்றவ மண்ணாய் அளவை மண் அவர்களுக்கு ஆறுதல் கொடுத்து நின்றது.

ஆவினங்கள் ஈன்றதன் பின் இடும் தொப்புள் கொடியை ஆலமதைத்தில் கட்டினால் அதிக பால் சொரியும் என்பது ஐதீகம். அது போன்றே எக்குடி எவ்வூர் பிறந்தோரும் அளவெட்டி மண்ணுக்கு வந்து சேர்வாராயின் அவர் பல் சிறப்புப் பெற்றவராகவே மிளிர்வார் என்பதற்குப் பல நடைமுறைப் பாத்திரங்கள் சான்றாக நிற்பதையும் நாம் காணலாம்.

எனவே அளவெட்டி மண்ணை ஓர் ஆலமரம் என உவமிப்பதும் இந் நூலுக்கு அது தொடர்பில் **"வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்"** எனப் பெயரிடுவதும் சாலப் பொருந்தும் என்பதில் இரு கருத்துக்கு இடமில்லை.

— மலர் அமைப்புக் குழு
அளவெட்டி மகாஜன சபை
மற்றும் மகாஜன சபை கலைஞர்
வட்டம்





## பதிப்புரை

# வழி காட்டும் மொழிகாக்க விழிகாக்கும் இமையாவோம்

மொழியின் தனித்துவம் என்பது அந்தந்த கலை கலாச்சாரங்களினால் தான் தனித்துவப்படுத்தப்படுகிறது. அந்தவகையில் எமது மொழியினை பாதுகாக்க கலை கலாச்சாரத்தினை பதிவுகளாக்குவது கட்டாயமான ஒன்றாகும். உலகின் ஒளியை உணர உதவும் விழியின் ஒளியை துலக்க இமைக்கும் இமைபோல காலத்துக்கு காலம் நாமும் எமது பண்பாட்டு கலை இலக்கியங்களை பதிவு செய்வது அவசியமாகும்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வள்ளுவன் வாழ்ந்தார். வளமான வாழ்விற்கு வழிகாட்டியாக திருக்குறளை தந்தார். அது பதிவாக இருந்தபடியால்தான் இன்றும் அது நின்று நிலைக்கின்றது. 80 இற்கும் மேற்பட்ட மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு பல நாடுகளில் பலருக்கு வழிகாட்டியாக இருக்கின்றது. அதுபோலவே பதிவுகள் காலத்தின் கண்ணாடி அவை பாதுகாக்கபடவேண்டியவை.

**"உழுதுவாரடித்த காணியும் எழுதிவைக்காத கணக்கும் எதற்கும் உதவாது"**

உடுக்கை, கரகம், காவடி, கம்படி, சிலம்படி, நாட்டார் பாடல், கூத்து, தெருக்கூத்து அனைத்தும் இருந்த அளவெட்டியில் பதிவுகள் இல்லாததால் சிதைந்துபோய்விட்டது. சிந்தித்துப் பார்த்ததால் சிந்தையில் தோன்றியது சிதையாமல் பார்ப்பதற்கு பதிவுகள் தேவை. பண்டைய பண்பாட்டை பதிவுசெய்தால் முந்தையர் வாழ்வின் முழுமை தெரியும். சந்ததிகள் சிதறியது சாதனைகள் மறைந்தது விந்தையென்று எண்ணி விலகுகின்றது தமிழன் தனித்துவம்.

நம்மவர் பதிவுகளை நாங்கள் பதிவதன் மூலம் நாளைய சமுதாயம் நன்மைகள் அடையும் என்பதனை கருத்திற்கொண்டு **"வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்"** எனும் நூலின் வழியாக நாமெடுக்கும் இம்முயற்சி நாளையும் தொடரவேண்டும். நாம் கொடுக்கும் இம்முதலீடு பாதுகாக்கப்படவேண்டும். தொடர்ந்தும் பல பதிவுகள் வெளிவரவேண்டும். இதற்கான முயற்சிகளை அளவெட்டி மகாஜன சபை மற்றும் மகாஜன சபை கலைஞர் வட்டம் தொடர்ந்தும் முன்னெடுக்கும் என்ற நம்பிக்கையுடன் இப்பணியைத் தொடங்குகின்றோம்.



இங்ஙனம்

**திரு. திருமதி சிவபாலன்** தேவகுமாரி

**மற்றும் பிள்ளைகள்** சுதர்ணன், சுதர்மா, சுதர்யா

*சுவிற்சலாந்து*

22.10.2010

## வெளியீட்டுரை

# இது முடிவல்ல, ஆரம்பமே!

வரலாற்றைப் பதிவென்பது முடிந்துவிடக்கூடியதும், முற்றுப்பெற்றுவிடக்கூடியதுமான இலகுவான காரியமல்ல. அதிலும் கல்வி, கலை, கலாச்சாரம், பாரம்பரியம் என பல்வேறு பரிமாணங்களோடு தொடர்ச்சியாக வளர்ச்சிப் போக்கில் நகரும் எமது அளவெட்டிக் கிராமத்தின் வரலாற்றை முழுமைப்படுத்தி பதிய முயல்வதென்பது இலகுவில் நிறைவுபெறக்கூடிய விடயமுமல்ல. எமது அறிவுக்கு எட்டிய வகையில் தற்போது வாழும் எமது கிராமத்தின் மூத்த பிரஜைகளில் மதிப்புக்குரிய பண்டிதர் க. நாகலிங்கம் அவர்களே எமது கிராமத்தின் வரலாற்றை ஓரளவு அறிவுபூர்வமாக அறிந்துவைத்துள்ள மனிதராகத் திகழ்கின்றார். மூப்பும், வயோதிபமும் அவருக்கும் விதிவிலக்கல்ல என்பதால், அவராலும் வரலாற்றை முழுமையாக நினைவுபடுத்தி பதியமுடியாமற் போயிருக்கலாம். தன் காலத்தில் வாழ்ந்த தன்னால் நன்கு அறியப்பட்ட புலமையாளர்களின் பதிவுகளை காத்திரமாகப் பதிந்துள்ள பண்டிதர் க. நாகலிங்கத்தின் இப்பணி எமது வரலாற்றைப் பதியும் முயற்சியின் முதற்படி. இப்பணி தொடரும். எனவே இத்தொகுப்பில் தவறவிடப்பட்ட அனைத்து விடயங்களும் எமது இரண்டாவது பதிப்பில் நிச்சயம் இடம்பெறும். எமது கிராமத்தின் புலமையாளர்களில் கடந்த சந்ததிக்குரியவர்களை இந்நூலினூடாக நாம் நினைவுபடுத்தியிருக்கின்றோம்.

தற்போதைய சந்ததிக்குரிய பல புலமையாளர்களின் தரவுகள் எம் கைவசம் இருந்தபோதும் அவற்றை இந்நூலில் சேர்த்து முழுமை செய்யமுடியாமைக்கு மனம் வருந்துகின்றோம். முழுமை நோக்கிய எங்கள் அவா இந்நூலின் வெளிவருகைக்கு முட்டுக்கட்டையாக அமைந்துவிடக்கூடாது என்பதனால் இயன்றவரை முழுமை செய்து எங்கள் முதலாவது பதிப்பை தங்கள் கைகளில் தந்திருக்கின்றோம். இது தொடர்பான ஆக்கபூர்வமான விமர்சனங்களையும் கருத்துக்களையும் மேலதிக தகவல்களையும் தாங்கள் எம்மோடு பகிர்ந்து கொள்ளும் பட்சத்தில் எமது இரண்டாது பதிப்பு இன்னும் செழுமை பெறும் என்பது எமது நம்பிக்கையாகும்.

மீண்டும் தொடங்கும் மிடுக்கு என நம்மூர் கவிஞன் மகாகவி உருத்திரமூர்த்தி உரைத்ததுபோல் எமது கிராமத்தின் பழமையையும் செழுமையையும் பண்பாட்டுச் செழிப்பையும் பாதுகாக்க விளையும் எமது மகாஜன சபை மற்றும் மகாஜன சபை கலைஞர் வட்டம் ஆகியவற்றின் முயற்சியின் விளைவாக சுவிஸ் வாழ் அளவெட்டி மைந்தன் செல்லத்துரை சிவபாலன் நிதி அனுசரணையில் வரலாற்றைப் பதியும் எமது பணி தொடர்ந்து செல்லும். காலவர்த்தமான பரிமாணங்களுக்கேற்ப இணையத்தளம், இறுவட்டுக்களென எமது வரலாற்றுப் பதிவுப் பணி அடுத்த பரிமாணத்திலும் நகர்ந்துகொண்டிருக்கின்றது. எனவே தவறவிட்ட குறிப்புக்கள் தொடர்பில் கவலை கொள்ளாது எம்மோடு கைகோர்த்து கருத்துக்களைப் பரிமாறுங்கள். அடுத்த பதிப்பு இன்னும் சிறப்பாக அமையும் என்பதில் எள்ளளவேனும் எமக்கு சந்தேகமில்லை.

நன்றி

**அளவெட்டி மகாஜன சபை மற்றும்**
**மகாஜனசபை கலைஞர் வட்டத்தினர்**

# வரலாற்றைப் பதியும் முயற்சி தொடர வாழ்த்துக்கள்

யாழ். குடாநாட்டில் வலிகாமம் வடக்கு பிரதேச செயலர் பிரிவில் குடிசனச் செறிவு நிறைந்த ஊர்களில் அளவெட்டியும் ஒன்றாகும். இதன் கிழக்கு எல்லைப்புறம் ஒரு பகுதி வயல்களும் குளங்களுமாகவும் மிகுதி ஊர்க்குடியிருப்புக்களாகவும் இருக்கின்றன. இதன் வயல் சார்ந்த எல்லைக் கிராமங்களில் கந்தரோடையும் ஒன்றாகும். அயற்கிராம மான கந்தரோடைக்கும் அளவெட்டிக்கும் உள்ள தொடர்புகளை வரலாற்றுத் தொடர் பிலும் கல்வித் தொடர்பிலும் சமூக, பொரு ளாதாரத் தொடர்பிலும் ஏன் கலைத்தொடர் பிலும் ஆராய்ந்தால் நீண்டுவிடும். ஆதலால், சிறிய கண்ணோட்டத்தைப் பார்ப்பதே எனது கருத்தாகும்.

முதலில் அளவெட்டிக்கும் கந்தரோ டைக்குமுள்ள அறிந்த தொடர்புகளைப் பார்ப்போம். கந்தரோடை கி.மு. 2000ஆம் ஆண்டுகளுக்கு முற்பட்ட நாகரிகக் குடியிருப் பாகும். இங்கு தமிழர்களே வாழ்ந்தார்கள் என்றும், அவர்கள் சைவத்தையும் பௌத்தத் தையும் பேணியிருந்தனர் என்றும் வரலாற்று ஆசிரியர்கள் கூறுவர். கந்தரோடையில் கிடைத்த நாணங்களில் சில இந்தியத் தமிழர் நாணயங்கள் என்றும் கூறப்படுகின்றது. பண்டைய காலத்தில் கீரிமலைக்கும் கந்த ரோடைக்கும் படகு சேவை இருந்திருக்க வேண்டும் என்றும், சீன வியாபாரிகள் கீரிமலையிலிருந்த அளவெட்டி வடக்குப் பகுதியில் வந்து தரித்து பின் இப்பொழுது பினாக்கை என்று சொல்லப்படும் இடமூடாக கந்தரோடையை அடைந்திருக்கலாம் என்று சிலர் கருதுவர். முதலில் தரித்த இடம் இப் போதைய சீனன்கலட்டி என்றும், சீனாவி லிருந்து வந்தபடியால் பின் தரித்த இடத்தை பினா என்றும் அது பினாக்கையாக மாறி யிருக்கலாம் என்றும் சொல்வர். கந்த ரோடையில் எடுக்கப்பட்ட நாணயங்கள் போல் பினாக்கைப் பகுதியிலும் நாண யங்கள் எடுக்கப்பட்டதென வரலாற்றுக் குறிப்புக்கள் உள்ளன. மேற்குறித்த கருத்துக்கள் யாவும் சில குறித்த சரித்திர ஆய்வாளர்களின் கருத்துக்களே ஆகும்.

இனி நாம் அளவெட்டிக்கும் கந்தரோ டைக்குமுள்ள கல்விப் பாரம்பரியங்களைப் பார்ப்போம். கந்தரோடையில் இரு கல்விக் கூடங்கள் ஏக காலத்தில் எழுந்தன. இரண்டு கல்விக் கூடங்களிலும் அளவெட்டியைச் சேர்ந்த மாணவர்கள் 1940 தொடக்கம் கற்று வந்தார்கள், இன்றும் கற்று வருகிறார்கள். இவ்விரு கல்விக் கூடங்களான ஸ்கந்தவ ரோதயக் கல்லூரி தமிழ்க்கந்தையா வித்தி யாலயம் ஆகியவற்றிலே அன்று சுதேசக் கல்வி மூலமும் ஆங்கிலக் கல்வி மூலமும் கற்பித்தல்கள் நடைபெற்றன.

இன்று பல்கலைக்கழகங்களிலும் வேறு அரச உயர் பதவிகளிலும் இருக்கும் அளவெட்டி வாசிகளிற் பலர் ஸ்கந்தாவின் பழைய மாணவர்களே என்பது குறிப்பிடத்தக்கது.

அளவெட்டியைச் சேர்ந்த வ.பொன்னம் பலம், சி. பொன்னம்பலம், த. பொன்னம்பலம் போன்றோர் ஸ்கந்தவரோதயாவில் கற்றுப் பின் அங்கே ஆசிரியர்களாகவிருந்து பெருமை தேடியவர்கள். சி. பொன்னம்பலம் கந்தரோடையில் பிறந்து அங்கே படித்து அளவெட்டியில் திருமணம் செய்து வாழ்ந்தவர். மூன்று பொன்னம்பலங்களும் து. செல்வ ரத்தினம் அவர்களும் ஸ்கந்தாவை வளர்த்த வர்கள்; தாங்களும் வளர்ந்தவர்கள். அன்று தொடக்கம் இன்று வரை அளவெட்டி மாண வர்கள் ஸ்கந்தவரோதயக் கல்லூரியில் கற்று பெருமை சேர்க்கிறார்கள். ஸ்கந்தவரோதயக் கல்லூரியில் வ.பொன்னம்பலம் அவர்களிடம் கற்றவர்கள் இன்றும் பொதுவுடமைக் கருத் துக்களில் பற்றுள்ளவர்களாக இருக்கிறார்கள். அளவெட்டியிலே பல மொழிகள் தெரிந்த

பேச்சாளர் என்றால் அது அளவெட்டி வ. பொன்னம்பலம் தான். ஒரு முறை கல்விய மைச்சைச் சேர்ந்த மலலசேகர என நினைக் கின்றேன் அவர் ஸ்கந்தாவின் பரிசளிப்பு விழாவில் சிங்களத்தில் அரைமணித்தியா லத்திற்கு மேல் பேசினார். அவரது பேச்சு முடிந்ததும் அவ்வளவு பேச்சையும் வ.பொன் னம்பலம் அவர்கள் ஒன்றும் விடாமல் தமிழில் மொழிபெயர்த்துப் பேசிச் சிறப்புப் பெற்றார். விண்வெளிக்குச் சென்று திரும்பிய முதல் மனிதன் யூரி ஹகாரினின் ரஷ்ய மொழிப் பேச்சை தமிழிலே பேசினார்.

சி.பொன்னம்பலம் அவர்கள் நாடக, நடனக் கலைகளில் சிறந்தவர். அளவெட்டி யிலும் கந்தரோடையிலும் நாடகங்கள் நடித்தவர். ஒருமுறை அளவெட்டி மாரி யம்மன் கோயிலுக்கு அண்மையில் பீற்றர் கெனம் அவர்கள் பேச இருந்த அந்தக் கூட்டத்தில் சி.பொன்னம்பலம் அவர்கள் சிவநடனமாடிச் சிறப்பித்தார். அளவெட்டி யைப் புகுந்த இடமாகக் கொண்ட சி.பொன் னம்பலம் கந்தரோடையில் வெளிவந்த கலைச்செல்வி பத்திரிகைக்கு உதவி ஆசிரி யராக இருந்து சிறப்பித்துள்ளார். கந்த ரோடைப் புதைபொருள் பகுதிகளுக்குக் கிட்டவே சி.பொன்னம்பலம் அவர்கள் பிறந்த வீடு இருந்தது. அதனாலோ என்னவோ கந்த ரோடை தமிழ்க்கந்தையா பாடசாலையில் ஆசிரியராக இருந்தவேளை தொடக்கம் பழைய நாணயங்கள், மணிகள், மாலைகள் சேர்க்கும் பழக்கத்தில் ஆர்வமாக இருந்தார். இவர் பெருந்தொகை மணிகள், மாலைக் போளங்கள், காசுகள் ஆகியவற்றை கந்த ரோடைப் பகுதி மண்ணிலிருந்து சேகரித்து அவற்றை உள்நாட்டு வெளிநாட்டு வரலாற்று ஆய்வாளர்களுக்குக் காண்பித்துள்ளார். இவர் சேகரித்த பண்டையப் பொருட்கள் எல்லாவற்றையும் சிங்கள இனத்தைச் சேர்ந்த அரச அதிபர் ஒருவரிடம் கையளித்ததாகவும் அவை இப்பொழுது கொழும்பு அருங்காட்சி யகத்திலிருத்தில் இருப்ப தாகவும் அறிய முடிகிறது. சி.பொன்னம்பலம் அவர்கள் கந்தரோடை, அளவெட்டிக் கோயில்களுக்குக் கீறிக்கொடுத்த திரைச்சீலைகள் இன்றும் இருக்கின்றன.

அளவெட்டியைச் சேர்ந்த பவுன் சுந்தரம் என்று அழைக்கப்படும் சுந்தரமூர்த்தி ஆசிரியர் மகாஜனாவில் கற்பித்தவர். இவர் கந்தரோடையிலிருந்த காலத்தில் கலை வளர்க்கும் கந்தரோடையின் கலாநிலையத் தலைவராக இருந்தார். இவர் கலையரசு சொர்ணலிங்கத்துடனும் நாடகங்களில் நடித்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

இப்பொழுது கனடாவில் வசிக்கும் சு.மகாலிங்கம் அளவெட்டியில் பிறந்து கந்தரோடையில் படித்து சுன்னாகத்தில் வாழ்ந்து யாழ் இளம் எழுத்தாளர் சங்கத்தை பலரின் உதவியுடன் ஆரம்பித்தார். இவர் படிக்கும்பொழுது மாதகல் கந்தசாமி ஆசிரி யருடன் இணைந்து பேர்க்கோள் ஆயிரம் எனும் நூலினை வெளியிட்டவர்.

அளவெட்டியில் வாழும் மக்களுக்கும் கந்தரோடை மக்களுக்குமிடையே திருமண உறவுகள் நீண்டகாலமாக இருந்து வருகிறது. தொழில் ரீதியில் இரு ஊர் மக்களும் விவசா யத்தை நம்பியே வாழ்பவர்கள். மருத நிலத்தார் என்றும் மகிழ்ந்து வாழும் ஊர்கள் இவையே. அளவெட்டிக் கிராமத்தின் வரலாற்றைப் பதியும் இம்முயற்சி தொடர என் வாழ்த்துக்கள்.

கலாபூஷணம் சு. துரைசிங்கம்
ஓய்வுநிலை அதிபர்.



# வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம் பார் போற்றும் அரும்பணிக்கோர் வித்து

வேரூர் அளவெட்டிப் பேராண்மை பேசுகின்ற
சீரான நூல் தந்த பேராளன் – பார்போற்றும்
பண்டிதர் நாகலிங்கம் பல்லாண்டு வாழியவே
எண்டிசையும் போற்ற இனிது.

யாழ் குடாநாட்டில் உள்ள பெரிய ஊர்களில் அளவெட்டியும் ஒன்று. நிலப்பரப்பால் மட்டுமல்ல, மூலவளங்கள் அத்தனையாலும் பெரிய ஊர்; பெருமைக்குரிய ஊர். ஆதலால் அளவெட்டி வேரூர் எனப் போற்றப்படத்தக்கது.

நீர்வளம், நிலவளம், மனிதவளம், கல்வி வளம், கலை வளம், தொழில் வளம் முதலான அத்தனை வளங்களும் நிறைந்த வேரூர் இது. *"தள்ளா விளையுளாம் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் சேர்வது நாடு".* என வள்ளுவப் பெருமான் நாட்டுக்குச் சொன்ன எல்லாப் பெருமையும் இவ்வேரூருக்கு உண்டு.

உண்டி கொடுத்து உயிர் காக்கும் உழவர்கள் இயல், இசை, நாடக முத்தமிழ் வித்தகர்கள், கல்விப் பேரறிஞர்கள், அருளாளர்கள், ஞானிகள், சமயச் சான்றோர்கள், சட்டத்தரணிகள், நீதவான்கள், சிற்ப, ஓவிய தொழில்நுட்ப வல்லுநர்கள், அரசியல் பிரமுகர்கள், பாரம்பரிய நவீன வைத்திய நிபுணர்கள் முதலாக ஒரு நாட்டுக்கிருக்கவேண்டிய அத்தனை துறைசார் தக்கார்களும் அன்று முதல் இன்று வரை வாழும் பெருமை மிக்க பேரூர் அளவெட்டி. இத்தனை உண்மைகளையும் ஆவணப் படுத்தி அடுத்த தலைமுறையினரிடம் கையளிக்கும் பொக்கிஷமான "வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்" என்னும் இந்நூலை ஆக்க முற்றும் பொருத்தமானவரான மூதறிஞர், பண்டிதமாமணி க. நாகலிங்கம் அவர்கள் எழுத, அளவெட்டியின் இதய நாதமான மகாஜனசபை வெளியிடுவது பொன்னின் குடத்திற்குப் பொட்டு வைத்தது போன்று என்றும் நிலைத்து நிற்கும் செயற்கரிய செயல் எனப் போற்றாது இருக்கமுடியாது.

*"எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி வாழிய நிலனே"*

என்ற தமிழ் மூதாட்டி ஔவையாரின் வாழ்த்திற்குப் பொருத்தமாகி தன் மூல வளங்களால் அயலூர்களையும் வாழவைத்து "ஈந்து உவக்கும் இனிய பேரூர் அளவெட்டியெனில் அது மிகையாகாது. எனக்கும் அளவெட்டிக்கும் நினைக்க நினைக்க இனிக்கும் தொடர்புகள் நிறையவே உண்டு.

இளவாலை மெய்கண்டானில் அரி ஓம் என என் கையில் பிடித்து "அ" எழுதப்பழக்கி என்னை ஆளாக்கிய கல்விப் பெரும் மூதாட்டி நாகம்மா மாணிக்கம் அவர்கள், எனக்குத் தமிழ் சொல்லித்தந்த பண்டிதர் மா. மாணிக்கம் அவர்கள், கணிதம் கற்பித்த நல்லாசான் அ.அமிர்தலிங்கம் அவர்கள், மானசீகக் குருவாய் அமைந்த அருட்கவி ஐயா அவர்கள், தோன்றாத் துணையாய் இன்றுவரை எனக்கு வாய்த்த நல்லாசான் முதுபெரும் புலவர் வை.க.சிற்றம்பலம் அவர்கள், நல்வழிகாட்டிகளான பண்டிதமாமணி க.நாகலிங்கம் அவர்கள், சைவச்சான்றோன் அ.விஸ்வநாதன் அவர்கள், என் நாடக ஆசான் சின்னையா தேசிகர் அவர்கள் மற்றும் என்னினிய நண்பர்களான கல்வி, கலை, இலக்கிய, சமய, சமூகப் பணியாளர் முதலான இவர்கள் எல்லோரும் என் வாழ்வுக்கு வளமூட்டியவர்கள். பேரூர் அளவெட்டியுடன் இறுக்கமான பிணைப்பை ஏற்படுத்திய அத்தனை பேரையும் வாழ்த்தி வணங்கிப் போற்றுகின்றேன்.

*கலாபூஷணம்*
**சைவப்புலவர் சு. செல்லத்துரை**
*ஓய்வுநிலை அதிபர்,*
*இளவாலை.*



# அறம் காத்த அறிவுசால் பெரியோர் வாழ்ந்த அளவெட்டி

சீரும் திருவும் நிறைந்த புனிதமான திருவூர் அளவெட்டி. பழம்பெரும் பதியாகிய அளவெட்டிக் கிராமம், அறிஞர்களையும், கலைஞர்களையும், விவசாய வித்தகர் களையும் எம்மண்ணுக்குத் தந்த பெருங் கிராமம். கோயில் மணியோசை கேட்டு எழும் பண்பாட்டுப் பாரம்பரியம் நிறைந்த கிராமம். அழகான பெருங் கோவில்களும் சிறிய பல கோவில்களும் வீதிகளில் எல்லைகளில் மூலை முடுக்கெல்லாம் தெய்வ சந்நி தானங்களும் நிறைந்தவூர். பாடுபட்டு உழைப் பவர்க்கே இப்பாரிடம் சொந்தமையா என்ற கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையின் பாவரிக்கு ஏற்ப இவ்வூர் மக்கள் அன்றாடம் பாடுபட்டு உழைக்கும் பண்பாட்டில் வளர்ந்த வர்கள். தங்கள் கிராமத்துப் பிள்ளைகளின் கல்விக்காக பல பாடசாலைகளைத் தோற்று வித்து நல்லறுவடை கண்டவர்கள். நாடு போற்றும் ஆத்மீக வள்ளல்களையும் சட்ட வல்லுநர் களையும் உருவாக்கி பெருமை பெற்ற வர்கள். இத் திருவூரின் பெருமையை மேலும் அடுக்கிக் கொண்டே போகலாம்.

அளவெட்டிக் கிராமத்தில் ஆத்மீக காற்று வீசுகிறது. இங்கு வாழும் மக்கள் தெய்வீகத்தைச் சுவாசிக்கிறார்கள் என்று கூறியவர் சுப்பிரமுனிய சுவாமிகள். அமெரிக்காவில் சைவ ஆதீனம் உருவாகுவதற்கும் ஹவாய் மாநிலத்தில் மிகப்பெரிய சிவன் கோவில் கட்டப்பட்டு வருவதற்கும் அளவெட்டியில் உருவான ஆத்மீக சம்பாஷனையே வித்திட்டதை உலகம் அறியும். அளவெட்டியில் பிறந்து அறவழியில் மக்களை ஆற்றுப் படுத்திய ஆசிரியபிரான் மயிர்வாகனம் அவர்களை நன்றியோடு சமூகம் இன்றும் போற்றுவதைக் காணலாம். இப்பெரியாரின் புதல்வர் உயர் நிர்வாகி அமரர் ஸ்ரீகாந்தா அவர்களை அகில இலங்கையும் நன்கு அறியும். அரச அதிபராக விளங்கிய இப்பெருமகன் செய்த தொண்டுகள் மறக்க முடியாதவை. நல்லை நகர் நாவலர் பெருமானுக்கு உருவச் சிலை அமைத்து ஊர் உலாவாகக் கொண்டு வந்து நல்லூர் வீதியில் பிரதிஷ்டை செய்த பெருமக்களில் பெரியார் ஸ்ரீகாந்தாவின் பங்களிப்பை வரலாறு சொல்லும். யோகர் சுவாமிகளின் மீளா அடியவராக விளங்கிய இப் பெரியார் அறநெறி தவறாத அற்புத மனிதராக விளங்கியவர். இவர் அரச அதிபராக விளங்கிய வேளையில் சமய நிறுவனங்களுக்கு அரச நிலங்களை ஒதுக்குவதில் அக்கறை கொண்டு செயற்பட்டார். அதனால் வன்னிப் பெருநிலப்பரப்பில் பல சமய நிறுவனங்கள் சிறப்புப் பெற்றமை குறிப்பிடத்தக்கது. மயில்வாகனம் ஐயாவின் சகோதரர் அமரர் சரவணமுத்து அதிபரை நினைவுகூர வேண்டியது எம்கடன். திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியாலயத்தில் தலைமை யாசிரியராகப் பணியாற்றிய இப்பெருமகன் சைவவித்தியாவிருத்திச் சங்கத்தின் நிறை வாழ்வு இல்லத்தில் தங்கியிருந்து பணி செய்தவர். தாய் தந்தையற்ற ஆதரவற்ற பிள்ளைகளைப் பராமரித்து உதவியவர். பிள்ளைகளின் வளர்ச்சிக்காக அரும்பாடு பட்டவர். பிற்காலத்தில் யாழ் இந்துக் கல்லூரி ஆரம்பப் பாடசாலையில் அதிபராகப் பணி யாற்றி ஓய்வு பெற்றவர். சைவப் பழமாக விளங்கிய இப்பெருந்தகையும் அளவெட்டி இவ் அவனிக்குத் தந்த நன்கொடை.

மேலும் மட்டக்களப்பு பொத்துவில் பகுதியில் தலைமை ஓவிசியராகப் பணியாற்றி உகந்தை முருகன் கோவிலைப் பராமரித்து உதவிய பெருந் தனவந்தர் ஓவிசியர் மயில் வாகனம் அளவெட்டி மைந்தன் கிழக்கிலங்

கையில் சைவம் காத்த பெருமகன், கதிர்காம யாத்திரிகர்களுக்கு ஆண்டுதோறும் அன்ன தானம் வழங்கித் தொண்டாற்றியவர். இவரது மைந்தன் கனகரத்தினம் பொத்துவில் பாராளு மன்ற உறுப்பினராகப் பின் மாவட்ட அமைச்ச ராக விளங்கியவர். யாழ்ப்பாணத்துப் பெண் களுக்குப் பெருமை சேர்த்த முதல் தமிழ்ப் பெண் பாராளுமன்ற உறுப்பினர் திருமதி. ரங்கநாயகி பத்மநாதன் மயிர்வாகனம் ஓவசியரின் இளைய மகள் என்பது குறிப்பிடத் தக்கது. இவர்கள் அளவெட்டிக்குப் பெருமை தந்தவர்கள். இன்றும் மட்டக்களப்பு திரு நாவுக்கரசர் சிறுவர் இல்லம் இக் குடும்பம் வழங்கிய நன்கொடைக் காணியில் கட்டப் பட்டு நன்முறையில் இயங்குகிறது. இதே போல் எத்தனை எத்தனை அறப்பணியா ளர்களை அளவை மண் பெற்றது. அளவெட்டி சிவசுப்பிரமணியம் மாஸ்டர் (விழிசிட்டி) என்ற தொண்டனை மறக்கமுடியாது. செல்வச் சந்நிதியில் அன்னம் பாலிக்கும் தொண்டில் ஊழியம் செய்தவர்.

கலைநிறைந்த அளவெட்டி மகாவித்து வான்களை, மகாகவியைத் தந்து நிலைத்த பெருமை பெற்றது. எஞ்ஜினியர் முத்தையா முதல் விகடகவி திருநாவுக்கரசு வரை பிறி தொரு கல்விப் பாரம்பரியம் இத்திருவூரில் வளம் பெற்றமை குறிப்பிடத்தக்கது. சைவத் தவமுனி கைலாசபதி (உபஅதிபர்) முதல் எத்தனை மேதைகள் இலக்கணமேதை பண் டிதர் நாகலிங்கம் ஐயா இன்றும் எம்மத்தியில் வாழ்ந்து அளவெட்டியின் அறிவுலகை ஆய் வதைக் காணலாம். இசையால் உலகை ஆளும் கலைப்பாரம்பரியம் இன்றும் இவ்வூரில் தொடர்கிறது. திரு.V.K. நடராசா ஆசானும் அவரது ஆற்றுப்படுத்தலில் வளர்ந்த இசைக் கலைஞர்களும் அளவெட்டி தந்த அற்புத மேதைகளாக விளங்குகின்றனர். அன்றும் இன்றும் புகழ்பூத்த அதிபர்களை அளவெட்டி கல்வி உலகுக்கு வளங்கியமை குறிப்பிடத் தக்கது. இன்றைய மகாஜனா கல்லூரி அதிபர் திருமதி. சி. அனந்தசயனன், யூனியன் கல்லூரி அதிபர், சு. புண்ணியசீலன், மானிப்பாய் இந்துக் கல்லூரி அதிபர் திரு. ச. சிவநேசன், சண்டிலிப்பாய் இந்துக் கல்லூரி அதிபர் திரு. கு. விமலன், இராமநாதன் கல்லூரி அதிபர் திருமதி. ஆனந்தி சிவஞானசுந்தரம், அருணோதயக் கல்லூரி அதிபர் திரு. நா. கேதீஸ்வரன் போன்ற அதிபர்கள் பலர் அளவெட்டியின் சொத்துக்கள் என்பது அள வெட்டிக்குப் பெருமை. முல்லைத்தீவு அரச அதிபராக திரு. நாகலிங்கம் வேதநாயகம் விளங்குவது ஸ்ரீகாந்தா முதல் வேதநாயகம் வரை என்ற நிர்வாகச் சிறப்பைச் சிந்திக்க வைக்கிறது. இப்புண்ணிய கிராமம் பற்றி சிறியளவிலாவது செய்தி தாருங்கள் என வேண்டிய விவசாய வித்தகர் - சமூக சேவையாளர் திரு. வை. சுப்பிரமணியம் (தலைவர், அளவெட்டி மகாஜன சபை) அவர்களுக்கு எனது இதயபூர்வமான நன்றிகளைக் கூறி அறங்காத்த அளவைப் பதி வாழ கும்பழாவளை வித்தக விநாயகர் திருவடியைப் பிரார்த்தித்து அமைகிறேன்.

**செஞ்சொற்செல்வர் ஆறு. திருமுருகன்**

*தலைவர் தெல்லிப்பழை ஸ்ரீ துர்க்கை அம்மன் தேவஸ்தானம்*

## முந்தையர்கள் வாழ்ந்தங்கே
## முழுநிறைவு கண்டவூர்!

இந்துமா ஆழியிலே இலங்குகின்ற தீவினிலே
இன்பமது நிறைந்திட்ட இனிய எங்கள் சிற்றூராம்
அனைத்தும் நிறைந்திட்ட அழகுமிகு நம்மூராம்
முந்தையர்கள் வாழ்ந்தங்கே முழுநிறைவு கண்டவூராம்!

வானுயர்ந்த தென்னை பனை வாழையுடன் கமுகமரம்
முக்கனிகள் என்று சொல்லும் மா பலா வாழையுடன்
தேனினிய கனிகளுடன் தித்திக்கும் பலமரங்கள்
வாழ்வுதனில் வளங்கொழிக்கும் வளமான எம் ஊராம்!

நிகழ்காலம் போற்றுகின்ற நிறைவான புலமையுடன்
நாட்டார் இலக்கியங்கள் நம்மூரில் பலவுண்டு
கலையுலகம் போற்றுகின்ற கலைஞர்களும் கவிஞர்களும்
நிலையான புகழோடு நம்மூரில் பலபேராம்!

மரபுவழி மருத்துவத்தில் மகத்தான சேவைநாடி
குழவி முதல் கிழவி வரை குறைபோக்க வருவார்கள்
கண்ணுக்கும் பரிகாரி காலத்தால் அழியாதவர்
விஞ்ஞானம் வருமுன்னே வினைகள் போக்கிய ஊராம்!

நீர்வளமும் நிலவளமும் நிறைவான பயிர்வளமும்
உழுதுண்டு வாழ்வோரும் உடன்சேர்ந்து உழைப்போரும்
நிலையான கல்வியுடன் கலையோடு கவிபாடும்
நிறைவான சமுதாயம் நிறைந்திட்ட நம்மூராம்!

உழைக்கும் வர்க்கம் ஒன்றுபட்டு ஊரே உயர்ந்து நின்றதனால்
அளவையெட்டிய வாழ்வுகண்டோர் அளவெட்டி என்றழைத்தார்
நித்திலமே போற்றுகின்ற நிறைவு கண்ட எம்மூராம்
அத்தனையும் நிறைந்தவூரதுவாம் அதுவேயெங்கள் அளவையூராம்.

**செ. சிவபாலன்**
*சுவிஸ்*

அளவெட்டியின் பல்வேறு துறைகளையும் எடுத்து பெருமையுடன் பேசிக்கொண்டே போகலாம்...

# கிராமங்களில் அளவெட்டிக் கிராமத்துக்கோர் தனிச்சிறப்பு



யாழ். குடாநாட்டின் வடபகுதி வலிகாமம் வடக்கு வலிவடக்கில் உள்ள கிராமங்களில் பெரிய கிராமம் அளவெட்டி, கல்வி, இலக்கியம், கலை, கலாச்சாரம், சமயப்பணிகள் இயல், இசை, நாடகம் போன்ற துறைகளில் எல்லாம் மேலோங்கி நிற்பதும் அளவெட்டிக் கிராமம். இக்கிராமத்தின் பல்வேறு துறைகளையும் எடுத்துப் பெருமையுடன் பேசிக்கொண்டே போகலாம். இக்கிராமத்தின் வரலாற்றைச் சித்தரித்து வெளிவரும் ஆய்வு நூலுக்கு வாழ்த்துச் செய்தி அனுப்புவதில் பேருவகை அடைகின்றேன்.

பல்வேறு துறைசார் கல்வி நிபுணர்கள், அறிஞர்கள், கலைஞர்கள் புத்திஜீவிகள் சட்ட வல்லுநர்கள் அரசியலாளர்கள் என்போரை எல்லாம் உலக அரங்கிலே மேன்நிலைப்படுத்திய இக்கிராமத்தின் வரலாறு போற்றுதற்குரியதும், பெருமைகொள்ளத்தக்கதும் பாராட்டப்படவேண்டியதுமாகும்.

இங்குள்ள மக்கள் பல்வேறு தொழில்சார் துறைகளில் பாண்டித்தியம் பெற்றிருப்பதையும் அவதானித்துள்ளேன். இங்குள்ள விவசாய நடைமுறைகள் என்னைப் பெரிதும் கவர்ந்துள்ளது. பல வகை மண்ணமைப்பையும் நிலத்தடி நீர் வளத்தையும் கொண்டுள்ளமையும் குறிப்பிடத்தக்கது. வயல்நிலம், மேட்டுநிலம் ஆகிய இரு பகுதியிலும் வருடம் பூராவும் பல்லினப் பயிர்ச்செய்கையை மேற்கொண்டு தங்கள் வாழ்வாதாரத்தையும் பொருளாதாரத்தையும் மேம்படுத்தியும் வருகின்றனர். இந்த வகையில் இங்குள்ள விவசாயிகளை முன்னோடி விவசாயிகளாகவே நான் காண்கின்றேன். அளவெட்டியின் வடக்கெல்லை அம்பனைப் பகுதியிலிருந்து அளவெட்டிக் கிராமத்தை ஊடறுத்துச் செல்லும் வழுக்கையாறு இக்கிராமத்தின் விவசாயத்துக்கு மேலும் மெருகூட்டுவதாகவும் அமைந்துள்ளது.

மேலும் இலங்கை சிவில்சேவை நிர்வாகத்துறையில் (ஊ.ஊ.ளு) அதியுயர் பதவிகித்த அமரர் ம. சிறீகாந்தா அவர்களது இக்கிராமத்தைச் சார்ந்தவர் என்பதில் இக்கிராமம் பெருமைப்படுகின்றது. அவரால் உருவாக்கப்பட்ட வன்னிக் குடியேற்றத் திட்டங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள், இரணைமடு உட்பட எத்தனையோ குளங்களை எல்லாம் கட்டுவித்து எம்மக்களுக்கு வாழ்வளித்தவர் என்பதும் மறக்கற்பாலது. அவரின் சமயப்பணி மக்களை நல்வழிப்படுத்தியது.

இவரின் தந்தையார் அமரர் செல்லப்பா மயிர்வாகனம் என்னும் பெரியார் அளவெட்டிக் கிராமத்தின் அபிவிருத்திக்கும் சமய வளர்ச்சிக்கும் அரும்பங்காற்றியவர். அவரால் உருவாக்கப்பட்ட அளவெட்டி மகாஜன சபை அளவெட்டிக் கிராமம் முழுவதற்கும் சேவையாற்றிவரும் பெரிய நிறுவனம். பன்னெடுங்காலம் இப்பெரியார் தலைமைதாங்கி

இக்கிராமத்தை வழிநடாத்தியும் வந்துள்ளார். அவர் வழிவந்தவர்கள் இன்றும் இந்நிறுவனத்தின் மூலம் பல்வேறு பொதுப்பணிகளில் ஈடுபாடு கொண்டு உழைத்துவருவரும் பாராட்டப்படவேண்டியதே. பொதுத் தொண்டின் மகத்துவத்தை உலகுக்கு உணர்த்திய ஓர் பெரியாராகவே மயில்வாகனம் ஐயா அவர்களை நான் பார்க்கின்றேன். ஆலயங்கள் பல அளவெட்டியில் உண்டு. அவை இக்கிராம மக்களின் சமய வாழ்வுக்கும் ஆன்ம ஈடேற்றத்துக்கும் பெரும்பங்காற்றியும் மக்களை நெறிப்படுத்தியும் வருகின்றன.

முன்னொரு காலத்தில் கூட்டுறவுத்துறையில் இலங்கையில் முன்னோடியான கிராமமாக அளவெட்டி இருந்தமையையும் நான் நன்கறிவேன். இத்துறையில் கால் நூற்றாண்டுக்கு காலம் அரும்பங்காற்றியவர் மூதறிஞர், இலக்கண வித்தகர் பண்டிதர் க. நாகலிங்கம் அவர்கள். இவரின் பொதுத்தொண்டு பலராலும் பேசப்படுவதையும் கேட்டிருக்கின்றேன். இவரால் எழுதப்பட்ட செந்தமிழ் இலக்கண விளக்கம் 1ம், 2ம், 3ம், 4ம் பாகம் என விரிந்துள்ளன. இந்நூல் கல்வியுலகுக்கும் பெருங்கொடையாகும். பல்கலைக்கழக மாணவர்களுக்கு அவை பெரும் வாய்ப்பாகவும் அமைந்துள்ளன. இத்தகைய பெருமைக்குரிய பண்டிதர் ஐயாவின் மைந்தன் திரு.க. வேதநாயகன் அவர்கள் முல்லைத்தீவு அரச அதிபராகவிருந்து சிறப்பாக நிர்வாகத்தை மேற்கொள்வதும் பெருமைக்குரியது.

இத்தகைய பெருமைக்குரிய பண்டிதர் ஐயா அவர்கள் அளவெட்டிக் கிராமத்தை ஓராண்டுக்கு முற்பட்ட காலத்திலிருந்து ஆய்வுக்குட்படுத்தி வேரூன்றி விழுதுபரப்பும் ஆலமரம் எனும் அரியதோர் நூலை ஆக்கித் தந்துள்ளார். இந்நூல் காலம் கடந்து வெளிவந்தாலும் எதிர்கால சந்ததியினர்க்கு இந்நூல் பெரிதும் பயன்பெறும் என்பதில் ஏதும் சந்தேகமில்லை. இந்நூலை வெளியிடும் பொறுப்பை ஏற்றுள்ள இன்றைய அளவெட்டி மகாஜன சபை சனசமூக நிலைய நிர்வாகிகள் பெரிதும் பாராட்டப்படவேண்டியவர்கள் மகாஜன சபையினரின் பல்வேறுதுறைச் சேவைகளும் நீடித்து நிலைபெற இறைவனைப் பிரார்த்திக்கின்றேன். இவ்வரிய ஆய்வு நூலுக்கு இச்சிறு செய்தியை வழங்குவதும் எனக்குக் கிடைத்த பெரும் பாக்கியமாகவே கருதுகின்றேன்.

**திருமதி. ரூபினி வரதலிங்கம்**
*மேலதிக அரசாங்க அதிபர்,*
*யாழ் மாவட்டம்.*

# வலிகாமம் வடக்கு, பிரதேச செயலாளரின் வாழ்த்துச் செய்தி



அளவெட்டி எனும் கிராமம் எமது வலிகாமம் வடக்கு பிரதேச செயலக பிரிவில் பல்வேறு துறைசார் நிலைகளிலும் முன்னிலையில் உள்ளது. அதுவும் விசேடமாகக் கலைத்துறையில் உன்னத நிலையில் விளங்கி வருவதையும் குறிப்பிடுவதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகின்றேன்.

சமூகத்திறன் விருத்தியை நோக்காகக் கொண்டு பெரியோர்களால் 87 வருடங்களுக்கு முன் 1922ஆம் ஆண்டு அளவெட்டி மகாஜன சபை ஸ்தாபிக்கப்பட்டு கடந்த பல சகாப்தங்களாக அளப்பரிய சேவைகள் செய்து வருகின்றது. எனவே, தொடர்ந்துவரும் சந்ததியினர் இச்செயற்பாடுகளை மேலும் வீரியமுடன் முன்னெடுத்து வருவதும் பெரிதும் போற்றுதற்குரியது.

1927இல் தனக்கென ஓர் கொட்டகை அமைத்து செயற்பட்டுவந்த இவ்வமைப்பு, 1940 முதல் தற்போது நாம் காணும் கட்டடத்தை அமைத்து அக்காலத்தில் யாழ். மாவட்டத்திலேயே அரங்கங்களில் தனிச் சிறப்பு வாய்ந்ததாக இந்த அரங்கு விளங்கியதை பலர் கூறக் கேட்டிருக்கின்றேன்.

இப்போது இது மேலும் புனரமைக்கப்பட்டு இதன் ஸ்தாபகர் அமரர் செல்லப்பா மயில்வாகனம் அவர்களின் சிலை ஒன்றும் அமைக்கப்பட உள்ளதை அறிந்து பெரிதும் பாராட்டுகின்றேன்.

சமூகத்தை வளர்த்தெடுக்க வாசிகசாலை, முன்பள்ளிகள் மற்றும் துறைவார் வகுப்புகள் நடாத்தியும், கலை நிகழ்வுகள் போன்றவற்றாலும் எமது கலாசார பேணலுக்கு முன்னின்றுழைத்து வருவது அனைவரும் அறிந்ததே. இந்த வகையில் இப்போது வெளிவரும் "வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்" எனும் நூல் மேலும் ஒருபடி முன்னே சென்று அளவெட்டியின் முழுமையை வெளிச்சம் போட்டுக்காட்டி பலரின் தேடல்களுக்கும் ஓர் வடிகாலாய் அமைந்து விளங்கிட வாழ்த்துகின்றேன்.

**எஸ். முரளிதரன்**
*பிரதேச செயலாளர்,*
*வலிகாமம் வடக்கு,*
*தெல்லிப்பளை.*

# வாழ்த்துச் செய்தி



யாழ்ப்பாணக் குடாநாட்டிலுள்ள மிகப்பெரிய ஊர்களுள் ஒன்று என்ற அளவுடன் நில்லாமல், கண்ணார் கல்வியின் கருவூலம், ஆன்மீகத்தின் ஆள்புலம், கவின்கலைகளின் காப்பகம், தமிழ் இலக்கியத் தடாகம், முதலாம் நிலைகளையும் எட்டிப் புகழுடன் திகழ்வது அளவெட்டி.

"மக்களின் உணவுத் தேவையை நிறைவு செய்யும் உழவர், அறவோர், துறவோர், அந்தணர், குறைவற்ற செல்வத்தைக் குறையற்ற வழிகளில் ஈட்டி, அதனைத் தமக்காக மட்டுமல்லாமல் தம் நாட்டினருக்காகவும் பயன்படுத்தும் செல்வர் ஆகியோர் நிறைந்ததே நாடு" என்ற கருத்தைத் தருகின்ற

*தள்ளா வினையுளும் தமக்காரும் தாழ்விலாச்*
*செல்வரும் சேர்வது நாடு.*

என்ற திருவள்ளுவரின் திருவாக்கு நாட்டின் அங்கமாகிய ஊருக்கும் பொருந்தும் என்பதை நிரூபிக்கும் வகையிலும் நிமிர்ந்து நிற்பது அளவெட்டி.

கனகசபைப் புலவர், சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த சதாசிவ ஐயர், மௌனத் தவமுனிவர் – சிந்தனைச் செல்வர் பொ. கைலாயபதி, ஆசிரியர் திரு. செ. மயில்வாகனம், கல்விமான்களான சிதம்பரப்பிள்ளை, சிவபாதசுந்தரம், சற்குணசிங்கம், யாழ் அரச அதிபராயிருந்த அருட்கவி ம. ஸ்ரீகாந்தா, விநாசித்தம்பி, நவயுகக் கவிஞர் மஹாகவி எனும் உருத்திரமூர்த்தி, லயஞான குபேரபூபதி வி. தட்சிணாமூர்த்தி, மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் அ.செ. முருகானந்தன், அ.ந.கந்தசாமி, நாதஸ்வரதிலகம் என்.கே.பத்மநாதன், தவில் வித்துவான் கணேசு, கதாப்பிரசங்கக் கலைஞர் தா. பொன்னம்பலம், ஓவியரும் எழுத்தாளருமான ஆதவன் சி. பொன்னம்பலம், அரசியலாளர் வ. பொன்னம்பலம் ஆகியோர் அளவெட்டியின் புகழை ஓங்கச் செய்த பெருமக்களுட் சிலர் என்ற வகையில் என் நினைவில் நிற்கின்றனர்.

தமிழ் மக்கள் இந்த நாட்டின் பூர்வ குடிகள் என்பதும், இந்நாடு முழுவதிலும் பரந்து வாழ்ந்த அவர்கள் சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சைவ சமயத்துக்கு உரியவர்கள் என்பதும், உள்நோக்கம் கொண்ட சிலரால் மறுக்கப்பட்டும் மறைக்கப்பட்டும் வரும் இக்காலத்திலே, இதோ ஒரு பாரம்பரியத் தமிழ்க் கிராமம் எனச் சுட்டிக்காட்டப்படக்கூடிய அளவெட்டியின் வரலாற்றையும் பற்றி, ஆன்ற விந்தடங்கிய கொள்கைச் சான்றோன் – முதுபெருந் தமிழ் அறிஞர் செந்தமிழ் இலக்கணச் செல்வர், பண்டிதர் க. நாகலிங்கம் அவர்கள் எழுதி வருகின்றமை உற்சாகத்தையும் இனிய எதிர்பார்ப்புக்களையும் உருவாக்கியுள்ளது.

இந்த நூல் விரைவில் அச்சுவாகனம் ஏறி, அனைவரும் ஆவலுடன் எதிர்பார்க்கும் நல்ல பலன்களை விளைவிக்க எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்; நூலாசிரியருக்கு என் மனமுவந்த பாராட்டுக்களையும் சமர்ப்பிக்கின்றேன்.

*கந்தரோடை, சுன்னாகம்.*
*22.06.2010*

**சி. சிவசரவணன் ( சிற்பி )**

# வலிகாமம் வடக்கு, பிரதேச சபைச் செயலாளரின் வாழ்த்துச் செய்தி



வளங்கொழிக்கும் விசாலமான கிராமமான அளவெட்டி கிராமம் பற்றிய "வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்" என்ற மலருக்கு வாழ்த்துச் செய்தி தருவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

காலத்தின் தேவையறிந்து கல்வியின் பெருமையுணர்ந்து உன்னத நோக்கத்தோடு தன்னலம் காணாது மக்கள் சேவையை நாடி வளர்க்கின்றது. அளவெட்டி மகாஜனசபை சனசமூக நிலையம் என்பது வெள்ளிடைமலை. மக்களின் ஒற்றுமையும் சமூக சேவையும் "வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்" என்ற மலரை வெளியிட உறுதுணையாகின்றது.

சிறுவர் முதல் பெரியோர் வரை பயன்பெறும் வகையில் பத்திரிகைகள், பாலர் பாடசாலை சஞ்சிகைகள், ஆங்கில, சிங்களக் கல்விச் செயற்பாடுகள், கணினி வசதிகள் யாவும் ஒன்றிணையப்பெற்ற ஒரு சனசமூக நிலையமாக இது விளங்குகின்றது. இங்கு மாதந்தோறும் பூரணை தினத்தில் மக்கள் பயன்பெறும் வகையில் பல்வேறு நிகழ்ச்சிகள் நடாத்தப்பட்டு வருகின்றமை பெருமைக்குரியதாகும்.

மக்கள் பயன்பெறும் வகையில் சிரமதானப் பணிகள் மரநடுகை இயக்கங்களையும் காலத்துக்குக் காலம் இந் நிறுவனம் மேற்கொண்டு வருவது சிறப்புக்குரியது. இச் சனசமூக நிலையம் "வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்" போல பன்னெடுங்காலம் மக்களுக்கு சேவை செய்ய வேண்டுமென்பதையும் இம்மலர் வெளியீட்டின் மூலம் மேலும் புத்துணர்ச்சி பெறவேண்டுமெனவும் வல்லாம் வல்ல விநாயகர் அருள்வேண்டிய வாழ்த்துச் செய்தி வழங்குவதில் பூரிப்படைகிறேன்.

**திருமதி. யோகேஸ்வரி காசிலிங்கம்**
*செயலாளர்,*
*வலி. வடக்கு பிரதேசசபை.*

# உலகோர் உள்ளங்களில் அமர்ந்திருக்கும் அளவெட்டி

நான் இக்கட்டுரையை எழுத ஆரம்பிக்கும்பொழுது எனது மனம் 60 வருடங்களுக்கு முன்னர் பலவகைச் சிறப்புக்களுடன் மிளிர்ந்த அளவெட்டிக் கிராமம் என் மகன் கண்முன்னே வருகிறது.

ஒரு நாட்டிற்கு எது எது தேவையோ அந்நாட்டு மக்கள் அனைவரதும் தேவைகளைப் பூரணமாகப் பூர்த்தி செய்யும் ஒரு நிறை கிராமமாக அளவெட்டி இருந்தது. நோய் தீர்க்கும் வைத்திய நிபுணர்கள் அன்றிருந்தனர். ஒவ்வொரு துறையிலும் தனித்தேர்ச்சி பெற்ற நிபுணர்கள். அவர்கள் திரு. கந்தையா பரிகாரியார், திரு. வைத்திலிங்கம் பரிகாரியார் இருவரும் குழந்தை வைத்திய நிபுணர்கள் திரு. கணபதிப்பிள்ளை பரிகாரியார் அவர் முறிவு வைத்திய நிபுணர் திரு. அம்பலவாணப் பரிகாரியார் சகல நோய்களுக்கும் சிறந்த நிபுணர்.

எல்லாவற்றிலும் மேலாகக் கண்வைத்தியர் திரு. செல்வவிநாயகமூர்த்தி அவர்கள் கண் வைத்தியத்தில் பெரும் நிபுணர். இவரிடம் வடமராட்சி முதலிய இடங்களில் இருந்து இங்கு தங்கி வைத்தியம் செய்து சுகம் பெற்றோர் அநேகம். இவ்வளவுக்கும் வைத்தியம் இலவச வைத்தியம். இதனை அவர் ஒரு மக்கள் சேவையாகவே செய்துவந்தார்.

இன்று நகை அடைவு வைப்பதற்கு வங்கிகள் உள்ளன. அன்று அளவெட்டியில் உத்தரவு பெற்ற நகை அடைவு பிடிப்பவர்கள் பலர் இருந்தனர். நியாயமான வட்டிக்குத் தாராளமாக உலகிற்கு உதவியர்கள் இவர்கள். இதனை விடக் கைத்தொழிற்சாலையாக யானைமார்க் சுருட்டுத் தொழிற்சாலை அளவெட்டியில் இருந்தது. நூற்றுக்கணக்கானவர் தங்கள் தொழில் நிமித்தம் இங்கு வந்தனர். பலரை வாழவைத்தது அளவெட்டி.

அடுத்துக் கல்விக்கூடங்களின் சேவைகளை வார்த்தைகளால் கூறிவிடமுடியாது. தற்பொழுது ஒரு சிறு பாடசாலையாக இருக்கும் சீனன்கலட்டி ஞானோதயா வித்தியாசாலை அன்று ஓர் கலைக்கழகம். யாழ்ப்பாணத்தில் அநேக தமிழ் ஆசிரியர்கள் இலக்கண வித்தகர் இ. நமசிவாயம் ஐயா அவர்கள் உட்பட பலர் இங்கு வந்து ஆசிரிய கலாசாலை புதுமுக வகுப்புக்களில் கல்வி கற்றனர். தீவகம் போன்ற இடங்களிலிருந்து இங்கு வந்து விடுதிகளில் தங்கி தமது கல்வியைத் தொடர்ந்தனர்.

சதானந்தா வித்தியாலயம் மிகவும் புகழ்பெற்ற பாடசாலையாக ஒரு காலத்தில் இருந்தது. மிகப்பெரிய பண்டிதர்கள் இப்பாடசாலையில் ஆசிரியர்களாக இருந்தனர். ஆங்கிலக் கல்வியை அருணோதயக் கல்லூரி அளித்துவந்தது. கல்விச் செல்வம் அளவெட்டியின் அருஞ்செல்வம். இங்கு கற்றோர் பலர் குறிப்பாகக் கூறின் திரு. சுப்பையா உடையார், தெல்லிப்பழை மகாஜனக் கல்லூரியின் ஆசிரியராகிப் பின்னர் அதிபராக இருந்த க. சின்னப்பா அவர்கள் அளவெட்டியைச் சேர்ந்தவரே.

கோவில்களின் பெருமையைக் கூறின் மாருதப்புரவீகவல்லியால் கட்டப்பட்ட மூன்று பிள்ளையார் கோவில்களைக் கொண்டது அளவெட்டி. அளவோலைப் பிள்ளையார் கோவில், கும்பழாவளைப் பிள்ளையார் கோவில், பெருமாக்கடவைப் பிள்ளையார் கோவில் ஆகியவையே இவையாகும். இவற்றைவிட குருக்கள் கிணற்றடிப் பிள்ளையார், தவளைக்கிரி முத்துமாரி அம்மன் ஆலயம் ஆகிய பிற கோவில்களும் உள்ளன. கோவில்களைக் கூறும்போது அவற்றில் ஒருகாலத்தில் நடைபெற்ற திருவிழாக்களைக் குறிப்பிட்டாகவேண்டும். கும்பழாவளைப் பிள்ளையார் கோவில் கொடியேறினால் ஊரே விழாக்கோலம் கொள்ளும். நாலாந் திருவிழாவின் கூத்தும், ஏழாம், எட்டாம் திருவிழாக்களின் மேளக்கச்சேரி, சதுர்க்கச்சேரி, வாண வேடிக்கைகள் யாவும் என் கண்முன்னே வருகின்றன. அதேபோன்றே ஏனைய கோவில்களிலும் திருவிழாக்கள் பிரமாதம். இந்தியாவிலிருந்தும் தவில், நாதஸ்வர வித்துவான்கள் வருவார்கள்.

கூட்டுறவுத்துறையின் பலாபலன்களை முற்றுமுழுதாகப் பயன்படுத்திய கிராமம் அளவெட்டி. சுருங்கக் கூறின் அதன் பொருளை உணர்ந்து மக்கள் சேவையை மகேசன் சேவையாக்கியது அளவெட்டிக் கிராமமே. அமரர் வி. பொன்னம்பலம் அவர்களின் காலத்தில் இலங்கையில் புகழ்பூத்த கூட்டுறவு இயக்கமாக அளவெட்டி இருந்து வந்துள்ளது. அளவெட்டி கொம்பனிக்கடையென்றால் யாழ்ப்பாணத்தில் தெரியாதவர்களே இல்லை என்று கூறும் அளவிற்கு அயற்கிராம மக்கள் அங்கு வந்து பொருள் கொள்வனவு செய்தமையைக் காணலாம்.

அளவெட்டி ஒரு தன்னிறைவு பெற்ற கிராமம். வயல் சூழ்ந்த செழுமை, செம்பாட்டு மண்ணின் வளம் நிறைந்த சிறு பயிர்களும், மரக்கறி வகைகளும் உழவர்க்கு வேண்டிய கருவிகள் செய்வோர், கலைஞர்கள் போன்ற சகல செல்வங்களும் நிறைந்த ஒரு பூரண கிராமம் அளவெட்டி. இக்கிராம மக்கள் தாங்களும் வாழ்ந்து, அயற்கிராம மக்களையும் வாழவைக்கும் இயல்புடையவர்கள். அதனால் உலகோர் உள்ளங்களில் அமர்ந்திருக்கும் அளவெட்டி என்று கூறலாம்.

**விழிசிட்டி கார்த்திகேசு சுப்பிரமணியம்**

*இளைப்பாறிய ஆசிரியரும்*

*தற்பொழுது சத்தியசாயி பாடசாலை ஆசிரியரும்*

# நூலின் பிரதம தொகுப்பாசிரியர் பற்றி ....

இந்நூலின் ஆசிரியர் யார் என்பதையும் அவர் வரலாற்றினையும் இந்த நூலை வாசிப்பவர்கள் ஒவ்வொருவரும் அறிந்திருக்க வேண்டியது அவசியமாதலால் அவர் பற்றிய செய்திகளை இங்கு தருகின்றோம். பண்டிதர் க.நாகலிங்கம் அவர்கள் தான் இந்த நூலின் ஆசிரியர். அளவெட்டிக் கிராமத்திலுள்ள முதியவர்களுள் ஒருவராகி நிற்பவர். முதுமையானவர்களை, அமரராகியவர்களை, புலமையாளர்களை எல்லாம் அறிந்த முதன்மையானவர் அவர் என்றுங்கூடச் சொல்லலாம். பண்டிதர்களுக்குப் பண்டிதரான இவர் பல பண்டிதர்களை உருவாக்கியவர்.

இவர் காலத்தில் நடைபெற்ற கிராம நிகழ்வுகளில் எல்லாம் தொடர்புடையவராய் இருந்தவர். அவை பற்றிய செய்திகளை எல்லாம் அறிந்து கொண்டிருப்பவர். அத்தகு பெரியாரை எங்கள் கிராமத்திலே வாழ்ந்த, வாழ்ந்து கொண்டிருக்கின்ற புலமையாளர் தம் வரலாறுகளை எழுதித் தரும்படி வேண்டினோம். எங்கள் வேண்டுகோளை ஏற்றுக்கொண்ட அவருடைய ஆக்கமே இந் நூலாம். எதிர்காலத்தில் ஆய்வு நூல் ஒன்றினை எழுத முயலும் பல்கலைக்கழக மாணவருக்கு இஃதொரு கைநூலாக உதவலாம் என்பதொரு நம்பிக்கை எமக்குண்டு.

## பிறப்பு

பண்டிதர் க.நாகலிங்கம் அவர்கள் அளவெட்டியில் வாழ்ந்த கனகர் சின்னப்பிள்ளை தம்பதிக்கு ஏக புதல்வனாக 1920 ஆம் ஆண்டு மார்ச் மாதம் நாலாந்தேதி பிறந்தார். இவருக்குப் பின்னே தங்கையாக ஒருவர் தோன்றியதுண்டு. தாய் தந்தையருடன் பண்டிதரும் தங்கையுமாக நால்வர் சேர்ந்ததே இவர்கள் சிறிய குடும்பமாகும்.

## நல் மாணாக்கனாய்...

பண்டிதர் அளவெட்டி வடக்கு சீனன் கலட்டி ஞானோதயா வித்தியாலயத்தில் ஆரம்பக் கல்வியைத் தொடரும் படியாகச் சேர்க்கப்பட்டார். அங்கு நான்காவது வகுப்பு வரை கற்றவர் தொடர்ந்து ஆங்கில மொழிக் கல்வியைப் பெற விரும்பி அளவெட்டி ஆங்கிலப் பாடசாலையிற் சேர்க்கப்பட்டார். அங்கு ஐந்தாம் வகுப்பிற் கற்றுக் கொண்டிருக்கும் போது நோய் வாய்ப்பட்டு பல மாதங்கள் பாடசாலைக்குச் செல்ல முடியாதிருந்தார். தமிழ்ப் பாடசாலையிலே இவர் வளர்ச்சியை அவதானித்திருந்த அப்பாடசாலை ஆசிரியர் இரத்தினசாமி ஐயர் பண்டிதரின் பெற்றோரைச் சந்தித்துப் பிள்ளையை ஞானோதயாவிற்கு திருப்பி அனுப்புங்கள் அவன் தமிழ்மொழி கற்று உயர்ந்து விளங்குவான் என்று சொல்லிப் பண்டிதரை ஞானோதயாவிற்கு கொண்டு செல்ல முயற்சித்தார். முயற்சியில் வெற்றியுங் கண்டார். இரத்தினசாமி ஐயர் உபாத்தியாரின் மாணவனாகிய இந்நூலாசிரியரை எல்லா ஆசிரியர்களும் அன்புடன் கவனிக்கத் தொடங்கினார். இரத்தினசாமி ஐயர் குறிப்பிட்டது போல மாணவனிடத்தும் வளர்ச்சி காணப்பட்டது. சீனன் கலட்டி ஞானோதயாவில் ஆறாம் வகுப்பிற் சேர்க்கப்பட்ட மாணவன் நல்ல முன்னேற்றத்துடன் எல்லோரதும் அன்பிற்கும் பாத்திரமானார். 1938 இல் அந்த வேளையில் சிரேஷ்ட பாடசாலைத் தராதரப் பத்திரப் பரீட்சையில் சித்தி பெற்றார். அந்த வித்தியாலய ஆசிரியர்களான அருணாசலம், இரத்தினசாமி ஐயர் என்போரிடம் பிரத்தியோகமாகக் கற்றுப் பாலபண்டிதப் பரீட்சைக்குத் தோற்றுவதற்குத் தம்மைத் தயார்படுத்திக் கொண்டிருந்தார். பரமேஸ்வரக் கல்லூரியில் நடைபெறும் பண்டித ஆசிரியர் பயிற்சிக்காக

மாணவர்களைச் சேர்க்கும் 1939 ஆம் ஆண்டிற்கான புகுமுகப் பரீட்சைக்கு விண்ணப்பம் அந்த வேளை கோரப்பட்டது. இந்த ஆசிரிய கலாசாலை அக்காலப்பகுதியில் அரசாங்க சபை உறுப்பினராக இருந்த சு. நடேசபிள்ளை அவர்களின் பெருமுயற்சி யால் 1936 ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. இப் பயிற்சிக் கலாசாலையில் மூன்று வருடங்கள் பயில வேண்டும். இந்த மூன்று வருடங்களுள் பண்டித பரீட்சையிலும் பயிற்றப்பட்ட ஆசிரியர் தராதரப் பரீட்சை யிலும் சித்தி எய்த வேண்டும் என்ற நியதி இருந்தது. பண்டித பரீட்சையில் தேர்ச்சி பெறாதோர் பூரணத்துவமான ஆசிரியர் பயிற்சிச் சான்றிதழைப் பெற முடியாது. மூன் றாண்டுகள் படித்துப் பண்டிதப் பரீட்சையில் சித்தி எய்துவதே கடினம். எனவே பிரவேச, பாலபண்டிதப் பரீட்சைகளில் சித்தி எய்தி யவர்களே இந்தப் பயிற்சிக் கலாசாலைக்கு விண்ணப்பிப்பது வழக்கம். இந்த நூலா சிரியர் பிரவேச பரீட்சைத் தராதரப் பத்திரமோ பாலபண்டிதப் பரீட்சை தராதரப் பத்திரமோ பெற்றிருக்காத நிலையிலும் இப்பயிற்சிக் கலாசாலைப் பிரவேசத்திற்கு விண்ணப் பித்து எழுத்துப் பரீட்சையிலும் நேர்முகப் பரீட்சையிலும் தேர்ச்சி பெற்றுள்ளார். அந்த ஆண்டிலே அதாவது 1939 ஆம் ஆண்டு புராட்டாதியிலே பயிற்சிக்காகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார்.

பண்டிதர் ஆசிரியர் பயிற்சிக்காக ஆசிரிய கலாசாலையில் முன்பாகவே 1936 இல் சேர்த்துக் கொள்ளப்பட்டு பரீட்சைகளும் நிறைவாகிப் பயனை எதிர்பார்த்துக் கொண்டிருந்த இருபத்து நான்கு மாணவர் களும் பண்டிதப் பரீட்சையில் சித்தி பெற வில்லை என்று அறிவிக்கப்பட்டிருந்தனர். இப்படியான பரீட்சை முடிபுகள் வெளிப்பாட் டிற்கு ஏதோ காரணம் இருக்க வேண்டும் என வெளியிற் பலரும் பேசிக் கொண்டனர். அந்த வேளை வெளியானவொரு துண்டுப்பிரசுரம் பரீட்சை முடிவு பற்றி வெளியே பேசிக் கொண்டவர்களது சிந்தனை சரிதான் என்று விளக்கம் செய்வது போன்றிருந்தது. இந்த இருபத்து நான்கு பேர்களதும் விடைத் தாள்கள் மீள் பரிசீலனைக்காக மதுரைத் தமிழ்ச் சங்கத்துக்கு அனுப்பப்பட்டு அவர் களுள் பதினாறு பேர் சித்தி பெற்றனர் என்பது குறிப்பிடப்படக்கூடியது. இந்த சம்பவத்தின் பின் பரமேஸ்வரா ஆசிரிய பயிற்சிக் கலாசாலை மாணவர்கள் யாரும் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கப் பரீட்சைக்குத் தோற்றுவதில்லை என நிர்வாகம் தீர்மானித்தது. இந்த நிலையில் எங்கள் இந்த நூலாசிரியரைப் பரமேஸ்வரா ஆசிரியர் பயிற்சிக் கலாசாலைக்குச் செல்ல வேண்டாமென்று சிலர் தடுத்ததுண்டு; ஆனால் ஆசிரியர் இரத்தினசாமி ஐயர் தடுத்தவர்களுக்கு மாறாக இந்தப் பயிற்சிக் கல்லூரிக்குத்தான் போக வேண்டுமென ஊக்கமளித்ததுண்டு. இனிமேல் மதுரைத் தமிழ்ச் சங்கப் பரீட்சைக்கே எல்லோரையுந் தோற்றச் செய்வதென்றும் பரமேஸ்வரா ஆசிரியர் பயிற்சிக் கலாசாலை நிர்வாகம் முடிவெடுத்துள்ளது என்று மாணவர்கள் அறிந்து திகைத்தனர். மதுரைத் தமிழ்ச் சங்கப் பரீட்சை தரங் கூடியதாயிற்றே என்று மாணவர்கள் தயங்கியதுண்டு. வகுப்புக்கள் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தன. எங்கள் நூலாசிரியர் பயிலும் வகுப்பு மாணவர்களில் பதின்மர் ஓராண்டு முன்னதாக மதுரைத் தமிழ்ச் சங்கப் பரீட்சைக்குத் தோற்றினர். அத்தருணம் எங்கள் நூலாசிரியர் உட்பட ஒன்பது பேர் திறமைச் சித்தியடைந்து கல்லூரிக்குப் பேரும் புகழும் சம்பாதித்துக் கொடுத்தனர்.

பரமேஸ்வரா பண்டித ஆசிரிய கலாசாலை அதிபராகத் தலைமை தாங்கி நடத்தியவர் கலாநிதி கு. சிவப்பிரகாசம் அவர்கள். இவர்

புலோலி வ. குமாரசுவாமிப் புலவரின் மகன் என்பது குறிப்பிடத்தக்கது. அளவெட்டி ச. சிதம்பரம்பிள்ளை B.A, B.Sc, வித்துவான் கார்த்திகேசு, அதிபர் ஆகிய மூவருந்தான் பண்டித ஆசிரிய கலாசாலையின் ஆசிரியர் களாவர். புலவர்மணி, பண்டிதமணி, க.சு.நவநீதகிருஷ்ணபாரதியார், திரு. சு.நடேசபிள்ளை B.A.,B.L. என்போரும் பயிற்சி மாணவருக்கு கற்பித்தோராவர். 1942 ஆம் ஆண்டு புரட்டாதியில் இந்த நூலாசிரியர் மதுரைத் தமிழ்ப் பண்டித ராகவும் பயிற்றப்பட்ட தமிழாசிரியர் ஆகவும் பரமேஸ்வரா பயிற்சிக் கல்லூரியை விட்டு வெளியேறினார்.

இவர் தன்னோடு பயின்றவர்களில் பத்திற்கு மேற்பட்டவர்களுக்கு கற்றலில் வழிகாட்டி அவர்கள் பண்டிதர்களாக உதவி னார். கல்லூரி அதிபர் கு.சிவப்பிரகாசம் எங்கள் நூலாசிரியருக்கு வழங்கிய நற் சான்றிதழில் இந்தச் செய்தியை குறிப்பிட் டுள்ளார். இவர் அங்கு பயின்று கொண்டிருந்த போதே கல்லூரி அதிபர் சிவப்பிரகாசம் அவர்கள் பண்டித வகுப்பொன்றையும் புறம்பாக நடத்தி வந்தார். அந்தப் பண்டித வகுப்பிற்கு கற்பிக்கும் ஆசிரியர் எவரேனும் வகுப்பிற்கு வருகைதராத வேளை அவ்வகுப்பு இடையீடுபட்டுப் போகா வகை நிறைவு செய்ய எங்கள் இந்த நூலாசிரியரையே அதிபர் அழைப்பார். அந்த வகையிலும் பயிற்சிக்குள்ளானவர் இந்த நூலாசிரியர்.

## நல் ஆசிரியனாய்...

ஆசிரிய கலாசாலையை விட்டு வெளி யேறிய பின் திருநெல்வேலியில் தனியார் வீடொன்றில் பரமேஸ்வராக் கல்லூரி ஆசிரியர் ஞானப்பிரகாசம் B.A., B.Sc. அவர்கள் ஆரம்பித்து நடாத்திய பண்டித, பாலபண்டித வகுப்புக்களிற் கற்பிப்பதற்கு எங்கள் நூலாசிரியர் நியமிக்கப்பட்டார். அவ்வகுப்புக்களில் வித்துவான் கார்த்திகேசு, வித்துவான் வேந்தனார் முதலான தமிழறி ஞர்களும் கற்பித்தனர். அவ்வகுப்புக்களிற் கற்ற பலர் இரண்டாண்டுகளுக்குள் விலகி ஆசிரிய கலாசாலையில் பயிற்சி பெறச் சென்றனர். அதனால் வகுப்புக்களை நிறுத்த வேண்டிய நிலை ஏற்பட்டது.

நீர்வேலிப் பண்டிதர் துரைசிங்கம் அவர்களுடனும் வைத்தீஸ்வர வித்தியாலய அதிபர் அம்பிகைபாகனுடனும் இணைந்து இந்த நூலாசிரிர் வைத்தீஸ்வரா வித்தியா லயத்தில் பண்டித, பாலபண்டித வகுப்புக்களை ஆரம்பித்தார். அத்தருணத்தில்தான் மல்லா கத்தில் பண்டித பாலபண்டித வகுப்புக்களை பண்டிதர் பொன்னுத்துரை அவர்கள் ஆரம் பித்தார். அவ்வகுப்பிற் கற்பிப்பதற்கு எங்கள் நூலாசிரியருடன் இலக்கண வித்தகர் இ.நமசிவாயதேசிகர், இலக்கிய கலாநிதி பண்டிதமணி மு.கந்தையா, பண்டிதர் வ.நடராசா, வித்துவான் க.கந்தசாமி, சிவத்தமிழ்ச் செல்வி கலாநிதி பண்டிதர் தங்கம்மா அப்பாக்குட்டி முதலானோர் நியமனம் பெற்றனர். இந்த மல்லாகத்தில் ஆரம்பிக்கப்பட்ட வகுப்புக் காரணமாக வைத்தீஸ்வராவித்தியாலய வகுப்புத் தொடர்பை இந்த நூலாசிரியர் படிப்படியாக நிறுத்திக் கொண்டார்.

இவர் தம் மாணவர்களுக்காகிய பாடசாலைக் கல்விப் பணியை அளவெட்டி சதானந்த வித்தியாலயத்தில் ஆரம்பித்தார். தொடர்ந்து எட்டாண்டுகள் அங்கேயே கற்பித்தார். இந்த வேளையில் இலங்கைப் பல்கலைக்கழகம் நடத்திய டிப்ளோமா வகுப்பிற் சேர்ந்து அப் பரீட்சையிற் தேறிய பின் அளவெட்டி அருணோதயாக் கல்லூரி யில் ஆசிரியப் பணியைத் தொடர்ந்தார். அங்கு கற்பிக்கும் போது சிரேட்ட தராதரப் பத்திர ஆரம்ப வகுப்பினருக்குப் பாடசாலை

நேரத்திற்குப் புறம்பான நேரங்களில் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கப் பிரவேச வகுப்பிற்கான பரீட்சைக்குரிய பாடத் திட்டத்திற்கமைவான நூல்களைக் கற்பித்து அப்பரீட்சைக்குத் தோற்றச் செய்தர். நல்ல பெறுபேறுகளையும் பெறச் செய்தார். ஒரு முறை அகில இலங்கையிலும் முதலிடத்தைப் பெற்றவர் இவர் கற்பித்த அருணோதயாக் கல்லூரி மாணவி என்பது குறிப்பிடத்தக்கது. இவர் கற்பித்த மாணவர்கள் அரசினர் பரீட்சைகளில் பெரும்பாலும் சித்தியடையத் தவறுவதில்லை.

## கூட்டுறவாளனாய்...

இந் நூலாசிரியர் பண்டிதர் நாகலிங்கம் அவர்கள் கூட்டுறவுத்துறையில் ஆற்றிய பணி வியந்து பேச வேண்டியது. 1942 இல் பண்டக சாலைச் சங்கங்களாக இவை ஆரம்பிக் கப்பட்ட வேளை அளவெட்டி மேற்கில் ஆரம் பிக்கப்பட்ட அளவெட்டி மேற்கு ஐக்கிய பண்டகசாலைச் சங்கச் செயலாளராகத் தெரிவு செய்யப்பட்டவர் பின்னர் நடந்த தேர்தலில் தலைவரானார். அதேவேளை வலிகாமம் வடக்குப் பண்டகசாலைகளுக்குப் பொருள் விநியோகிக்கும் வலிவடக்குப் பண்டகசாலைகளின் சமாச இயக்குனர் சபை உறுப்பினராக 1963 ஆம் ஆண்டு தெரிவு செய்யப்பட்டார். 1966 இல் அச்சங்கத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் தலைவராக இருந்த காலத்திலேயே சுன்னாகம் பலநோக்கு கூட்டுறவுச் சங்கக் காரியாலயக் கட்டிடம் கட்டப்பட்டது என்பது குறிப்பிடப்பட வேண்டியது. 1971 ஆம் ஆண்டு கூட்டுறவுச் சங்கங்கள் மறுசீரமைக்கப்பட்ட போது அளவெட்டி மல்லாகம் பலநோக்கு கூட்டுறவுச் சங்கம் அமைக்கப்பட்டது. அச்சங்கத்தில் 1978 ஆம் ஆண்டு முதல் 1990 ஆம் ஆண்டு வரை இந்த நூலாசிரியரே தலைவராகவிருந்து சங்கத்தை வழி நடத்தி வந்துள்ளார்.

## ஆலயப் பணிகளில் முதல்வனாய்...

அளவெட்டி முதலியவேள் ஆலயத் தர்மகர்த்தா சபைத் தலைவராக நீண்டகாலம் சேவையாற்றியுள்ள இந்நூலாசிரியர் 1995 ஆம் ஆண்டு நிகழ்ந்த புலம் பெயர்வு காரணமாக யாழ்ப்பாணத்தை விட்டு வெளியேறி வவுனியாவிலுள்ள கனகராயன் குளத்தில் ஆசிரியராகவிருந்த மகளுடனும் அதிபராகவிருந்த மருமகனுடனும் பாட சாலைக்கான அரச விடுதியில் குடும்பத்தா ருடன் தங்கியிருந்தார். 1996 ஆம் ஆண்டின் பிற்பகுதியில் சொந்த ஊருக்கு வந்து சேர்ந்தார். அப்போது அளவெட்டி வடக்கு தாமர் வளவு வைரவர் ஆலயம் எறிகணை வீச்சுக்களாலும் குண்டுத் தாக்குதல்களாலும் சிதைந்து பாரிய அழிவிற்குள்ளாகி இருந் தமை கண்டு கொள்ளப்பட்டது. அதை புனர மைப்புச் செய்யும் பணியை அப்பகுதி மக்கள் மேற்கொண்டனர். அத்தேவைக்காக ஏற் படுத்தப்பட்ட சபையின் தலைவராகவிருந்து உள்ளூரிலும் வெளியூரிலும் நிதி திரட்டி ஆலயம் சிறப்பாகக் கட்டப்படவும் கும்பாபி ஷேகம் நடக்கவும் வழிசமைத்த இந்த நூலா சிரியரின் சேவை பலராலும் பாராட்டப்பட்டது.

இந்தக் காலப்பகுதியில் அளவெட்டி கும்பழாவளைப் பிள்ளையார் கோயிலைப் புனருத்தாரணஞ் செய்ய அவ்வாலயத் தர்மகர்த்தாக்கள் சபை சிந்தித்தது. தர்ம கர்த்தக்கள் சபை அதற்கென ஓர் குழுவையும் அமைத்தது. அந்தக் குழுவின் தலைவ ராகவும் பண்டிதர் நாகலிங்கம் அவர்களே தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் தலைமையில் கோயில் புனருத்தாரணம் செய்யப்பட்ட மையும் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டமையும் யாவரும் அறிவர்.

## கிராமத் தலைவனாய்....

அளவெட்டி முழுமைக்குமாகச் சேவை யாற்றும் அளவெட்டி மஹாஜன சபை,

அளவெட்டி கிராம முன்னேற்றச் சங்கம் என்பவற்றின் தலைவராக இவர் மூன்று தசாப்த காலம் சேவையாற்றியுள்ளார். அக் காலப்பகுதியில் அளவெட்டி வடக்கில் ஒன்றும் தெற்கில் ஒன்றுமாக இரு நெசவு நிலையங் களை அரசினர் நிதி உதவியுடன் கட்டிப் பணி தொடர வைத்துள்ளார். அளவெட்டி சலவைத் தொழிலாளர்களுக்காக அளவெட்டி வடக்கில் அழகொல்லை விநாயகர் ஆலயக் குளத்திலும் அளவெட்டி தெற்கில் உத்தி ரிக்கைக் குளத்திலும் ஒவ்வொரு கிணறும் பதினைந்து பதினைந்து தொட்டிகளும் துணி வெளுப்பதற்குரிய கற்களும் அமைத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. மடங்கள், மலசல கூடங்கள் என்பனவும் அமைக்கப்பட்டுள்ளன. அளவெட்டியிலுள்ள வீதிகள் நல்ல முறையில் செப்பனிடப்பட்டுள்ளன. இவரது முயற்சியால் நடைபெற்ற கிராம அபிவிருத்தி வேலைகள் மிகப் பல. எந்தவொரு பகுதியினரும் குறை கூற முடியாத வகையில் இந்த வேலைகள் நடைபெற்றுள்ளன.

## அரசியலாளனாய்...

இந்த நூலாசிரியர் அரசியலிலும் நல்ல ஈடுபாடுடையவர். தந்தை செல்வநாயகம் அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்ட தமிழரசுக் கட்சியில் தம்மையும் ஒரு உறுப்பினராக இணைத்துக் கொண்டு அக்கட்சி சார்பில் நடத்தப்பட்ட சிங்களச் சிறீ அழிப்பு, சத்தியாக்கிரகப் போராட்டம் முதலிய பல நிகழ்ச்சிகளிலும் பங்கு பற்றியவர். கட்சியின் மாநாடுகளில் எல்லாம் கலந்து கொண்டவர். அக்கட்சியின் சார்பில் போட்டியிட்டோர் பலரின் தொகுதிகளுக்குச் சென்று அவர்களின் வெற்றிக்காகப் பாடு பட்டவர். அண்மையில் கட்சி வழங்கிய விருது வழங்கல் நிகழ்ச்சியில் இவருக்கும் விருது வழங்கப்பட்டது. மத்திய நிர்வாக உறுப்பினராக இவர் இரண்டு ஆண்டுகள் சேவையாற்றியும் உள்ளார். வலிகாமம் வடக்கு கட்சிக் கிளையின் தலைவராக இவர் பல்லாண்டுகள் சேவையாற்றியுள்ளார். தற்போதைய சூழ்நிலையில் கட்சியின் செயற்பாடு முடங்கிக் கிடப்பது பற்றி இவர் கவலைப்படுவதுண்டு.

## தலைமைத்துவனாய்...

இவர் தமது குருநாதராகக் கொண்டு வழிபடுபவர் புலவர் க.சு. நவநீதகிருஷ்ண பாரதியாரே எனல் தகும். பாரதியாரிடம் பரமேஸ்வரா பயிற்சிக் கலாசாலையில் மூன்றாண்டுகள் இலக்கண, இலக்கியம், செய்யுளியற்றல் என்பவற்றைக் கற்றவர். பயிற்சிக் கல்லூரியை விட்டு வெளியேறிய பின் குருகுலக் கல்வியை மேற்கொண்டு இரண்டாண்டுகளுக்கு மேல் தொல்காப்பி யத்தை உரையாசிரியர் பலரின் உரையோடு ஊன்றிக் கற்றவர். பாரதியாரின் திருவாசக ஆராய்ச்சிப் பேருரையை எழுதி முடிப்பதில் இவரின் பங்கு பற்றிப் பாரதியார் தமது நூலின் முகவுரையிற் குறிப்பிட்டுள்ளார். பாரதியார் இயற்றிய உலகியல் விளக்கம் என்னும் நூலிலுள்ள எழுபது அகவற் பாக்க ளுக்கு பாவொன்றுக்கு ஒரு தங்கப்பவுண் என்ற கோட்பாட்டுடன் நிதி சேகரித்து அக்காலத்தில் அத்தொகைக்கு மேற்பட்ட பொற்கிழி நிதி வழங்கப்பட்டது. நிதி சேகரிப்புச் சபையின் தலைவராக ஏழாலை ஞானப்பிரகாசம் B.A.,B.Sc யும் செயலாள ராக இவரும் தெரிவு செய்யப் பெற்றி ருந்தனர். யாழ்ப்பாணம் மாநகர சபை மண்டபத்தில் பல்கலைக்கழகப் பேராசிரியர் கணபதிப்பிள்ளை தலைமையில் பொற்கிழி வழங்கும் வைபவம் 1952 ஆம் ஆண்டு ஆவணி மாதம் நடைபெற்றது.

பண்டிதர் நாகலிங்கம் கல்வி சம்பந்த மான பல சங்கங்களிலும் தொடர்புடைய வராய் இருந்திருக்கிறார். அகில இலங்கைப் பண்டித ஆசிரியர் சங்கத் தலைவராய்

இருந்து அச்சங்கத்தின் சார்பில் பண்டித ஆசிரியர்களுக்குப் பட்டதாரிச் சம்பளம் வழங்க வேண்டுமெனக் கிறிஸ்தோபர் ஆணைக்குழுவிலும் அதற்குப் பிந்திய சம்பள விசாரணைச் சபைகள் முன்னும் வற்புறுத்தியதன் பேரால் பண்டித பட்டதாரிகளுக்கு ஒரு சம்பளத்திட்டம் வழங்கப்பட்டது. பரமேஸ்வராப் பண்டிதப் பட்டதாரிகள் சங்கத் தலைவராக இருந்து தமிழரசுக் கட்சித் தலைவர் S.J.V. செல்வநாயகம், அ.அமிர்தலிங்கம் என்போருடன் கல்வி மந்திரி இரியகொல என்பவரைச் சந்தித்து தங்கள் நிலைப்பாட்டை விளக்கிய போது புதிய சம்பள சபை வரும் போது தாமே சிபார்சு செய்வதாக அமைச்சர் கூறினாரேனும் அது நிறைவேறாதது துரதிஷ்டமே.

யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷா பிவிருத்திச் சங்க நிர்வாக சபையில் 1948 ஆண்டு முதல் இவர் உறுப்பினராக இருந்து 1952 ஆம் ஆண்டு முதல் அச்சங்கத்தின் தனாதிகாரியாக தாம் 1992 இல் விலகும் வரை கடமையாற்றியுள்ளார். அச்சங்கப் பரீட்சகராகவும் பாடவிதான அமைப்புச் சபை உறுப்பினராகவும் இவர் செயற்பட்டவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## இலக்கண நூலாசிரியனாய்...

பண்டிதர் தமிழ்மொழி வளர்ச்சிக்குச் செய்த தொண்டுகளை முன்னரே கண்டுள்ளோம். தொல்காப்பியம் என்னும் இலக்கணக் கடலைப் பல முறை நீந்தி இவர் பெற்ற நான்கு முத்துக்கள் செந்தமிழிலக்கண விளக்கம் என்னும் பெயர் தாங்கி எம்முன் நிற்கின்றன. பல்கலைக்கழகத்தில் பயிலும் மாணவர்களுக்கு இந்த நூல்கள் பேருபகாரமானவை. நன்னூல் இலக்கண விளக்கம் என்பவற்றுடன் இலக்கணச் செய்திகளை அறிவதற்குச் செந்தமிழிலக்கண விளக்கம் நல்ல வகையில் அமைந்தது என்பதில் சந்தேகமில்லை. பல ஆண்டுகளாகப் பண்டித வகுப்பு மாணவர்களுக்குக் கற்பித்த போது கிடைத்த முத்துக்களைக் குறித்து வைத்திருந்த பண்டிதர் ஐயா அவர்கள் இப்போது நூல் எனும் வடிவில் பயன் கண்டுள்ளார்கள். படிப்பவர்களாய நாம் பெரும் பயன் பெற்றுள்ளோம். அவர் தந்த நூல்கள் பற்றிய விபரம் –

1. **செந்தமிழ் இலக்கண விளக்கம் – முதலாம் பாகம்**
   **முதற்பதிப்பு : விக்கிரம சித்திரை ஏப்பிரல் 2000.**
   **இந்நூலில் எழுத்திலக்கணம் சொல்லிலக்கணம் என்னும் இரு பகுதிகள் சித்தரிக்கப்பட்டுள்ளன.**
2. **செந்தமிழ் இலக்கண விளக்கம் – இரண்டாம் பாகம்.**
   **முதற்பதிப்பு : சுபானு சித்தரை ஏப்பிரல் 2003**
   **இந்த இரண்டாம் பாக நூற் பகுதியில் செய்யுளியல் அணியியல் பற்றிய செய்திகளை சிந்தனைக்கு விருந்தாக்கியுள்ளன.**
3. **செந்தமிழ் இலக்கண விளக்கம் – மூன்றாம் பாகம்**
   **முதற்பதிப்பு : தாரண வருஷம் மார்ச் 2005**
   **அகத்திணையியலும் புறத்திணையியலும்**
4. **செந்தமிழ் இலக்கண விளக்கம் – நான்காம் பாகம்**
   **முதற்பதிப்பு : தாரண வருஷம் மார்ச் 2008**
   **மெய்ப்பாட்டியலும் மரபியலும்**

இந்நூல்கள் பலரின் பாராட்டைப் பெற்றுள்ளன. பழந்தமிழ் உரையாசிரியர்களின் குறை நிறைகள் இவருடைய நூல்களில் சுட்டப்பட்டுள்ளன. தொல்காப்பியம் கற்போர்க்கு இந்நூல்கள் பெரிதும் பயன்படுமெனப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்கள் பாராட்டிப் பேசியுள்ளனர். பல்கலைக்கழகத் தமிழ்த்துறை மாணவர்களால் இவை பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

## இனிய தந்தையாய்...

இவருக்கு இரு ஆண் பிள்ளைகளும் ஆறு பெண்பிள்ளைகளும் உள்ளனர். இவரது மூத்தமகன் முல்லைத்தீவு அரசாங்க அதிபராகப் பணி புரிகின்றார். இவரது இரண்டாவது மகன் அளவெட்டி அருணோதயாக் கல்லூரி அதிபராகி நல்ல பணி புரிகின்றார். மூன்று பெண் பிள்ளைகளும் பட்டதாரி

களாகி ஆசிரியப் பணிபுரிகின்றனர். அவர்களுள் ஒருவர் மகாஜனக் கல்லூரியிலும், மற்றையவர் கொக்குவில் இந்துக் கல்லூரியிலும் சேவை செய்கின்றனர். வைத்திய கலாநிதியாகிய ஒரு மகள் யாழ் பல்கலைக்கழக மருத்துவபீட விரிவுரையாளராக உள்ளார். அவரது கணவரும் யாழ் பல்கலைக்கழக மருத்துவபீட விரிவுரையாளராக உள்ளார்.

பாடசாலை மாணவர்களுக்குப் பேச்சுப் போட்டி கட்டுரைப் போட்டிக்கான விடயங்களை எழுதிக் கொடுப்பதில் இவர் திறமை நாடறிந்தது. இவர் எழுதிய பேச்சுக்களை ஆயத்தம் செய்து பேசிக் கட்டுரைகளை மனதுக்குள் வாங்கி போட்டியின் போது எழுதிப் பலர் பரிசில் பெற் றுள்ளனர். இவற்றை எல்லாம் தொகுத்து ஒரு நூலாக்கி வெளியிட்டால் பின்னே வருபவர்களுக்குப் பயன்பாடுடையவை ஆகலாம்.

அளவெட்டிக் கிராமத்தில் ஒரு பொழுது 1963 சமாதான சபையொன்று அமைக்கப்பட்டது. அச்சபையின் முதல் தலைவர் பெரியார் செ.மயில்வாகனம் அவர்கள். இரண்டாவதாக அதாவது பெரி யார் மயில்வாகனத்தின் பின் திரு.அ. தனபால சிங்கம் அவர்கள். அவரின் பின் எங்கள் நூலா சிரியர் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். இவர்கள் காலத்திலே உண்டாகும் எந்தப் பிரச்சினையையும் நீதியாக எல்லோரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய முடிவை எட்ட வைத்துத் தீர்த்து விடுவார்கள். 1993 ஆம் ஆண்டில் இடம் பெற்ற புலம்பெயர்வின் பின் இச்சமாதான சபையின் இயக்கம் நின்று விட்டது.

## பட்டங்களை விரும்பாப் பக்குவம்

1986 ஆம் ஆண்டில் நாகவரத நாராயணர் தேவஸ்தானம் இந்நூலாசிரியருக்குப் பண்டிதமணி என்ற பட்டத்தை வழங்கியது. அதே தேவஸ்தானம் 2002 இல் இலக்கண வித்தகர் என்ற பட்டம் சூட்டிக் கௌரவித்தது. 2004ம் ஆண்டு வலிகாமம் வடக்கு கலாசாரப் பேரவை இவரது இலக்கண, இலக்கியப் புலமைக்காக கலைச்சுடர் எனும் விருதினை வழங்கியிருந்தது. இந்நூலாசிரியர் ஆசிரியர் பயிற்சிக் காலத்தில் மதுரைத்தமிழ்ச் சங்கம் வழங்கிய பண்டிதர் எனும் பட்டம் ஒன்றையே பயன்படுத்தி வருகிறார். ஏனைய எந்தப் பட்டத்தையும் அவர் பயன்படுத்தியதில்லை. பராளுமன்ற உறுப்பினர்கள் சிலர் சமாதான நீதிபதி என்னும் ஜே.பி. பட்டத்தைப் பெற்றுக் கொடுக்க விழைந்தனர். எங்கள் பண்டிதர் அதனையும் ஏற்க மறுத்து விட்டார்.

அஃதே போன்று எங்கள் ஆசிரியர் தாம் எழுதிய நூல்களுக்குச் சாஹித்திய மண்டலம் பரிசில் தர வேண்டுமென்று விரும்பியதில்லை. பரிசில் பெறும் நோக்குடன் புத்தகங்களை அனுப்பியதுங் கிடையாது.

தனக்கென வாழாப் பிறருக்குரியவராக வாழ்ந்து கொண்டிருக்கும் இந்த நூலாசிரியர் பண்டிதர் நாகலிங்கம் அளவெட்டிக் கிராம மக்களிலே நிறைவான கவனம் செலுத்தியவர். எந்த வகையிலும் அவர்கள் குறைபாடடையக் கூடாது என்பது அவர் கருத்து.

எந்த வேளையும் சிரித்த முகத்துடனே உரையாடுவார். மாணவர்களிடம் மிகுந்த அன்பு செலுத்துபவர் தோட்டத்திலே நின்று தொழில் புரியும் நேரத்தில் கூட மாணவர்களுக்கு உண்டான ஐயத்தைத் தீர்த்து வைக்க அவர் பின் நின்றதில்லை.

"வித்துமிடல் வேண்டுங் கொல்லோ" என்ற வள்ளுவன் காண வைத்த உண்மையை பண்டிதர் குடும்பத்தினூடாகக் கண்டு மகிழ்வடைவோம்.

# வேதாகமங்களைப் போதித்து அவற்றின் பிரகாரம் வாழ்ந்து மரணத்திலும் சாதனை புரிந்தவர்



ஈழத்துச் சித்தர் பரம்பரையின் முன்னோடியான கடையிற் சுவாமிகள், அவரின் சீடன் செல்லப்பா சுவாமிகள், அவரின் ஞான வாரிசு சிவ யோக சுவாமிகள் ஆகிய ஆன் மீக உள்ளொளி பெற்ற மூன்று சித்தர்கள் 1860 – 1964 காலப்பகுதியில் இலங்கையில் வாழ்ந்தனர். அறியமுடியாத உண்மையை இவர்கள் தம் உள்ளங்கைகளில் வைத்திருந்தனர். இவர்கள் சனாதன தர்மத்தின் உதாரண புருடர்களாவர்.

இவர்களில் 1927 ஜனவரி 5ஆம் நாள் கலிபோர்னியா (USA)வில் அமெரிக்கப் பெற்றோருக்குப் பிறந்தவர் தான் அடுத்த வாரிசு.

படிக்கும் காலத்தில் சில துறவிகளின் உபதேசங்களைக் கேட்டு சைவ சமயத்தில் ஈடுபாடு கொண்டார். வாலிபப் பருவத்தில் நடனக் குழுவில் இணைந்து சிறந்த பலே நடனக்காரராயிருந்த இளைஞனே சிறந்த சித்தர் பரம்பரையின் வாரிசான அமெரிக்கத் துறவி சிவாய சுப்பிரமுனிய சுவாமி.

பத்தொன்பதாவது வயதில் நாட்டியக் குழுவுடன் இலங்கைக்கு வந்தவர், ஆன்மீக நாட்டங் கொண்டு குழுவுடன் திரும்பி அமெரிக்கா போகாமல் ஜலானி குகைகளில் தவ வாழ்வை மேற்கொண்டார். இந்த வேளையில் தெய்வாதீனமாக அளவெட்டி கந்தையா செட்டியார் அவர்களைச் சந்தித்து, அவரோடு யாழ்ப்பாணம் சென்றார்.



செட்டியார் அவர்களால் கொழும்புத் துறையில் சிவயோக சுவாமிகளிடம் ஒப்படைக்கப்பட்டார். அவரிடம் உபதேசங்களைப் பெற்று 1949 வைகாசி மாதப் பௌர்ணமி நாளில் ஞானதீட்சையுடன் "சுப்பிரமுனிய" எனும் தீட்சாநாமத்தையும் பெற்றார். சக்தி வாய்ந்த அறிவுரைகளையும் பெற்று, யோகர் சுவாமியிடம் விடைபெற்றுப் போக முற்படும்போது அவர் சுப்பிரமுனியரின் முதுகில் பலமாக அறைந்து "இந்த ஒலி அமெரிக்காவில் கேட்கும். இப்போ உலகைச் சுற்றி வந்து சிங்கத்தைப் போல கர்ச்சிப்பாயாக. நீ அரண்மனைகளைக் (கோயில்களைக்) கட்டி ஆயிரக் கணக்கானோருக்கு உணவளிப்பாய்" என ஆசி வழங்கினார். அப்போது சுப்பிரமுனியருக்கு வயது 22. யோக சுவாமிக்கு வயது 77.

யோகர் சுவாமிகளின் ஆசியுடன் சுப்பிரமுனிய சுவாமி யாழ்ப்பாணத்தில் அளவெட்டி எனும் கிராமத்தில் ஸ்ரீ சுப்பிரமுனிய ஆசிரமம் நிறுவி அங்கே தங்கியிருந்து ஆலய வழிபாடு, நிஷ்டை, உபதேசம் என்பவற்றில் ஈடுபட்டார்.

எல்லோராலும் அன்பினால் "குருதேவா" எனச் சுவாமிகள் அழைக்கப்பட்டார். கலை விழாக்கள் நடப்பதற்கு வசதியாக பிள்ளையார் கலையரங்கையும் கட்டுவித்தார்.

துரதிஷ்டவசமாக 1986இல் போரினால் ஆசிரமம் மூடப்படவேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டது.

ஹவாய் சைவசித்தாந்த திருச்சபைத் திட்டம் அளவெட்டியிலேயே கருக்கட்டியது எனலாம். குருதேவர் கலிபோர்னியாவுக்குத் திரும்பி, ஆத்ம சாதனத்திலும் தியானத்திலும் ஈடுபட்டார். 1957இல் முப்பதாவது வயதில் சில சீடர்களின் உதவியுடன் இமாலய கலைக்கழகத்தை நிறுவி சைவ தர்மத்தை நேர்முகமாகவும் ஆயிரக் கணக்கானோருக்கு கடித மூலமும் போதித்து வந்ததார். பல அமெரிக்கர்கள் இந்துமதத்தைத் தழுவினர். அடியார்களும் ஆதரவாளர்களும் பெருகவே கிழக்குக்கும், மேற்குக்கும் மத்தியிலிருக்கும் ஹவாய் தீவுக் கூட்டத்தில் ஒன்றாகிய குவாய்த் தீவில் இயற்கை வளம் கொண்ட 51 ஏக்கர் நிலத்தை குருதேவா கொள்வனவு செய்து அங்கே ஆதீனத்தை நிறுவினார். கடவுள் ஆலயம் என்ற பெரியல் கோயில் கட்டி 6 அடி உயரமான நடராஜப் பெருமானை பிரதிஷ்டை செய்தார். அவரும் அவரால் பக்குவ நிலைக்குக் கொண்டுவரப் பட்ட துறவிகளும் பூசை, தியானம், நோன்பு என்பவற்றிலும் ஆதீனத்திலுள்ள சகல பணிகளிலும் ஈடுபட்டு வந்தனர். 1983ஆம் ஆண்டு வரையிலான காலப் பகுதிகளில் ஆண்டுக்கொரு தடவை 30 – 50 அமெரிக்க அடியார்களை குருதேவாவும் சில துறவிகளும் அழைத்துவந்து யாழ்ப்பாணம், தென்னிந்தியா ஆகிய இடங்களில் தல யாத்திரை செய்தனர்.

சிவனோடு ஆடுதல், வாழ்தல், ஒன்று கூறுதல் எனும் நூல்களையும் மேலும் பல பிரசுரங்களையும் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்ட குருதேவர் "சிவனோடு வாழ்தல்" நூலில் வாழ்வு, தாழ்வு, சாவு தொடர்பாக ஒவ்வொன்றும் நான்கு வரிகளைக் கொண்ட 365 நந்திநாத சூத்திரங்ளைத் தந்துள்ளார். அவற்றில்,

- சிவபெருமான் மீது ஆர்வமும் அன்பும் கொண்ட அடியார்கள் ஆன்மா மரணிப்பதில்லை. அதேபோல் உள்ளமும் உணர்வும் முதிர்வடைவதில்லை. வாழ்க்கைப் பருவங்கட்கான ஒழுங்கு முறையில் அச்சமின்றி வாழ்வதால் வளர்ச்சியும் சக்தியும் பெறலாம் என அறிவர்.
- இறுதிப் பருவத்தில் வரும் நோயினால் மரணம் சம்பவிக்கும் என அறியும் தன்மை உடையோர்க்கு சிவனடியார்கள் ஆன்மீக அறிவுரை வழங்குவர். இந்த வாழ்வு மாறும் காலத்தில் சிவசிந்தனையே பழைய செயல்களைத் தீர்மானிக்கும் என வழிகாட்டுவர்.
- மரணத்தை எதிர்பார்க்கும் சிவனடியார்கள் மந்திரங்களிலேயே உள்ளத்தை ஒருமைப்படுத்துவர். இவ்வுலக வாழ்விலிருந்து விடுபடும்போது ஆன்மாவின் தன்மையைச் சொல்லும் வேத போதனைகளில் அமைதி காண்பர்.
- சிவனடியார்கள் உயிர்காக்கும் மருத்துவ சிகிச்சையை வரவேற்பார். ஆயினும், இறுதி நாட்களில் செயற்கை உயிர்ப்பைத் தவிர்த்தும், மருத்துவ மனையில் மரணிக்காதிருக்கவும் அன்புடையோரின் பிரார்த்தனையுடனான விழிப்புக் காவலில் வீட்டிலேயே ஆவி துறக்க விரும்புவர்.
- பக்தியுள்ள இந்துக்கள் இறந்தோரை எப்பொழுதும் தகனமே செய்வர். அடக்கம் செய்வது பாரம்பரியப்படி தவிர்க்கப்பட்டது. சட்டப்படி தேவைப் பட்டால் அல்லாது ஒருபோதும் சடலத்தை மருந்திட்டுப் பாதுகாத்து வைக்கக் கூடாது.
- சிவனடியார்கள் கூடிய விரைவில் சடலத்தைத் தகனஞ் செய்ய விரும்புவர்.

ஆவி பிரிந்து 24 மணித்தியாலங்கட்கு உள்ளாகத் தகனம் செய்வது விசேஷ மாகும். ஹோமமும் அதைத் தொடரும் கிரியைகளும் ஆன்மாவின் இவ்வுலகப் பிணைப்பை நீக்கி விடுதலை கொடுக்கும்.

- ஆன்மா அழிவற்றது என்பதை அறிந்து கொண்டு பிரிந்த ஆன்மாவை பூமி யோடு கட்டுப்படுத்தும் விதமாக, தேவையற்ற பெருந்துயரங்களில் ஈடுபடலாகாது. நேசித்தவரின் இறுதிப் பயணத்தில் திருப்தி அடையலாம்.

மேற்கூறிய போதனைகளை அனு சரித்துக் குருதேவர் தன்னைப் பீடித்த பயங்கர நோய், மருத்துவ சிகிச்சையால் குணப்படுத்த முடியாது என உணர்ந்து உணவும் அருந்தாமல் தியான மண்டபத்தில் சிவயோக சுவாமிகளின் பெரிய படத்துக்கு முன்பாக தியானத்தில் படுத்துவிட்டார்.

ஆதீனத்திலுள்ள 24 துறவிகளும் சாதகர்களும் மாறி மாறிக் குருதேவரின் அருகில் இரவும் பகலும் பிரார்த்தனை, பஜனை, தேவார திருவாசகம், நற்சிந்தனை ஓதல் என்பவற்றில் ஒரு மாதகாலமாக ஈடுபட்டு வந்தனர். சுவாமி கண் விழிக்கும் நேரத்தில் சிறிது நீர் மட்டும் பருகுவார். சில சமயங்களில் ஏதாவது மெதுவாகச் சொல் வார். ஒரு நாள் "கவலைப்படவேண்டாம்" என்றும், இன்னொருநாள் "இன்னும் இங்கேதான் இருக்கிறேன்" எனவும் புன்னகைத்தார். ஒரு தடவை என்ன தேவை? என ஒரு துறவி கேட்டதற்கு, மெதுவாக "ஒரு புதிய உடம்பு" என்றார்.

பிறிதொரு நாள் பழனி சுவாமியையும் சேயோன் சுவாமியையும் அருகே அழைத்து ஆசீர்வதித்து "நீங்கள் இனிமேல் பரமாச் சாரியார்கள்" எனப் பதவி உயர்த்தினார். தனது கழுத்திலிருந்த உருத்திராட்ச மாலை யைக் கழற்றி போதிநாத சுவாமியின் கழுத்தில் போட்டு அவரே தனது வாரிசு என்பதை உணர்த்தினார். 3-11-2001இல் குருதேவர் தன் குருவின் படத்தைக் காட்டி எல்லாம் முடிந்தது என்று சொன்னபோது அவருடனிருந்த தமிழ் மொழி பெயர்ப்பாளர் சாதகர் தொண்டுநாதன் "யோகர் சுவாமிகள் என்ன சொன்னார்?" என்று கேட்டதற்கு "நாளை வருகிறேன்" ஏனறு சொல்வதாகச் சொன்னார். அத்துடன் "தனது பணியை மேலும் திறமையாகச் செய்யும் தகுதியை நீங்கள் பெற்றுள்ளீர்கள்" எனச் சொல்லியுள்ளார்.

சிவத் தியானத்திலிருந்த குருதேவா கைலாசநாத பரம்பரையின் 162ஆவது மகாசன்னிதானம், 12 நவம்பர் 2001 நள்ளிரவு 11.54 மணிக்கு மகாசமாதி அடைந்தார். குருதேவாவுக்கு வயது 74. இவர் 25 இலட்சம் இலங்கைத் தமிழ் மக்களின் பாரம்பரிய ஆன்மீகத் தலைவர், மாமுனிவர் சிவயோக சுவாமிகளின் சீடர் என்பது யாவரும் அறிந்ததே. குருதேவாவின் தலைமுடியில் சுற்றப்பட்டிருந்த உருத்திராட்ச மாலை அவரின் ஆணைப்படி 163ஆவது மகா சன்னிதானமாகும். போதிநாத சுவாமி வேலமுடியில் அணியப்பட்டுக் குருபீடத்தில் அமர்த்தப்பட்டார். இவருக்கு வயது 59 ஆகும்.

*(நன்றி : ஞாயிறு தினக்குரல் 09 டிசம்பர் 2001)*

# அளவெட்டி மகாஜனசபையின் தோற்றமும் வளர்ச்சியும்

இன்று பாரிய கூட்டங்களையும், விழாக்களையும் நடாத்துவதற்கு அளவெட்டி மகாஜன சபை மண்டபம் அன்றும் இன்றும் பல சேவைகளை ஆற்றுவதற்குக் காரண மாய் நிமிர்ந்து நிற்கும் இக்காணியைக் கொள்வனவு செய்து தருமசாதனமாக உறுதி முடித்துக்கொடுத்த அளவெட்டியில் அக் காலம் வாழ்ந்த தருமவான்களை இச்சபையின் பெருமை பேசும் நாம் இன்று ஞாபகம் செய்வது எம்மவரது நன்றி மறவாப்பண்பை எடுத்துக்காட்டுவதாகும்.

1921ஆம் ஆண்டு மாசி மாதம் பதி னேழாம் திகதி இக்காணியானது அள வெட்டிக் கிராமத்தைச் சேர்ந்த மூத்ததம்பி – செல்லத்தம்பி, முதலித்தம்பி அருணாசலம், அருணாசலம் – வேலுப்பிள்ளை, வெண்டரசர் – செல்லப்பா என்போரால் கொள்வனவு செய்யப்பட்டதென அக்காணியின் உறுதி மூலம் தெரியவருகின்றது. 3 1/4 பரப்பு காணியைக் கொண்ட இவ்விடம் செந்திய சீமா பூங்காவனம் என்னும் பெயரால் அமைந்த தென்பதையும் உறுதி சாற்றி நிற்கின்றது. அக்காலத்தில் அக்காணியைக் கொள்வனவு செய்து தருமசாதனம் பண்ணியோர் அக்காணியில் அமையவிருக்கும் மண்டபம் அளவெட்டி மகாஜனசபை மண்டபம் என அழைக்கப்படவேண்டுமென்ற தங்களின் விருப்பத்தையும் உறுதி மூலம் வெளிப் படுத்தியிருந்தனர். மேலும் என்றென்றைக்கும் இவ்வாதனம் அளவெட்டியில் இருக்கும் சனசங்கம் முழுவதற்கும் உரித்துடையதாக இருக்கவேண்டுமென்றும், வேறு எவ்வகை யில் இவ்வாதனத்தைச் செய்து கொடுக்கும் மேற்குறித்த நால்வருக்கும், அவர்கள் தம் உரித்தாளர்களுக்கும், சொந்தமோ, உரித்தோ இருக்கமாட்டாதென்றும் குறிப்பிட்டுள்ளமை இன்று ஊன்றி கவனிக்கற்பாலது.

நன்றி மறவாமை மனிதனை உயர்ந்தவ னாக்கும் என்ற தனித்துவத்துக்கமைய இப்பெரியார்களையும், அவர்களின் வழித் தோன்றல்களையும் இன்று ஞாபகப் படுத்துதல் எம் கடமையாகும்.

1922ஆம் ஆண்டில் பனை ஓலையால் வேயப்பட்ட ஒரு சிறு மண்டபத்தையும் அமைத்து அளவெட்டி மகாஜன சபை சனசங்கம் எனும் பெயரில் ஓர் சனசமூக நிலையத்தையும், தங்களின் செயற்பாடு களை மக்களின் பங்களிப்பில் செயற்படுத்தி யும் உள்ளனர். இன்று உலகளாவிய ரீதியில் செய்யும் போதனை மக்கள் பங்களிப்புட னான செயற்பாடே நீடித்து நிலைக்கும் என்பதாகும். இன்றைய இப்போதனைகளை அன்றே எம் மூதாதையர்கள் ஆரம்பித் துள்ளனர் என்பதை நினைக்கும்போது அவர்களின் உள்ளக்கிடக்கையை, புத்திக் கூர்மையை எவ்வாறு வர்ணிப்பது என்றே புரியவில்லை.

படித்தவர்கள் மிகக் குறைவாக இருந்த காலத்திலும் அளவெட்டியில் படித்த பலர் இருந்தனர். அவர்களில் சிலர் பொதுப்பணி களில் நாட்டமுடையோராக இருந்தனர். பி.எஸ்.ஸி மாஸ்டர் என பலராலும் அன்பாக அழைக்கப்பட்ட திரு.ச.சிதம்பரப்பிள்ளை (BA, B.Sc) பொன்னையா மாஸ்டர் என மக்கள் நாவில் நிலைநிற்கும் திரு. ச.சிதம்பரப் பிள்ளை, திரு.தி. செல்லத்துரை ஆசிரியர்

முதலிய அளவெட்டித் தொண்டர் பலர் நான் முன்னர் குறிப்பிட்ட கொட்டகையை அமைக்க முன்னோடியாக இருந்தவராவர்.

1922ஆம் ஆண்டில் ஸ்தாபிதம் பெற்ற நிறுவனம் காலப்போக்கில் பல்வேறு நிர்வாகப் பணிகளையும், ஆக்க முயற்சி களையும், சீர்திருத்தப் பணிகளையும் மேற்கொண்டு 1940ஆம் ஆண்டளவில் பாரிய வளர்ச்சியும் கண்டது. சிறிய கொட்டகையாக இருந்த கட்டடம் காலப் போக்கில் பெரிய கட்டடமாகவும் மாற்றம் பெற்றது. இந்நிலையில் திரு. செ. மயில் வாகனம் எனும் பெரியாரது பங்களிப்பு, பெரிதும் பாராட்டத்தக்கது. அவர் அர சாங்கத்தில் தமக்கிருந்த செல்வாக்கைப் பயன்படுத்தி நிதி உதவி பெற்று மகாஜன சபை மண்பத்தை இப்போதுள்ள நிலை மைக்குக் கொண்டுவந்த பெருமைக்குரிய வராவர்.

**யாப்பு விதி**

02.10.1940ல் நடந்தேறிய பொதுக் கூட்டத்தில் அங்கீகாரம் பெற்ற உபவிதிகள் என்றதோர் யாப்பு உருவாக்கப்பெற்று அந்த யாப்பு விதிகளுக்கு அமையவே செயற் பாடுகள் யாவும் நடந்தேறி வந்தமையும் ஈண்டு குறிப்பிடத்தக்கது. இந்த யாப்பு விதி ஒவ்வோர் விடயத்தையும் இரத்தினச் சுருக்கமாகவும், மிகவும் தெளிவாகவும் எடுத்தியம்புவதாக இருப்பதும் குறிப் பிடத்தக்க அம்சமாகும். இன்றும் எம்மால் அந்த யாப்புவிதி ஆவணமாகப் பேணப் படுவது மட்டுமன்றி சபையின் பெரும் பாலான நடைமுறைகளும் அதன்படியே நடைபெற்று வருகின்றன.

காலத்துக்குக்குக் காலம் மகாஜனசபை நிர்வாகம் மாற்றி அமைக்கப்பட்டாலும் அந்த நிர்வாகசபை உறுப்பினர்கள் அரசாங்கம் தரும் நல்லுதவிகளைப் பயன்படுத்தி மகாஜனசபை பொதுப்பணிகளில் சோர் வின்றி ஈடுபட்டு வெற்றிகாண வைத்தனர். 1950ஆம் ஆண்டளவில் அரசினர் கிரா மங்கள் தோறும் நெசவு நிலையங்களைத் தொடக்கி கிராம இளைஞர்களுக்கு வேலை வழங்கும் திட்டம் நடைமுறைக்கு வந்த போது அளவெட்டி மகாஜனசபை புதிய கட்டடம் அமைப்பதால் காலம் தாழ்த் தலாகாதெனக் கருதி மகாஜன சபை மண்டபத்தையே நெசவு நிலையமாக்கி – நெசவுத்தொழிலை விரைந்து ஆரம்பித்ததும் குறிப்பிடத்தக்கது. அப்படி ஆரம்பித்த நெசவுசாலையில் பன்னிரு மாணவர்கள் பயிற்சிபெற்றனர். பயிற்சி பெற்ற மாண வர்கள் விரைவில் தேர்ச்சி பெற்று அத் தொழில் மூலம் உழைக்கவும் ஆரம்பித்து விட்டனர். அந்நெசவு நிலையம் மகாஜன சபை மண்டபத்தில் இயங்கியமையால் அம்மண்டபச் செயற்பாடுகளுக்கு இடர்ப்பாடு நேருவது கண்டு மகாஜனசபை நிர்வாகம் அம்மண்டபத்திற்குத் தென்புறமாக உள்ள நிலத்தில் நெசவுசாலை கட்டடத்தை அமைத்துக்கொடுத்தது. இணுவிலைச் சேர்ந்த மகாதேவன் என்பவரே அந்நெசவு சாலையின் முதற்பயிற்சியாளராகக் கடமையேற்று நடத்தியவராவார்.

அளவெட்டி மகாஜனசபை நிர்வாகம் அரசினர் கொடுத்த நல்ல வாய்ப்புக்களை எப்போதும் தவறவிடாமற் பயன்படுத்தி வந்துள்ளனர். கிராம முன்னேற்றச் சங்கம் ஆரம்பித்த காலத்திலும் அவ்வாய்ப்புக் களைப் பயன்படுத்தி அளவெட்டியில் கிராம முன்னேற்றச் சங்கமும், சனசமூக நிலை யமும், அமைக்கப்பட்டன. இவையும் அளவெட்டி மகாஜன சபையின் நிர்வாகத்தின் கீழையே இயங்கின என்பதும் குறிப்பிட வேண்டியது. ஆரம்பத்தில் அளவெட்டி முழுவதற்குமே ஒன்றாக இருந்த கிராம

முன்னேற்றச் சங்கமும், சனசமூக நிலையமும், அளவெட்டி மகாஜனசபை கிராம முன்னேற்றச்சங்கம், அளவெட்டி மகாஜன சபை சனசமூக நிலையம் என்ற பெயருடனே இயங்கின.

அக்காலத்தில் பத்திரிகை வாசிப்போர் தம் வீடுகளில் பத்திரிகைகளைப் பெற்று வாசிக்கும் நிலையில் இருந்திலர். பொது வாசிகசாலைகளை நோக்கியே அவர்கள் சென்று பத்திரிகைகளை வாசிக்கும் நிலை அன்றிருந்தது. இச்சேவையை அளவெட்டி முழுவதற்கும் செய்யக்கூடிய நிலையில் அன்றைய அளவெட்டி மகாஜனசபை செயற்பாட்டை அன்றைய தலைமுறையினரிலும் பலர் அறிவர்.

அளவெட்டி முழுவதற்கும் ஓர் கிராம முன்னேற்றச் சங்கம் இருந்த காலத்தில் கிராம அபிவிருத்தி வேலைகள் நடைபெற்றது போல இப்போது பல கிராம முன்னேற்றச் சங்கங்கள் இருந்தும்கூட முன்னர் அபிவிருத்தி வேலைகளுக்குப் பணம் ஒதுக்கியதுபோல இப்போது ஒதுக்கப்படாததால் கிராமப்பணிகளில் தொய்வு நிலையே காணப்படுகிறது. இப்போது அளவெட்டிக் கிராமத்தில் ஆறு கிராம சேவையாளர்கள் பணிபுரிகின்றார்கள். சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் ஒரு கிராம சேவையாளரே அளவெட்டிக் கிராமம் முழுவதற்கும் கடமை புரிந்தார். அளவெட்டிக் கிராமத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட முத்தையா விதானையார் கடமையாற்றியபோது அளவெட்டியில் எத்தனையோ பொதுப் பணிகள் நிறைவேற்றப்பட்டன என்பதும் குறிப்பிடத்தக்கது. இதனால் பிறவூரில் இருந்து வந்து கிராம அதிகாரியாகப் பணியாற்றியவர்கள் கிராம பொதுப்பணிகளில் சிரத்தையற்றோராய் இருந்தனரென அர்த்தமாகாது. முத்தையா விதானையார் காலத்தில் அளவெட்டிக் கிராமத்துக்கு மாத்திரமல்லாமல் யாழ்ப்பாணத்தில் உள்ள எல்லா கிராமங்களுக்கும் நிதி வழங்குதல் கூடுதலாகவே இருந்தது. அளவெட்டியில் பலகாலமாகத் திருத்தப்படாதிருந்த ஒழுங்கைகள் சென்ற நூற்றாண்டின் முற்பகுதியிலேயே திருத்தப்பட்டன. பொது மலசல கூடங்கள், பொது மண்டபங்கள், சலவைத் தொழிலாளர்களுக்கான தொட்டிகள், கிணறுகள், அளவெட்டி வடக்கிலும், தெற்கிலும், நெசவுப் பயிற்சியாளரக்ளுக்குரிய நெசவு சாலைகள், பாலங்கள், திருத்த வேலைகள் என்பனவெல்லாம் இக்காலப் பகுதியில் அளவெட்டி மகாஜனசபை கிராம முன்னேற்றச் சங்கத்தால் அமைக்கப்பட்டன என்பது உண்மை; வெறும் புகழ்ச்சி அல்ல. இந்நூலை வெளிவரச் செய்வதில் பெரும் பங்காற்றிய அளவெட்டி மகாஜன சபையின் இப்போதைய நிர்வாகம் பற்றிச் சிறிது கூறுவதும் அவசியம் என்றே கருதுகின்றேன். 2004ம் ஆண்டுக்குப் பின்னாலான நிர்வாகம் வன்செயலின்போது சிதைவுற்ற மண்டபத்தைச் செப்பனிடுவதிலும் அழிந்து போன தளபாடங்களைச் சேர்ப்பதில் கவனம் செலுத்தியது, வெற்றியும் கண்டது.

## நெசவு நிலையக் கட்டடம்

மண்டபத்துக்கு அருகில் இருந்த நெசவு நிலையம் நெசவாளர் சங்கத்தால் வாடகைக்கு எடுக்கப்பட்டு சில ஆண்டுகள் வாடகையும் பெறப்பட்டும் வந்தது. இடப்பெயர்ச்சிக்குப் பின்னர் அரசினரால் மண்டபக் கூரை புனரமைக்கப்பட்டபோதும் நெசவுத்தொழில் செயலிழந்த தன்மையில் இருந்தபோது நிர்வாகம் மண்டபத்தைக் கையளிக்கக்கோரியது. குறிப்பிட்ட திணைக்களம் 55 ஆண்டுகள் மண்டபம் தங்களின் பரிபாலனத்தின் கீழ் இருந்தமையைக் கருத்தில் எடுத்து மறுத்தபோது 4 ஆண்டுகள் தொடர்ந்து வாதாடி எங்கள்

காணி, எங்கள் கட்டடம் எம் மக்கள் தேடிய சொத்து என்பதை ஆதாரபூர்வமாக ஆவணப்படுத்தி மீட்டெடுத்தோம். இது விடயத்தில் நீதி காத்தவர் பெருமைக்குரிய பிரதேச செயலர் திரு. எஸ்.முரளிதரன் அவர்கள்.

**இம்மண்டபச் செயற்பாடு**

வாசிகசாலை, நூல் நிலையம் செயற்படத்தக்க தன்மையில் மண்டபம் வடிவமைக்கப்பட்டது. மண்டபத்தில் அரச, அரச சார்பற்ற நிறுவனங்களில் வேலைப்பட்டறைகள், கருத்தரங்குகள், நடைபெறுவதுடன், எம் கிராம மாணவர்களுக்கு ஆங்கில, சிங்கள கணனிப் பயிற்சி வகுப்புக்களும் நடைபெறுவதும் குறிப்பிடத்தக்கது. மண்டபம் பெரிதும் புனரமைக்கப்படவேண்டுமாதலின் உள்ளூராட்சித் திணைக்களம் நெல்சிப் திட்டத்தின் மூலம் ரூபா 20 லட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டு மண்டபம் புனரமைக்க இருப்பதும் குறிப்பிடற்பாலது.

1950ஆம் ஆண்டில் அரசின் நெசவு நிலையத் திட்டத்தைக் கொண்டுவர அன்றைய சபையின் தலைவர் சைவப்பெரியார், சமூக சேவையாளர் அமரர் செ. மயில்வாகனம் அவர்களின் முயற்சியால் இம்மண்டபம் அமைக்கப்பட்டமையால் பொதுச்சபையின் தீர்மானப்படி அன்னாரின் பெயரையே இம்மண்டபத்துக்கும் சூட்டி யுள்ளோம்.

50 ஆண்டுகளுக்கு மேலான அவரின் தன்னலமற்ற சேவையை நினைவுகூரு முகமாக மண்டப முகப்பில் அன்னாரின் திருவுருவச் சிலையை அமைக்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றது. சிலை அமைப்புக்குரிய முழுச் செலவையும் எம் கிராமப் பெருமகன் வைத்தியகலாநிதி பத்மநாதன் ரஞ்சன் அவர்கள் (அவுஸ்ரேலியா) பொறுப்பேற்றுள்ளார்.

சிலை வடிவமைப்பை எங்கிராமப் பெருமகன் ரமணி என அழைக்கப்படும் (வை.சிவசுப்பிரமணியம்) ஓவிய, சிற்ப விற்பன்னர் பொறுப்பேற்றுள்ளார் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

**மகாஜனசபை மண்டபம்**

எம் முன்னோரால் ஆக்கித் தந்த இம்மகா மண்டபம் மிகவும் பழமை வாய்ந்ததும் அவசியம் புனரமைப்புச் செய்யவேண்டியதுமாகும். மண்டபத்தைப் புனரமைப்புச் செய்ய இன்று குறைந்தது 25 இலட்சம் தேவைப்படும். எங்கிராம மக்களின் நலன் கருதி இம்மண்டபத்தைத் திருமணச் சேவைகளுக்குப் பயன்படுத்தியுள்ளோம். மாதம் தோறும் மகாஜனசபை கலைஞர் வட்டத்தினரால் நடாத்தப்படும் நிலாக்கால நிகழ்வுகளும் இங்கேயே நடை பெறுகின்றன.

**மின்சார வசதி**

வெளிநாடுகளில் உள்ள எங்கள் சில இளைஞர்களின் பணஉதவி மூலம் ரூபா ஒன்றரை இலட்சம் செலவு செய்து மூன்று மண்டபங்களுக்கும் மின்சார வசதிகள் செய்யப்பட்டுள்ளது. சிதைவுற்ற முன்பள்ளிக் கட்டடம், எங்கிராமப் பெருமகன் க. நற்குணம் (லண்டன்) தன் தாயாரின் பெயரால் ரூபா மூன்று இலட்சம் வரை செலவு செய்து அமைத்துத் தந்துள்ளார். அவரது சேவைக்கு எமது நன்றிகள்.

**சற்குரு சிவாய சிறீ சுப்பிரமுனிய சுவாமிகள் கலாசார நிலையம்**

1960ம் ஆண்டில் இருந்து ஆச்சிரமம் என்ற பெயரில் அரும்பெரும் சமயப்பணிகள் ஆற்றிவந்த இவ் அமைப்பு வன்செயலால் பூரணமாக அழிக்கப்பட்டது. செயலிழந்த ஆச்சிரமத்தின் பரிபாலகராக இருந்த அமரர் திருமதி.வி. சிவயோகம் அம்மையாரின்

உதவியுடன் 2004ஆம் ஆண்டில் இருந்து 25 வருட ஒப்பந்த அடிப்படையில் பொறுப் பேற்று நடாத்தி வருகின்றோம். சுவாமிகளின் அமெரிக்காவில் அமைந்துள்ள சைவ ஆதீனத்திலிருந்து சைவநன் உலகிற்கு அரும்பெரும் தொண்டாற்றிவரும் தொண்டு நாதசுவாமிகள் எங்கள் சபையின் நிலைப் பாட்டை நன்கு உணர்ந்துள்ளார். 25 வருட கால முடிவில் மேலும் ஒப்பந்தம் பல்லாண்டு களுக்கு நீடிக்க அவர் வழியமைப்பார் என்ற நம்பிக்கையும் எமக்குண்டு. அவரின் தொண்டுகள் தொடர பிரார்த்திக்கின்றோம். ரூபா 2 லட்சம் வரை செலவு செய்து கலை யரங்கு செப்பனிடப்பட்டுள்ளது. இக் கலாச்சார நிலையத்துக்கு நீர் விநியோகம் மேற்கொள்ளப்பட்ட செலவு ரூபா ஒன்றரை லட்சம் ஆகும். இச் செலவு முழுவதையும் அளவெட்டி உடையார் கிணற்றடியைச் சார்ந்த எங்கிராமப் பெருமகன் திரு. ஆ. பத்மநாதன் அவர்கள் தம் பெற்றோரின் ஞாபகார்த்தமாக வழங்கி உதவியுள்ளார். அவருக்கு எம் கிராமத்தின் சார்பில் உள மார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள் கிறோம். பல்வேறு நிகழ்ச்சிகளுக்கும் இக்கலையரங்கு பாவிக்கப்படுகின்றது. இப்பாரிய கலையரங்கின் முன்னால் சுவாமியின் பெயரில் சற்குரு சிவாயஸ்ரீ சுப்பிரமுனிய சுவாமிகள் கலாச்சார நிலையம் என்னும் பாரிய மண்டபம் ஒன்றினை அமைப்பதும் சபையின் எதிர்காலத்திட்டமாகும். இதன் வரைபடமும் தயாரித்து வைக்கப்பட்டுள்ளது. 100' நீளம் 50' அகலம் கொண்ட மண்டபம் அமைய தற்போதைய மதிப்பீடு ஒன்றரைக் கோடியாகும். திறமை கொண்ட, சாதனைகள் படைக்கும் எங்கள் கிராம இளைஞர்கள் ஆவன செய்வார்கள் என்பதும், இதற்கு சுவாமிகளால் அமெரிக்காவில் உருவாக்கிய சைவ ஆதீனமும் வழியமைத்துத் தருவார்கள் என்பதும் எனது கனவாகும்.

## அளவெட்டி அபிவிருத்தி மன்றம்
(Alaveddy Development Forum)

அளவெட்டி மகாஜன சபையின் அனு சரணையுடன் அளவெட்டி மக்கள் சங்கம் லண்டன் அமைப்பின் மூலம் 21-12-2008இல் உருவான அளவெட்டி அபிவிருத்தி மன்றம் அரசினரால் பதிவு செய்யப்பட்ட அமைப்பாக மாறி குறுகிய காலத்தில் பாரிய வளர்ச்சி கண்டுள்ளது. பலரது பாராட்டுக்களையும் பெற்றுள்ளது. இவ்வமைப்பை உருவாக்கு வதில் பெரிதும் உழைத்தவர்கள் அமரர் செல்லையா வேலாயுதபிள்ளை மக்கள் வங்கி சுன்னாகம் கிளை முகாமையாளர் திரு. மா. சந்திரகாந்தன் ஆகியோராவர். வெளிநாடுகளில் உள்ள அமைப்புக்களின் பண உதவிகள், கிராம அபிவிருத்திப் பணிகள் யாவும் அளவெட்டி அபிவிருத்தி மன்றத்தின் ஊடாகவே நடைபெறவும் வழி அமைந்துள்ளது. இது விடயத்தில் அளவெட்டி மக்கள் சங்கம் (லண்டன்), சுவிஸ் அளவெட்டி மக்கள் நலன்புரிச் சங்கம், கனடா அளவெட்டி மக்கள் சங்கம் ஆகியோரின் செயற்பாடுகள் வியந்து பாராட்டப்படவேண்டியதே. இவர் களின் பணி தொடரவும் நன்றிக்கடனுடன் வேண்டு கின்றோம்.

இன்று எங்கள் அளவெட்டிக் கிராமம் வேரூன்றி விழுது பரப்பும் ஆலமர விருட்சம் போல் செழித்து வளர்ந்து நிமிர்ந்து நிற்கின்றது.

"என் கடன் பணி செய்து கிடப்பதே" எனும் அப்பர் சுவாமிகளின் வாக்குக்கிணங்க நாமெல் லோரும் ஒருங்கிணைந்து நற்பணியாற்றி அளவெட்டியின் புகழை உலகின் நாற்றிசையும் பரப்புவோம். எதிர்கால சந்ததியும் எங்கிரா மப் புகழ்பாடி வாழ வழி அமைப்போம். எங்கிராம மக்களின் நல்வாழ்வுக்கு எல்லாம்வல்ல கும்பழாவளை விநாயகர் அருள்பாலிக்க அவனடி இறைஞ்சுகின்றோம்.

# அளவெட்டி மகாஜனசபை சனசமூகத்தை ஆரம்பகால முதல் வழிநடாத்திய தலைவர்கள் வரிசை

| காலம் | | தலைவர்கள் பற்றிய குறிப்பு |
|---|---|---|
| 1922 – 1935 | : | B.Sc. மாஸ்டர் என இன்றுவரை எல்லோராலும் அழைக்கப்படும் அமரர் சரவணமுத்து சிதம்பிரப்பிள்ளை அவர்கள். |
| 1935 – 1940 | : | சி. சி. தம்பி என எல்லோராலும் அழைக்கப்பட்டவர். ரங்கூனில் அதிக காலம் தொழில்பார்த்துத் திருப்பி வந்து அளவெட்டியில் வாழ்ந்தவர். மிகவும் செல்வாக்குமிக்க குடும்பத்தைச் சார்ந்தவர். சேவைகள் பல செய்தவர். |
| 1940 – 1955 | : | மயிர்வாகன மாஸ்டர் என எல்லோராலும் அன்பாக அழைக்கப்பட்டவர் சைவப்பெரியார், சிறந்த சமூக சேவையாளர் அமரர் செல்லப்பா – மயிர்வாகனம் அவர்கள். |
| 1955 – 1960 | : | மூதறிஞர், இலக்கண வித்தகர் பண்டிதர் எனப் பொதுவாக அழைக்கப்படும் பண்டிதர் க. நாகலிங்கம் அவர்கள். |
| 1960 – 1962 | : | எல்லோராலும் கிளாக்கர் என அழைக்கப்பட்ட அமரர் இளையதம்பி சுப்பிரமணியம் அவர்கள். |
| 1962 – 1972 | : | சைவப்பெரியார் – சமூக சேவையாளர் செல்லப்பா மயில்வாகனம் அவர்கள். |
| 1972 – 1975 | : | இளைப்பாறிய அதிபர் வேலுப்பிள்ளை சுப்பிரமணியம் அவர்கள் |
| 1975 – 1980 | : | பண்டிதர் க. நாகலிங்கம் அவர்கள். |
| 1980 – 1982 | : | இளைப்பாறிய புகையிரத திணைக்கள அதிகாரி அமரர் செல்லையா கனகசபை அவர்கள். |
| 1982 – 1984 | : | இளைப்பாறிய சமூகசேவை உத்தியோகத்தர் அமரர் அருணாசலம் அமிர்தலிங்கம் அவர்கள். |
| 1984 – 1990 | : | பண்டிதகர் க. நாகலிங்கம் அவர்கள் |
| 1990 – 1992 | : | வை. பாலு என எல்லோராலும் அழைக்கப்படும் வைத்திலிங்கம் சுப்பிரமணியம் அவர்கள். |
| 1992 – 1998 | : | நாட்டில் ஏற்பட்ட வன்செயல் நிமித்தம் 1992 யூலையிலிருந்து மக்கள் முழுமையாக இடப்பெயர்ச்சிக்குள்ளாயினர். |
| 1998 – 2000 | : | இளைப்பாறிய உதவி அதிபர் கந்தையா அருளம்பலம் அவர்கள். |
| 2000 – 2002 | : | 2002 இளைப்பாறிய உப்புக் கூட்டுத்தாபன பிராந்திய முகாமையாளர் அமரர் செல்லையா வேலாயுதபிள்ளை அவர்கள். |
| 2002இல் இருந்து இன்றுவரை | : | பொதுமக்களின் அபிப்பிராயப்படியும் பொதுக்கூட்டங்களின் ஏகமனதான தெரிவு மூலமும் வைத்திலிங்கம் சுப்பிரமணியம் அவர்கள் தலைமைப் பொறுப்பை ஏற்று நடாத்தி வருகின்றார். |

# வைத்தியநாதத் தம்பிரான்

அளவெட்டியில் வாழ்ந்த புலவராக வரலாற்றாசிரியர் குறிப்பிடும் முதன்மைக்குரியவர் வைத்தியநாதத் தம்பிரான் ஆவர். இவர் எந்த ஆதீனத்துத் தம்பிரான் சுவாமிகளாக இருந்தாரென்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆறுமுக நாவலருக்கு முற்பட்டவரெனவே வரலாற்றாசியர்கள் குறிப்பிடுகின்றனர். ஆறுமுகநாவலரின் குல முதல்வராகிய ஞானப்பிரகாச முனிவர் காலத்தவர் என்றும் அளவெட்டி ஞானி எனப் போற்றப்பட்டவரெனவும் கூறுவர். இவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்தவராகவேயிருக்க வேண்டுமென்று கருதுவார் கூற்றைப் புறந்தள்ளி விடமுடியாது. திருநெல்வேலி ஞானப்பிரகாச முனிவர் அண்ணாமலை ஆதீனத்தைச் சேர்ந்தவராதலால் வைத்தியநாதத் தம்பிரானும் அண்ணாமலை ஆதீனத்தைச் சேர்ந்தவராதல் வேண்டும் என்று கருதுவோரும் உள்.

வைத்தியநாதத் தம்பிரான் அளவெட்டியில் வாழ்ந்த பேரறிஞர்களுள் ஒருவர் என்பதை மறுப்பதற்கில்லையாயினும் அவர் அளவெட்டியின் எப்பகுதியில் வாழ்ந்தாரென்பதைத் திட்டவட்டமாகப் பேசும் சான்றுகள் கிடைக்கவில்லை. அளவெட்டி தெற்கில் தம்பிரான் வளவு என்னும் காணியுண்டு. அது சிதம்பர ஆலயத்துக்கு உறுதி மூலம் கையளிக்கப்பட்ட சொத்தென்பது தெளிவாகத் தெரிகிறது. அக்காணியே வைத்தியநாதத் தம்பிரானுக்குரியதாய் இருந்ததெனக் கருதலாம். அவர் சீவித்த காலத்தின் பின்னோ அல்லது அவர் காலத்திலேயோ அக்காணி சிதம்பர தேவஸ்தானத்துக்கு அறுதி சாதனம் முடித்துக் கொடுக்கப்பட்டிருக்கலாம்.

வைத்தியநாதத் தம்பிரான் தமிழ், சமஸ்கிருதம் என்னும் இரு மொழி வல்லவராக விளங்கினார். சமஸ்கிருதத்தில் இருந்த வியாக்கிரபாதர் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்ப்புச் செய்தது இவரது இருமொழிப் புலமைக்குச் சான்று பகரும். இவர் காலத்து அறிஞர்கள் பலரும் இருமொழிப் புலமை வாய்ந்தவர்களாகவே விளங்கினர். "இருமொழிக்கும் முதற்குரவர் கண்ணுதலே" யெனச் சிவஞான முனிவர் கூறுவதைக் கொண்டு இரு மொழிகளையும் கற்றுக்கொள்வதில் அன்றிருந்தார் பெருஞ்சிரத்தை காட்டி னார்களென் பதையறியலாம். பிரயோக விவேக மென்னுந் தமிழிலக்கண நூலையியற்றியவராகிய சுப்பிமணியம் தீட்சிதர் என்பார் இருமொழிக்கும் இலக்கணமொன்றே எனக்கூறினார். இலக்கணக் கொத்தாசிரியர் சுவாமிநாத தேசிகர் தமிழ் மொழியை ஐந்தெழுத்தால் ஒரு பாடை என்று கூறினார். அவர் வடமொழியில் இல்லாதனவாகத் தமிழ் மொழியில் இருக்கும் எ, ஒ, ழ, ற, ன என்னும் ஐந்தெழுத்துமே தமிழ் எழுத்துக்கள் என்ற கோட்பாடுடையவராக இருந்தார். தேவபாசை என்று கம்பன் குறிப்பிட்டது போல சமஸ்கிருத மொழிக்குத் தமிழ் மொழியிலும் பார்க்க ஏற்றந் தந்தவர் பலராவர். தமிழ் மொழியில் தேர்ச்சி பெற்ற அறிஞர்கள் கூட வட மொழியிலேயே பல நூல்களை எழுதியுள்ளார்கள். இன்று

> வைத்தியநாதத் தம்பிரான் தமிழ், சமஸ் கிருதம் என்னும் இரு மொழி வல்லவராக விளங்கினார். சமஸ்கிருதத்தில் இருந்த வியாக்கிரபாதர் புரா ணத்தைத் தமிழில் மொழிபெயர்ப்புச் செய் தது இவரது இருமொழிப் புலமைக்குச் சான்று பகரும்.

வைத்தியநாதத் தம்பிரான்

ஆங்கிலந் தெரியாதவனைக் கல்லாதவன் எனப் பொது மக்கள் கருதுவது போல அன்று சமஸ்கிருத மொழியறிவில்லாதவர்கள் கல்லாதவர் என்ற கணிப்பும் இருந்தது. இதனால் மணிப்பிரவாள நடையென ஒரு நவீன நடை தமிழில் உதய மானது. வைணவ ஆழ்வார் பாடல்களுக்கு உரைவகுத்தோர் இந்த மணிப்பிரவாள நடையினையே பின்பற்றினார்கள். அந்த நடை தமிழுலகினாற் பின்பற்றப்படின் தமிழ்மொழி அழிந்தொழிந்து சிதைய வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும். மணி என்பது தமிழ்ச்சொல். பிரவாளம் என்பது பவளத்தைக்குறிக்கும் வடசொல். இவ்விரு மொழிச்சொற்களையும் கலந்தெழுதும் நடையே மணிப்பிரவாள நடையாகக் கொள்ளப்பட்டது. அந்நடை நெடுநாள் நில்லாது தமிழ்மக்களின் தனித் தமிழியக்கத்தால் அழிந்தது தமிழ்த்தாய் செய்த தவப்பேறே யெனலாம். வைத்தியநாதத் தம்பிரானும் வடமொழியிற் பெருவிருப்புற்றிருந்தார் என்பது மெய்யே.

வைத்திய நாதத்தம்பிரான் கண்டியில் அரசு புரிந்த முத்துச்சாமி என்னும் தமிழரசன் மேற் பிரபந்தம் பாடி அவராற் பாராட்டப் பட்டதோடு பரிசும் பெற்றவர் என அறிய வருகிறது.

## பண்டிதர் வரிசையை அலங்கரிக்கும் அளவெட்டி அறிஞர்கள் சிலர்....

பண்டிதர் சிவசம்பு அவர்களையடுத்து இந்நூலின் ஆசிரியர் பண்டிதர் க. நாகலிங்கம் அவர்கள் பண்டித பட்டம் பெற்றுக் கொண்டார். அவரைத் தொடர்ந்து பண்டிதர் க. சின்னத்துரை அவர்கள் பண்டித பட்டம் பெற்றார். இவரும் ஓர் பயிற்றப்பட்ட ஆசிரியராக கொல்லங்கலட்டி தமிழ் வித்தியாசாலையில் கற்பித்தார். ஓய்வுபெறுவதற்கு சில காலம் முன்னதாக அளவெட்டி சீனன்கலட்டி ஞானோதயா வித்தியாசாலை அதிபராகக் கடமையாற்றி ஓய்வுபெற்றார்.

அளவெட்டி வடக்கில் வாழ்ந்த சி. தம்பையா என்பவரும் பரமேஸ்வரா பண்டித ஆசிரிய கலாசாலையில் கற்றுப் பண்டித பட்டம் பெற்றவர். இவர் அளவெட்டியை விட்டு யாழ்ப்பாணத்தில் மணமுடித்து வாழ்ந்தமை யால் இவர் பணியை அளவெட்டி பெறமுடியாது போயிற்று. இவர்களை விட மல்லாகத்தில் பண்டிதர் பொன்னுத்துரையால் ஆரம்பித்து நடைபெற்ற பண்டித வகுப்பில் சித்தியடைந்த யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாவிருத்திச் சங்கப் பண்டிதர்களும் சிலருளர். பண்டிதை கு. மனோன்மணி, பண்டிதர் த. இராசரத்தினம், பண்டிதை த. அன்னலட்சுமி, பண்டிதர் இராசபூபதி என்போர் இவ்வகைப் பண்டிதர் களாவர். இவர்களில் முன்னைய இருவரும் ஆசிரியப் பணி செய்தவர்கள். பண்டித பட்டம் பெற்றோர் சிரேஷ்ட தராதரப் பத்திரப் பரீட்சை யில் தமிழ்ப் பாடத்தில் திறமைச் சித்திபெற்றி ருந்தால் மட்டுமே ஆசிரிய நியமனம் பெற முடியுமென்ற குருட்டுச் சட்டத்தால் பின்னைய இருவரும் ஆசிரிய நியமனம் பெறமுடியாது போனமை கவலைக்குரியதே.

முள்ளானை எனும் கிராமத்தில் பிறந்து அளவெட்டியில் மணமுடித்த பண்டிதர் இராச ரத்தினம் என்பவரும் ஆசிரியப் பணி செய்த பண்டிதராவார். இவர் மனைவியும் ஆசிரியப் பயிற்சிபெற்ற ஆசிரியராக இருந்ததுடன் பிள்ளைகளும் வைத்தியர்களாகவும் பொறி யியலாளர்களாகவும் உயர்ந்து நிற்கின்றனர். அன்னார் இங்கிலாந்து மண்ணில் அண்மை யில் அமரத்துவம் அடைந்தார்.

# கனகசபைப் புலவர்

இவரை வைத்திய நாதத் தம்பிரானுடைய வழித்தோன்றல் என்று சிலர் கருதுவதாகத் தெரிகிறது. உண்மை அப்படியல்ல. இவர் அளவெட்டி வடக்கில் வாழ்ந்தவர். இவருடைய தந்தையார் பெயரெதுவென்பதை அறிய முடியவில்லை எனினும் இவருடைய தந்தையார் ஒரு சுதேச வைத்தியர் என்பது அறிய வந்துள்ளது.

இவர் தமது தந்தையாரிடம் சுதேச வைத்தியக் கல்வியும் டாக்டர் உவாட்டிடம் ஆங்கில வைத்தியமும் கற்று இருவகை வைத்தியத் துறைகளிலும் வல்லவராயிருந்தார். கிறிஸ்த்தவர்களின் தொடர்பால் இவர் சைவசமயத்தை விட்டு கிறிஸ்தவ சமயத்தைத் தழுவிக் கொண்டார். மதமாற்றம் பெற்றதோடமையாமல் அம்மதம் பற்றி ஆராய்ந்து அம்மதத்தில் மிக்க நம்பிக்கையுடையவரானார். இவர் தமிழ்மொழியை நன்கு கற்றதோடு அம்மொழியிற் பெரும்புலமையும் பெற்றவராக இருந்தார்.

அம்மதத்தினர் வேண்டிக் கொண்டதற்கிணங்க கனகசபைப் புலவர் திருவாக்குப் புராணம் என்றொரு நூலை இயற்றிக் கொடுத்துள்ளார். திருவாக்குப் புராணம் நயம் மிக்கது என்று சிலர் பாராட்டியுள்ளார்கள். திருவாக்குப் புராணம் ஆயிரத்து எழுநூற்று ஐம்பத்தொரு விருத்தப் பாக்களைக் கொண்டதென்பர். அந்நூல் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டதெனத் தெரியவருகிறபோதும் அதன் பிரதி எதுவும் என் கைக்கு எட்டவில்லை.

ஒரு சொல் பல்பொருள் தொகுதி என்னும் நிகண்டையும் பல தனிப்பாடல்களையும் இவர் இயற்றியதாக அறிய வருகிறது. ஈழத்தில் ஆரியச் சக்கரவர்த்திகளின் ஆட்சி முடியும் வரை ஈழத்தமிழகத்தில் சைவச்சார்புடைய இலக்கியங்களே படைக்கப்பட்டன. போத்துக்கேயர் காலத்தில் கத்தோலிக்க மதம் சார்பான நூல்களும் ஒல்லாந்தர் காலத்தில் அவர்களுடைய புரட்டாஸ்தாந்த கிறிஸ்த்தவ மதச் சார்பான நூல்களும் இயற்றப்பட்டன. சைவர்களாகவிருந்து மரபுவழித் தமிழ் கற்று நல்லறிஞர்களாக விளங்கிய பலர் மதம் மாறித் தாம் சார்ந்த மதஞ் சார்பான நூல் களை வெளியிட்டமையை இலக்கிய வரலாறு பேசுகிறது. கனகசபைப்புலவர் 1816ம் ஆண்டு பிறந்தவர் இவர் வே.கனகசபைப்புலவர் என சதாசிவப்பிள்ளை எழுதிய பாவலர் சரித்திர தீபகம் என்ற நூலிற் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் சென்னையில் தங்கியிருந்த உவின்ஸ்லோ பாதிரியாரின் அகராதி வேலைகளுக்கும் பிறநூல்களின் தொகுப்பு வேலைகளுக்கும் உதவினார். இவர் 1873 ஆம் ஆண்டு தேகவியோகமெய்தினார். ஆறுமுக நாவலருக்கு இவர் ஆறுவயது மூத்தவர். நாவலர் தேகவியோமடைய ஆறாண்டுகள் முன்பதாக இவர்மறைந்தார். இருவரும் ஐம்பத்தேழாண்டுகள் வரை இவ்வுலகில் வாழ்ந்தனர். மதமாற்றம் பெற்றதால் கிறிஸ்தவர் அம்மதஞ்சார்ந்த நூலொன்றினைப் பெற்றுக் கொள்ளமுடிந்தது.

இவர் தமது தந்தையாரிடம் சுதேச வைத்தியக் கல்வியும் டாக்டர் உவாட்டிடம் ஆங்கில வைத்தியமும் கற்று இருவகை வைத்தியத் துறைகளிலும் வல்லவராயி ருந்தார். கிறிஸ்த்தவர்களின் தொடர்பால் இவர் சைவசமயத்தை விட்டு கிறிஸ்தவ சமயத்தைத் தழுவிக் கொண்டார்.

# சற்குணசிங்கம் (சுவாமி சிவசத்தர்)

சைவப்பாரம்பரியத் தில் வளர்ந்த கதிர்காமுச் சட்டம்பியார் என்பவரும் அவர் மனைவியும் அள வெட்டி வடக்கில் வாழ்ந்த வர்கள். கிறிஸ்தவப் பாட சாலையில் கல்வி பயிற்றும் தொழிலைப் பெறுவதற்காகக் கிறிஸ்தவர்களாக மதம் மாறியவர்கள். அவர்கள் பெற்ற ஒரேயொரு மகனே சற்குணசிங்கம். இவர் பூர்வஜென்ம புண்ணிய பலத்தினால் தாய், தந்தையர் வழி மதத்தைச் சேராமல் சைவ சமயத்திலே பெருவிருப்புடையவராய் வாழ்ந்து வந்தார். இவருடைய விவேகம், நுண்ணறிவு, ஞாபக சக்தியென்பன இளமையிலே இவருடன் தொடர்புடையோரால் விதந்து பேசப்பட்டுள்ளது.

இவர் கல்லூரிப் படிப்பில் அதிக சிரத்தை காட்டவில்லையென்றும் சைவ நூலாராய்ச்சி யிலும் சற்குருநாட்டத்திலுமே ஆர்வங்காட்டி னாரெனவும் கூறுவர். இவர் சட்டக்கல்லூரியிற் பயின்றவரெனவும் சர்வகலாசாலைக் கல் லூரியில் பயிற்றப்பட்ட திறமை வாய்ந்த ஆங் கில ஆசிரியராக பன்னிரண்டாண்டுகள் வரை பணி புரிந்தவரெனவும் அறியவருகின்றது. சட்டக்கல்லூரிப்படிப்பை இடை நிறுத்தினாரோ அல்லது தொழில் புரியாத சட்டத்தரணியாக இவர் இருந்தாரோவென்பது எமதறிவுக்கு எட்ட வில்லை. ஆங்கில மொழியியலில் பெரும் விற்பன்னர் என்பதை அவருடன் பயின்றோர் வாய்க் கேட்டுள்ளோம். இவர் தமிழ்மொழி அறிவு மிகப் பெற்றவர் என்பதனை இவர் இயற்றிய சந்தானாசாரியர் புராணம் சொல் லும். அப்புராணம் இவரது மரபுக்கவி பாடும் வன்மையையும் எடுத்துப் பேசும். "சுத்தாத்துவ சித்தாந்த வைதிக பேரருள்நெறி" என்னும் கட்டுரை இவருடைய சமய அறிவைத் தெரிந்து கொள்ள உதவும்.

1895ம் ஆண்டில் உதித்த இவர் 1956ம் ஆண்டு சிவபதம் அடைந் தார். அறுபத்தொரு ஆண்டுகள் மட்டும் இப் பூவுலகில் வாழ்ந்த சுவாமிகள் சிவத்தொண்டு தமக்குப் பின் தமது தொண்டர்கள் மூலம் பரவவேண்டுமென்னும் பெருவிருப்பால் அள வெட்டிக் கிராமத்தில் 'திருவடி நிழல்' என்னும் நிலையத்தைத் தாபித் தார். இவர் கல்விகற்கும் போதே ஆனைக்குட்டிச் சுவாமி என்னும் குருவை அடைந்து அவருக்குச் சீடராகி வாழ்ந்தாரென வும் பின்னர் கொழும்புத்துறை சிவயோகர் சுவாமிகளையும் அடைந்து அருள்பெற்றார் எனவும் கூறப்படுகிறது. ஆனைக்குட்டிச் சுவாமிகள் மேல் இவர் பாடிய அருட்பாடல்கள் ஆனைக் குட்டிச்சுவாமிகள் சிவனது அவதா ரமேயெனச் சிவசத்தர் கருதினார் என்பதைத் தெளிவாக எடுத்தியம்புகின்றன. இதற்குச் சான்றாக அவர் பாடல்களில் ஒன்று காட்டு வோம்.

**"அம்பலத்தே கூத்தாடு மப்பன்தானே**
**ஆணி நதியும் பிறைமுடியும் மகற்றி மேலாம்**
**உம்பருல கிழிந்துமண்மே லுலகோர் காண**
**ஓர் மனித உருவெடுத்து உவகை யோடு**
**வம்பவிழும் மார்க்கோதை மடவார் சேரும்**
**மணிமாடக் கொழும்பகர் வந்து லாவிக்**
**கம்பிதத்தோ டடியருரை செய்யு மானைக்**
**குட்டியென ஒருநாமம் கவினச் சாந்தி"**

இப்பாடலில், "கனகசபையின் நடனமிடும் சிவன் தான் கங்கா நதியையும் பிறை பொருந் திய முடியையுந் துறந்து தேவருலகில் நீங்கி மண்ணுலகிலுள்ளோர் காணுமாறு ஒருமனித உருவெடுத்து வாசனை விரிகின்ற மலர்மா லையை அணிந்த மகளிர் சேர்ந்துள்ள அழகிய மாடங்களையுடைய கொழும்பு நகரிலே வந்து பயபக்தியோடு அடியார்கள் ஆனைக்குட்டி சுவாமியெனச் சொல்கின்ற ஒரு பெயரை அழகுறப்பூண்டு...." என்பதால் இவ்வுண்மை புலப்படும். ஆனைக்குட்டிச் சுவாமிகள் மேல்

இவர் பாடிய பாடல்கள் இவர் ஒரு வரகவியென் பதை எடுத்துக் கூறுவனவாயுள்ளன. இக்கா லத்தில் பல வெண்பாக்கள் பத்திரிகைகளில் வெளிவருகின்றன. இறந்தோர் நினைவாக வெளியிடப்படும் சிறு வெளியீடுகளிலும் திதி வெண்பா என்ற பெயருடன் வெளிவரு கின்றன. இவற்றில் பல தமிழ் இலக்கண மரபைச் சீர்குலைப்பனவாயுள்ளன.

தம்மைப் பெரும் புலவர் எனக்கருதி நூல்களை வெளியிடுவோர் பாடல்களிற் கூடவெண்பாக்கள் சரியாக அமைவதில்லை. அவற்றுக்கு மதிப்புரை வழங்குவோரும் அப் பிழையான பாடல்களைப் புகழ்ந்து பேசக் கேட்கிறோம். சுவாமி சிவசத்தருடைய பாடல் கள் வெண்பா இலக்கணம் சிறந்தமைய இயற் றப்பட்டிருப்பதைத் தமிழார்வலர்கள் கவனித் துத் திருந்த வேண்டும். நேரிசை, இன்னிசை வெண்பாக்களில் ஒன்றில் பதினான்கு தளை கள் உள. இத்தளைகள் வெண்சீர் வெண்டளை களாகவேறும் இயற்சீர் வெண்டளைகளாக வேனும் அமையவேண்டும். பிற ஆசிரியத் தளை, கலித்தளை என்பன இடம்பெறலாகா தென்பது யாப்பிலக்கணகாரர் தரும் கட்டுப் பாடான ஆணை. இதனை மீறுவோர் பாக்கள் மரபு பற்றிய வெண்பாக்களாகா. சுவாமி சத்தா பாடிய வெண்பா போன்றதை தருவோம். அது மரபு வழுவாது இருப்பதை வாசகர்கள் காண்பாராக. அவ்வெண்பா,

“சித்தத் தெழுமொளியைச் சித்தாந்தத் துட்பொருளை
முத்தைப் பவளநிற மொய்சுடரை — முத்திக்கு
வித்தாகி யென்றுளத்தே மேவுங் குருநாளை
எத்தால் மறப்பே னினி” —

என்பது இவ்வெண்பா இலக்கணம் முற்றும் நிரம்பியிருப்பது காண்க.

சிவசத்தர் எழுதிய சந்தனாசாரியர் புரா ணம் அல்லது கயிலைப்புராணம் என்னும் நூல் சந்தான குரவர் குருபூசை நடக்குமிடங் களில் புராண படனஞ் செய்வதற்கு வாய்ப்பான நூலாகும். கயிலைப்புராணத்தில் அன்பர்கள் சேர்ந்து வெளியிட்டுள்ள ‘சுத்தாத்வித சித்தாந்த வைதீக சைவப் பேரருள் நெறி’யென்னும் சமயக் கட்டுரை கல்லூரிகளிற் சைவசமயப் பாடம் கற்பிக்கும் எல்லாருக்கும் பயன்படு வதை கயிலைப் புராணத்தை அண்மையில் வெளியிட்ட திருவடி நிழல் தொண்டர்கள் ஒவ்வொரு பாடசாலையும் இந் நூற்பிரதிகளைப் பெற ஆவன செய்வார்களாக.

## பண்டிதர் வரிசையை அலங்கரிக்கும் அளவெட்டி அறிஞர்கள் சிலர்....

பண்டிதர் சிவசம்பு அவர்களையடுத்து இந்நூலின் ஆசிரியர் பண்டிதர் க. நாகலிங்கம் அவர்கள் பண்டித பட்டம் பெற்றுக் கொண்டார். அவரைத் தொடர்ந்து பண்டிதர் க. சின்னத்துரை அவர்கள் பண்டித பட்டம் பெற்றார். இவரும் ஓர் பயிற்றப்பட்ட ஆசிரியராக கொல்லங்கலட்டி தமிழ் வித்தியாசாலையில் கற்பித்தார். ஓய்வுபெறுவதற்கு சில காலம் முன்னதாக அளவெட்டி சீனன்கலட்டி ஞானோதயா

# த. சபாபதிப்பிள்ளை நொத்தாரிஸ்

அளவெட்டி வடக்கிலுள்ள கொட்டடியென்னும் குறிச்சியில் வாழ்ந்த தம்பர் என்பாருக்கு மூத்தமகனாகப் பிறந்தவர் சபாபதிப்பிள்ளை. இவருக்கு உபாத்தியாயர்களாக இருந்தவர்கள் சரவணமுத்து, சண்முகம் என்னும் இருவராவர். இவர்கள் புராணபடனத்தில் மட்டுமன்றிக் கவி பாடுதலிலும் வல்லவராகவிருந்தார்கள். சபாபதிப்பிள்ளை அவர்கள் அளவெட்டியில் பிரபல நொத்தாரிஸ் ஆக இருந்தவர். நொத்தாரிஸ் ஆக தெரிவு செய்யப்படுவோர் தமிழ் மொழியில் பாலபண்டிதத்துக்குக் குறையாத அறிவு பெற்றவராக இருக்க வேண்டும் என்னும் நியதியும் இருந்தது. அக்காலத்தில் சட்டத்தரணியாக இருந்தோர் ஆங்கிலத்தில் உறுதியெழுத அனுமதிக்கப்பட்டனர். ஆனால் அவர்கள் தமிழில் உறுதியெழுதுவதானால் பாலபண்டித பரீட்சையிற் சித்தியடைந்திருக்க வேண்டுமென்னும் கடப்பாடும் அன்று இருந்தது. தமிழ் நொத்தாரிஸ் ஆக இருந்த சபாபதிப்பிள்ளை அவர்கள் பாலபண்டித பரீட்சையிற் சித்தியடைந்தவரா என்பது தெரியவரவில்லையாயினும் அவர் பாலபண்டிதத்துக்குக் குறையாத அறிவு பெற்றவராயிருந்து நொத்தாரிஸ் எழுத்துப் பரீட்சையில் சித்தியடைந்திருக்கலாம். எப்படியாயினும் அவர் பாலபண்டிதத்துக்குக் குறையாத தமிழறிவு பெற்றிருக்கிறார் என்பது நிச்சயமே.

சபாபதிப்பிள்ளை எவரிடங் கல்வி கற்றாரென்பது தெரியவில்லை. உயர்கல்வியை இவர் சுன்னாகத்திலிருந்த இலக்கணகொட்டர் முருகேசு பண்டிதரிடங் கற்றிருக்கலாமென எண்ணத் தோன்றுகிறது. பன்னாலை சிவானந்தையரிடமும் இவர் கல்வி கற்றிருக்கலாம். எப்படியாயினும் சிறந்த தமிழ்ப் புலவர் என்பதற்கு இவருடைய பாடல்கள் சான்றாக உள்ளன. அளவெட்டி முதலிய வேள் ஆலயம், அளவெட்டி கும்பழாவளை விநாயகர் ஆலயம் என்பவற்றுக்கு இவர் ஊஞ்சல் பாடிக் கொடுத்திருக்கிறார். கும்பழாவளை ஸ்ரீ சுப்பிரமணியர் திருவூஞ்சலும் இவராற் பாடப்பட்டது. இன்னும் பல கோவில்களுக்கு இவர் ஊஞ்சல் பதிகம், தோத்திரப் பாமாலை என்பன பாடிக் கொடுத்திருக்கலாம். ஆனால் அவை எழுத்தில் உறுதி செய்யப்படவில்லை.

நொத்தாரிஸ் ஆக தெரிவு செய்யப்படுவோர் தமிழ் மொழியில் பாலபண்டிதத்துக்குக் குறையாத அறிவு பெற்றவராக இருக்க வேண்டும் என்னும் நியதியும் இருந்தது. அக்காலத்தில் சட்டத்தரணியாக இருந்தோர் ஆங்கிலத்தில் உறுதி யெழுத அனுமதிக்கப்பட்டனர். ஆனால் அவர்கள் தமிழில் உறுதியெழுதுவதானால் பாலபண்டித பரீட்சையிற் சித்தியடைந்திருக்க வேண்டுமென்னும் கடப்பாடும் அன்று இருந்தது.

கும்பழாவளை விநாயகர் பதிகம் என்றொரு பதிகமும் சபாபதிப்பிள்ளை இயற்றியுள்ளார். இப்பதிகமும் கும்பழாவளை விநாயகர் தோத்திரதிரட்டு என்னும் நூலில் வெளிவந்திருக்கிறது. அதில் இப்பதிகத்தைச் சதகம் என்று பிழையாகக் குறிப்பிட்டுள்ளார்கள். கும்பழாவளை விநாயகர் சதகமொன்று கும்பழாவளை விநாயகர் தோத்திர மாலை என்ற பெயரில் வெளிவந்திருக்கிறது. இந்தச் சதகத்தைப் பாடினார் யாரென்பது தெரியவரவில்லை. நூலில் விநாயகர் தொண்டன் இ. வேதாரணியரின் மூதாதை அவர்களாற் பாடப்பெற்றது என்று மட்டும் காணப்படுகிறது. இச்சதகத்திலும் சிதைவுற்றிருந்த பாடல்களைத் திருத்தியும் முற்றாகச் சிதைந்தவற்றிற்கு மாற்றீடாகப் பாடல்களை இயற்றியும் அச்சேற்றக் கொடுத்தவர் சபாபதிப்பிள்ளை அவர்களேயென்பது அறியவந்துள்ளது.

த. சபாபதிப்பிள்ளை நொத்தாரிஸ்

சபாபதிப்பிள்ளை அவர்கள் வாழ்ந்த காலத்தில் அளவெட்டி நாடகத்துறையில் மகிமை படைத்ததாயிருந்ததென்பது புலனாகிறது. மதனகாமன் நாடகம், பதிவிரதை நாடகம், ஏழுபிள்ளை நல்ல தங்காள் நாடகம், கண்டியர சன் நாடகம், பூதத்தம்பி நாடகம் என்பன அக் காலத்தில் அண்ணாவிமாராக இருந்த அண் ணாவி தம்பர், அண்ணாவி வயித்தி என்போ ரால் மேடையேற்றப்பட்டனவென்பது முதியோர் வாய்கேட்ட செய்தியாகும். சபாபதிப்பிள்ளை அவர்களும் நாடகங்களை இயற்றியிருப்பதாக தெரிகிறது. அவரியற்றிய குலோத்துங்கன் நாடகம் அவர் காலத்தில் மேடையேற்றப் படாமல் அவர் அமரத்துவமடைந்தபின் மேடை யேற்றப்பட்டது. இக்கதை திருவிளையாடற் புராணத்தில் பழியஞ்சிய படலத்தில் வருவது, இது திருவிளையாடற் புராணத்தில் இருபத் தைந்தாவது படலமாகும்.

இக்கதையில் வரும் பிணக்கு ஒரு பிராம ணனுக்கும் வேடனுக்கும் உரியது. பிராமணன் தன் மனைவியைக் கொன்றவன் வேடன் என்று வாதிட வேடன் அதை மறுத்துரைத்தான். வேட னது முகக்குறிப்பால் வேடன் சொல்வது பொய்யாயிருக்க முடியாதென நம்பி அரசன் பழிக்கஞ்சி ஆலவாய்ப் பெருமானிடம் முறை யிட அவர் அரசனையும் பிராமணனையும் ஒரு விவாக வீட்டுக்கு வரும்படி அசரீரி மூலம் அழைத்துப் பிராமணனின் உண்மையை அறிந்து கொள்ள உதவினார் என்பதே கதைச் சுருக்கமாகும். இக்கதையை நாடக பாதையில் எழுதி உதவியவர் சபாபதிப்பிள்ளை அவர்கள். அக்கால வழக்கப்படி ஒவ்வொரு பாத்திரத்துக் கும் ஏற்றவகையில் பாட்டும் வசனமும் அமைத் துக் கொடுத்தார். இந்நாடகம் அளவெட்டி முத லியவேள் ஆலய வளவில் ஆலயத்துக்குத் தென் புறமாக மேடையமைத்து நடாத்தப்பட்டது. இந்த நாடகத்தில் நடித்த பலர் தாம் பெற்ற பாத்திரப் பெயரால் அழைக்கப்பட்டார்கள். அவர்களிறந்த பிறகும் அவர்களைச் சுட்டிப் பேசும் போது அவர்கள் இயற்பெயருக்கு முன் அவர்கள் நடித்த பாத்திரப் பெயரே முன்வைத் துப் பேசப்படுகிறது. நாடகச் சிறப்புக்கு இந்த மதிப்புரையை வழங்கியோர் மக்களே.

இவருடைய பக்திப் பாடல்களின் சிறப்பை எடுத்துக்காட்ட அவரியற்றிய கும்பழாவளை சுப்பிரமணியர் திருவூஞ்சலில் இருந்து ஒரு செய்யுள் காண்போம்.

**"கந்தவரை தணிகையிரு தூண்களாக**
**கதிர்விடுபொற் பரங்குன்று விட்டமாக**
**சந்தமுறு நான்மறை நான் வடங்களாக**
**சார்ந்துவரு மாகமநூல் விதானமாக**
**மந்தகடாட் சரப்பலகை யேறியெங்கள்**
**முன்னுறுகும் பழாவளையில் எழுந்தருளி**
**அந்தம் முத லறிவரியிர் ஆடீரூஞ்சல்**
**அம்மையர்க ளிருவரொடு மாடீரூஞ்சல்"**

இச் செய்யுளின் ஓசைச் சிறப்பு இலக்கண அமைதி யென்பன இவர் ஒரு மரபுக் கவிஞர் என்பதை வெட்ட வெளிச்சமாக எடுத்துக் காட்டுகின்றன.

# சதாசிவ ஐயர்

அளவெட்டி தெற்கு பெருமாக்கடவை விநாயக ராலய ஆதீனத்தைச் சேர்ந்த சதாசிவ ஐயர் யாழ்மாவட்டப் பெரும்பாக வித்தியாதரிசியாக விருந்து பலதமிழ்த் தொண்டுகள் பேணிய வர். புலவராகவும் தமிழ் இலக்கண இலக்கியங் களைத் துறைபோகக் கற்றவராகவும் இருந் தார். அவர் பல நூல்களின் ஆசிரியராகவும் பலநூல்களை அச்சுப் பதித்து வெளியிட்டவ ராகவும் யாழ்ப்பாணப் பண்டித, பாலபண்டித, பிரவேச பண்டிதப் பரீட்சைகளை நடாத்தியவராகவும் ஆரியதிராவிட பாஸா விருத்திச்சங்கத் தாபகராகவும் இருந்தவர். அவர் ஆங்கிலம், தமிழ், சமஸ்கிருதம் என்னும் மும்மொழிகளிலும் பாண்டித்தியம் வாய்ந்தவராக விளங்கினார்.

அளவெட்டிக் கிராமத்திற் பிறந்தவராயி னும் இவர் சுன்னாகத்தோடும் பெருந்தொடர்பு டையர். சுன்னாகத்தில் இவருடைய உறவினர் களும் நிலபுலங்களும் இருந்துள்ளன. இவரு டைய மும்மொழிப் புலமைக்குக் கைகொடுத்து தவியது சுன்னாகமே. அங்கிருந்த பேரறிஞர் களிடமே அவர் தமிழ், சமஸ்கிருதம் என்னும் இருமொழிகளிலும் பாண்டித்தியம் பெற முடிந்ததென்பதில் ஐயமில்லை. ஆரிய திராவிட பாஷாவிருத்திச் சங்கத் தாபகர் மட்டுமன்றி அதன் செயலாளராகவும் இருந்தவர் சதாசிவ ஐயர் அவர்களே. கலைப்புலவர் நவரத்தினம், பண்டிதமணி க. சு. நவநீதகிருஸ்ணபாரதி யார், வித்துவான் கணேசையர், வட்டுக்கோட் டைச் சட்டத்தரணி நாகலிங்கம், சட்டசபை உறுப்பினர் சு. நடேசன் எல்லோருடனும் சேர் ந்து ஆரிய திராவிட பாஸா விருத்திச் சங்கத் தைத் தாபித்தவர் சதாசிவ ஐயரவர்களே.

ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை அவர்களின் வரலாற்றில்அவர்முத்துத் தம்பிப்பிள்ளை யாழ்ப் பாணத்து தமிழ்ச்சங்கத் துப் பாலபண்டித பண் டித பரீட்சைகளுக்கு பரீட்சகராய் விளங்கி னார் (1899 – 1917) எனக் குறிப்பிட்டிருப் பதால் ஆரியதிராவிட பாஷாவிருத்திச் சங் கத்துக்கு முன்னரும் தமிழில் பண்டித பரீட்சை களை நடாத்திய சங்க மொன்று தெரிந்ததாகத் தெரிகிறது. அதனால் அச்சங்கம் செயலிழந்த நிலையில் அச்சங்கத் துக்குப் பதிலாக ஆரிய திராவிட பாஷாவிருத் திச்சங்கம் தாபிக்கப்பட்டதெனச் சொன்னதா கும். 1917ம் ஆண்டுக்கு முன்பின்னாக யாழ்ப் பாணத் தமிழ்ச் சங்கம் செயலிழந்திருக்கலாம் போலும். சதாசிவஐயர் 1872ம் ஆண்டு பிறந்து 1949ம் ஆண்டு இறந்தவரென்பதும் குறிப்பிடத் தக்கது.

**சதாசிவ ஐயர் வருடாந்தப் பரீசோதனை யின் போது தாம் செல்லும் பாடசாலைகளில் தமிழ் உச்சரிப்பை மிகக் கவனமாகக் கவனிப்பார். ழகர, ளகரம், றகர ரகரம் முதலிய எழுத்துக்களை மாணவர் உச்சரிப்பது பற்றி அதிக கவனம் செலுத்துவார். உச்சரிப்பு சரியில்லாவிட்டால் கற்பித்த ஆசிரியரையழைத்து குறைசொல்லுவார்.**

இச்சங்கக் காப்பாளர் இலங்கை கல்வி மந்திரியாகவும் சங்கத்தலைவர் இலங்கை வித்தியாபதியாகவும் சங்கச் செயராளர் யாழ்ப் பாணம் பெரும்பாக வித்தியாதாரியாகவும் இருக்க வேண்டுமென்ற ஒழுங்குமுறை யாழ்ப் பாணம் ஆரிய திராவிட பாஷா விருத்திச் சங்க உபவிதிகளிற் சேர்க்கப்பட்டிருந்தது. ஐயரவர் களும் திரு. சு. நடேசனும் மறைந்த பிறகு சங்கம் வழங்கும் சான்றிதழ்களில் கல்வி மந் திரியுடைய கையொப்பத்தையும் கல்வியதி காரியின் கையொப்பத்தையும் பெறமுடியாமல்

பெரும் பிரச்சினை ஏற்பட்டு சங்க உபதலை வரதும் காரியதரிசியினதும் கையொப்பத் துடனேயே சான்றிதழ்கள் வழங்கவேண்டிய நிலை ஏற்பட்டது. இதனால் சங்கத்தின் மதிப்பும் குறையலாயிற்று.

சதாசிவ ஐயர் சங்கச் செயலாளராக இருந்த போதே சங்கத்தின் பணி மிகச் சிறந்து விளங்கியது. தமிழ் பிரவேச பண்டித, பால பண்டித, பண்டித பரீட்சைகள் மட்டுமல்லாமல் சமஸ்கிருத பிரவேச பண்டித, பாலபண்டித, பண்டித பரீட்சைகளும் நடாத்தப்பட்டன. யாழ்ப் பாண ஆசிரியர்கள் இப்பரீட்சைகளையெடுப் பதில் பெரிதும் ஆர்வங் காட்டினார்கள். பால பண்டித பரீட்சையிற் சித்தியடைந்த ஆசிரியர் களுக்கு ஐந்து ரூபாவும் பண்டித பரீட்சையிற் சித்தியடைந்தோர்க்கு பத்து ரூபாவும் மேலதிக மாக அவர்கள் பெறும் சம்பளத்துடன் வழங்க வும் ஏற்பாடகியிருந்தது. இத்தொகை இன்று பகிடிக்குரிய தொகையாக இருந்தாலும் அன்று இப்பணம் பெருந்தொகையாகக் கணிக்கப்பட்ட தென்பதை மறுக்கமுடியாது. ஒரு பயிற்சி பெற்ற தமிழாசிரியரின் ஆரம்பச் சம்பளம் நாற்பத்து மூன்று ரூபா தான் என்பதைக் கருத்தில் இருத்தி னால் இத்தொகையின் மதிப்பு நன்கு விளங்கும்.

சதாசிவ ஐயருடைய முயற்சியின் பேறாக ஆரிய திராவிட பாஷாவிருத்திச் சங்கம் பல நூல்களை அச்சிற் பதிப்பித்து வெளியிட்டது. கரவை வேலன் கோவை, ஐங்குறுநூறு, கதிரை மலைப்பள்ளு என்னும் நூல்கள் பண்டிதப் பரீட்சைகளுக்குப் பாடப்புத்தகங்களாக இருந்த படியால் அவற்றைப் பதிப்பித்து வெளிப்படுத்த வேண்டிய கட்டாயதேவை சங்கத்துக்குண்டா னது. இவற்றின் பதிப்பு வேலைகளையும் ஐயர் அவர்களே தனித்து நின்று செய்து முடித்தார். ஐயர் காலம் தமிழ் ஈழத்துத் தமிழ் வரலாற்றில் பொற்காலம் எனத்தகும். தமிழ் மொழியில் கல்வி பல துறைகளிலும் விருத்தியடைந்தகாலமது.

ஐயர் அவர்கள் பிறர் எழுதிய நூல்களை அச்சிற்பதித்து வெளியிட்டதுமல்லாமல்பல நூல் களை மொழிபெயர்த்தெழுதியும் தாமாக எழுதியும் வெளியிட்டுள்ளார். நவரத்தின மாலை, தேவிதோத்திர மஞ்சரி, சித்திவிநாய கர் இரட்டை மணிமாலை, இருது சங்கார காவியம் முதலிய நூல்கள் அவரால் இயற்றி அச்சிற் பதித்து வெளியிடப்பட்டவை. கிழக்கிலங்கையில் வழக்கிலிருந்த வசந்தன் கவிகளைச் சேர்த்து வசந்தன் இன் கவித்திரட்டு என்னும் நூலை 1940ம் ஆண்டு வெளி யிட்டார். முதலில் ஆரிய திராவிட பாஷா விருத்திச் சங்க வெளியீடாக ஞாயிறு என்ற சஞ்சிகையையும் பின்னர் அதனையே கலாநிதியென்ற சஞ்சிகையாகவும் வெளி யிட்டார். ஈழத்தமிழுலகு தமிழுக்கு இத்தகைய தொண்டாற்றிய சதாசிவ ஐயருக்கு நினைவுச் சின்னம் எதையும் எழுப்பாதது பற்றிக் கவலை தெரிவித்த இலக்கிய விமர்சகர்களும் உளர்.

அளவெட்டி பெருமாக்கடவை விநாயகரா லய வருடாந்த தேர்த்திருவிழாவின் போது ஆண்டுதோறும் விநாயகர் வழிபாட்டுக்கும் பஜனைக்கும் பயன்படக்கூடிய ஒவ்வொரு பதிகம் ஐயரால் எழுதி வெளியிடப்படுவது வழக்கம். அப்பதிகங்களைச் சேர்த்தாலே ஒரு நூலை வெளியிட முடியும். ஆலய நிர்வாகி களோ அல்லது ஆலயத்துக்கு சொந்தம் பாராட்டுபவர்களோ இதனைச் செய்யாதது எத்துணை கவலை தருவதாகும். பெருமாக் கடவை விநாயகர் ஆலயம் மாருதப்புரவீக வல்லி வழிபாடு பெற்ற ஏழு விநாயகர் திருத்தலங்களில் ஒன்று என்பர்.

சதாசிவ ஐயர் வருடாந்தப் பரிசோதனை யின் போது தாம் செல்லும் பாடசாலைகளில் தமிழ் உச்சரிப்பை மிகக் கவனமாகக் கவனிப்பார். ழகர, ளகரம், றகர ரகரம் முதலிய எழுத்துக்களை மாணவர் உச்சரிப்பது பற்றி அதிக கவனம் செலுத்துவார். உச்சரிப்பு

சரியில்லாவிட்டால் கற்பித்த ஆசிரியரையழைத்து குறைசொல்லுவார். சதாசிவ ஐயர் குற்றியலுரப் புணர்ச்சி பற்றிக் கற்பித்த ஒரு ஆசிரியரைப் பார்த்து நீரே குற்றியலுகரச் சொல்லைச் சரியாக உச்சரிக்காத போது மாணவர் குற்றியலுகரம் பற்றி எப்படி அறிய முடியுமென்று கேட்டார் என்னுங் கதையுண்டு. குற்றியலுகரம் இதழ் குவியாமற் சொல்ல வேண்டியது என்றும் இதழ் குவித்துச் சொன்னால் அது ஒரு மாத்திரை பெற்று முற்றியலுகரமாகிவிடுமென்றுங் கூறினாராம். குற்றியலுகரத்தில் உகரத்தை அரை மாத்திரை அளவாகவே ஒலிக்க வேண்டுமெனவும் இந்த ஆசிரியருக்குப் போதித்தாராம். தமிழ்க் கல்வியில் அதிகநுட்பமான அறிவுடையவர் சதாசிவ ஐயர் என்பதை எவரும் மறுக்கமுடியாது.

சதாசிவ ஐயர் சுன்னாகம் சிவன் கோயிலுக்கருகில் பிரசீன பாடசாலை என்பதொரு பாடசாலையைத் தொடக்கி நடத்தி வந்ததால் யாழ்ப்பாணத்தின் பல பாகங்களிலுமிருந்து தமிழ், சமஸ்கிருதமென்பவற்றில் ஆர்வமுடையோர் அப் பாடசாலையில் கற்றுப் பட்டதாரிகளாகவும் பண்டிதர், பாலபண்டிதர், பிரவேச பண்டிதர்களாகவும் வரமுடிந்ததென்பது குறிப்பிடத்தக்கது. ஐயரவர்களும் சீதாராம சாத்திரியவர்களும் சமஸ்கிருத ஆசிரியர்களாகவும் குமாரசாமிப்புலவர், கணேசையர் என்போர் தமிழ் கற்பித்தார்களெனவும் அறியமுடிகிறது.

ஐயர் ஆரம்பித்து சிறப்பாக நடாத்திவந்த ஆரிய திராவிட பாஷாவிருத்திச் சங்கத்தின் இன்றைய நிலையை அவர் கண்டால் கண்ணீர் வடிப்பாரென்பதைச் சொல்லவேண்டியதில்லை. இன்று அச்சங்கம் பரீட்சையுமில்லை பட்டமளிப்புமில்லை என்ற நிலையில் தூங்கிக் கிடக்கிறது என்பதைத் தவிர வேறு என்ன சொல்லுவோம்.

## சுமை தாங்கி



மூடைகளைத் தூக்கி அடுக்கி இடத்துக் கிடம் மாற்றிக் களஞ்சியப்படுத்துல், விற்பனை செய்தல் போன்ற சகல நடவடிக்கைகளுக்கும் இயந்திரங்களையே பாவிக்கும் இக் காலத்தைப் போலல்லாது ஆரம்ப காலத்தில் மக்கள் பொருட்களைத் தலைகளிலும் தோள்களிலும் சுமந்து செல்வதே நடைமுறையாகும். முன்னைய காலங்களில் இவ்விதம் சுமந்து செல்லும் சுமைகளை வழியில் இறக்கி வைத்து களைப்பாறிச் செல்வதற்கு ஊரில் குறிப்பிட்ட தூர இடைவெளியில் சுமைகளைத் தலையிலிருந்து இறக்க வசதியான உரத்தில் சுமை தாங்கிகள் கட்டப்பட்டிருந்தன. பக்கத்தில் இளைப்பாறுவதற்கு வசதியான மண்டபங்கள் அமைக்கப்பட்டிருந்தன. இவற்றில் சில தற்போதும் சில இடங்களில் அடையாளம் காணக்கூடிய வகையில் உள்ளன. பிரசவ நேரங்களின்போது மரணமான தாய்மார்களின் நினைவாகவே சில சுமை தாங்கிகள் அமைக்கப்பட்டதாகவும் கிராமத்திலுள்ள மூத்தவர்கள் கூறுகின்றார்கள். இன்று முறையான பராமரிப்பின்றி இவை அழிவடையும் நிலையில் உள்ளமை கவலைக்குரிய விடயமாகும்.

# மகாகவி உருத்திமூர்த்தி



"மஹாகவி" என்ற புனைப்பெயரில் இலக்கிய உலகில் புகுந்தவர் உருத்திரமூர்த்தி. இவர் அளவெட்டி வடபாலுள்ள இசைவேளாளர் பரம்பரையில் தோன்றியவர். ஆங்கிலங் கற்று எழுதுவினைஞராகச் சேவை பூண்டவர். இளமையிலேயே இவரிடம் கவிஞராக வேண்டும் என்னும் உள்ளத்துடிப்பும் ஊக்கமும் இருந்ததை அவருடன் பழகியோர் நன்கு தெரிந்து கொள்வர். அவ்வெண்ணமே அவரை மஹாகவி என்ற உயர்ந்த இலட்சியப் போர்வையை போர்த்திக் கொள்ளவும் வழிசமைத்தது. தமிழை அவர் எங்கு கற்றார் என்று ஆராய வேண்டிய அவசியமில்லை. மகாஜனக் கல் லூரியில் அக்காலம் கற்பித்த தமிழறிஞர்கள் தாம் இவருடைய தமிழாசிரியர்கள். இலக்கிய தாகம் அதுவும் சிறுகதை நாவல்கள் இலகு தமிழ்ச்செய்யுட்கள் என்பவற்றைச் சுலபமாகக் கற்று கவிதை எழுத்துலகிற் புகுந்தவர். இவருடைய கவிதைகளும் கவிதை நாடகங்களும் எவரும் விளங்கிக் கொள்ளக்கூடிய இலகு தமிழில் ஆக்கப் பெற்றவை. நவீன கவிதையாளர்கள் இவரைப் பெரும் கவிஞராகப் பாராட்டுவதில் வியப்பில்லை.

மஹாகவியின் கவிதைகள் வாரப்பத்திரிகைகளிலும் மாதச்சஞ்சிகைகளிலும் வெளிவந்துள்ளன. இவருடைய கற்பனை நலஞ் சேர்ந்த கவிதைகள் கற்போருக்கு ஆர்வத்தையூட்டவல்லன. இவருடைய 'குறும்பா' என்னும் பாடல்தொகுதி இலங்கை அறிஞர்களால் மட்டுமன்றி இந்திய நாட்டறிஞர்களாலும் பாராட்டப்பட்டது. இந்நூலிலுள்ள கவிகள் கவிஞரின் குறும்புத்தனத்தை வெளிப்படுத்துவன. இந்நூல் குறுகிய அடியளவைக் கொண்டதால் குறும்பா எனப் பெயர் பெற்றதென்பதோடு கவிஞரின் குறும்புத்தனத்தை வெளிப்படுத்துவதால் இது குறும்பா? என வினாவிசைக் குறிக் குரியதாகக் கொள்ளப்படுவதிலுந் தப்பில்லை. இதில் கவிஞரின் குறும்பைத் தெளிவாகப் புலப்படுத்தும் ஒரு பாவைத்தருவோம். அது

"முத்தெடுக்க மூழ்குகின்றான் சீலன்
முன்னாலே வந்துநின்றான் காலன்
சத்தமின்றி வந்தவனின்
கைத்தலத்திற் பத்து முத்தைப்
பொத்தி வைத்தான் போனான் சூலன்" – என்பது.

நவம்பர் 20 1945இல் கொழும்பு திறைசேரியில் எழுதுவினைஞராக தனது அரச சேவையை ஆரம்பித்த இவர், தொடர்ந்து திருகோணமலை கடற்படை அலுவலகத் திலும், பின்னர் கொழும்பு குடிவரவு - குடியகல்வுத் திணைக்களத்திலும் பணியாற்றி 1967இல் இலங்கை நிர்வாகசேவைக்குத் தேர்வு பெற்றார். அதன் பின் மாவட்ட காணி அதிகாரியாக மன்னாரில் நியமனம் பெற்று பின்னர் யாழ்ப்பாண மாவட்ட காணி அதிகாரி, மட்டக்களப்பு அரச சேசெயலக துணைவர் ஆகிய பதவிகளை வகித்து 1971இல் கொழும்பு அரச கரும மொழித் திணைக்களத்தில் உதவி ஆணையாளராக நியமனம் பெற்றார்.

இக்கவிதையில் இலஞ்ச ஊழல் புரிவதன் மூலம் தமது காரியத்தைச் சாதிப்போர் பற்றிக் குறும்புசெய்கிறார் கவிஞர். இயமனைக் கூட இலஞ்சங் கொடுத்து வெல்லலாம் என்பதன் மூலம் மந்திரிமார் பாராளுமன்ற உறுப்பினர் அரசாங்க அதிகாரிகள் முதலிய அனைவரையுஞ் சாடுகிறார் கவிஞர். உயிரைக் கொண்டு போக வந்த காலன் கூட பத்து முத்தைக் கண்டு உயிரைக் கொள்ளாது விட்டுவிட்டான் என்பதன் மூலம் பணத்தால் – லஞ்சத்தால் எவரையுங் கொண்டு எதுவுஞ் செய்யலாம் என்பதைச் சாதாரண மக்களும் விளங்கிக் கொள்ள வைக்கிறது இக்குறும்பா. 'சத்தமின்றி' யென்றும் 'பொத்தி' யென்னும் வரும் வாத்தைகள் அர்த்த புஸ்டி நிறைந்தவை. பகிரங்கப்படுத்தாது இலஞ்சப்பணம்கைம்மாற வேண்டுமென்பதைக் கவிஞர் தெளிவாக புலப்படுத்துகிறார். இது போன்ற கவிகள் பல சம்பந்தப் பட்டவரைக் குத்திக் கிழிப்பன. சில கவிகள் குறும்பு மிகுந்து ஆபாசமாக படிப்பவரையே கண்மூடி நிற்கச் செய்வன.

உருத்திரமூர்த்தி (மகாகவி)

மஹாகவி எழுதிய 'கோடை'யென்னும் நாடகம் நாயினக்காரர் கார்த்திகேசுவின் சொந்த வீட்டில் ஆரம்பித்து நடக்கிறது. அந்நியர் ஆட்சியின் விளைவே கோடையென்பது, பாத்திர மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது. இக்கால நாடகங்கள் சாதாரண மக்கள் பார்வைக்கு எட்டாத தேவர், அசுரர் பற்றியும் மாதம் மும்மாரி பொழிவதைக் கூட மந்திரி மூலம் அறியவேண்டிய அரசுகளைப் பற்றியுமே இருக்கின்றனவென்பது கவிஞரின் ஆதங்கம். அதனையே கவிஞர் தமது கூற்றில்,

"இன்றைய காலத்திருக்கும் மனிதர்கள்
இன்றைய காலத்தியங்கும் நோக்குகள்
இன்றைய காலத் திமுப்புக்கள் எதிர்ப்புக்கள்
இன்றைய காலத் திக்கட்டுகள்
என்றிவை காணவோ மேடையில்லை
புதிய வெற்றிகள் இவைகளைப் புனைய
நாடகம் வேண்டி நம்மொழி கிடந்தது
கோடையை எழுதுங் காலமுங் குளிர்ந்தது"

என்று மஹாகவி கூறுவதிலிருந்து அவர் எதிர்பார்த்த அனைத்துங் கொண்ட நாடகமாகக் 'கோடை' வெளிவந்ததென்பது அவர் கருத்து.

ஒரு சாதாரண மனிதனது சரித்திரம் என்னும் நூலில் வரும் சாதாரண மனிதன் உருத்திர மூர்த்தியவர்களேயன்றி வேறுயாருமல்லர் என்பது அக்கவிதையை படிப்போருக்கு நன்கு விளங்கும். ஒரு சாதாரண மனிதன் எப்படியெப்படி வாழ்ந்து எப்படி தன் வாழ்க்கையை நிறைவு செய்கிறான் என்பதை இக்கவிதை நூல் புலப்பட வைக்கிறது. இதுவும் கவிதைப் பண்பும் பொருட்சிறப்பும் மிக்கது.

இவர் இயற்றிய கவிதைகளிற் சிலவே இவருடைய காலத்தில் வெளிவந்தவை. அச்சிற் பதித்து வெளியிடுவதில் நேரும் பணச் செலவை உத்தேசித்து பல கவிதை நூல்கள் அச்சேறாமற் கிடந்தன. இந்நூல்களில் சில அவரின் மறைவின் பின் அவரது மனைவியாரின் முயற்சியாலும் கவிஞர் எம். ஏ. நுஃமான் என்பவரின் உந்தியாலும் வெளிவந்தவை. இன்றும் வெளிவராத நூல்கள் கையெழுத்துப் பிரதிகளாக உள்ளனவெனவும் மஹாகவியின் நண்பர்கள் கூறக் கேட்டுள்ளோம். 'கோடை' பல்கலைக்கழக வெளிவாரிப் பரீட்சைக்குத் தோற்றுவோருக்குப் பாடப்புத்தகமாக அமைத்துள்ள நூல். அது மீண்டும் பிரசுரிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. இன்னும் 'கண்மணியாள் காதை' என்ற நூலும் 'வீடும் வெளியும்' என்ற நூலும் 'இரண்டு காவியங்கள்', 'மஹாகவி கவிதைகள்', 'புதியதொரு வீடு' 'மஹாகவியின் ஆறு காவியங்கள்' ஆகியன நூல்களாக வெளிவந்துள்ளனவென அறியக் கிடைக்கிறது.

புதுக்கவிதையுலகில் உருத்திரமூர்த்திக்குச் சிறந்த இடமுண்டு. மரபுக் கவிதைகள் என்ற வகையிலும் அவர்கவிதைகளை மரபுக்கவிஞர்கள் ஏற்காமல் விடமுடியாது. சந்தம், பொருள் வளம், மக்கள் விரும்புங்கருத்துக்கள் அக்கவிதைகளில் பொதிந்திருந்து சிறந்து காணப்படுவதால் அவை மரபு தழுவியனவே. தொல்காப்பியத்தில் புதுக்கவிதைக்கும் இலக்கணம் உண்டு என்பதைப் பழமை வாதிகளும் புதுமை விரும்பிகளும் அறிவது நல்லது. சந்தங்கெடாமல் கவிதைகளை இயற்றவேண்டுமென்பதில் வடமொழிப் புலவர்கள் கண்ணுங்கருத்துமாயிருப்பர். "உழுந்தைப் பயறென்று கூறினுங் கூறு சந்தத்தைச் சிதையவிடாதே" என்பது வடமொழிப்புலவர் கூற்று. இது தெரிவிக்கும் உண்மை என்னவெனில் கவிதைக்கு பொருளிலும் பார்க்க ஓசையே முக்கியம் என்பதாம். தொல்காப்பியர் சந்தம், பொருள், இலக்கண மாறுபாடின்மை என்னும் மூன்றிலும் கண்ணுங் கருத்துமாக உள்ளனர்.

மஹாகவி புதுமைக் கவியுலகில் பாராட்டப்படவேண்டிய ஒரு கவிஞர் என்பதில் மறுபேச்சுக்கே இடமில்லை.

# அ.ந. கந்தசாமி



அ.ந. கந்தசாமி கவிஞர் உருத்திரமூர்த்தியின் சமூகத்தைச் சேர்ந்தவர். உருத்திரமூர்த்தி, அ.ந. கந்தசாமி, அ.செ. முருகானந்தம் என்னும் மூவரும் ஒரே சமூகத்தைச் சேர்ந்தவர்கள் மாத்திரமல்லாமல் உறவினருங்கூட. இம்மூவரும் மகாஜனக் கல்லூரியிற் கற்றவர்கள். இவர்கள் தமிழ் கற்றதும் அங்கேதான். இவர்கள் பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களை முறையாகக் கற்பதற்கு வாய்ப்பில்லை எனினும் கருவிலே திருவுடையாராக இம் மூவரும் தாமாகவே கற்றும் இக்காலம் கல்லூரியிற் பெற்ற தமிழ் அறிவைக் கொண்டும் நவீன தமிழிலக்கியத் துறையில் முன்னேறியது பாராட்டத்தக்கது. அ.ந. கந்தசாமி கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டு அரசாங்க சேவையில் நுழைந்தார். அரசாங்க உத்தியோகத்தில் இருந்தபோதும் இவர் எழுத்துத் துறையிலேயே கண்ணுங் கருத்துமாகச் செயற்பட்டார்.

அ.ந. கந்தசாமி இக்காலத்தில் தங்களை முற்போக்கு எழுத்தாளர் என்று சொல்லிக் கொள்பவர்களுக்கெல்லாம் முன்னோடியாக விளங்கினார். கதைத்துறையில் வெற்றி பெற்ற எழுத்தாளராக அவர் மலரவில்லையென்பது உண்மைதான். இவர் எழுதிய 'இரத்த உறவு' என்னுங்கதை அவரது அரசியற் போக்கைக் காட்டும் வகையில் அமைந்திருக்கிறது எனக் கனக. செந்திநாதன் கூறினார். அவர் தமது எழுத்துக்களைக் 'கவீந்திரன்' என்னும் புனை பெயரில் எழுதினார். அவர் எழுதிய கவிதைகளுக்கு முற்போக்கு எழுத்தாளரிடையே நல்ல வரவேற்பு இருந்து வந்தது மட்டுமல்லாமல் இருந்தும் வருகிறது. அவர் பத்திரிகைகளில் முற்போக்கு எழுத்தாளர்களை ஊக்கும் வகையில் பல கட்டுரைகளை எழுதியுள்ளார்.

ஏதாவது பிரச்சினையைக் கிளப்பி வாசகர்களிடையே விவாதத்தை ஆரம்பித்து வைப்பதற்காக எழுதுபவர் என்ற எண்ணமும் அக்கால எழுத்தாளரிடையே மேலோங்கி நின்றது. அரசினர் சமாச்சாரப் பகுதியில்கடமையாற்றிய இவர் வயது வருமுன்னரே பதவியில் இருந்து விலகி எழுத்துத்துறையில் முழுமையாக ஈடுபட்டவராயினும் இளம் வயதில் இறந்துவிட்டாராகையால் எழுத்துலகில் பிரதான இடம்பெற முடியாது போயிற்றென்பது பலரின் அபிப்பிராயமாயிருக்கிறது. கவிஞரும் விமர்சகருமாகிய இ.முருகையனும் விமர்சகராகிய செ. யோகராசா அவர்களும் கந்தசாமியின் கவிதைகளை வானளாவப் புகழ்ந்துள்ளனர்.

முருகையன் கந்தசாமியின் கவிதைகளைப் புகழ்ந்து பேசுமிடத்து "கந்தசாமியின் எதிர்காலச் சித்தன் பாடலை விடக் கருத்தும் சிந்தனையும் பொதித்த பாடல்கள் தமிழகத்தில் உள்ளனவாக இருந்தால் எடுத்துக்காட்டட்டும்" என்று கேட்பதிலிருந்து முருகையன் கந்தசாமியின் கவிதைகளின் எத்துணை மதிப்பு வைத்திருந்தார் என்பது தெளிவாகத் தெரிகிறது. "ஈழத்து நவீன கவிதை மரபின் முன்னோடி மஹாகவி மட்டுமல்லர் வேறும் சிலருளார். அவர்களுள் மஹாகவிக்குச் சற்று முற்பட்டவராகிய அ.ந. கந்தசாமிக்கும் முக்கிய பங்குண்டு என்பது வலியுறுத்தப்படவேண்டிய

> **சாதிக் கொடுமையை நையாண்டி செய்து நவாலிச் சோமசுந்தரனார் பாடிய ஏறாத மேட்டுக்கு இரண்டு துலை இட்டிறைக்கும் பேறான கவிதையைப் பலருக்கும் பாடிக் காட்டி வந்த காலமது. இப்படிப்பட்ட உணர்ச்சி பொங்கும் என்மனதிலே வில்லூன்றிக் கொடுமை ஒரு பெரும் புயலைக் கிளப்பி விட்டது. அப்புயலைக் கவிதையாக்கினேன். ஈழத்திலேயே ஒரு கம்யூனிஸ்ட் கட்சி கூட உருவாகாத அக்காலத்திலேயே தொழிலாளர் புரட்சி பற்றி ஈழகேசரியில் கவிதைகள் இயற்றியிருக்கிறேன்.** - ***அ.ந.க.***

தொன்றாகும்" என்னும் யோகராசா கூற்றும் கந்தசாமியின் கவிதையின் பெருமையை எடுத்துக் காட்டுவனவாகும்.

முற்போக்குக் கவிதைகளை முதன் முதலில் பாடியவர் தானேயென்ற பெருமை கூட அ.ந.கந்தசாமிக்கு இருந்ததாகத் தெரிகிறது. தமது எழுத்துப் பற்றிக் கந்தசாமி கூறியவற்றை யும் இவ்விடத்து நோக்குவது பொருத்தமா னதே. "சாதிக் கொடுமையை நையாண்டி செய்து நவாலிச் சோமசுந்தரனார் பாடிய ஏறாத மேட்டுக்கு இரண்டு துலை இட்டிறைக்கும் பேறான கவிதையைப் பலருக்கும் பாடிக் காட்டி வந்த காலமது. இப்படிப்பட்ட உணர்ச்சி பொங்கும் என் மனதிலே வில்லூன்றிக் கொடுமை ஒரு பெரும் புயலைக் கிளப்பி விட்டது. அப்புயலைக் கவிதையாக்கினேன். ஈழத்திலேயே ஒரு கம்யூனிஸ்ட் கட்சி கூட உருவாகாத அக்காலத்திலேயே தொழிலாளர் புரட்சி பற்றி ஈழகேசரியில் கவிதைகள் இயற்றியிருக்கிறேன்" என்று அ. ந. கந்தசாமி கூறும் கூற்று அவரது இலக்கியப் போக்கைத் தெளிவாகப் புலப்படுத்துகிறது.

வில்லூன்றி மயானம், எதிர்காலச்சித் தன், துறவியும் குஸ்டரோகியும், சத்திய தரி சனம், சிந்தனையும் மின்னொளியும் தேயி லைத் தோட்டத்திலே முன்னேற்றச் சேனை, இரவு, எல்லோருக்கும் எல்லோரும் என்பன பலராலும் பாராட்டப்படும் அ.ந. கந்தசாமியின் கவிதைகளாகும். இவருடைய கவிதைகள் பத்திரிகைகளில் வெளிவந்ததைத் தவிர நூலுருப் பெற்றதாகத் தெரியவில்லை. அவரு டைய மரணம் அவரது எழுத்துத் துறையையும் நூல் வெளியீட்டையும் தடை செய்துவிட்ட தென்பது உண்மையே. இவர் 1940களில் எழுத்துலகிற் பிரவேசித்துப் பத்திரிகைத்துறை யிலும் ஈடுபட்டவர்.

## "ஆ" உரஞ்சிக் கல்



முந்திய காலங்களில் விவசாயிகள் தமது தோட்டத் தேவைகளிற்கு மாடுகள் வளர்க் கும்போது அவைகளை வீடுகளில் கட்டி வைத்து தீனி போடுவது அவர்களுக்குக் கடினமானதோடு மாடுகளுக்கும் நிறைவு ஏற்படாது. மாடுகள் காலாற நடந்து மேய்ந்து வருவதே அவற்றிற்கு உற்சாகத்தைக் கொடுக்கும். இவ்விதம் மேய்க்கப்படும் மாடுகள் மதியவேளையில் நீர் அருந்து வதற்காக வீதியோரங்களில் உள்ள குளங்கள், நீர் தேங்கும் வாய்க்கல் ஆகியவற்றிக்கு கொண்டு செல்லப்படும் நீர். நீர் அருந்திய பின் மாடுகள் தமது உடம்பை ஏதாவது ஒன்றுடன் தேய்த்துத் தம்மை ஆசுவாசப் படுத்தும். இந்த இயல்பு தெரிந்து ஊரில் குறிப்பிட்ட இடங்களில் நன்கு பொழியப்பட்ட (மட்டுப்படுத்தப்பட்ட) தேவைக்கேற்ற உயர மான கற்களை நாட்டி வைப்பது ஊராரின் அக்கால வழமையாக இருந்தது. மாடுகள் (ஆ) தமது உடம்பை உரஞ்சுவதற்குப் பாவிப்பதால் இவை ஆ உரஞ்சிக் கற்கள் என அழைக்கப்பட்டன.

# அ. செ. முருகானந்தன்

அ. செ. முருகானந்தன் கவிதைத்துறையில் ஈடுபட்டதாகத் தெரியவில்லை மகாஜனாவின் மூன்று முத்துக்கள் என்று பாராட்டப்பட்ட எழுத்தாளர்களில் அவரும் ஒருவர். மற்றையோர் இருவரும் உருத்திரமூர்த்தியும் அ.ந. கந்தசாமியும் என்பது வாசகர்களுக்குத் தெரிந்திருக்கலாம். அ. செ. முருகானந்தன் என்பது அளவெட்டி செல்லக்கண்டு முருகானந்தன் என விரிவுறும். செல்லக்கண்டு என்பது இவருடைய தாய் பெயர். தாய் பெயரால் மக்கள் பெயரை வழங்கும் கலாச்சாரமொன்றும் நம்மவரிடையே இருந்ததென்பதை இப்பெயர் நிரூபித்துக்காட்டுகிறது. இவர் மகாஜனக் கல்லூரியிற் கற்ற காலத்திலேயே பத்திரிகைகளுக்குச் சிறுகதை எழுத ஆரம்பித்தவர் கல்வியை முடித்த பிறகுங் கூட இவர் உத்தியோகப்பக்கம் திரும்பிப்பாராது பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டும் கதைகளை எழுதுவதில் ஆர்வங்காட்டியும் தமது காலத்தைப் போக்கினார். இதனால் பிற்காலத்தில் வருமானமுள்ள ஒரு தொழிலோ ஓய்வூதியமோ இல்லாமல் வாழ்க்கையைக் கொண்டு நடந்த அவர் பட்ட கஸ்டம் அவருடன் நெருங்கிப் பழகியவர்களுக்கு நன்கு தெரிந்ததே.

முருகானந்தன் யாழ்ப்பாணக் களமும் பண்பாடுங் கொண்ட கதைகளைப் படைத்த தன் மூலம் இரசிகர்கள் மத்தியில் புகழ் பெற்றார். 'புகையில் தெரிந்த முகம்' என்னும் அவரது குறுநாவல் இலக்கிய ஆர்வலர்களின் பாராட்டைப் பெற்றது. இக்குறுநாவல் சவாரிக்காட்சியையும் நீதிமன்ற வழக்குகளையுங் கொண்டமைந்தது. ஈழகேசரியில் 'பீஷ்மன்' என்ற புனைபெயரில் ஆங்கில நாவலொன்றை 'அலிபாபாவின் குகை' என்ற தலைப்பில் தொடர்ந்து மொழிபெயர்த்து வெளியிட்டார். ஜேர்மன் மொழியில் வில்கெல்ம் சிமித் என்பவர் எழுதிய நாவலை மொழிபெயர்த்து 'போட்டி' என்ற தலைப்பில் வெளியிட்டார்.

**சிறுகதைகளையோ கவிதைகளையோ நாவல் களையோ அச்சிட்டுவெளிப்படுத்தும் எழுத்தா ளர்கள் மேடையில் வைத்து வெளியீடுகளில் புகழப்பட்டாலும் நூல்வெளியீட்டுக்குச் செலவு செய்த பணத்தைப் பெறமுடியாது நட்டப்படு பவர்களே பலராவர். எழுத்தாளர்களின் கனவு ஈற்றில் கானல் நீராகிவிட பின்னாளில் அவர் கள் படும் கஸ்ட நஸ்டங்களுக்கு நல்ல எடுத்துக் காட்டானவர் அ. செ. முருகானந்தமவர்களே.**

அ. செ. மு. இளமையிலே அதாவது பாடசாலையில் கற்கும்போதே எழுத்துத்துறையில் ஈடுபட்டவர் என்பதை முன்னர் கண்டோம். அக்காலத்திலேயே இவர் ஈழகேசரியின் ஆசிரியர் குழுவிற் சேர்ந்து எழுத்துத் துறையில் தீவிரமாக ஈடுபட்டார். இந்த முனைப்பே இவரை வேறொரு தொழில் தேடுவதையும் அரசாங்க உத்தியோகத்தைப் பெறுவதையும் தடுத்து விட்டது எனலாம். இக்காலத்தில் அ. செ.மு அவர்கள் மறுமலர்ச்சிச் சங்கத்திலும் பிரதான உறுப்பினராகவிருந்து செயற்பட்டார். ஈழகேசரியின் முதன்மையாசிரியராகப் பதவியேற்ற இராஜ. அரியரத்தினம் தமிழ் நாடு சென்றுவிட்டதால் முருகானந்தன் அவர்களே ஈழகேசரியின் ஆசிரியராக செயற்பட்டார். இவர் தமது 'யாத்திரை' என்ற நவீனத்தை 1957ல் ஈழகேசரியில் வெளியிட்டு வந்தார். 1958ல் ஈழகேசரி வெளிவராது நின்று விட்டதால் அந்த நவீனம் ஈழநாட்டில் வெளியிடப்பட்டது.

இவர் எழுதிய சிறுகதைகளில் காளிமுத்துவின் பிரஜா உரிமை என்பதும் ஒன்று. இச்சிறுகதை மலையக மக்களின் அவலங்களைப் படம்பிடித்துக்காட்டும் வகையில் அமைத்துள்ளது. மலையக மக்களும் இந்நாட்டு மக்களே

யென்ற உணர்வை அக்கதை வாசகர்களுக்கு வெளிப்படையாகக் காட்டுகிறது. இந்த உணர்வை யுண்டாக்கும் விதத்தில் காளிமுத்துவின் முப்பாட்டனின் எலும்புக் கூடு மூலம் சித்திரித்துக் காட்டுந்திறன் நயக்கவும் வியக்கவும் வைக்கிறது. அண்மைக் காலத்தில் பதினைந்து ஈழத்துச் சிறுகதைகள் சிங்கள மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன. அவற்றுள் அ. செ. முருகானந்தன் எழுதிய 'காளிமுத்துவின் பிரஜா உரிமை' யும் ஒன்றாக இருந்தது. இவ்வெழுத்தாளரின் சிறுகதை வெற்றியை எடுத்துங் காட்டுவதாகும். 'மனிதமாடு' என்கிற சிறுகதை தொகுதியும் மக்களைக் கவரக்கூடிய விதத்தில் அமைந்துள்ளது. மனிதனை இழுத்துச் செல்லும் மனிதனையே மனிதமாடு என்று எழுத்தாளர் குறிப்பிடுகிறார்.

எழுத்துலகில் புகுந்தால் இலகுவாக புகழேணியில் ஏறிவிடலாம் என்பது சில எழுத்தாளரின் எண்ணம். ஆனால் எழுதிய சிறுகதைகளையோ கவிதைகளையோ நாவல்களையோ அச்சிட்டுவெளிப்படுத்தும் எழுத்தாளர்கள் மேடையில் வைத்து வெளியீடுகளில் புகழப்பட்டாலும் நூல்வெளியீட்டுக்குச் செலவு செய்த பணத்தைப் பெறமுடியாது நட்டப்படுபவர்களே பலராவர். எழுத்தாளர்களின் கனவு ஈற்றில் கானல் நீராகிவிட பின்னாளில் அவர்கள் படும் கஸ்ட நஸ்டங்களுக்கு நல்ல எடுத்துக் காட்டானவர் அ. செ. முருகானந்தமவர்களே. அவர் பிச்சையெடுத்து வாழவேண்டிய நிலையிலிருந்த போது அவரை எந்த வளம் படைத்த எழுத்தாளரும் கவனிக்கவில்லையென்பது கவலை தருவதே. தமிழ் எழுத்தாளரைக் கவனிக்கத் தமிழ் அரசுமில்லை, பணம் படைத்தை பிரபுக்களும் இல்லையென்பதே உண்மை நிலைப்பாடு.

## வடக்கன் மாடு

சுமார் 40 வருடங்களுக்கு முந்திய காலப்பகுதியில் கிராமப்புறங்களில் விவசாயிகள் தமது உழவுவேலைகள், சிறிய வண்டில்கள், பசளைத் தேவைகள் போன்றவற்றிற்கு எருதுமாடு, பசுமாடு, ஆடுகள் என்பனவற்றைப் பாவித்துவந்த அதேநேரம் பாரவண்டில்கள் (மணல், மண், கல் ஏற்றுதல்) இழுப்பதற்காக வடக்கன் மாடுகளைப் பாவித்தார்கள். வடக்கன் மாடுகள் பெரும்பாலும் வெள்ளை நிறமானதாகவே இருக்கும். சற்று வளைந்து நீண்ட கூரான கொம்புகள் உடையனவாக இருக்கும். அவை இந்தியாவிலிருந்து இதற்கென அனுபவமுள்ள சிலராலேயே தருவிக்கப்பட்டன. இவர்களை அக்காலத்தில் செட்டியார் என்று அழைப்பார்கள். பாரவண்டில்களைத் தவிர்த்து அழகிய கூடாரவண்டில்களில் கொம்புகளுக்குச் செண்டு கட்டி, நெத்திக்குக் குஞ்சம், கழுத்தில் சங்கிலியோடு, சதங்கைகள் சேர்த்து அழகுபடுத்தி செட்டியார் குடும்பம் பிரயாணம் செய்வது ஒரு தனி அழகாகும். மாட்டு வண்டில் பிரயாணம் என்பது இன்று நகைப்புக்கிடமானதாகவும் மறக்கப்பட்ட விடயமாகவும் மாறிவிட்டது.



# கதிரேசர்பிள்ளை

1921ல் ஆண்டிற் பிறந்தவரான செ.கதிரேசர் பிள்ளை அளவெட்டி சீனன் கலட்டி ஞானோதய வித்தியாசாலையிற் கல்வி கற்றவர். கோப்பாய் அரசினர் ஆசிரிய கலாசாலைப் பிரவேசத்துக்கு விண்ணப்பித்து பரீட்சையிலும் பங்கு பற்றினார். பல நூற்றுக்கணக்கானோர் தோற்றிய பரீட்சையில் முதலிடம் பெற்றவர் கதிரேசர்பிள்ளையே. அங்கு மூன்றாண்டு கற்றுத்தேறிப் பயிற்றப்பட்ட ஆசிரியராக வெளிவந்த இவர் கலையில் பல்வேறு துறைகளிலும் ஈடுபாடும் திறமையும் வாய்ந்தவர். தமது கல்விப் பணியைத் தெல்லிப்பழை மகாஜனக் கல்லூரியில் ஆரம்பித்து ஓய்வு பெறும் வரையும் அங்கேயே கற்பித்தவர்.

சொற்பொழிவு, நாடகம், புராணபடனம், கவிதையியற்றல் முதலாய பல்துறை விற்பன்னராக இவர் விளங்கினார். மகாஜனக் கல்லூரியிலிருந்து தமிழில் திறமை பெற்ற பலர் உருவாகுவதற்கும் நாடகத்துறையில் ஈடுபட்டுப் பலர் 'அரங்கியலும் நாடகமும்' என்ற துறையில் ஆசிரியராக வரவும் இவருடைய பங்களிப்பு மகத்தானது. நல்ல குரல் வளமுடைய இவர் புராணபடன மூலம் கேட்போரைக் கவர்ந்தவர். பல ஆலய நிர்வாகிகள் தமது ஆலயங்களில் புராணபடன நிகழ்ச்சிகளில் இவரை ஈடுபடுத்துவதில் பெரும் ஆர்வங் காட்டினர். புராண படனங்களுக்குச் செல்லுமிவர் பணம் பெறுவதில்லையென்பது குறிப்பிடத்தக்கது. அச்சேவையை இவர் ஆலய சேவையாகவே கொண்டு மகிழ்ந்தவர்.

ஆசிரியர் கதிரேசர்பிள்ளை சிறந்த ஆசிரியர் என்பதை எவரும் ஏற்றுக் கொள்வர். இவரொரு பண்டிதராக இல்லாது போயினும் இலக்கியத்துறையில் சாதாரண பண்டிதர்களுக்கும் மேற்பட்ட அறிவுடையவர். தொல்காப்பியத்தில் அவருக்கு அதிக ஈடுபாடு இல்லாத போதிலும் நன்னூலை அவர் எழுத்தெண்ணிக் கற்றவர் என்று கூறலாம். பின்னாளில் சோதிட ஆசானாயிருந்த அளவெட்டி மு. சின்னப்பு ஆசிரியரிடம்கற்றே இவர் நன்னூல் காண்டிகையில் சிறந்த அறிவு பெற்றிருந்தார். பாடசாலையிற் கற்கும்போதே இவர் நாடகங்களில் புகழ் பெற்றவர்.

பார்வை குன்றிய நிலையிற் கூட இவர் கற்பித்தல் தொழிலை விடாது தொடர்ந்து வயது வந்ததும் ஓய்வு பெற்றார். அதன் மேல் இவ ருடைய இரு கண்களும் மறைந்து விட்டன. தனது கண்களில் ஒன்றையாவது தரும்படி தெய்வங்களை அவர் வேண்டுதல் செய்த துண்டு. தமது வீட்டின் அயலிலுள்ள முத்துமாரி ஆலயத்தில் இருந்து ஆயிரம் கண் படைத்த வளே எனக்கு ஒரு கண்ணையாவது தரமாட் டாயா? என அழுது வேண்டியதுமுண்டு.

மகாஜனக் கல்லூரி ஆசிரியராக இருந்த போது இவரது நாடகங்கள் தொடர்ந்து ஐந்தாண்டுகள் கலைக்கழக நாடகப் போட்டியில் முதற்பரிசு பெற்றமை வியந்து பாராட்டுக்குரியது. இவரது நாடகங்கள் 'பாரதந் தந்த பரிசு' என்னும் பெயரில் 1980ம் ஆண்டு நூலுருவில் வெளி வந்தனவென்பது குறிப்பிடத்தக்கது. மகாஜனக் கல்லூரியின் சிற்பி என்று பலரும் போற்றும் அதிபர் து. ஜெயரத்தினம் அவர்கள் சிற்பி ஆவதற்கு உழைத்தவர்களில் கதிரேசர் பிள்ளையும் ஒருவரென்பது மிகையாகாது.

இவர் குடும்ப பாசம் மிக்கவர். குடும்ப நிலை காரணமாக அவர் ஆங்கிலம் கற்க செல்லா விட்டாலும் தமது சொந்த முயற்சியால் ஆங்கிலத்தையும் கற்றுக் கொண்டார். இவரது தாய் வயது நிரம்பியவராய் அமரத்துவம் எய்திய போதும் தாயின் மேலுள்ள அன்பினால்

அவரது நினைவாக 'தாய்' என்றொரு நூலை வெளியிட்டு ஆறுதல் பெற்றவர். தமது சகோதரர்கள் கல்வி கற்பதற்குதவி அவர்களை அரசாங்கசேவையில் சேரச்செய்ததைக் கொண்டு இவரது குடும்ப பாசத்தை நன்கு அறியலாம். தமிழ் மொழியிலன்றிச் சைவ சமய நூல்களிலும் இவர் நல்ல அறிவு பெற்றவர். ஆலயங்களில் சமயச் சொற்பொழிவுகளிலும் ஈடுபட்டு தமது சமய அறிவுத்திறனை வெளிப்படுத்தியவர்.

தெய்வ பக்தி மிக்கவராதலால் பல தெய்வங்களின் மேல் பதிகங்கள், இரட்டை மணி மாலை, திருப்பள்ளியெழுச்சி, திருத்தல வெண்பா, ஊஞ்சல் முதலான நூல்களை இயற்றியுள்ளார். இவர் எழுதிய நூல்களில் வரத்தலம் கற்பக விநாயகர் இரட்டை மணி மாலை, தவளக்கிரி முத்துமாரியம்மை திருப்பள்ளியெழுச்சி, வீரகத்தி விநாயகர் திருத்தல வெண்பா என்பனவும் அடங்கும். இவருடைய பாடல்கள் ஓசை நயமும் பொருட் சிறப்பும் வாய்ந்தனவென்பதில் ஐயமில்லை இவர் பாடிய கவிதைகள் அடங்கிய நூலொன்று கதிரேசன் கவிதைகள் என்ற பெயரில் வெளிவந்தமை குறிப்பிடத்தக்கது.

கல்லூரியில் கற்பிக்கும் போது இறுதிக் காலத்தில் இவர் கண்வருத்தத்தால் பெருஞ்சிரம முற்றார். பார்வை குன்றிய நிலையிற் கூட இவர் கற்பித்தல் தொழிலை விடாது தொடர்ந்து வயது வந்ததும் ஓய்வு பெற்றார். அதன் மேல் இவருடைய இரு கண்களும் மறைந்து விட்டன. தனது கண்களில் ஒன்றையாவது தரும்படி தெய்வங்களை அவர் வேண்டுதல் செய்தது துண்டு. தமது வீட்டின் அயலிலுள்ள முத்துமாரி ஆலயத்தில் இருந்து 'ஆயிரம் கண் படைத்தவளே எனக்கு ஒரு கண்ணையாவது தரமாட்டாயா?' என அழுது வேண்டியதுமுண்டு. ஆயினும் அவர் இழந்த கண்களை மீண்டும் பெற முடியவில்ல. 1991ல் அமரத்தவமடைந்தார்.

பண்டிதர் க. சிவசம்பு

இவர் அளவெட்டி வடக்கில் 1913ம் ஆண்டு பிறந்தவர். இவர் தமது கல்வியை அளவெட்டி சீலன் கலட்டி ஞானோதயா வித்தியாசாலையிலே கற்றார். அதன் மேல் ஆசிரிய கலாசாலையிற் கற்று ஆசிரியர் பயிற்சி பெற்றார். இவர் கொழும்பு விவேகானந்த வித்தியாசாலையிலே ஆசிரியராக நியமனம் பெற்றார். அங்கு கற்பிக்கும்போதே மதுரைப் பண்டித பரீட்சையில் சித்தி பெற்றார். இவர் இலக்கிய இலக்கண கல்வியில் சிறந்து விளங்கியபோதும் எத்தகைய ஆக்கங்களையும் வெளியிடவில்லை.

சில ஆண்டுகளில் கொழும்பு விவேகானந்தா வித்தியாசாலையிற் கற்பித்தபின் இவர் தமது சொந்த ஊராகிய அளவெட்டி அருணோதயக் கல்லூரியில் ஆசிரியப் பணியை மேற்கொண்டார். கற்பித்தலில் இருந்து ஓய்வு பெறும்வரை இவர் ஆசிரியப் பணி அருணோதயக் கல்லூரியிலேயே கழிந்தது. இவர் தம்மை எவ்வகையிலேனும் வெளிப்படுத்த விரும்பாதவர். பண்டித பரீட்சையில் சித்தியடைந்த ஆரம்ப காலத்தில் இவர் சொற்பொழிவுகளையும் ஆற்றியுள்ளார். அதன் மேல் பண்டித வகுப்புக்களைக் கற்பிக்கவோ பொதுசனத் தொண்டுகளில் ஆர்வம் காட்டவோ இவர் விரும்பவில்லை. தமது வகுப்புக்களில் கற்ற மாணவர்களுக்கு இவர் சிறந்த முறையில் கற்பித்தவர் என அவரிடம் கற்ற மாணவர்கள் கூறுவர். இவர் 1992ஆம் ஆண்டு தேகவியோகம் எய்தினார். இவருக்கு ஆண்மக்கள் மூவருளர். அவர்களை கற்பித்து உத்தியோகங்களில் அமர்த்தினார்.

# மாணிக்க தியாகராச பண்டிதர்

**விசேட தரவுகள்**

*அளவெட்டியில் வாழ்ந்த புலவராக*

அளவெட்டிக் கிராமத்தில் இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதிகளிற் பல பண்டிதர்கள் வாழ்ந்தனர். அவர்களில் முதன் முதலில் பண்டிதர் என்று அழைக்கப்பட்டவர் மாணிக்கத் தியாகராசா அவர்களே. இவருக்கு இப்பட்டம் பரீட்சையெடுத்துப் பெற்றதா அன்றி கௌரவமாக தமிழ்நாட்டு ஆதீனம் ஒன்றால் வழங்கப்பட்டதா என்பது தெரியவில்லை. எவ்வாறாயினும் மகாலிங்கசிவம் என்பார் பரீட்சையெழுதாத போதும் பண்டிதர் என தகுதிகருதி அழைக்கப்பட்டதுபோல இவரும் அழைக்கப்பட்டாலும் அப்பட்டத்திற்கு தகுதியானவர் என்பதில் ஐயமில்லை.

அளவெட்டியிலுள்ள வீரசைவர் பரம்பரையில் உதித்தவர் மாணிக்கத்தியாகராசா அவர்கள். இவர் அளவெட்டி தவளக்கிரி முத்துமாரி அம்பாள் பூசகர் மரபில் தோன்றியவர். வீர சைவக்குருவாகவும் மக்களால் மதிக்கப்பட்டவர். முத்துமாரியம்பாள் ஆலயப் பூசகராகவும் பணியாற்றியவர். இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி முதல் இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை வாழ்ந்தவர். இவர் தமிழ், சமஸ்கிருதம் ஆகிய இரு மொழிகளிலும் திறமை வாய்ந்தவர். சமயோசிதமாகப் பேசி மக்களைக் கவர்வதிலும் சிலேடை நயம்படப் பேசுவதிலும் வல்லவர். புராணங்களுக்குப் பயன் சொல்வதிலும் மேடைப் பேச்சிலும் கதாப்பிரசங்கத்திலும் கவிகள் இயற்றுவதிலும் வல்லவர்.

இவர் அளவெட்டியிற் பிறந்தவராயினும் தமிழ் நாடு முதலாகப் பல ஊர்களுக்கும் பயணம் செய்தார். தமிழ்நாட்டு ஆதீனங்கள் பலவற்றோடும் இவருக்கு நெருங்கிய தொடர்பு இருந்ததாக அறிகிறோம். தமிழில் இயற்தமிழ் இசைத்தமிழ் இரண்டிலும் பாண்டித்தியம் பெற்றிருந்தாரென்பது வெளிப்படை.

பண்டிதரவர்கள் ஒரு முறை ஒரு கோவிலில் திருவாதவூரடிகள் புராணப் படிப்பிற்கு அழைக்கப்பட்டிருந்தார். அன்றைய படிப்பு திருவாதவூரடிகள் புராணத்தில் புத்தரைவாதில் வென்ற சருக்கமாகும். அப்புராணத்தில் அன்று படிக்கப்பட்ட பாடல்களில் ஒருபாடல்,

"தொக்க நான்மறை சொல்லு நீயிவை சொல்வ
தென்கலை மாதராய்
தக்கன் வேள்வியி லுன்றன் நாசி தடிந்த தின்று
மறப்பதே
முக்கணானரு ளில்லை யென்றிடு மூகர்நாவை
யகன்று நீ
நக்க னார்திரு வாணை யேகென நாமடந்தையு
மஞ்சினான்"

இப் பாடல்களை வாசித்தவர் புராணபடன மரபுப்படி செய்யுளை ஒரு தரம் முழுமையாக வாசித்த பின்னர் பிரித்துப் பிரித்துப் பயன் சொல்வதற்கு ஏற்றவாறு வாசித்தார். பண்டிதர் முதலடிக்குப் பயன் சொல்லி முடித்த பின் "தக்கன் வேள்வியிலுன்றன் நாசி தடிந்த தின்று மறப்பதே" என வரும் இரண்டாமடிக்குப் பயன் சொல்லும் போது சிவனை மதித்திடாது தக்கன் செய்த வேள்வியில் அவிப்பாக முண்ண வந்திருந்த, உன்னுடைய நாசியை வீரபத்திரக் கடவுளானவர் அறுத்துத் தள்ளியதை இன்று மறந்து போனாயோ என்று பொருள் கூறிவிட்டு தக்கன் வேள்வி பற்றி சொல்ல ஆரம்பித்துத் தக்கனுடைய வேள்வியைப் பற்றி கந்தபுராண ஆசிரியர் கச்சியப்ப சிவச்சாரியார் சொல்லிய வாறு வரலாறு முழுவதையும் வாசித்தவர் வாசித்த இராகத்தில் தெளிவாகச் சொல்லி முடிக்க அரைமணித்தியாலத்துக்கு மேலெடுத்தது. புராண படனத்தை கேட்டவர்கள் செவிவாயாக நெஞ்சுகளுக்கு கேட்டவை விடாதுரைத்த

முழுவதையும் இரசித்தனர். மூன்றாம் அடிவரையும் பயன் சொல்லி முடித்த பின் கடைசியடிக்குப் பொருள் விரித்த போது மக்கள் உணர்ச்சிவசப் படக் கூடியதாகவிருந்தது.

திராவிட முன்னேற்றக் கழகத்தலைவர் அறிஞர் அண்ணா ஒரு முறை தங்கள் கூட்ட மென்றில் "மாதமோ சித்திரை நேரமோ பத்தரை மக்களோ நித்திரை மக்கள் அமரு மிடமோ புற்றரை" என்று கூறியதாக ஒரு கதை யுண்டு. ஆனால் தி.மு.க தலைவர் கூறியதற்குப் பல ஆண்டுகளின் முன்னே இவ்வார்த்தைகளைச் சொன்னவர் மாணிக்கத்தியாகராசா பண்டிதர் என்பது எமக்குத் தெரியும். இது உண்மை வெறும் புகழ்ச்சியல்ல என்பதை உறுதியாகக் கூறமுடியும். பண்டிதர் அவர்கள் இந்த மொழிகளைப் பயன்படுத்திய சந்தர்ப்பத்தையும் இங்கு கூற விரும்புகிறோம். அளவெட்டி சைவ வாலிபர் சங்கம் ஆயிரத்துத்தொளாயிரத்து முப்பதுகள் தொடங்கி வருடாவருடம் ஆண்டுப் பொதுக்கூட்டங்களைச் சித்திரை மாதத்தில் விமரிசையாக நடத்திவருவது அக் காலத்திலிருந்த அளவெட்டி மக்களுக்கு நன்கு தெரியும். ஆயிரத்துத் தொளாயிரத்து முப்பத்தாறாமாண்டுப் பொதுக் கூட்டம் யாழ்.மாவட்ட வித்தியாதிகாரி சதாசிவ ஐயர் தலைமையில் அளவெட்டி ஆங்கில வித்தியாசாலையில் நிகழ்ந்தது. அக்கூட்டத்தில் அளவெட்டியில் அன்று சிறப்புற்றிருந்த நான்கு சைவப்பாடசாலை மாணவர்களதும் இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள் இடம்பெற்றன. அதன்மேல் கீழ்ப் பிரிவு முதல் சிரேஷ்ட தராதரர் பத்திர வகுப்பு வரையுள்ள மாணவர்களில் சங்கம் நடாத்திய பரீட்சையில் திறமை காட்டிய மாணவர்களுக்கு பரிசில்கள் வழங்கப்பட்டன. அதன்மேல் சைவப் பெரியார்களின் சொற்பொழிவுகள் இடம்பெற்றன. மாணிக்கத் தியாகராசாப் பண்டிதரும் சொற்பொழிவாற்ற அழைக்கப்பட்டிருந்தார். அவருடைய பேச்சைக் கேட்க மக்கள் காத்திருப்பார்கள் என்பதால் நிகழ்ச்சி நிரலில் அவரே கடைசிப் பேச்சாளராக இருந்தார். அவர் பேச்சுக்கு அழைக்கப்பட்டு மேடையில் தோன்றினார் நேரம் அப்போது பத்தரை மணியாகவிருந்தது. அவர் மேடையிலிருந்த மணிக்கூட்டைப் பார்த்து விட்டுக் கூறிய வார்த்தைகள் இவை. மாதமோ சித்திரை நேரமோ பத்தரை சிறுவர்கள் நித்திரை என்பனவே சபை வணக்கத்தின் பின் அவர் பேசிய வார்த்தைகள். இவ் வார்த்தைகளை அவர் கூறிமுடித்த போது சபையினரின் கைதட்டல் மண்டபத்தை அதிர வைத்தது. நித்திரையாயிருந்த சிறுவர்கள் பலர் கண்விழித்து எழுந்தனர். பின்பு பண்டிதர் தமது பேச்சை ஆரம்பித்தார். அவரது பேச்சு நகைச் சுவையாக அமைந்திருந்தது.

ஒரு முறை பண்டிதர் புராண படனமொன்றிற் பங்குபற்ற ஒரு ஆலயத்துக்கு வந்திருந்தார். அவர் இடையிடையே இருமிக் கொண்டிருந்ததை அவதானித்த உபயகாரர் பக்கத்தில் உள்ள கடைக்குச் சென்று கற்கண்டு வாங்கி வந்து அவர் முன் வைத்தார். இதைப் பார்த்துக் கொண்டிருந்த புராணம் வாசிப்பவர் ஒருவர் தமக்கு கற்கண்டு தரும்படி பண்டிதரைக் கேட்டார். பண்டிதர் அப்போது உங்கள் சொற்கண்டு தான் கற்கண்டு தரவிருந்தேன் என்று கூறினார். இது கற்கண்டு கேட்டவரையே சிரிக்க வைத்தது.

இவர் தமிழ்நாட்டு ஆதீனங்கள் பலவற்றோடு நெருங்கிய தொடர்புடையவராக இருந்தார். அவர் அடிக்கடி அங்கு சென்று மடாதிபதிகளுடன் சல்லாபிப்பது வழக்கம். இவர் பல நூல்கள் எழுதியதாக அறிந்தோர் கூறுவார். சிலேடை வெண்பா என்பது ஒன்றையன்றி மற்றையவை பெயர்கூட எமக்கு கிடைக்கவில்லை.

✱ ✱ ✱

# பண்டிதர் மா. மாணிக்கம்

பண்டிதர் மாணிக்கம் வேலணை கிழக்கில் பிறந் தவர். அங்குள்ள வித்தியா சாலையில் கற்றுச் சிரேஷ்ட பாடசாலைத் தராதரம் பெற்றார். அக்காலத்தில் தமிழ் மொழியிற் பயின்றோருக்கெனத் திறந்துவிடப்பட்ட ஒரு கதவு ஆசிரிய கலா சாலைப் பிரவேசமே. இவர் பரமேஸ்வர பண்டித ஆசிரிய கலாசாலைப் பயிற்சிக்குத் தேர்ந் தெடுக்கப்பட்டுப் பயிற்சியை முடித்தவர். இவர் 1941ம் ஆண்டு மதுரைப் பண்டித பட்டம் பெற்றார். 1942ம் ஆண்டு ஆசிரியப் பயிற்சி பெற்ற பண்டித ஆசிரியராக வெளிவந்தார். 1944ம் ஆண்டு ஆசிரியத்தொழிலை வேலணை கிழக்கு சரஸ்வதி வித்தியாசாலையில் ஆரம் பித்தார். 1946ல் இளவாலை மேற்கு மெய் கண்டான் வித்தியாசாலைக்கு மாற்றம் பெற் றார். அதே பாடசாலையிற் கற்பித்த அளவெட்டி வடக்கைச் சேர்ந்த நாகமணியின் மகள் நாகம்மையை காந்தருவமணம் புரிந்தார். இம்மணத்தில் உள்ளப் புணர்ச்சியே இடம் பெற்றது. பின்னர் மணம் பேசி நிச்சயஞ் செய்து கொண்டு அதற்கு சான்றாகவே கிரியை வழிமணஞ்செய்து கொண்டு அளவெட்டியிலே வாழ்ந்து வந்தார். இவர் வேலணை ஊரராயினும் அளவெட்டியில் வாழ்ந்தபடியால் அளவெட்டிப் புலவர் வரிசையில் இடம் பெறலானார்.

1953ம் ஆண்டு புத்தளம் மாவட்டத்திலுள்ள முந்தல் என்னும் கிராமத்தில் ஒரு சைவத் தமிழ்ப் பாடசாலையை அமைக்க விரும்பியது சைவ வித்தியாவிருத்திச் சங்கம். அதனை ஆரம்பித்து நடத்தும் பொறுப்பை இந்துக்கல்வி வித்தியாவிருத்திச் சங்கம் இவருக்கு வழங்கி யது. இவர் அப் பொறுப்பைச் சிரசின்மேலேற்றி அங்குச் சென்று அகத்திய முனிவர் தென்னாட் டில் காடுகெடுத்து நாடாக்கியது போல ஓலைக் கொட்டிலாக இருந்த முந்தல் கமலாம்பிகை வித்தியாசாலையைப் புதிய நல்ல கட்டிடத்துக்கு மாற்றிப் பாடசாலைத் தரம் உயரவும் வழி சமைத்தார்.

> **இவர் காந்தியக் கொள்கையில் எப் போதும் நாட்டமுடையவராய் இருந்தார். அத னால் தம்முடைய பிள்ளைகளில் இருவருக்குக் காந்திதாசன் எனவும் காந்திமதியெனவும் பெயரிட்டுள்ளார். இவருடைய மனைவி பிள்ளைகள் எல்லோரும் இவருடைய கொள் கைக்கு மதிப்பளித்து இவரைப்பின்பற்றி நடந்ததால் இவரது குடும்பம் சிறக்க வழி ஏற்பட்டது.**

இவர் இறைபக்தி மிக்கவர். திருமுறை களை உள்ளமுருகிப் பாடுவதன் மூலம் கேட் போருக்கும் பக்தி ரசம் மிகுவதற்கு வழிசெய்ப வர். அளவெட்டி அழ கொல்லை விநாயகரா லய தர்மகர்த்தாக்கள் சபை உறுப்பினராயி ருந்து ஆலய முன்னேற் றத்திற்குப் பாடுபட்டவர். பல ஆலயங்களிலும் புராணபடனம், திருமுறை ஓதல் என்பவற்றில் ஈடுபட்டு உதவுபவர். இவர் ஒரு புலவராகவும் இருந்தார். வாழ்த்துப்பாக்கள் பாடிக் கொடுத் தல், நினைவுமலர் தயாரித்துக் கொடுத்தல் என்பவற்றிலும் இவர் முன்னின்று முயன்றவர். இன்முகங்காட்டி எவருடனும் இனிமையாகப் பேசுபவர்.

செய்யுள் வடிவிலிருந்த கந்த புராணம், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் முதலான நூல்களை நாவலர் பெருமான் தூய தமிழ் வசனநடையில் அமைத்துக் கொடுத்தார். அந்த வசன நூல் கூட இப்போ தைய மாணவர்களால் விளங்க முடியாதி ருப்பதைக் கண்டார். மிக எளிய நடையில் எழுதினாலேயே இக்கால மாணவருக்கு விளங்கு மெனக் கருதிய பண்டிதர் மாணிக்கம், 'பெரிய புராண வசனச் சுருக்கம்', 'கந்த புராண வசனச்

சுருக்கம் என்னும் நூல்களை எழுதி வெளியிட்டார். அவை இக்கால மாணவர்களால் விரும்பிக் கற்கப்படுவது கண்டு 'திருக்குறள் வசனச் சுருக்கம்' என்னும் நூலையும் எழுதி வெளியிட்டார்.

இவற்றோடமையாது அழகொல்லை விநாயகர் திருப்பள்ளியெழுச்சிப் பதிகம், வேலணை முத்துமாரியம்மை ஊஞ்சல், அளவெட்டி அணிஞ்சிலடி விநாயகர் துதிப்பதிகம் என்பனவும் இவரது ஆக்கங்களே.

பண்டிதர் மாணிக்கம் அவர்கள் ஓய்வூதியம் பெறும் வயதை அண்மித்தபோது அளவெட்டிக்கே மாற்றலாகி வந்து அளவெட்டி பாடசாலைகளில் அதிபராக இருந்தார். முதலில் அளவெட்டி சீனன்கலட்டி ஞானோதயா வித்தியாசாலையிலும் பின்னர் கேல்வத்தை அ.மி.த.க பாடசாலையிலும் இவர் அதிபராகக் கடமையாற்றினார். இவருடைய மக்கள் பலர் வெளிநாடுகளில் இருப்பதால் அவர்களுடன் தொடர்புகொள்வதற்காக கொழும்பில் இருந்த தமது மகன் வீட்டில் தங்கியிருந்தபோது இரண்டாயிரத்து மூன்றாமாண்டு அமரத்துவம் எய்தினார்.

இவர் எழுதி வைத்திருந்த 'புறநானூற்றில் சிந்தைக்கினிய செய்திகள் சில' என்னும் கட்டுரை இவரது ஞாபகமாக வெளிவந்த நினைவு மலரில் பிரசுரிக்கப்பட்டது. இக்கட்டுரையில் பண்டிதர் தமது உள்ளங்கவர்ந்த கவிதைகளுக்கு எல்லார்க்கும் விளங்கத்தக்க வகையில் குறிப்புக்கள் எழுதி வைத்ததும் குறிப்பிடத்தக்கது. இவர் காந்தியக் கொள்கையில் எப்போதும் நாட்டமுடையவராய் இருந்தார். அதனால் தம்முடைய பிள்ளைகளில் இருவருக்குக் காந்திதாசன் எனவும் காந்திமதியெனவும் பெயரிட்டுள்ளார். இவருடைய மனைவி பிள்ளைகள் எல்லோரும் இவருடைய கொள்கைக்கு மதிப்பளித்து இவரைப்பின்பற்றி நடந்ததால் இவரது குடும்பம் சிறக்க வழி ஏற்பட்டது. இவருடைய பிள்ளைகள் பலரும் வெளிநாட்டில் இருந்தபோதும் இவரது மரணச்செய்தி கேட்டு எல்லோரும் அபரக்கிரியைகளிற் கலந்து கொண்டது இவருக்கு செலுத்திய பேரஞ்சலியாகக் கொள்ளலாம். எவரையும் மரியாதைக் குறைவாக நடத்தாத இவருக்கு குடும்பத்தார் மட்டுமல்லாமல் எல்லோரும் மதிப்பளிப்பதில் வியப்பில்லை.

# அப்பாக்குட்டி

அப்பாக்குட்டி, இவர் ஒரு புலவராக இருந்த போதும் தம்மை வெளிக் காட்டாது குடத்துள் விளக் குப்போல் வாழ்ந்தவர். 1940களில் அவர் அள வெட்டி கேணிக்கரை வைரவர் ஆலயத்துக்கு ஒரு ஊஞ்சற் பதிகம் பாடிக் கொடுத்திருக்கி றார். அவ்வூஞ்சற் பதிகம் அவ்வாலய நிர்வா கிகளால் இன்றும் பேணிப் பாதுகாக்கப்பட்டு உரிய தினங்களில் படிக்கப்பட்டும் வருகிறது. 'மஞ்சப் பதிகம்' எழுதிய அப்பாக்குட்டி தெய் வங்கள் மேல் தோத்திரப் பாமாலைகளும் பாடி யிருப்பார் என்பதில் ஐயமில்லை.

அண்மைக்காலத்தில் இருந்த புலவர் பற்றியே அறியமுடியாமல் இருப்பது துரதிஸ்டமே. இப்படி எத்தனையோ புலவர்கள் வாழ்ந்தனரென்பதற் குரிய சான்றேதுமின்றி, அளவெட்டி மண்ணில் மாய்ந்து மடிந்திருப்பர் என எண்ணும்போது இப்போதாவது எமது மண்ணின் மைந்தர்கள் மனத்தில், இன்று கிடைக் கக்கூடிய புலவர்களின் பெயர்கள், கிடைத்த செய்திகள் என்பவற்றை ஆவணப்படுத்தி எதிர் காலச் சந்ததியினருக்கு வழங்கவேண்டும் என் னும் எண்ணம் உதித் தது பாராட்டுக்குரியது.

## துலா

ஆரம்ப காலத்தில் (நீர்ப்பாய்ச்சல் தொடங்கிய காலம்) கிணறுகளிலிருந்து நீரை வெளியே பாய்ச்சுவதற்கு துலாவும் பட்டையும் பாவிக்கப்பட்டது. கிணற்றின் ஒரு பக்கத்தில் ஆடுகால் மரங்கள் நாட்டப்பட்டு அவைகள் தாங்கி நிற்கக்கூடியதாக பனை, தென்னை மரங்களில் நீளமான துலாக்கள் தயாரித்து அதன் சமநிலைக்கேற்ப அச்சுலக்கை போட்டு துாவில் ஏறி இறங்குவதற்காக இடையிடையே நென்புகளும் போட்டு இந்த துலா இறைப்பைச் செயற்படுத்துவார்கள். நீரைக் கோலி எடுத்துவருவதக்குப் பட்டைகள் (வாளிக்குப் பதிலாக) பாவிக்கப்படும். பனை ஈக்குகளால் நுட்பமாகத் தயாரிக்கப்பட்ட துலாக் கொடியுடன் பட்டையில் கட்டப்படும் பட்டைக் கொடியையும் முறையாகப் பிணைப்பதன் மூலம் பட்டை நீரோடு வெளியே வரும்போது சுழராது பாதுகாக்கும் பட்டையைச் சமநிலையில் வைப்பதற்கு பட்டைக்கல் பாவிக்கப்படும்.

கிணற்றின் ஆழத்தைக் கணித்து அதற்கேற்ற விதத்தில் துலாவின் நீளம் தீர்மானிக்கப்படும். நீளமான துலாவிற்கு 2 பேரும் மற்றையதற்கு ஒருவரும் துலா விதிப்பாளர்களாகக் கடமை புரிவார்கள். இறைத்து முடிந்தவுடன் பட்டையை உலர வைப்பதும் துலாக் கொடியைச் சுற்றிப் பாதுகாப்பாக வைப்பதும் இறைப்புச் செயற்பாட்டில் முக்கியபடுத்தப்படுகிறது.

# சி. நா. கணேச பண்டிதர்

சி. நா. கணேசன் என்பவர் மானிப்பாயிற் பிறந்தவர். இவர் 1918ம் ஆண்டு பிறந்தவர். 1996ல் அமரத்துவமடைந்தவர். மானிப்பாய் இந்துக் கல்லூரியிற் கல்வி கற்கும் காலத்திலேயே இவர் மருதடி விநாயகருக்கு அன்புடையவராக விளங்கினாரெனக் கூறுவர். தமிழ்மொழி மீதும் அதிக பற்றுள்ளவர். இதனை அறிந்து கொண்ட பண்டிதர் சுவாமிநாதப்பிள்ளையென்பவர் இவருக்கு தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்பிக்க முன்வந்தார். சுவாமிநாதப்பிள்ளை மானிப்பாய் இந்துக் கல்லூரியிற் கற்பித்தவர். ஆதலில் இவரின் விவேகத்தையும் தமிழார்வத்தையும் அவராற் கண்டுகொள்ள முடிந்தது. சுவாமிநாத பண்டிதரிடம் கணேசனார் பாடங் கேட்டவிடம் மருதடிப் பிள்ளையார் ஆலயத்தின் மேற்குத்திசையாக இருந்த தேர்க்கூடம் என்று கணேசனாரே கூறுகின்றார். படிக்கத் தொடங்கிய நூல்கள் மணிமேகலை, பெரியபுராணம் திருக்குறள் என்பனவே. பின்பு வேறு நூல்களும் கற்பிக்கப்பட்டன. தேர்க்கூடத்தில், திருப்படிகளில் மேற்படியில் ஒரு புறம் ஆசிரியராகிய பண்டிதரும் மறுபுறம் கீழ்ப்படியில் கணேசனும் இருந்து கல்வியில் ஈடுபட்டனர். பண்டிதர் நோய்வாய்ப்பட்டு இறந்த பின் தமிழ்க்கல்வியைத் தொடர்வதற்கு வழியின்றி இவர் தத்தளித்தார். அதனால் ஆங்கிலக் கல்வியை மட்டுந் தொடரவேண்டிய நிலை ஏற்பட்டது. ஆங்கிலப் படிப்பை முடித்துக் கொண்டபின் இவர் ஊரெழு முருகையாக் குருக்களிடமும் சுன்னாகம் அப்பாத்துரைக் குருக்களிடமும் வடமொழி, தென்மொழி இரண்டையும் சிறுகச் சிறுகக் கற்றுவந்தார்.

கற்றுயருங்கால் தமது குடும்பம் வறுமையின் கோரப்பிடியில் சிக்கித் தவித்ததாகக் கணேசனார் கூறுகிறார். திருமலை, இந்தியா போன்ற இடங்களில் வாழ்வுக்காகவும் கல்விக்காகவும் தாம் சுழன்று திரிந்ததாகவும் இவர் பேசுகிறார். இந்தியாவில் இவர் கல்வி கற்று வித்துவான் பட்டமும் B.O.L பட்டமும் பெற்றதாகக் கூறுகிறார். அது மட்டுமல்லாமல் சோதிடம், சங்கிதம், சித்த வைத்தியம் என பலவற்றிலும் இவர் தேர்ச்சி பெற்றதாகக் கூறுவர். இவ்வளவு படிப்பெல்லாம் படித்த இவர் கடவுளரைப் பாடுவதிலும் சித்தவைத்தியத்துறையில் ஈடுபடுவதுமே தொழிலாகக் கொண்டார்.

**இவர் இயற்றிய மருதடி விநாயகர் திருப்பதி கங்கள் என்னும் நூலுக்கு சிறப்புப் பாயிரம் வழங்கிய ஒருவர் வெண்பாவிற் புகழேந்தி என்றால் மருதடி விநாயக வெண்பாவில் கணேசனார் என்பது மிகையாகாது என்று கூறியுள்ளார்.**

வித்துவான் பட்டம் பெற்றவர் B.O.L. படித்தவர். அரசினர் பாடசாலைகளில் ஆசிரியராகச் சேர்ந்து கற்பிப்பதற்கு நிறைய வாய்ப்பிருந்தும் இவர் அத்துறையை நாடாததன் உண்மை எம்மால் அறியமுடியாமலிருக்கிறது.

வித்துவான் கணேசனார் அளவெட்டி தெற்கிலுள்ள தம்மளை என்னுஞ் சிற்றூரில் மணம் முடித்தவர். அவர் அளவெட்டியிலுள்ள தமது வீட்டின் அயலிலிருந்த பலாவடிப் பிள்ளையாரிடம் மருதடிப் பிள்ளையாரிடம் அன்பு வைத்தது போலவே அன்பு வைத்திருந்தார். பலாவடிப்பிள்ளையார் தலத்தைப் பாடல் பெற்ற தலமாக்கியவரும் வித்துவான் கணேசனாரே. விநாயகர் பத்து, விநாயக பரத்துவமாலை என்னுந் தோத்திரப் பாடல்களைத் தாம்

இயற்றியுள்ளதாக மானிப்பாய் மருதடி விநாயகர் திருப்பதிகங்கள் என்னும் நூலில் அவரே கூறியிருக்கிறார்.

மருதடி விநாயகர் திருப்பதிகங்கள் என்னும் நூலில் வித்துவான் கணேச பண்டிதனார் காணிக்கைப் பாமாலை, மருதடி விநாயகர் திருப்பள்ளியெழுச்சி, மருதடி விநாயகர் திருவூஞ்சல், கலித்துறைத் தோத்திரப் பாடல், மருதடிவிநாயகர் வெண்பா, பதிகம், திருவிரட்டை மணிமாலை என்பனவற்றைச் சேர்த்துள்ளார். பாடல்கள் பக்திரசமுள்ளனவாகக் காணப்படுகின்றன. இறைவனிடம் தன் குறைகளைக் கூறித் தனக்கு அருள் தந்து காக்குமாறு அவர் வேண்டும் இடங்கள் கல்நெஞ்சத்தையுங் கரைந்துருக வைப்பனவாம். இவருடைய பாடல்களில் சில மரபுக் கவிகளாக இல்லாமல் புதுமைக் கவிகளாகவேயிருக்கின்றன.

இவர் இயற்றிய மருதடி விநாயகர் திருப்பதிகங்கள் என்னும் நூலுக்கு சிறப்புப் பாயிரம் வழங்கிய ஒருவர் 'வெண்பாவிற் புகழேந்தி என்றால் மருதடி விநாயக வெண்பாவில் கணேசனார் என்பது மிகையாகாது' என்று கூறியுள்ளார். மருதடி விநாயகர் வெண்பாவில் எட்டாவது பாடல் ஒன்று மட்டுமே, முதலாவது வெண்பாவில் எழுத்துகள் பிழையாக உள்ளன. இரண்டாவதில் மூன்றும், மூன்றாவதில் நான்கும், நான்காவதில் ஐந்தும் ஆறாவதில் இரண்டும் ஏழாவதில் ஐந்தும் எட்டாவதில் நான்குமாகத் தளைப் பிழைகள் காணப்படுகின்றன. இவர் தமது பாடல்களை மரபுக் கவிகள் போல பெயர் கொடுத்தாலும் தாமே கவிமரபை மீறுவதாக வெண்பாக்கள் அமைந்துள்ளன. மும்மொழியிலும் தேர்ச்சி பெற்றவராகக் கருதப்படும் இவர் வெண்பா இலக்கணம் அறியாதவர் என்று சொல்லமுடியாது. வெண்பாவிலக்கணம் யாப்பிலக்கணகாரரால் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. இயற்சீர் வெண்டளையும் வெண்சீர் வெண்டளையும் மாத்திரமே வெண்பாவுக்குரிய தளைகள் என அவை அடித்துக்கூறுகின்றன. இவருடைய பாடல்களில் கலித்தளையும் ஆசிரியத்தளையும் கலந்து வந்திருப்பது காணத்தகும். இவர் ஓசை ஒத்துப்போகுமாகில் தளை பற்றிய தேவை இல்லையென்று கருதியிருக்கலாம். ஆனால் 'வெண்பாவிற் புகழேந்தி' என்று புலவர் போற்றும் புகழேந்திப் புலவர் செய்த நளவெண்பாவில்எத்தகைய தளைப்பிழையும்நேர்ந்ததில்லை. திருவள்ளுவர் தந்த ஆயிரத்து முந்நூற்று முப்பது பாக்களிலும் தளைப் பிழையைக் காண முடிவதில்லை. ஆதலால் இவரது வெண்பாக்களை மரபுதழுவாத பாடல்களில் அடக்கலாமேயன்றி மரபுக்கவிதையில் அடக்க முடியாதிருப்பினும் இவரும் ஒரு கவிஞர் என்பதில் ஐயமில்லை.

## இலங்கையின் முதல் பெண் நாடாளுமன்ற உறுப்பினரும் அளவெட்டியே ......

இலங்கையின் முதல் பெண் நாடாளுமன்ற உறுப்பினர் அளவெட்டியைச் சேர்ந்த திருமதி. ரங்கநாயகி ஆவார். இவர் அளவெட்டி ஓவசியர் மயிர்வாகனம் என்பவரின் புத்திரி. சர்வகலாசாலைப் பட்டதாரி. அளவெட்டியைப் பிறப்பிடமாகக் கொண்டாலும் மட்டக்களப்பிலேயே இவர் வாழ்ந்தார். இவரது கணவரும் ஓர் நாடாளுமன்ற உறுப்பினர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

# சீ. விநாசித்தம்பிப் புலவர்



அளவெட்டி வாழ்ந்த புலவர்களில் மிக முக்கியமான ஒருவர் விநாசித்தம்பிப் புலவர். இவரை அருட்கவியெனவும், கவியோகியெனவும், வரகவியெனவும் அறிஞர்கள் பாராட்டுவர். இவர் ஒரு புலவராக மட்டுமல்லாமல் ஒரு சோதிடராகவும், மருத்துவராகவும் பேய்பிணித் தொல்லைப் போக்கும் அருளாளராகவும் மக்களுக்கு நன்கு பயன்பட்டவர். அளவெட்டி தெற்கு அருணாசலம் வித்தியாசாலையில் தமிழும் அளவெட்டி ஆங்கில பாடசாலையில் ஆங்கிலமும் கற்றவர். ஆரம்பத்தில் சங்கக்கடையொன்றில் கடமையாற்றினார். பின்னர் மலைநாட்டிலுள்ள பாடசாலையொன்றில் ஆசிரியராகவிருந்தார். அதன் மேல் திருநெல்வேலி சைவாசிரிய கலாசாலையிற் பயிற்சி முடித்து பூரணத்துவம் வாய்ந்த ஆசிரியராக மலர்ந்தார்.

இவர் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவர் இசைத்தமிழில் ஆசிரியர் தரப் பரீட்சையில் சித்தியடைந்தவர். தாம் கவிகளை இயற்றுவதற்குத் தெய்வ அனுக்கிரகம் கிடைத்ததாக இவர் கூறுவார். "இவர் இம்மென்னு முன்னே எழுநூறும் மெண்ணூறும் - அம்மென்றால் ஆயிரம் பாட்டாகாதா" என்ற பாடலுக்கு இலக்கான ஒரு புலவர். யாருடனாவது பேனையையும் காகிதத்தையும் கையில் வைத்துக் கொண்டு கதைத்துக் கொண்டிருக்கும்போதே கவிதை உருப்பெற்றுவிடும். இவருடைய வெண்பாக்கள் இலக்கண வழுவற்றவை. உண்மையில் இவருடைய செய்யுள்கள் மரபுக் கவிதைகள் என்ற நிலைக்கு உயர்ந்தவை. இவர் சைவத் தமிழ் நூல்களில் நல்ல பயிற்சியுடையவர். சைவ இலக்கியங்களாகிய கந்தபுராணம், பெரிய புராணம் என்பவற்றில் நன்கு தோய்ந்தவர். அவரெழுதிய கந்த புராண வசன காவியம் கந்த புராணத்தில் அவர்க்கிருந்த ஈடுபாட்டை விளங்கிக் கொள்ளப் போதியதாகும். அவரெழுதிக் குவித்த பிரபந்தங்கள் நூற்றுக்கணக்கானவை. இசைப்பாடல்களும் பலப்பல. நாடகங்களையும் எழுதியுள்ளார். எழுதுவது மட்டுமன்றி நாடகங்களில் நடித்துமுள்ளார். பெரும்பாலும் பெண் பாத்திரமேற்றே நடித்ததையறிவோம்.

**நான்கு வயதுப் பையன் ஒருவன் மானிப்பாய் வைத்தியசாலையில் இறந்து விட்டான். அவனது தந்தை நாராயணபத்தன். தாயும் தந்தையுமாக அப்பிரேதத்தை கொண்டு வந்து போட்டார்கள். தாய் தந்தையர் அழுது புரண்டனர். சிறிது நேரத்தில் சிறுவன் உயிர்த்தெழுந்து தேநீர் என்று கத்தினான். அவன் உயிர் பிழைத்த செய்தி தேரில் சித்திரச் சிலையாகப் பொறிக் கப்பட்டுள்ளது என்கிறார் அருட்கவி.**

இவருக்கு அருட்கவி, பிரசங்க பாகவதர், அருட்புலவர், சத்தியுபாசகர், அருள் மொழியரசு, சிவக்கவிமணி முதலாய பல பட்டங்களை யாழ்ப்பாணத்திலுள்ள பொதுத் தாபனங்கள் வழங்கியுள்ளன. இப்பட்டங்கள் மட்டுமல்லாமல் யாழ்ப்பாண பல்கலைக்கழகம் இவருக்கு முதுகலைமாணிப் பட்டங் கொடுத்துக் கௌரவித்துள்ளது. யப்பானிலுள்ள அகில உலகப் பல்கலைக் கழகம் இவருக்கு கலாநிதியென்னும் பட்டமும் வழங்கியுள்ளது. தாம் பட்டம் பெறுவது மட்டுமல்லாமல் தாமே பிறர்க்கு முதுபெரும் புலவர், பண்டிதமணியென்னும் பட்டங்களையும் தமது நாகவரதநாராயணர் ஆதீனம் சார்பாகப் பிறர்க்கும் வழங்கியுமுள்ளார்.

இவர் பல அற்புத செயல்களை செய்திருப்பதாகவும் கேள்விப்பட்டுள்ளோம். அவர் 'என் கதை' என்று தலைப்பிட்டு எழுதி வைத்த அற்புதங்களிற் சிலவற்றை இங்கு எடுத்துக்

காட்ட விரும்புகின்றோம். நான்கு வயதுப் பையன் ஒருவன் மானிப்பாய் வைத்திய சாலையில் இறந்து விட்டான். அவனது தந்தை நாராயண பத்தன். தாயும் தந்தையுமாக அப்பிரேதத்தை கொண்டு வந்து போட்டார்கள். தாய் தந்தையர் அழுது புரண்டனர். சிறிது நேரத்தில் சிறுவன் உயிர்த்தெழுந்து தேநீர் என்று கத்தினான். அவன் உயிர் பிழைத்த செய்தி தேரில் சித்திரச் சிலையாகப் பொறிக் கப்பட்டுள்ளது என்கிறார் அருட்கவி. மணம் முடிந்த மங்கையொருத்திக்குப் பிள்ளை யில்லாமல் அவளை எல்லாரும் மலடியென்று அழைத்தார்கள். கணவனுக்கு வேறு மணம் பேசவும் முயன்றார்கள். அவள் செய்த தற் கொலை முயற்சியும் தோல்வியில் முடிந்தது. அவள் அருட்கவியிடம் வந்து தன் நிலையைச் சொல்லி அழுதாள். அருட்கவி 'நீ கலங்காதே உனக்குக் கண்ணன் அருளால் பிள்ளை யுண்டு' என்று கூறியனுப்பினாராம். கண்ணன் அருளால் அடுத்த மாதமே அவள் கருவுற்று ஆண்மகனைப் பெற்றாள் என்கிறார். நமது புலவர் செம்மந்தாரை வெண்மலர் பூத்தது, முருகனிடத்தில் தாமரை மலர் பெற்றது, கொப்பளிப்பான் நோய்தீர்த்தது, தண்ணி பெறமுடியாதிருந்த கிளிநொச்சி கனகாம்பிகை அம்பாளின் கிணறு வற்றாவாவியாகப் பெற்றது முதலாய பல அற்புதங்களை அவரின் 'என் கதை' யென்ற பகுதியிருந்து அறியமுடிகிறது.

நாகவரத நாராயணர் ஆலயத்தை இவர் தனிநின்று தாமாகவே அமைத்தது ஒரு அரும்பெருஞ் செயல் என்றே கூறவேண்டும். தமிழ்நாட்டிலுள்ள பெரும் கோவில்களைக் கட்டி முடித்தவர்கள் அரசர்கள். எங்கள் நாட்டுக் கோவில்களைப் பெரும்பாலும் கட்டியவர்கள் பொதுமக்கள். நாகவரதநாராயணர் திருத்தலம் சிறிதாக ஆரம்பித்து இப்போது பென்னம் பெரிய கட்டிடங்களைக் கொண்டதாயியல் வதற்கு அருட்கவியின் அருட்செயலே காரணம் எனலாம். நாகவரத நாராயணனைத் தரிசிக்கும் பொருட்டும் அருட்கவியிடம் ஆசீபெறவும் அவர் கையால் வீபூதி பிரசாதம் பெறவும், நூல் கட்டுவித்து நோய் பிணி போக்கவும் தமது எதிர் காலம் பற்றியறியவும் சோதிடம் மூலம் மணப் பொருத்தம், வீடமைத்தல் முதலியவற்றை தீர்மானிக்கவும் இவரிடம் நாள்தோறும் வருவோர் பலராவர். எல்லோருக்கும் அவரவர் குறை தீர்த்து மகிழ்ச்சியுடன் செல்ல வைப்பார். தேவையற்ற வினாக்களையெழுப்பி தமக்குச் சிரமம் தருவோரை அவர் கண்டித்துப் பேசுவது முண்டு. அவ்வேச்சுக்களைக்கூட வாழ்த்தா கவே விரும்பியேற்று மகிழ்ந்து செல்வர். பெரிய வைத்தியர்கள் கூட வைத்தியத்துறையில் ஆலோசனை கேட்க இவரிடம் வருவதுண் டென்பர். இவர் யாழ்ப்பாண பல்கலைக்கழகப் பேரவை உறுப்பினராகவும் அகில இலங்கை இந்துமாமன்றத் தலைவராகவும் இருந்து சேவையாற்றியவரென்பதும் குறிப்பிடத்தக்கது.

இவருடைய பாடல்களில் செல்வச் சந் நிதிக் கந்தன் திருத்தல புராணமும் நாகவரத நாராயணர் பிள்ளைத் தமிழும் குறிப்பிடத் தக்கவை. அவருடைய கவியின் பெருமையை அறியும் பொருட்டு நாராயணர் பிள்ளைத் தமிழில் ஒரு செய்யுளைத் தருவோம். பிள்ளைத் தமிழென்பது காப்புப்பருவம், தாலப்பருவம், கல்யாணப்பருவம், முத்தப் பருவம் முதலாய பத்துப் பருவங்களைக் கொண்டதாகப் பாடப் படுவது. அம்புலிப் பருவத்தில் இருந்து ஒரு பாடலை எடுத்துக் காட்டுவோம். பாடல் பின்வருமாறு அமைகிறது.

"வரிசையின் முல்லைப் பல்லழகும்
மலர்ந் தாமரை வாயழகும்
கரமல ரழகுமங் கண்ணழகும்
தருமணி பீதாம் பரத்தழகும்
தளர்நடை யழகுங் கண்டிடலாம்
விரிபொழில் நாகேஸ் வரனுடனே
விளையாடிடவா அம்புலியே"

இதன் பொருள் பற்றிச் சிந்திப்போம். வரிசையாக அமைந்த முல்லை மலர் போன்ற

பல்லின் அழகும் மலர்ந்த தாமரை மலர் போன்ற வாயின் அழகும் கைகளாகிய தாமரை மலர்களின் அழகும் அதே மலர் போன்ற கண்களின் அழகும் கட்டி முடிக்கப்பட்ட செம்மையான தலைமுடியின் அழகும் அழகு பொருந்திய பீதாம்பர உடையழகும் தளர்ந்த நடையின் அழகும் கண்டிடலாம். ஆதலால் விரிந்த சேலையையுடைய நாகேஸ்வரப் பதியுடையானாகிய குழந்தையுடன் விளையாட அம்புலியே வருவாயா என்பதாம். செய்யுள் தெளிவுமிக்கதாகவும் ஓசை நயஞ் சிறந்ததாக வும் இருப்பது எவரும் காணக்கூடியதே.

செல்வச் சந்நிதிக் கந்தன் திருத்தல புராணத்திலிருந்து ஒரு செய்யுள் தருவோம். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்ற நியாயப்படி புராணத்தின் மேன்மையை அறிய இது உதவும்.

"ஏழ்பவநோய் பெரகிவரும் இன்னல் தீரும்
இல்லறத்தில் வருகின்ற இடைஞ்சல் தீரும்
மூழ்பகையும் முரண்விளைவும் முற்றாய்த்தீரும்
மூர்க்கருண மும் மலத்தின்முனைப்புந் தீரும்
ஆழ்நரகப் பழிதீரும் அலைச்சல் தீரும்
ஐம்புலக் கொடிய செயல் அனைத்துந் தீரும்
சூழ்மனைவி யுறவுதரும் சுமைகள் தீரும்
துளங்குவேற் கரணிநீர் நோய்ந்த பேர்க்கே"

இச்செய்யுள் பொருள் வேற் கரணி தீர்த்தமாடினால் அடியார்களின் ஏழ்பிறவி யிலும் தொடர்ந்துவரும் வினைத் துன்பந் தீரும். குடும்ப வாழ்க்கையில் வரும் இடைஞ்சல் யாவும் எதிர்த்து வருகின்ற பகையும் பிறரால் ஏற்படுகின்ற முரண்பட்ட வினைகளுந் தீரும். மும்மலத்தால் வருகின்ற மாயாவினைத் துன்பந் தீரும். தீராத நரகத்துக்குரிய கொடி வினை செய்தவர்க்கும் அப்பழி தீரும். எங்கே சென்றாலும் முகஞ் செல்லாமல் அலைகின்ற அலைச்சலுந் தீரும். ஐம்புலன்களால் ஏற்படு கின்ற பழிகள் தீரும். வந்த மனைவி உறவு இவற் றால் வரும் குடும்பபாரம் தீரும். என்பது இலகு தமிழில் அழகு நடையில் பாடக் கூடியவர் அருட் கவியென்பதற்கு இக்கவிகள் சான்றாவன.

## சூத்திரவாளி

துலா மூலமான நீர்ப்பாய்ச்சலின் பின் சூத்திரவாளி முறை கையாளப்பட்டது. கிணற்றின் நடுவே பெரிய தீராந்தியில் பல பல்லுப்போட்ட சக்கரம் ஒன்று பொருத்தப்பட்டு அதில் நெம்புகோல் பொருத்தப்பட்டிருக்கும். பல்லுப்போட்ட சக்கரத்திலிருந்து கிணற்றின் ஆழப்பகுதிக்கு சங்கிலியில் வாளிகள் பொருத்தப்பட்டிருக்கும். நெம்புகோலில் நுகம் வைத்து 2 மாடுகளை இட்டுச் சுற்றும்போது சங்கிலியில் பொருத்தப்பட்ட தொடரான வாளிகள் கீழ்ச்சென்று நீரை நிரப்பி மேலே கொண்டு வந்து பாய்ச்சும். இதிலும் மூன்று வகை உண்டு. பல வாளிகளைக் கொண்டதும் மாடுகள் கிணற்றைச் சுற்றி வருவது ஒரு வகை. இரண்டு வாளிகளைக் கொண்டு முன்னையதைப் போலச் சுற்றி வருவது. மூன்றாவது மாடுகள் முன் சென்று



பின் வருவது. இந்தவகைச் சூத்திரத்திற்கு மாடுகள் சென்றுவரும் இடம் கிணற்றுக்கு அப்பால் தனி இடம்.

# சிவநந்தியடிகள்

இல்லற வாழ்வைத் துறந்து துறவறம் மேற்கொண்டு லண்டன் மாநகரில் ஆதீனம் ஒன்றையமைத்து அதன் முதல்வராக - ஆதின கர்த்தராக இருந்த பெருமைக்குரியவர் சிவநந்தியடிகள். சிவநந்தியடிகள் என்னும் துறவு நாமமே பின்னாளில் அவரது இயற்பெயரை மறைத்து மேலோங்கி நிற்பதாயிற்று. இவருடைய பிள்ளைத் திருநாமம் ஞானசூரியன் என்பது. இவர் அளவெட்டிக்கிராமத்திலுள்ள அலுக்கை என்னும் வட்டாரத்தில் கிருஷ்ணபிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். கிருஷ்ணபிள்ளை என்பவர் அளவெட்டி சதானந்த வித்தியாசலையின் தலைமையாசிரியராக இருந்த பொன்னுத்துரை ஆசிரியரின் மூத்த சகோதரராவர். சிவநந்தியடிகள் 1929ம் ஆண்டு யூலை மாதம் பதினொராந்தேதி பிறந்தவர். நல்ல விவேகமுள்ளவராக இளமை முதலாகக் காணப்பட்டார். இவர் அளவெட்டியிலும் ஸ்கந்தவரோதயக் கல்லூரியிலும் தமது ஆரம்ப உயர்நிலைக் கல்வியை முடித்துக் கொண்டு இலங்கைப் பல்கலைக் கழகத்திற் கற்று விஞ்ஞானப் பட்டதாரியானார். சீமெந்துத் தொழிற்சாலையிற் பணிபுரிந்ததோடு மல்லாகம் கிராமசபைக்கு மக்களால் தெரிவு செய்யப்பட்டு அதன் தலைவருமானார். அவர் தலைவராக இருந்த காலத்தில் கிராமசபை மிகச் சிறப்பாக நடைபெற்றதெனப் பலரும் கூறக் கேட்டுள்ளோம். அவர் யாழ்ப்பாணத்தில் இருந்தபோதே திருமணம் செய்து இல்லற வாழ்விற் புகுந்தார். பின்னர் லண்டன் மாநகர் சென்று வாழ்ந்ததோடு அங்கு கல்வியைத் தொடர்ந்து முதுமாணிப்பட்டமும் பெற்றார்.

லண்டனில் வாழ்ந்த அவர் யாழ்ப்பாணத்திலிருந்து புலம்பெயர்ந்து பல தேசங்களிலும் குடியேறி வாழுந் தமிழர் நிலை பற்றிச் சிந்தித்தார். இம்மக்கள் தமது மொழியாகிய தமிழையும் தமது சமயமாகிய சைவத்தையும் தமது கலாச்சார விழுமியங்களையும் காலப்போக்கில் இழந்து விடப்போவதையெண்ணிக் கவலையுற்றார். அதன் பேறாகப் புலம்பெயர்ந்து வாழ்வோர் தமது சமயம் மொழி என்பவற்றை இழந்துவிடாது பாதுகாப்பதில் தமக்கும் பொறுப்புண்டென உணர்ந்தார். அதனால் லண்டனில் சைவ சிந்தாந்த சங்கம் என்ற பெயரில் ஒரு சங்கத்தைத் தாபித்துத் தொழிற்பட ஆரம்பித்தார். இச்சங்கமே காலப்போக்கில் 'மெய்கண்டார் ஆதீன'மாகப் பெருவளர்ச்சியுற்றுச் சமயப் பணிகள் பலவற்றைப் புரிந்ததென்பது குறிப்பிடத்தக்கது.

லண்டனின் தமது சைவப்பணிகளை ஆரம்பித்த அவர் படிப்படியாக வேறு பல நாடுகளில் அப்பணியை விரிவு செய்ய ஆரம்பித்தார். அதனால் உலக சைவப்பேரவை என்னும் பெயர்கொண்ட ஒரு தாபனத்தைத் தமிழ்நாட்டின் தலைநகராம் சென்னையில் ஆரம்பித்தார். அதன் தலைவராகவும் அவரே செய்யப்பட்டார். பொய்யும் வழுவுந்தோன்றிய இக்காலத்தில் சமயம் தானாக வளர முடியாதெனக் கண்ட அவர் சங்கங்கள் அமைத்துக் கட்டுப்பாட்டுடன் வளர்ப்பதே சாலச் சிறந்ததென எண்ணினார். பொய்யும் வழுவுந் தோன்றாத காலத்தில் கிரியை முறைகளின்றி நடைபெற்ற திரு மணம் பின்னாளில் பொய்யும் வழுவுந்தோன்றியதால் கட்டுப்பாடுகளுடன் கூடிய திருமணமாக மாறியதென்றும் தொல்காப்பியர் கூற்றின் உண்மைத்தன்மையையும் சிந்தித்தார்.

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயா யாந்தனர் கரணம் என்ப"

என்னும் தொல்காப்பியச்சூத்திரமே இத் துறையில் இவர்க்கு வழிகாட்டியதெனலாம். இதன்படி கட்டுப்பாடுகளுடன் கூடிய சங்க காலத் துத் தமிழ் சமயம் என்பனவற்றை வளர்க்க இவர் உலகின் பலபாகங்களுக்கும் ஓடியோடி முயன்றார். அதன் பேறாகப் பல நாடுகளிலும் சங்கங்கள் அமைக்கப்படலாயின. பல நாடு களிலும் சங்கம் அமைக்கப்பட்டபோதும் எல்லா வற்றுக்கும் தாய்ச்சங்கமாக லண்டனில் அமைக் கப்பட்ட மெய்கண்டார் ஆதினமே விளங்குவ தாயிற்று. இவர் சங்கமமைத்து மாநாடுகள் நடத்திய நாடுகள் பலவாகும். இலங்கை, சிங் கப்பூர், இந்தியா, கனடா, பிரான்ஸ், மலேசியா, தென்னாபிரிக்கா, மொறீசியஸ் முதலான நாடுகளில் இவர் சங்கமமைத்துச் சைவம் வளர்க்கப்பாடுபட்டாரென்பதை நாம் மறந்துவிட லாகாது. இந் நாடுகளிலெல்லாம் அவர் கூட்டிய சங்கங்கள் தற்போது தொழிற்பட்டு வருகின்ற னவோ என்பதை அறிய முடியவில்லை.

அவர் சைவ மக்களுக்காக எழுதிய நூல் கள் பற்பலவாகும். ஆங்கிலத்திலும் தமிழிலும் அவர் நூல்களை எழுதி வெளியிட்டார். தமிழில் அவர் எழுதிய நூல்களிற் சிலவற்றை இங்குத் தருவோம்.

1. தமிழ் கலாச்சாரத்துக்கோர் அறிமுகம்.
2. சைவமும் இந்துசமயமும்.
3. சைவசமயம்.
4. சைவசித்தாந்தம் என்றால் என்ன?
5. சைவம் எதிர்நோக்குஞ் சவால்கள்.
6. விடுதலையும் வீடுபேறும் (திருவாசக ஆய்வு நூல்).
7. அஞ்சாநெஞ்சம்.

இன்றும் இவர் எழுதிய தமிழ் நூல்கள் பலவும் மேலும் விரிவாக்கி விடப்பட்டுள்ளன. இவர் நிறுவிய லண்டனிலுள்ள மெய்கண்டா ராதீனம் இன்றும் நற்பணியாற்றி வருவது அளவெட்டிக் கிராமத்திற்குப் பெருமை சேர்ப்ப தாகும். தனிமனிதராக நின்று அவர் ஆற்றிய சமயப்பணி ஆறுமுக நாவலரை நினைவூட்டு கிறது. ஞானசூரியன் சிவநந்தியாகி அவரே சிவப்பணிகள் புரிந்தமை அளவெட்டி வாழ்மக் கள் பலருக்கு தெரியாமலிருப்பது ஆச்சரியத்துக் குரியதல்ல. ஏனெனில் இவர் இலை மறைகாய் போலவே வாழ்ந்து காட்டியவரென்பதாலென்க.

இரண்டாயிரத்து மூன்றாம் ஆண்டு மே மாதம் இரண்டாந்தேதி இலங்கையின் தலை நகர் கொழும்பில் இரண்டாவது உலக இந்து மாநாடு நடைபெறுவதற்கு ஏற்பாடுகள் செய்யப் பட்டிருந்தன. சிவநந்தியடிகளை அம்மாநாட்டில் பங்குபற்றுமாறு கேட்கப்பட்டிருந்தது. அம்மா நாட்டு மலரொன்றில் நமது ஆதீன முதல்வர் சிவ நந்தியடிகள் பற்றிய கட்டுரையொன்றும் வெளியாகவிருந்தது. அடிகளும் அம்மாநாட்டிற் பங்குபற்றுவதற்கு வருகை தரவிருந்தார். இலங்கையிலுள்ள அன்பர்களுக்கு தாம் வருவது பற்றியும் அடிகள் அறிவித்திருந்தார். யாழ்ப்பாணத்தில் தாம் செய்ய வேண்டிய பணிகள் பற்றியும் முடிவு செய்திருந்தார். அளவெட்டி அன்பர்களும் அவரை பாராட்டிக் கௌரவிக்க ஆயத்தமாக இருந்தார்கள். மனி தனது பிரேரணைகள் அனைத்தும் நிறை வேறுவது சாத்தியமில்லை என்பதை அறியா தோருமுண்டோ? நாமொன்று நினைக்க தெய்வம் வேறொன்று நினைப்பதும் நாம் காணாததல்லவே. மாநாடு நடைபெறவிருந்த தேதிக்கு ஒரு மாதம் முந்தி அதாவது 2-4-2003இல் சிவ நந்தியடிகள் சிவபதப் பேறுற் றார். இந்தச் செய்திகூட யாழ்ப்பாணத்தில் அல்ல அளவெட்டியிலும் பலர் செவிகளில் விழா மற் போனது அளவெட்டி வாழ் மக்களின் தவக் குறைவே எனலாம். வாழ்க சிவநந்தியடிகளின் நாமம். அவர் அளவெட்டி கும்பழாவளை விநா யகர் ஆலயத் திருப்பணிக்கு ரூபா 75000 அனுப்பியிருந்ததும் மேலும் வந்து கொடுக்க இருந்ததும் அன்பர்கள் அறியவேண்டியவை.

* * *

# சிந்தனைச் செல்வர் பொ. கைலாசபதி

அளவெட்டிக் கிராமத்தில் தோன்றிய சிந்தனையாளர்களில் முதலிடம் வகிக்கும் ஒருவராகத் திரு. பொ. கைலாசபதி அவர்கள் கணிக்கப்படுகிறார். வயதில் தம்மிலும் இளைஞரான இவரைப் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள் தமது குருநாதர் என்று போற்றியதிலிருந்தே இவரது அறிவாற்றலை நாம் ஊகித்துணரலாம். இவருடன் நெருங்கிப்பழகி இவரின் நல்வாக்குக் கேட்டு அவற்றைப் பயன்படுத்திய இருவரை இங்கு குறிப்பிடலாம். ஒருவர் அவருடன் திருநெல்வேலி சைவ ஆசிரிய பாடசாலையில் உடனாசிரியராக விருந்த பண்டிதமணி கணபதிப்பிள்ளை அவர்கள் மற்றையவர் அளவெட்டியைச் சேர்ந்த ஆசிரியர் பரநிருபசிங்கம் அவர்கள். இவ்விருவரும் சிந்தனை செல்வர் கைலாபதி அவர்களிடம் அவரது சிந்தனைகளில் தமது கொள்கலத்துக்கு ஏற்றவற்றை முகந்தவர்கள். பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள் கைலாசபதி அவர்களிடம் கேட்டவற்றை முப்பத்திரண்டு கொப்பிகளில் நிரப்பினார் என்பர். பண்டிதமணியவர்கள் அவர் சொல்வன வெல்லாந் தமக்கு விளங்காத போதிலும் விளங்கியவற்றுடன் விளங்காதவற்றையும் சேர்த்து எழுதியதாகவும் குறிப்பிடுகிறார். பண்டிதமணி அவர்களே அவ்வாறு கூறும் போது சாதாரண கல்வியாளருக்கு இவருடைய சிந்தனைகள் விளங்குவதற்கு அரியவென்பது தானே போதரும். இப்படியான பேரறிஞர் கருத்துக்களில் பண்டிமணியின் எழுத்துருவிலிருந்தவற்றைப் பயன்படுத்தி இலக்கிய கலாநிதி. பண்டிதமணி கந்தையா அவர்கள் கைலாசபதி ஸ்மிருதி யென்ற நூலை எழுதியுள்ளார். யாழ்ப்பாண பல்கலைக் கழகம் அந் நூலை வெளியிட்டுள்ளது.

கைலாசபதியவர்கள் இளமையில் மல்லாகம் ஆங்கில வித்தியாசாலையிலும் பின்னர் சுழிபுரம் விக்ரோறியாக் கல்லூரியிலும் கற்றாரென்பர். இவர் ஒரு B.Sc. பட்டதாரியாவார். பட்டப்படிப்பை பரமேஸ்வராக் கல்லூரியிற் கற்றவரெனவும் கூறுவர். இவர் தமிழ், ஆரியம் என்னும் இருமொழிகளையும் பன்னாலையைச் சேர்ந்த சிவானந்தையரிடமே கற்றவர் என்று அறிய முடிகிறது. கைலாசபதி மல்லாகம் வித்தியாசாலையில் கற்றபோது தமது வகுப்பின் மற்றொரு பிரிவில் ஆசிரியர் இரத்தினசபாபதி கற்பித்தார் எனவும் அவருடைய கற்பித்தலால் கவரப்பட்ட இவர் அவரது வகுப்பிலேயே போய் இருந்து விட்டாரெனவும் பாடசாலை நிர்வாகம் அதைத் தடுக்காமல் அவரது விருப்பத்துக்கேற்பக் கற்கும்படி விட்டுவிட்டதெனவுங் கேள்விப்படுகிறோம்.

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள் கைலாசபதி அவர்களிடம் கேட்டவற்றை முப்பத்திரண்டு கொப்பிகளில் நிரப்பினார் என்பர். பண்டிதமணியவர்கள் அவர் சொல்வன வெல்லாந் தமக்கு விளங்காத போதிலும் விளங்கியவற்றுடன் விளங்காதவற்றையும் சேர்த்து எழுதியதாகவும் குறிப்பிடுகிறார். பண்டிதமணி அவர்களே அவ்வாறு கூறும் போது சாதாரண கல்வியாளருக்கு இவருடைய சிந்தனைகள் விளங்குவதற்கு அரியவென்பது தானே போதரும்.

இவர் இளமயிலேயே கவியியற்றும் வன்மை வாய்ந்தவராக இருந்தாரெனவும் 'அணில் புலுணி புராணம்' என்றொரு புராணத்தை விளையாட்டாகப் பாடினாரெனவும் முன்னோர் சொல்லக் கேட்டுள்ளோம். இப் புராணத்தைப் பாடும்படி கேட்டவர் காரைநகர்ச் சின்னத்தம்பி என்பவர். இவருக்கு இரண்டு பற்கள் இல்லாதிருந்தனவாம். இதற்கு யாரோ ஒருவர் சாற்றுக் கவி செய்தாரெனவும் கூறப்படுகிறது. அப்பாடலின் முதலிரண்டு வரியுஞ்

சிதைந்த நிலையில் இறுதியிரண்டடிகளுங் கிடைத்துள்ளன. இவ்விரண்டடிகளையும் இங்கு தருவோம்.

"பல்லிரண்டுங் கழன்ற சின்னத்தம்பி பாவலன்றான் கேட்பப் பாடினான் புல்லி ரண்டோவென நடக்குங் கயிலாசபதிப் பாவ லன் றானே" இதுவே அந்த அணிப்பாடல். கைலாசபதி இளமை தொட்டே மெலிந்த உடலமைப்புள்ளவர். அதனாலேயே அவர் நடப்பதைப் புல்லிரண்டோவென நடக்கும் என்பது குறிக்கிறது. கைலாசபதி பாடிய பாடல்கள் அவரின் குறும்பு விளையாட்டுப் பாடலாக இருக்கலாமென எண்ணத்தோன்று கிறது. இளமையிலேயே பாடத் தொடங்கிய அவர் பின்னர் கவித்துறையிலேயோ அல்லது இலக்கியத்தின் வேறு துறைகளிலோ பெரும் ஈடுபாடு காட்டியதாகத் தெரியவில்லை. ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம் நடத்திய 'ஞாயிறு' என்னும் பத்திரிகையில் இவர் சில கட்டுரைகளை எழுதியதாகத் தெரிய வருகிறது. நூல்கள் எழுதுவதில் இவருக்கு ஆர்வமில்லா மல் இருந்ததற்கு காரணம் நூல்களைப் பயன் படுத்துவோரின் ஆர்வமின்மையே எனலாம்.

இவர் சைவாசிரிய கலாசாலையில் உப அதிபராகப் பணிபுரிந்தபோது அதிபராக இருந்தவர் சுவாமி நாதன் B.A. அவர்களாவர். பண்டிதமணி கணபதிப்பிள்ளை அவர்கள் தமிழ் கற்பிக்கும் ஆசிரியராகவிருந்தார். பண்டிதமணி இவரைத் தமது குருவாகக் கருதினாரென முன்னர் கண்டோம். சுவாமி நாதன் அவர்கள் மல்லாகம் வித்தியாசாலை யில் கைலாசபதியவர்களுக்கு ஆசிரியராய் இருந்தாலும் ஆசிரிய கலாசாலையில் இவ ருக்கு பெருமதிப்பளித்து வந்தாரென்பது ஆசி ரிய கலாசாலைச் சமூகம் அறிந்து கொண்ட பேருண்மையாகும். அதிபரின் காரியாலத் திற்கு உப அதிபர் வந்தால் ஏதோ தேடுபவர் போல எழுந்து விடுவாராம். அவர் அண்மை யில் வந்தவுடன் அவரைப் பற்றிக் கூறியவற்றை ஆதாரமாக வைத்தே அதிபரின் மகன் சுசீந்திரராசா உப அதிபரின் பெருமதிப்புக் குரியவரானார். பின்னாளில் இவர் பல்கலைக் கழகப் பேராசிரியராக மிளிர்ந்தார். அவருடைய முயற்சியாலேயே 'கைலாசபதி ஸ்மிருதி' தோற்றம் பெற்றதென்பது உண்மையே.

ஆசிரிய கலாசாலை விடுமுறையின் போது பண்டிதமணி கணபதிப்பிள்ளை அவர்களும் உப அதிபரும் கீரிமலை மடத்தில் சேர்ந்து படிக்கத் தீர்மானித்தார்களாம். பண்டிதரிடம் உப அதிபர் தமிழ் படிப்பதாகவும் உப அதிபரிடம் பண்டிதமணி ஆங்கிலம் படிப்பதாகவும் ஒழுங்கு செய்யப்பட்டதாகவும், படிப்புத் தொடங்கியபோது நிலைமை மாறி விட்டதாம். பண்டிதமணிக்கு தமழ் சொல்லிக் கொடுக்கும் நிலையில் உப அதிபர் இருந்தா ராம். பண்டிதர் கற்ற தமிழ் வேறு. உப அதிபர் சொல்லிக் கொடுத்த தமிழ் வேறாக இருந்த தாம். உப அதிபர் தமிழை நோக்கிய நோக்கும் தமிழ்ப் பண்டிதர்கள் நோக்கிய நோக்கும் வேறுபட்டிருந்ததால் பண்டிதமணி உபஅதிபரி டந் தொடர்ந்துந் தமிழ் படித்தாரேயன்றி அவர் ஆங்கிலம் படிக்கவில்லையென அவரே உடன்பட்டுள்ளார்.

உப அதிபர் இல்லற வாழ்வை மேற்கொண் டவர். முதல் மனைவி இறந்த பின் வேறொரு பெண்ணை மணம் முடித்து இரு பெண் பிள்ளைகளுக்குத் தந்தையானார். இல்லறத் தில் இருந்தாலும் அவர் ஒரு துறவி போலவே வாழ்ந்தார். பற்றற்ற நிலையே அவருடைய வாழ்வு. சிந்தனையே அவரது தொழில். எந்த நேரமும் ஏதாவது ஒன்றைப் பற்றிச் சிந்திப்பதில் ஈடுபடுவது வழக்கம். எங்கள் நாட்டில் வாழ்ந்த ஞானிகள் பரம்பரையில் அவரும் ஒருவர்.

அளவெட்டியில் ஒரு சோதிட நிலையம் இருந்தது. அதை அமைத்தவர் நைட்டிக

பிரமச்சாரி ஆகிய மு.சின்னப்பு ஆசிரியரா வார். இங்கு சித்தாந்த வகுப்புக்கள் நடைபெறும். சோதிடமும் ஆராயப்படும். இதிற் பங்கு பற்றி யவர்கள் ஆன்மவிசாரமுடையவர்களாகக் கருதப்பட்டனர். இவர்களுக்குத் தலைவராக அமைத்தவர் இரத்தினசபாபதி ஆசிரியரா வார். இவர் கைலாசபதி அவர்களின் குருவுமா வார். இங்கு கூடிப்பேசிச் சிந்திப்பவர்களில் ஆசிரியர் பொன்னம்பலம், ஆசிரியர் சின்னத் தம்பி என்னும் அதிபர் கணபதிப்பிள்ளை உபாத்தியார் என்போரும் அடங்குவர். முக்கிய மானவராகக் கருதப்படுவோரில் கைலாசபதி அவர்களும் ஒருவர். அக்காலத்தில் அளவெட்டி யில் இருந்த சின்னப்பு ஆசிரியரின் வீடு ஒரு மடம் போலவே கருதப்பட்டது.

சிந்தனைச் செல்வர் பொ.கைலாசபதி அவர்கள் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இரண்டாம் ஆண்டு தோன்றினார். இவர் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதா மாண்டு தேகவியோகமெய்தியிருக்கலாம். இவ்வாண்டைச் சரியாகக் குறிப்பிட முடிய வில்லை. இவர் தமது அறிவை மற்றையோ ருக்கு பயன்படச் செய்வதில் பின்நிற்பவர் அல்லர். அறியவேண்டியவற்றை அறியும் விருப்போடு அவரை அணுகுவோர்க்கு அவர் தமது அறிவைக்கரவாது பயன்படச் செய்யுஞ் சுபாவமுடையர். இவருடைய இவ்வியல்பை அறிந்து கொள்வதற்கு இவருடைய சீடராகப் பின்னாளில் விளங்கிய பரநிருபசிங்கம் ஆசிரியர் சொல்லியதை இங்குக் குறிப்பிடுவது பொருத்தமானது. அவர் கூறினார், 'ஒரு நாள் இவரிடம் சமயம் கற்கும் நோக்குடன் அவரது வீட்டை அணுகினேன். அவர் அப்போது ஒரு கதிரையில் அமர்ந்திருந்தார். யான் அவரது அருகில் நின்று அவரது நிலையை அவதா னித்தேன். அவர் எனது வரவைக் கவனியாது சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். சிறிது நேரத்தின் பின் என்னைத் திரும்பிப் பார்த்து 'ஏன் வந்தது' என்று கேட்டார். நான் உங்களிடம் சமயம் படிக்க வந்தேன் என்று கூறினேன். அவர் உடனே சமயம் பற்றிப் பேசத் தொடங் கினார். நான் கீழே நிலத்தில் உட்கார்ந்து எழுதத் தொடங்கினேன். அவர் சொன்ன விஷயங்கள் சமயத்தில் நான் கண்டு கேட்டறியாதவையாக இருந்தன. அவர் கூறிய அனைத்தையும் பக்தி சிரத்தையோடு எழுதிக் கொண்டேன். பின்பு எனக்கு வசதியான நாள்களிலெல்லாம் அந்த மகானைச் சந்தித்து எனது அறிவுப்பசியைத் தீர்க்க முயன்றேன். இக்கூற்றிலிருந்து அவருடைய சுபாவம் ஒருவாறு புலனாகிறது.

## திருமதி. ரூபினி வரதலிங்கம்

அளவெட்டிக் கிராமம் வரித்துக் கொண்ட மருகர்களுள் இவரும் முக்கியமான ஒருவராவார். யாழ்ப்பாணக் குடாநாட்டின் தலைசிறந்த பெண் நிர்வாகிகளில் ஒருவரான இவர் இலங்கை நிர்வாக சேவை அதிகாரியாக வலி மேற்கு சண்டிலிப்பாய் பிரதேச செயலர் பதவி வகித்து பின்னர் யாழ் மாவட்டத்தின் மேலதிக அரசாங்க அதிபராக உயர்வு பெற்று இன்று அப்பணியை திறம்படச் செய்து வருகின்றார். இவரது கணவர் திரு. வரதலிங்கம் தனது தந்தையார் வைத்தியர் வைத்திலிங்கம் அவர்களது அடியினைப் பின்பற்றி வைத்தியத்துறையில் ஈடுபட்டு வருகின்றமையும் குறிப்பிடத்தக்கது.

# பொன்னாரம் பாடிய கா. பொன்னையா

அளவெட்டி வடக்கில் காசிப்பிள்ளைத் தம்பதியினருக்கு மகனாகப் பிறந்தவர் பொன்னையா. இவருடைய ஒரு தமையன் முறிவு நெரிவு, கட்டு, புண், நோ முதலாய நோய்களுக்குச் சிறந்த மருத்துவர் எனப் பெயர் பெற்ற கணபதிப் பிள்ளை. மற்றொரு தமயன் பாவலர் துரையப்பா பிள்ளையால் தாபிக்கப்பட்ட மகாஜனக் கல்லூரியின் அதிபராக இருந்த சின்னப்பா ஆசிரியர். இவரின் தங்கையை மணம் முடித்தவர் அளவெட்டி ஆங்கில வித்தியாசாலையில் தலைமையாசிரியராக இருந்த கணபதிப் பிள்ளை என வழங்கும் சின்னத்தம்பி ஆசிரியர். இத்தகைய குடும்பத்தில் தோன்றி ஆங்கிலத்தை நன்கு கற்று அரசினர் உத்தியோகம் வகித்தார். ஆங்கிலமோகம் தாங்காது தமிழ் மகனாகவே வாழ்ந்தவர். தமிழர் பண்பாடு கலாச்சாரம் என்பவற்றில் மிக்க நாட்டமுடையவர்.

இவர் தமிழை எவரிடம் கற்றவர் என்று அறியப்படவில்லை. அக்காலத்தில் ஆங்கிலம் கற்பித்த கல்லூரிகளே தமிழையும் நன்கு பயிற்றி வந்தன என்று தெளிவாகத் தெரிகிறது. இக்காலத்தில் வித்தியாசாலைகளிலும் சரி பெரிய கல்லூரியிலும் சரி தமிழும் இல்லை ஆங்கிலமும் இல்லை என்ற நிலை மேலோங்கி நிற்கின்றது. கல்லூரிகளில் படித்த ஆங்கில மொழித்தேர்ச்சி காரணமாகவே உத்தியோகம் பெற்று உழைத்தவர் பலர் தமிழர் கவிஞராக மலர்ந்ததை முன்னும் கண்டோம். அத்தகைய ஒருவரே நான் குறிப்பிடும் பொன்னையா அவர்களுமாவார்.

இவர் தமிழல் ஆர்வமுள்ளவர். தமிழ் பண்பாட்டில் நாட்டமுடையவராக இருந்தது போலவே சைவ சமயத்திலும் பற்று மிக்கவராக விளங்கினார். அவர் அவ்வப்போது பக்திப் பாடல்களை புனைந்து இறையருளை வேண்டி நின்றவர். இவர் தமது பக்தி பெருக்கால் வெளியிட்ட ஒரு நூல் 'பொன்னாரம்' என்னும் பெயருடன் வெளிவந்துள்ளது. இவருடைய 'பொன்னாரம்' என்ற நூலைப் பார்க்கும்போது இவருக்கு திருமூலர் திருமந்திரத்தில் பெரும் ஈடுபாடு இருந்ததாக தெரிகிறது. அவருடைய கவிதைகள் திருமந்திரம் போன்ற அமைப்புடையன. அவர் புலவராக இருந்தபோதும் அப்புலமை வெளிப்படாதவாறு மறைந்து வாழ்ந்தவர் என்றே கருதவேண்டியுள்ளது. இவர் 'பொன்னாரம்' என்ற நூலை எழுதினாலும் அதனைப் பதிப்பித்து வெளியிட்டவர்கள் அவர் குடும்பத்தினரே என அறிகின்றோம். இவர் அரசாங்க சேவையில் ஓய்வுபெற முன்னரே நூல்களை எழுதினார் என்று அறியமுடிகிறது. இவர் இன்னும் சிலவாண்டு வாழ்ந்திருப்பின் பெரும் பயன் தமிழுலகத்துக்கு கிடைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

தந்தை தாயுமாய் தமர்பிறயாவுமா
அந்தமற்றதா யாதியு மில்லதாய்
சிந்தைக் கெட்டிடா சிற்பர சோதியாம்
எந்தையே சிவம் எங்கும் வியாபியே.

இவர் இயற்றிய 'பொன்னாரம்' என்னும் நூல், நூற்றெட்டுப்பக்கங்களைக் கொண்டது. 'பொன்னாரம்' என்ற பெயரில் வெளிவந்த நூலில் அவரது உருவப்படமும் அவரது தோற்ற மறைவுக் காலங்களும் காணப்படுகின்றன. அதன்படி இவர் பிறந்தது 1900ம் ஆண்டு பெப்பிரவரி 19ம் தேதியாகும். இவருடைய மறைவு 1956ம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 20ம்

தேதியாகும். எனவே 57 ஆண்டுகளே இவர் இப்பூவுலகில் வாழ்ந்துள்ளார் என அறியக்கிடக் கிறது. இவர் இயற்றிய 'பொன்னாரம்' என்னும் நூலில் குறித்த 108 பாடல்களோடு 'தோத்திரம்' என்ற தலைப்பிலே வெண்பாக்களும் ஏழு ஆசிய விருத்தங்களும் இரண்டு இசைப் பாடல் களும் காணப்படுகின்றன' இவர் பல்வகைப் பாடல்களும் பாடவல்லவர் என்பதை இதன் மூலம் அறியலாம். இவர் செய்த 'பொன்னாரம்' என்னும் பகுதியில் அமைந்துள்ள செய்யுள் களில் இரண்டினை எடுத்துக்காட்டுவோம்.

"சுத்த சத்தி சுந்தர சோதியை
தத்தமக்கென தாரணி மக்கள் தம்
பத்தியாய் பலபேரோடு வாழ்த்தியே
நித்தமே நீத்திலும் நிமலனோரீசனே".

"தந்தை தாயுமாய் தமர்பிறயாவுமா
அந்தமற்றதா யாதியு மில்லதாய்
சிந்தைக் கெட்டிடா சிற்பர சோதியாம்
எந்தையே சிவம் எங்கும் வியாபியே"

அப்பாடல்களிலிருந்து இவற்றின் ஆக்கி யோன் பொன்னையா கடவுளின் இயல்பை சமய கோடிகளுக்கெல்லாம் முரணில்லாத வகையில் கூறுவதை நாம் அறிந்து கொள்ள லாம். அவருடைய செய்யுள் தங்கு தடையின்றி வர ஆற்றொழுக்கு போல் செல்வது கண்டின் புறலாம்.

✦ ✦ ✦

## சங்கடன் படலை



எமது பாரம்பரியத்தின் எச்சங்களில் ஒன்றாக இன்றும் மிச்சம் உள்ளவற்றில் முக்கியமானது இச்சங்கடன் படலையாகும். தமிழர்களின் விருந்தோம்பல் பண்பினை சான்றுபடுத்துவதாக இச்சங்கடன்படலைகள் வரலாற்றில் நிலைத்து நிற்கின்றன.

முன்னர் வீடுகள் அமைக்கும்போது தமது வாசலில் படலைக்கு மேலாக கூரை யிட்டு அதன் இரு மருங்கிலும் குந்துகளை அமைத்து நீண்ட தூரத்திலிருந்து வருபவர் கள் இளைப்பாறுவதற்கு ஏற்ற விதத்தில் அமைக்கப்பெற்றவையே இச் சங்கடன் படலைகளாகும். அளவில் சிறிதாகவும் பெரி தாகவும் உள்ள இப்படலைகளில் முன்னர் மண் பானைகளில் களைப்புற்றோர் பருக குளிர்நீர் வைக்கப்பட்டிருந்ததாகவும் மூத்த வர்கள் கூறுகின்றார்கள். இன்று "நாய் கடிக்கும் கவனம்" என்ற வாசகங்களைத் தாங்கி நிற்கும் எம்மவர்களின் வாசற் படலை களுடன் ஒப்பிடும்போது அன்றைய நாளின் சங்கடன்படலைகள் எங்கள் இனத்தின் வரலாற்றுத் தனித்துவத்தையும் அதிலிருந்து நாம் பிறழ்ந்து வந்த பாதையையும் காட்டும் சுவடுகளாக இருப்பது குறிப்பிடத்தக்கது.

# முதுபெரும்புலவர் வை.க.சிற்றம்பலம்



இவர் இணுவில் பகுதியில் 1914ம் ஆண்டு செப்ரெம்பர் மாதம் 16ம் திகதி பிறந்தவர். இணுவிலில் பிறந்தாலும் அளவெட்டியில் மணம்முடித்து அளவெட்டியில் நிரந்தரமாகவே வாழ்ந்தவர். யாழ்ப்பாணத்தைவிட்டு பாரிய புலப்பெயர்வு காரணமாகச் சென்று அவர் குடும்பம் முதலில் உடுவில், இணுவில் ஆகிய பகுதிகளில் வாழ்ந்து இப்போது கொக்குவில் மேற்குப் பகுதியில் வாழ்ந்து வருகின்றனர். இவர் தமது பாரியாரை புலம்பெயர்ந்து இணுவிலுக்குத் திரும்பிய காலத்தில் இழந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. இவருக்கு ஒரு புதல்வியும் மூன்று புதல்வர்களும் உள்ளனர்.

இவர் ஆரம்பத்தில் தமிழ் ஆசிரியராகக் கடமை புரிந்தார். இப்போதைய தமிழ் ஆசிரியர்களும் அப்போதைய தமிழ்ச் சட்டம்பிமார்களும் அறிவால் வேறுபட்டவர்கள். இக்கால தமிழ் பட்டதாரிகளுக்கு தொல்காப்பியம் பாடநூலாக அமைந்து இருப்பினும் அவர்களுக்கு ஆறுமுக நாவலர் எழுதி அளித்த இலக்கணச் சுருக்கத்தைத்தானும் சரியாக விளங்க ஆற்றல் உண்டோ என்பதை அவர்களில் சிலரைப் பொறுத்தவரை சந்தேகமானதே. ஆனால் பழைய சட்டம்பிமார் நன்னூல் காண்டிகை உரையையே கரைத்துக் குடித்தவர்கள். எழுத்தெண்ணிப் படித்தவர்கள் என்று சொல்லக் கூடிய பெருமைக்குரியவர்கள். ஆசிரியர் சிற்றம்பலமும் தமிழ்மொழி அறிவில் இந்த ரகத்தைச் சேர்ந்தவர் என்பது மிகையாகாது. தமிழ்மொழியில் திறமை வாய்ந்தவராக இருந்த போதும் அவர் செய்யுள் இயற்றும் வன்மையுடையார் என்பதும் அவர் ஓய்வுபெறும் வயது வரும் வரை எவர்க்கும் தெரியாமலே இலைமறைகாய் போலும் குடத்துள் விளக்குப் போலும் தடற்றுள் வாள்போலும் வாழ்ந்துள்ளார். ஓய்வுபெற்ற பின் அவர் செய்யுள் இலக்கணத்தையும் பாட்டியல் இலக்கணத்தையும் நன்கு கற்று செய்யுள் இயற்றலில் தீவிரமாக ஈடுபட்டார்.

புதுக்கவிதைகள் மலிந்த இக்கால கவிஞர்கள் பலர்க்கு பழைய மரபுக்கவி இலக்கணம் தெரியாது. பழமையை கைவிட்டு புதுமை இலக்கியம் படைக்கும் இவர்களது செய்யுள்கள் பழமையுள் வேரூன்றாதவை. இக்கவிதையில் சாதாரண மக்களைக் கவரும் ஆற்றல் இருப்பது உண்மை தான். ஆனால் இவை தமிழ் படித்தவன், தமிழில் தோய்ந்தவன் என்னும் நிலையை உருவாக்குவது இல்லை. இதற்கு உதாரணமாக ஒரு கவிதை காண்போம்.

"நெருட்டிப்பிடித்து
நெருப்புக் கொழுத்தி
சுருட்டுப் பிடிக்கச் சுகம்" - இக்கவிதை இலக்கணப்படி ஒரு குறள் வெண்பாவாகும். இது மரபுக் கவிதை போல இருந்தும் இது ஒரு புதுமைக் கவியாகவே கொள்ளப்படும். மனிதனை மனிதப் பண்பு போற்றி வாழவைக்கும் ஆற்றல் இக்கவிக்கு இல்லை. இவ்வாறே இன்றைய புதுமையெழுத்தாளரின் கவிதைகள் பெரும்பாலும் அமைந்திருக்கின்றன. மனிதனை மனிதனாக்கவேண்டிய கவிதை மனிதப் பண்பை இழப்பதற்கு வழிகாட்டியாக அமையக் கூடாது. பாலுக்கும் கள்ளுக்கும் உள்ள வேறுபாடு போன்று கவிதைகளிலும் வேறுபாடிருப்பதைக் கவிஞர்கள் உணரவேண்டும். இத்தகைய வேறுபாடுணர்ந்து இக்காலம் கவியமைக்கும் பழைய கவிதா மரபுணர்ந்தவரே முது பெரும்புலவர் அவர்கள்.

கொழும்பு தமிழ்ச் சங்கம் நடத்திய சுவாமி விபுலானந்தர் கவிதைப் போட்டியில் சுவாமி விபுலானந்தர் நான்மணிமாலை என்னும் இவரது பிரபந்தத்துக்கு முதற்பரிசு கிடைத் துள்ளது. அதுமட்டுமல்லாமல் நல்லூரர் இரட்டை மணிமாலை என்னும் நூலும் கொழும்பு தமிழ்ச்சங்க முதற் பரிசு பெற்றுள்ளதென்பதும் குறிப்பிடத்தக்கது.

இப்புலவர் முப்பத்து மூன்றாவது வெளியீடாக உடுவில் சொர்ணசித்தி விநாயகர் கோயிற்காளிமீது பூட்டிய கதவைத் திறக்கும்படி

ஒரு நூல் பாடினார் என்பதால் இவர் பல பிரபந்தங்களின் ஆசிரியரென்பது புலப்படு கிறது. இவருடைய செய்யுள்கள் ஓசை நயம், பொருள் நயம், இலக்கண நயம் அமைந்து விளங்குவதால் இவரொரு நல்ல கவிஞர் எனத் தமிழுலகங் கணிக்குமென்பதில் ஐயமில்லை.

கொழும்பு தமிழ்ச் சங்கம் நடத்திய சுவாமி விபுலானந்தர் கவிதைப் போட்டியில் 'சுவாமி விபுலானந்தர் நான்மணிமாலை' என்னும் இவரது பிரபந்தத்துக்கு முதற்பரிசு கிடைத் துள்ளது. அதுமட்டுமல்லாமல் 'நல்லூர் இரட்டை மணிமாலை' என்னும் நூலும் கொழும்பு தமிழ்ச்சங்க முதற் பரிசு பெற்றுள்ளதென்பதும் குறிப்பிடத்தக்கது. இவருடைய செய்யுள்கள் தமிழறிவு பெரிதும் பெறார்க்கும் இலகுவாக விளங்கக்கூடிய தன்மை வாய்ந்தன. கடின நடையைப் பெற்று இரும்புக் கடலைபோல அமைவதே கவிதை என்பதை இவருடைய கவிதைகள் பொய்ப்பித்துள்ளன.

இவருடைய கவிதைகளின் சிறப்பைக் காட்டுவதற்கு அவரியற்றிய 'பண்டிதமணி நான்மணிமாலை'யிலிருந்து சில செய்யுள் களை இங்கு தருவோம். முதலில் அந்நூலி லிருந்து ஒரு வெண்பாவைத் தருவோம்.

"செந்தமிழர் செய்த சிறந்த தவப்பயனால்
வந்துதித்த பண்டித மாமணியைச் - சிந்தித்தே
நாவலராய்ப் பாரதியாய் நானேந்திக் கூடலுறை
தேவருமாய்ப் பாடுவேன் தேர்ந்து"

இந்த வெண்பாவில் வந்துள்ள பதினான்கு தளைகளும் ஒன்றும் பிசகாமல் கவிதை இலக்கணகாரர் விதிக்கு ஏற்ப அமைந்திருப் பதைக் காணலாம். ஆதலால் இது மரபுக்கவி யாய மிளிர்கிறது. இக்கால வெண்பா எழுது வோர், தளை பற்றிக் கவனம் செலுத்தாது தமது மனம்போன போக்கில் வெண்பா பாடுகிறார் கள். இப்படியான கற்றுக் குட்டிகள் தமது பாடல் களுக்கு வெண்பாவென்று பெயரிடாது வசன கவிதையென்றோ, வெண்பாப் போலியென்றோ வேறுவிதமாகவோ பெயரிடுவதே நல்லது. தொல்காப்பியம் புதுக்கவிதைகளுக்கும் இலக் கணம் வகுத்துள்ளது. தொல்காப்பியர் பாட்டு என்பன தவிர்ந்த அறுவகைக்கும் கட்டுப்பாடான இலக்கணம் வகுத்தாரல்லர். ஆதலால் புதுமைக் கவிஞர்கள் அவற்றின் வழி நமது செய்யுள் களை அமைப்பது நல்லது. வெண்பா, ஆசிரி யப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பவற்றை யாப் பிலக்கணகாரர் விதிக்கமைய அமைப்பது மரபுக்கவியாகும். மரபுக் கவிகளில் ஓசையும் பொருளும் நிறைந்திருக்கும். முதுபெரும் புலவருடைய வெண்பாவில் பலவித அமைதியும் நிரம்பியிருப்பது கண்டின்புறுக. இனி முதுபெரும் புலவர் யார்த்த கட்டளைக் கலித்துறையில் ஒன்று காட்டுவோம்.

"மதித்திடு நாவலர் மன்னிய வாழ்வில்
- மயங்கிநின்றே
உதித்தெழுந் தேகற்ற வுண்மைப் புலவ
- ருரைத்தவெலாம்
மதித்தனை யாழ்ந்து பரவினை யந்தகற்
- பண்பிலுனை
துதித்தனன் யானுந் தொடர்ந்தென்றும் பாடச்
- சுரந்தருனே"

கட்டளைக் கலித்துறை பாடுவது சிரமமான செயலேயாம். கட்டளைக் கலித்துறையும் கலித் துறைபோல் ஒவ்வோரடியும் ஐந்து சீர்களால் அமைவதே. எனினும் வெண்டளை தழுவி வர வேண்டுமென்பது ஒரு விதி. அடிகள் தோறும் ஈற்றுச்சீர் கூவிளங்காயாக அல்லது கருவிளங் காயாக அமையவேண்டுமென்பது பிறிதோர் விதி. நேரசை முதலாகத் தொடங்கும் அடி பதி னாறு எழுத்துக் கொண்டதாகவும் நிரையசை முதலாகத் தொடங்கும் அடி பதினேழெழுத்துக் கள் விலக்கப்படும். சீர்சிதைய வருவழி குற்றிய லுகரம் குற்றியலிகரம் என்பன மெய்யெழுத்துப் போலக் கொள்ளப்படும் என்பது புலவனுக்கு ஒரு சலுகையாகக் கொடுக்கப்பட்டது. கட்டளைக் கலித்துறைக்கு யாப்பிலக்கணகாரர் கூறிய இலக்கணங்கள் எல்லாம் அமைந்தனவாகவே முதுபெரும் புலவரின் கட்டளைக் கலித்துறை அமைந்திருப்பதைக் காண்க. முதுபெரும் புலவர் வை.க.சிற்றம்பலம் அவர்களுக்கு 2002ஆம் ஆண்டு இந்து கலாச்சார திணைக்களம் கலாபூஷண விருது வழங்கிக் கௌரவித்துள்ளதென்பதும் குறிப்பிடத்தக்கது.

# விகடகவி மு. திருநாவுக்கரசு



மு.திருநாவுக்கரசு அவர்கள் அருணோதயக் கல்லூரியிலும் சுழிபுரம் விக்ரோரியாக் கல்லூரியிலும் கற்றுத் தமது ஆங்கில அறிவை நிறைவு செய்தவர். அதுமட்டுமல்லாமல் சட்டக்கல்லூரியிலும் பயின்று ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சியடைந்தார். ஆனால் தமது தமிழறிவைக் கல்லூரிப் படிப்போடு விட்டுவிடாது நவாலியூர் சோமசுந்தரப்புலவர் பாடல்கள், பாரதியார் பாடல்கள் பாரதிதாசன் பாடல்கள் கவிமணி தேசிய விநாயகம்பிள்ளை பாடல்கள் என்பவற்றைக் கற்றுத் தமது தமிழறிவுப் பசியைப் பூரணப்படுத்தியவர். அதுமட்டுமல்லாமல் பரம்பரைக்கல்வியும் இவரது தமிழறிவுக்குப் கைகொடுத்துதவியது என்பதையும் நாம் புறந்தள்ளி விடமுடியாது.

இவரது பேரனார் பரமுச் சட்டம்பியார். பரமுச் சட்டம்பியார் தமிழறிவு மிக்கவர். அளவெட்டி ஆண்கள் ஆங்கில பாடசாலை 1894ம் ஆரம்பிக்கப்பட்டபோது அப்பாடசாலையின் தமிழாசிரியராக பாடசாலையின் தாபகர் அருணாசலவுடையாரால் நியமிக்கப் பட்டவர் பரமுச்சட்டம்பியார் என்பவர். அவர் ஒரு பௌராணிகராகவும் இருந்தார். எந்தப் புராணத்திற்கும் பொருள் விரித்துரைக்கக் கூடிய ஆற்றல் அவரிடம் இருந்தது. புராண படனம் பயிலவிரும்புவோர்க்கு பயிற்சியளிப்பவராகவும் அவர் செயற்பட்டார். அவரிடம் பயிற்சி பெற்றவர் புராணங்களுக்குப் பயன் சொல்லிவந்ததும் அளவெட்டியூர் அறியும். "குலவித்தை கல்லாமற் பாகம்படும்" என்பது ஆன்றோர் வாக்கு. அதாவது பரம்பரையாக வந்த கல்வியறிவு கற்றுக் கொள்ளாமலே பாதிவந்து சேரும் என்பது இப்பழமொழியின் கருத்தாகும். திருநாவுக்கரசு அவர்களுக்கும் பரமுச்சட்டம்பியாருடைய குலவித்தை பயன் தந்திருக்கும் போலும். பரமுச் சட்டம்பியாரின் மகன் பொறியியலாளர் முத்தையா ஆவர். முத்தையரின் மகனே திருநாவுக் கரசு என்பது அறிய வேண்டியது.

திருநாவுக்கரசு கல்லூரியிற் கற்கும் போதே 'புலவர்' எனச் சக மாணவர்களால் அழைக்கப்பட்டவர். அவரின் நாவன்மை பலரும் அறிந்ததே மக்களைக் கவரும் வகையிற் சொற்பொழிவாற்றும் ஆற்றல் அவரிடம் இயல்பாகவே அமைந்து கிடந்தது. தந்தை செல்வநாயகம் அவர்கள் தமிழரசுக் கட்சியை அமைத்து கட்சிப் பிரசாரங்களை வடகிழக்கு மாகாணங்களில் தீவிரமாக நடத்தி வந்த காலத்தில் திருநாவுக் கரசும் அப்பிரசாரக் கூட்டங்களில் ஒரு பேச்சாளராகக் கலந்து கொள்வார். அவருடைய பேச்சாற்றல் வளர்வதற்கு தமிழரசுக் கட்சி கைகொடுத்துதவியதென்பது உண்மையே. புலவர் என சக மாணவர்கள் அழைத்தது அவரைப் பொறுத்தவரையில் உண்மையாயிற்று. கவியரங்குகளிற் கூட அவர் பங்குபற்றியுள்ளார். கவிதை மரபு நன்கு அறியாதவரென அவர் கூறினாலும் சந்தம் பிழையாமற் கவியியற்றுவதில் அவர் வல்லவர். எதிரியை அவர் தலைகுனியவைக்கக் கூடிய வகையில் அவரது பேச்சும் கவிதையும் அமைந்திருந்தன. புலவர் பேசவருகிறாரென்றால் சபையினர் உற்சாகத்தோடு கரகோஸம் செய்து வரவேற்பர்.

சட்டத்தரணி களின் தொழில் இருவழிகளில் வெறுப்புக்குரிய தாக அமைகிறது. ஒன்று வழக்குத் தோற்கும் என்றறிந்தும் தோற்கும் தரப்பாரிடம் பணம் பெறுவது. மற்றொன்று வழக்கில் தாம் ஏற்பட்ட கட்சிச்செயல் நியாயமற்றது எனவறிந்து கொண்டும் அவர்கள் செய்கையை நியாயப் படுத்துவது. புலவர் திருநாவுக்கரசு இவ்விரு வழிகளிலும் வேறுபட்ட கொள்கையுடையவர் என்பதில் ஐயமில்லை.

இவருடைய கவிதைகள் உதயன் பத்திரிகையில் பல ஆண்டுகளாக வெளிவந்து கொண்டிருக்கின்றன. இவருடைய கவிதையில் விகடம் மிகுந்திருப்பதால் இவர் விகடகவியெனவே புனைபெயரில் எழுதிவருகிறார். இவர் கல்லூரி மாணவர்களுக்கு பேச்சு, விவாதம் என்பவற்றுக்கு பங்கேற்பதற்காக எழுதிக் கொடுப்பதிலும் வன்மை படைத்தவராக உள்ளார். தமிழரசுக் கட்சிக் கவியரங்குகளில் கூட இவர் ஆலாலசுந்தரம் என்பவருடன் சேர்ந்து பங்குபற்றியுள்ளார். இவர் சட்டத்தரணியாக இருந்தபோதும் இத்தொழில் அவருக்கு ஏற்றதாக அமையவில்லை. கட்சிக்காரரிடம் பணம் பெறத் தெரியாத சட்டத்தரணியாகவே இவர் இருந்தார்; இவர் நீதிபதியானது வரவேற்கத் தகுந்தது. நீதிபதியாக வந்தபின் இவருடைய வழக்குத் தீர்ப்புக்கள் எல்லாராலும் ஏற்றுக்கொள்ளக் கூடியனவாக இருந்தனவென்பது குறிப்பிடத்தக்கது. சட்டத்தரணிகளின் தொழில் இருவழிகளில் வெறுப்புக்குரியதாக அமைகிறது. ஒன்று வழக்குத் தோற்கும் என்றறிந்தும் தோற்கும் தரப்பாரிடம் பணம் பெறுவது. மற்றொன்று வழக்கில் தாம் ஏற்பட்ட கட்சிச்செயல் நியாயமற்றது எனவறிந்து கொண்டும் அவர்கள் செய்கையை நியாயப் படுத்துவது. புலவர் திருநாவுக்கரசு இவ்விரு வழிகளிலும் வேறுபட்ட கொள்கையுடையவர் என்பதில் ஐயமில்லை.

இவருக்கு மூன்று ஆண்பிள்ளைகளுளர். இவர்களில் இருவர் வைத்திய கலாநிதிகளாகவும் ஒருவர் பொறியியலாளராகவும் பணிபுரிவதும் மனைவி சங்கீத ஆசிரியராக இருத்தலும் குறிப்பிடத்தக்கவை.

"தக்கார் தகவிலா ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்"

இதில் எச்சம் என்பது பிள்ளைகளையும் குறிப்பதால் இவர் ஒரு தக்காரென்பது புலப்படும். இவரியற்றிய பாடல்களில் சிலவற்றை இங்கு தருவோம்.

♦ ♦ ♦

## பண்பாட்டைக் காக்க வாரீர்!

கட்டடம் உடைந்துபோனால்
கடிதினில் கட்டிக் கொள்ளலாம்
பெட்டகம் உடைந்து போனால்
பிறிதொன்று வாங்கிக்கொள்வாய்
நட்ட நற்பயிர் அழிந்தால்
நாற்றினை நட்டுக்கொள்வாய்
கெட்டது நம் பண்பாடு என்றால்
கேட்டதை வாங்கலாமோ?
மட்டிலா பண்பாட்டின் செல்வி
மாண்புறு தமிழ்த்தாயன்றோ
கட்டிநம் பண்பாட்டைக் காக்க
காளையே எழுந்து வாராய்
இட்டமாய் இதனைத்தானே
இனிய தாய் வேண்டுகின்றாள்!

*- விகடகவி*

## அந்தோ அவன் பரிதாபம்!

காலையில் முதுகில் மூட்டை
கட்டியே கழுதை போன்று
மாலை ரியூசனால் வந்து தானே
மாட்டினான் கழட்டி வீட்டில்
ஏட்டிலே படிக்கு முன்பு
எலும்பெல்லாம் கோலிப்போச்சு
இட்டம் போல் இவன் நிமிர்ந்து
இனி நடப்ப தெந்த நாளோ!
மூன்று சில்லுச் சைக்கிள் ஒன்றில்
மூச்சுவாங்க ஓடோதொன்று
ஆண்டதற்கு ஐந்துமில்லை
அப்பனும் பின்னால் போறான்
ஓடியே அதுவும் அங்கு
உட்புக வீடு ஒன்றில்
கூட்டியே பாலர்க்கு அங்கு
கொடுக்கிறார் ரியூசன் ரீச்சர்

*- விகடகவி*

# இசைக் கலைஞர்கள் பற்றிய ஒரு அறிமுகம்

அளவெட்டிக் கிராமத்தில் பண்டு தொட்டே பல்வேறு இசைக்கலைஞர்கள் வாழ்ந்து வந்தனரென்பதை அறியமுடிகிறது. இன்று இசைக்கலை விருத்திக்காக அரசாங்கம் இசைக் கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்துள் ளது. பாடசாலைகளில் இசை ஒரு பாடமாகப் பயிற்றப்படுகிறது. பல்கலைக்கழக மட்டத்திலும் இசை பயிற்றப்படுவதோடு இசை பயின்று பத்திரம் பெற்றோர்க்கு ஒரு சம்பளத்திட்டமும் வழங்கப்படுகிறது. இதனால் இசைக்கல்வி யைக் கற்போர் வாழ்வு மலர்ந்திருக்கிறது. பலர் இசை பயில முன் வருகிறார்கள். இசை மட்டு மல்லாமல் நாடகமும் அரங்கியலும் என்ற பாடக்கல்வி மூலம் நாடகத்திற்கும் அரச அங்கீகாரமும் தக்க சம்பளமும் உண்டு. இசைக் கலையிலும் வாய்ப்பாட்டு மட்டுமல்லாமல் மிருதங்கம் முதலிய வாத்தியக் கருவிகளுக் கும் இடம் வழங்கப்பட்டிருக்கிறது. இதனால் இசைக்கல்வி பலராலும் மேற்கொள்ளப்படு வதென்பது மெய்யேயெனினும் பல்கலைக் கழகப் பயிற்சியோடு அத்துறைக் கலைஞர்கள் மேலும் தமது கல்வியை விருத்தி செய்யாதிருப் பதையே நாம் காண்கிறோம். இசையில் மட்டு மல்ல தமிழ் சமயம் முதலிய பாடங்களுக்கும் உள்ள நிலையும் இதுதான். பல்கலைக்கழகம் இப்பாட நெறிகளைக் கற்போருக்கு சான்றுப்பத் திரம் கொடுத்து வெளியேற்றிவிடுகிறது. தமிழ் மொழியில் சிறப்புப் பட்டம் பெறுவதன் மூலம் ஒருவர் தான் தமிழறிந்தவர் தமிழை நன்கு கற்றவர் என்னும் முடிவுக்கு வந்து விடுகிறார். இசை, வாத்தியக்கலை, சமயக்கல்வி என்ப வற்றின் நிலைப்பாடும் இதுவேதான். இசைக் கல்வியில் பட்டதாரிகள் பலர் இருக்கிறார்கள். அவர்கள் பட்டம் பெற்றதன் மேல் தம் கல்வியை மேலும் விருத்தி செய்ய வேண்டுமென எண்ணு வதில்லை. சிலர் மட்டும் தமது கல்வியை மேலும் விருத்தி செய்ய முயன்று அத்துறை யில் வித்துவமடைகின்றனர்.

பட்டதாரிகள் பலர் இருந்தும் அவர்கள் தமது கல்வியை விருத்தி செய்யாவிட்டால் கலை வளர்ச்சியடைய முடியாதென்பதைக் கலைஞர்கள் உணர வேண்டும். முன்னாளில் கலைத்துறையில் ஈடுபடுவோர் அதனால் உழைப்பைப் பெறமுடியாதென்பதால் அத்துறை யிற் பலர் ஈடுபடாதிருந்தனர். ஈடுபட்டோர் தம்மை உலகம் மெச்சவேண்டுமென்றும் அதனால் வருவாயை பெருக்கிக் கொள்ளலா மென்றும் நினைத்து அத்துறையில் கற்றுத் துறைபோகிய வித்துவான்களை வளர்ச்சியுற வைத்தனர். இன்று கலைஞர்கள் பல்கிப் பெருகியிருக்கிறார்கள். ஆனால் மக்களால் கலைஞர் என்ற பாராட்டைப் பெறுபவர்கள் சிலரேயாவர். கலைஞர்கள் பெருகியது போலக் கலை வளர்ச்சியுறவில்லை என்ப தையே இங்கு சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

மிகமிகப் பழைய காலந் தொட்டுத் தமிழ் அறிஞர்கள் கலை வளர்ச்சிக்குப் பாடுபட்டு வந்துள்ளனரென்பதைப் பரிபாடல் முதலிய நூல்கள் எடுத்துக் காட்டுகின்றன. பாடலுக் குரிய பண்ணும் இசையும் வகுத்தோர் பெயரும் பரிபாடலிற் குறிக்கப்பட்டுள்ளது. பரிபாடலுக்கு முற்பட்டதாகிய தொல்காப்பியத்திற்கூட தெய் வம் முதலாக கூறப்பட்ட கருப்பொருள்களுள் தோற்கருவி, நரம்புக்கருவி என்பன பேசப்பட் டுள்ளன. தமிழர் இசை வளர்ச்சியைப் பெரிதும் பேணினர் என்பதற்கு இதைவிடச் சான்று வேண்டுமோ? தமிழ்க் கல்வியின் தரம் குறைந்தது பற்றிச் சி.வை.தாமோதரம்பிள்ளை அவர்கள் கவலையோடு கூறிய கருத்துக்களை யும் நாம் புறக்கணிக்க முடியாது. பாடப்புத்த கங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பாடல்களையெடுத்துப் பாடப்புத்தகங்களை அரசினர் தயாரிப்பதன்றி ஒரு புத்தகத்தை யாவது முழுமையாகக் கற்பிப்பதில்லை என்பதே அவர் கவலையாக இருந்தது. நீந்தப்

பழக்கும் ஒருவன் ஆறு, குளம், கடல் என்ப வற்றில் அபாயகரமான விலங்குகளும் மீன் களும் இருப்பதாகக் கூறிப் பாத்திரத்தில் நீர் மொண்டு வைத்து நீந்தப் பழக்குவது போலவே இக்காலத் தமிழ்க்கல்வி நடைபெறுவதாக அவர் கூறினார். அவர் கூற்றிலுள்ள உண் மையை நாம் மறந்துவிடமுடியாது.

சிலப்பதிகாரம் முதலிய பழந்தமிழ் நூல் களிற் கூறப்பட்ட இசைக்கருவிகள், ஆடல் வகைகள், பாடல் பண் வகைகள் என்பன வெல்லாம் இக்கால நடன, நாடக, இசைவல்லார்க் குத் தெரியாதவை. மாதவி இந்திரவிழாவில் ஆடிய பதினோராடலும் பாட்டின் திறங்களும் இன்று அழிந்த நிலையில் அல்லவா இருக் கின்றன. விபுலனாந்த அடிகள் யாழ் நூல் என்றொரு நூலில் சிலப்பதிகாரத்தில் கூறப் பட்ட யாழ்களை உருவாக்கும் விதம் பற்றி எழுதியிருந்தார். அந்த நூலிற் கூறப்பட்ட யாழ்களை அமைப்பதில் எமது இசைக்கருவி அமைப்போரும் இசை வல்லோரும் கவனஞ் செலுத்தியதாகத் தெரியவில்லை. முத்தமிழ் என்று எமது முன்னோர் இயல், இசை, நாடகங்களில் ஈடுபட்டிருந்ததை எமது பழைய நூல்கள் குறிப்பிடுகின்றன. பழைய இயற் றமிழ் நூல்களான பத்துப்பாட்டும் எட்டுத்தொ கையும், பதிணெண்கணக்கும் எமக்கு கிடைத் திருந்தாலும் இசைத்தமிழ் நாடகத்தமிழ் நூல்கள் எம்கைக்கு எட்டாமற் போனது எமது தவக்குறைவே எனலாம்.

எமது கலாச்சார விழுமியங்களை நாங் கள் இழந்து வருகின்றோம். தமிழர் என்ற அடை யாளம் நாளுக்கு நாள் பறிபோகிறது. தமிழர் நடையுடை பாவனைகளால் ஆங்கிலேயரா கவோ அல்லது வேறு மேற்குலக நாட்டின ராகவோ மாற்றமடைந்து வருகிறார்கள். தமிழ்மொழியே மறைந்த மொழியாகி விடுமோ வென்று அறிஞர்கள் கலங்குகிறார்கள். "வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்" என்று தொல்காப்பியப் பாயிரங் கூறுகிறது. அதாவது வடக்கே வேங்கட மலையும் தெற்கே குமரிமுனையும் தமிழ் நாட்டின் எல்லைகளாகக் கூறப்பட்டுள்ளன. ஈழத்தமிழகங்கூட இவ்வெல்லைக்குள் அடக் கப்படவில்லை. ஆனால் அக்காலத்தில் ஈழநாடும் தாய்நாடாகிய தமிழ்நாட்டுடன் சேர்ந்திருந்ததென்றும் அதனால் பாயிரம் கூறும் எல்லையுள் அடங்குமெனவும் சிலர் சாதிப் பர். இன்று தமிழ் மக்கள் உலகம் முழுவதும் பரந்துபட்டு வாழ்கிறார்கள். புலம் பெயர்வு காரணமாகத் தமிழ்மக்கள் உலக நாடுகள் பலவற்றிலும் பரந்து வாழ்கிறார்கள். கனடா, இங்கிலாந்து, அமெரிக்கா, ஜேர்மனி, பிரான்சு, சுவிஸ் முதலிய மேற்குலக நாடுகளிலும், மத்திய கிழக்கு நாடுகளிலும், கிழக்கு நாடுக ளாகிய மலேசிய, சிங்கபூர், அவுஸ்ரேலியா விலும் தமிழன் வாழ்கிறான். அவன் வீட்டு மொழியாகத் தமிழைப் பயன்படுத்தலாம். அவனுடைய சந்ததியினர் தமிழைப் பயன்படுத்து வாரோ என்ற கேள்வி நியாயமானதே. சைவக் கோயில்களை அமைத்துக் சைவர்களாக அவர்கள் பலர் வாழ்வது மெய்யே. ஆயினும் காலப்போக்கில் அவர் சமயம் எப்படியாகுமோ யாரறிவர்?.

அளவெட்டிக் கிராமத்தில் தவில் நாதஸ் வரம் என்பவற்றில் உலகப் புகழ்பெற்ற பலர் தோன்றியிருப்பதால் அதற்கு முக்கியத்துவம் கொடுப்பது அவசியமாகும் ஆதலால் தவிற் கலையிற் பெரும் புகழீட்டிய தெட்சணாமூர்த்தி பற்றி முதலில் எடுத்துக்கொள்வோம்.

❖ ❖ ❖

# தெட்சணாமூர்த்தி



அளவெட்டிக் கிராமத்திற்குப் பெரும் புகழீட்டிக் கொடுத்தவர்களில் தவிற் கலையரசு தெட்சணாமூர்த்திக்கும் முக்கிய இடமுண்டு. தவிற்கலையில் உலக மேதையாகக் கணிக்கப்படக்கூடிய ஆற்றல் நிறைந்தவர் தெட்சணாமூர்த்தி என்பதை எவரும் ஏற்றுக் கொள்வரென்பதில் ஐயமில்லை. இவர் இணுவிற் கிராமத்திற் பிறந்தவர். ஆனால் அளவெட்டியிலேயே வாழ்ந்து "அளவெட்டி தெட்சணாமூர்த்தி"யெனவே எல்லோராலும் அறியப்பட்டவர். இவரூரும் "யாதும் ஊரே யாவரும் கேளீர்" என்று குரலெழுப்பிய சங்கப் புலவர் கணியன் பூங்குன்றனாரது ஊர் தான்.

தெட்சணாமுர்த்தி விசுவலிங்கம் என்னும் பெயருடைய தவிற்காரருக்கும் அவர் மனைவி இரத்தினாம்பாளுக்கும் புத்திரராக ஆயிரத்துத் தொளாயிரத்து முப்பத்து மூன்றாம் ஆண்டு ஆவணி மாதம் இருபத்தாறாம் நாட் பிறந்தவர். தமது நாற்பத்திரண்டாவது வயதில் அதாவது ஆயிரத்துத் தொளாயிரத்து எழுபத்தைந்தாம் ஆண்டு வைகாசி மாதம் பதின் மூன்றாம் தேதி தேகவியோகமானார். இவர் ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகள் மட்டுமே தவில் உலகில் பட்டொளி வீசிய நட்சத்திரமாகப் பிரகாசிக்க முடிந்தது. எனினும் அக்காலப்பகுதியில் அவர் காட்டிய திறமை எவரையும் வியக்க வைத்த தென்பதில் மறு பேச்சுக்கே இடமில்லை. குல வித்தை கல்லாமற் பாகம்படும் என்பது ஆன்றோர் வாக்கு. அதாவது பரம்பரைத் தொழிலைத் ஒருவன் முறையாகத் கல்லாமலே பாதியளவு திறமையைப் பெற்றுக் கொள்வான் என்பது இம் முதுமொழியின் பொருளாம்.

இவரது இளமைக் காலத்தில் இவரது தந்தையாரே இவருக்கு ஆசிரியராகவிருந்தார். தமது திறமைக்கேற்ற கல்வியை இவரால் பயிற்ற முடிந்தது. தந்தையார் தமது அறிவினால் இவர் ஒரு பெரும் கலைஞனாக உருப்பெற முடியுமென்பதை அறிந்து கொண்டார். தந்தையாருக்கு தமது மைந்தன் தவிற் கலையிற் பெயர் பெற்ற வித்துவானாக மலர வேண்டுமெனும் ஆசை எழுந்ததால் இவரைப் பிரபல தவில் வித்துவான்களாக இருந்த காமாட்சி சுந்தரம், இராஜகோபால்பிள்ளை என்பவர்களிடம் அவ்வப் போது அனுப்பிப் பயிற்சி பெறச் செய்தார். அவர்களுடைய பயிற்சியுடன் இவரை நிறுத்தித் தொழிலில் ஈடுபடுத்த தந்தையாரின் மனம் ஒப்பவில்லை. மேலும் பயிற்றிப் பெருமை சேர்க்க விரும்பினார். அதனால் நாச்சிமார்கோயில் இராகவப் பிள்ளையிடம் குருகுலக்கல்வி பெற அனுப்பி வைத்தார். குருகுலக் கல்வியென்பது குருவுடன் வாழ்ந்து கற்றல் எனப் பொருள்படும். குருவுக்குப் பணிவிடை செய்து அவருடன் உண்டு உறங்கிக் கற்றலென்பது. கண்ணபிரானும் குசேலரும் சாந்தீப முனிவர் பாற் குருகுலக் கல்வி பயின்றனரெனக் குசேலோபாக்கியானம் கூறுகின்றது. இவரிடம் தெட்சணாமூர்த்தி ஓராண்டுக்கு மேற் குருகுலக் கல்வி பயின்றாரென அறிய வருகிறது. பயிற்சி முடிவில் இராகவப்பிள்ளை தெட்சணாமூர்த்தியை ஆசீர்வதித்துக் கூறிய வார்த்தைகள் ஊன்றி நோக்கி இன்புறற்பாலவை. இராகவப்பிள்ளை சொன்னார் "மகனே இனியுனக்குச் சொல்லித்

தெட்சணாமூர்த்தி அவர் களின் தவில் ஞானத் திறமையை மெச்சி தமிழ் நாட்டின் சிறந்த விமர்சகரான சுப்புடு என்பவர் ஆனந்த விகடன் இதழில் பின்வருமாறு கூறியுள்ளார். தெட்சணாமூர்த்தியின் விரல்களில் கலைத் தெய்வ மான சரஸ்வதியே குடியிருக்கின்றாள். அதனாலேயே அவரால் இத்துணை துல்லியமாக தவில் வாத்தி யத்தை இசைக்கமுடிகின்றது. சுப்புடு அவர்களின் பாராட்டைப் பெறுவது இலகு வான விடயமல்ல என்பது பலருக்குத் தெரியும்.

தர என்னிடம் ஏதுமில்லை நீயினிப் போய் தொழிலில் ஈடுபடலாம்" என்று.

இவ்வாறு தவிற்கலையில் சிறந்த வித்துவான்களிடம் கற்றும் இவருடைய அறிவுப்பசி தீரவில்லை. மேலும் இந்தியா சென்று சில பிரபல வித்துவான்களிடம் தவிற்கலை பயின்றார். பயின்றது மட்டுமல்லாமல் பிரபல வித்துவான்களுடன் தவிற் கச்சேரிகளில் ஈடுபட்டுத் தமது திறமைக்கு மேலும் மெருகூட்டினார். உலகங்கண்ட உன்னத தவில் வித்துவானாகப் போற்றப்படும் பெரு நிலையையும் எய்தினார். இவருடைய தவிற் திறமையால் இவர் பெற்ற பாராட்டுக்கள் பட்டங்கள் விருதுகள் பல. தவிற் கலையில் முடிசூடா மன்னனானார்.

தட்சணாமூர்த்தி அளவெட்டியூரில் வாழ்ந்த செல்லத்துரை என்னும் தவிற்காரரின் மகளான மனோன்மணியென்பவரைக் காதலித்துக் கைப்பிடித்து இல்லற வாழ்வில் இணைந்தார். இவருடைய இல்வாழ்வின் பேறாக இவர்களுக்கு இரண்டு பெண்பிள்ளைகளும் மூன்று ஆண்பிள்ளைகளும் மக்களாகத் தோன்றினர். இவர் எல்லாரோடும் இனிக்கப் பேசி இன்முகங்காட்டி வாழ்ந்தார். ஆனால் இசை பற்றி மூத்த கலைஞர்களை யாரும் தாழ்வாகப் பேசினால் இவர் பொறுக்கமாட்டார். அவருக்குக் கோபம் அடக்க முடியாது வந்துவிடும். அப்போது அவர்கள் யார் என்றும் பாராது கடின வார்த்தைகளைப் பிரயோகித்துவிடுவார். அந்த காலத்திலேயே கச்சேரி ஒன்றுக்கு ஆயிரத்து ஐந்நூறு ரூபா வாங்கிய ஒரு வித்துவான் இவரே. இப்போது அப் பணத்தின் மதிப்பு நூறு பங்கு உயர்ந்து காணப்படும். அவர் புகழுடம்பை இவ்வுலகில் நிறுத்தி மீளாவுலகம் புகுந்து விட்டார். இவரது புதல்வன் உதயசங்கர் "புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?" என்பதற்கேற்ப இன்று உலக நாடுகள் பலவற்றுக்கும் சென்று தவில் கச்சேரிகளை நிகழ்த்தி வருகின்றார்.

◈ ◈ ◈

## கேதீஸ்வரன்

அளவெட்டிக் கிராமம் தந்த நாதஸ்வர வித்துவான்களில் முக்கியமான ஒருவராகத் திகழ்பவர் கேதீஸ்வரன் ஆவார். நாதஸ்வரக் கலையை ஓர் புனிதமான இறை தொண்டாக எண்ணி இசைப்பணியாற்றும் கலைஞர்களுள் முதன்மையான இடம் இவருக்குண்டு.

சிவதீட்சை அணிந்து தன் மந்திரக் குழலினால் இறைவன் புகழினை இவர் இசைக்கும்போது உருகாத மனமும் உண்டோ? ஆலய விழா நாட்களில் நாதஸ்வர குழல்களில் சினிமாப் பாடல்களையே கேட்டுப் பழகிய எம்மவர்க்கு கேதீஸ்வரனின் குழலிலிருந்து பக்திரசம் சொட்டும் பாடல்கள் வெளிவரும்போது பக்திப் பரவசம் ஏற்படுவதை நேரில் உணர்ந்தோர் அறிவர். பல இந்திய முன்னணி வித்துவான்களுடனும் ஈழத்தின் முன்னணி வித்துவான்களுடனும் இசைந்து இணைந்து பணியாற்றிய இவர் தற்பொழுது இந்திய தேசத்தில் வாழ்ந்து வருகிறார். இவரது பிள்ளைகளும் இசைத் துறையில் தமக்கென தனியான ஓர் இடத்தினை வகித்து வருவது மகிழ்ச்சிக்குரிய விடயமே. பல விருதுகளையும் பட்டங்களையும் பெற்ற கேதீஸ்வரனை வலிகாமம் வடக்கு கலாசாரப் பேரவையும் "கலைச்சுடர்" எனும் பட்டத்தினால் கௌரவித்து பெருமை பெற்றது.

# கணேசரத்தினம்



இவர் ஒரு மூத்த தவிற் கலை வித்தகர். முதுமைப் பருவமடைந்த போதும் தமக்கு வாழ்வு தந்த தவி லைக் கைவிடாது வாழ்ந்த வர். இவர் வாலிபப் பருவத் தில் சிறந்த தவில் வித்துவானாகச் செயற்பட்ட வர். இவர் 1918ம் ஆண்டு பிறந்தவர். அளவெட்டி சீனன் கலட்டி ஞானோதயா வித்தியசாலையிற் கற்றவர். எவருடனும் அன்பாகப் பழகும் சுபாவம் உடையவர். பலர் இத்துறையில் முன்னேற்ற மடைய வழி சமைத்துக் கொடுத்தவர். இவர் தமது முதுமைப் பருவத்திலும் கும்பழாவளை விநாயகர் ஆலயத்தில் நாளாந்த தவில் சேவைகளைப் புரிந்து வந்தார். முதுமைப் பருவம் வரை அளவெட்டியை விட்டு நீங்காது அங் கிருந்த படியே சேவையை மேற்கொண்டவர். இவ ருடைய தந்தையார் கணபதி என்னும் பெயரினர். இவர் இந்தியாவிலிருந்து யாழ்ப்பாணம் வந்து அளவெட்டியைச் சொந்த இடமாகக் கொண்டு வாழ்ந்தவர். கும்பழாவளை விநாயகராலயச் சேவையில் ஈடுபட்டு இங்கேயே அமரத்துவம் எய்தியவர்.

இவரது மகனாகத் தோன்றிய கணேசரத் தினம் தானுண்டு தன் கலையுண்டு என்றிரா மல் யாழ்ப்பாணம் முதலிய உள்ளூர்க்கலை வித்துவான்களையும் இந்திய நாட்டுக்கலை வித்துவான்களையும் கொண்டு வந்து இங்கு நடைபெறும் சிறப்பு நிகழ்வுகளில் எல்லாம் பங்கு பற்றச் செய்து மக்களுக்கு இசை இன்பத்தை நுகர வழி செய்தது மட்டுமல்லாமல் கலையார் வங்கொண்ட இளைஞர்கள் அவர்களிடம் பயிற்சி பெற்று அக்கலையில் முன்னேறவும் உதவியவர்.

கணேசரத்தினம் அவர்கள் பிறவூர்களி லிருந்து கொண்டு வந்து கலைப்பணி செய்ய வைத்தவர்களில் முக்கியமான சிலரை இங்கு தருவது பொருத்தமா னது. யாழ்ப்பாணம் திரு நாவுக்கரசு, சாவகச்சேரி அப்புலிங்கம், மாவிட்ட புரம் இராசா என்பவர் களை உள்ளூர்க் கலை ஞர்களாகக் கொள்ள லாம். இந்தியாவிலி ருந்து இவர் கொண்டு வந்த கலைஞர்களில் முக்கியமானவர்களாக வேதாரணியம் வேதமூர்த் திப்பிள்ளை, கோட்டூர் இராசரத்தினம்பிள்ளை, வடபாதிமங்கலம் தட் சணாமூர்த்தி என்போ ரைக் குறிப்பிடலாம். இன் னும் பிரபல கலைஞர்கள் வேறு சிலரும் கணேசரத் தினம் தவிற்காரரது முயற்சியின் பேறாக இங்கு வந்து அளவெட்டியிற் கால் பதித்தோராவர். இவர்கள் அளவெட்டிக் கிராமத்திலிருந்து இசை மழை பொழிந்ததால் உருவாகிய இந்நாட்டு இளங்கலைஞரும் பலராவர். இவரது சமூ கத்தைச் சேர்ந்த பலர் இசைத்துறையில் முன் னேறி வாழ்க்கை வசதிகளைப் பெற வழிகாட்டிய வர் இப்பெரியார் என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும். தவில் மேதை தட்சணமூர்த்தி, நாதஸ்வரமேதை நாக. பத்மநாதன், எஸ். சிதம்பரநாதன், தெ. உதயசங்கர் என்போர் மேனிலையடைவும் வழிகாட்டியவர் கணேச ரத்தினம் அவர்கள் என்று சொல்வது மிகை யாகாது. எனவே அளவெட்டிக் கிராமத்தில் இசைக்கலைஞர் பலரைத் தோற்றுவித்த பெருமை இவருக்குண்டு என்பதில் சந்தேக மில்லை.

தவில் மேதை தட்சணமூர்த்தி, நாதஸ்வரமேதை நாக. பத்மநாதன், எஸ். சிதம்பரநாதன், தெ. உதயசங்கர் என்போர் மேனிலையடையவும் வழிகாட்டியவர் கணேச ரத்தினம் அவர்கள் என்று சொல்வது மிகை யாகாது. எனவே அளவெட்டிக் கிராமத்தில் இசைக்கலைஞர் பலரைத் தோற்றுவித்த பெருமை இவருக்குண்டு என்பதில் சந்தேக மில்லை.

● ● ●

# என். குமரகுரு



தவில் மேதை என்று புகழப்படும் என். குமரகுரு என்பவர் தமது தந்தையார் நாகலிங்கம்பிள்ளை என்பவரிடமே இளமையிற் தவிற்கலைப் பயிற்சி பெற்றார். தந்தையிடம் முகந்து கொள்ளக்கூடிய கலைஞானத்தைப் பெற்றுக் கொண்டபின் பிரபல தவில் மேதையாக விளங்கிய வலங்கைமான் சண்முகசுந்தரம் பிள்ளையின் தந்தையாராகிய மூளாய் ஆறுமுகம் பிள்ளையிடந் தவிற்பயிற்சி பெற்றார். அக்காலத்தில் அளவெட்டி நா.க.பத்மநாதன் அவர்களால் அமைக்கப்பட்ட நாதஸ்வர தவிற் குழுவினருடன் சேர்ந்து தவில் இசைத்துப் புகழ் பெற்றார். இவ்வாறு புகழ் பெற்று விளங்கிய இவர் இசைக் கலைஞர்களான திருமெய்ஞானம், பல்லவி வி. நடராசசுந்தரம், பத்தனை நல்லூர் தட்சணா மூர்த்திப்பிள்ளை என்போரை இந்தியாவிலிருந்து அழைத்து வந்து இசைக்குழு ஒன்றினையமைத்து அக்குழு மூலம் இசை வளர்த்துப் புகழ் தேடினார்.

1960ம் ஆண்டு இந்திய இசையாளர் நடத்திய இசை விழாவிலும் 1968ம் ஆண்டு தமிழ் இசைச் சங்கம் நடத்திய இசை விழாவிலும் என்.கே. பத்மநாதன் மூளாய் ஏ. பாலகிருஷ்ணன் என்னும் இருவரும் இணைந்து நாதஸ்வரம் இசைக்க சண்முகசுந்தரம் பிள்ளையுடன் இணைந்து தவில் வாசித்துப் பெருமை தேடிக் கொண்டார். தமிழ் இசைச் சங்கம் நடத்திய இன்னொரு இசை விழாவிலும் கிளாரினட் விற்பன்னர் ஏ.கே.சி.நடராசனின் கிளாரினட் கச்சேரிக்கும் தவில் வாசித்துப் புகழ் பெற்றார்.

1979ஆம் ஆண்டு என்.கே.பத்மநாதன் குழுவினருடன் இணைந்து இங்கிலாந்துக்குச் சென்று கச்சேரி செய்யும் வாய்ப்புப் பெற்று புகழேணியில் மிதந்தார். அது மட்டுமல்லாமல் உலக நாடுகள் பலவற்றுக்கும் அவ்வவ் நாட்டு இசைப்பிரியர்களின் அழைப்பை யேற்றுச் சென்று தவில் வாசித்துப் பெரும் புகழீட்டினார். 1968ல் இவருக்கு லயஞான கலாநிதி என்னும் பட்டத்தை கண்டிக் குறிஞ்சிக் குமரன் ஆலய இசைச் சங்கம் வழங்கிக் கௌரவித்தது. 1993ல் கலாபூஷணம் என்ற கௌரவப்பட்டத்தை இலங்கை அரசாங்கம் சூட்டிக் கௌரவித்ததும் இங்கு குறிப்பிடத்தக்கது.

தரமான ஒரு சிஷ்ய பரம் பரையை உருவாக்கிய பெருமையும் இவருக் குண்டு. இவர் உருவாக்கிய சிஷ்ய பரம்பரையில் இன்று இசையுலகில் முன்னணி வகிக்கும் தவிற் நாதஸ்வரக் கலைஞர்களாகிய உதயசங் கர், சுகுமார், கானமூர்த்தி, கண்ணதாசன், மனோகரன் என்போர் அடங்குவார்.

குமரகுரு தனது புதல்வர்களில் ஒருவரை நாதஸ்வரம் பயிலவும் மற்றொருவரைத் தவில் இசைக்கவும் பயிற்றிவித்துக் கலையுலகுக்கு அறிமுகஞ் செய்தார். தரமான ஒரு சிஷ்ய பரம்பரையை உருவாக்கிய பெருமையும் இவருக்குண்டு. இவர் உருவாக்கிய சிஷ்ய பரம்பரையில் இன்று இசையுலகில் முன்னணி வகிக்கும் தவிற் நாதஸ்வரக் கலைஞர்களாகிய உதயசங்கர், சுகுமார், கானமூர்த்தி, கண்ணதாசன், மனோகரன் என்போர் அடங்குவார்.

✦ ✦ ✦

# என். கே. பத்மநாதன்



நாதஸ்வரக் கலையில் உன்னத இடம் பிடித்த வித்துவான்களில் ஒருவராகத் திகழ்ந்தார். நா. க. பத்மநாதன் என்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மையாகும். இவருடைய தந்தையார் கந்தசாமியும் ஒரு நாதஸ்வரக் கலைஞரே. இவர் கும்பழாவளை ஆலயத்தோடு நெருங்கிய தொடர்புடைய ஒரு கலைஞர். மகன் பத்மநாதனும் இளம் வயது தொடக்கம் கும்பழாவளைப் பிள்ளையாருக்கு இசைக்கலைத் தொண்டு பேணியவரே. இவருடைய குடும்பமே கும்பழாவளைப் பிள்ளையார் ஆலய சேவையில் மிக்க ஈடுபாடு உடையதாயிருந்தது. பத்மநாதனின் மூத்த சகோதரர் பாலசுப்பிரமணியம் என்பவர் ஆங்கிலங் கற்று அரசாங்க உத்தியோகம் வகித்தவராயினும் பதவியிலிருந்து ஒய்வு பெற்றபின் கும்பழாவளைப் பிள்ளையார் ஆலய லிகிதராகப் பொறுப்பேற்றுத் திறமையுறக் கடமையாற்றியவரென அக்கால ஆலய தர்மகர்த்தாக்கள் சபையினர் கூறுகின்றனர்.

பத்மநாதன் இளவயதிலேயே இசைக் கலையில் ஈடுபாடுள்ளவராக இருந்தார். தமது தந்தையாரையே முதற் குருவாகக் கொண்டு சிட்சையை ஆரம்பித்தார். அவரிடம் பெற்ற பயிற்சியோடு நில்லாது மேலும் பயில்வதற்காக யாழ்ப்பாணம் பி.திருநாவுக்கரசுபிள்ளையைக் குருவாகக் கொண்டு நாதஸ்வர இசைப்பயிற்சி பெற்றார். இவர் மேலும் இசைப்பயிற்சி பெற இவருக்கு உதவியாக இருந்தவர் இவரது மாமனாராகிய கணேசரத்தினம் என்பவரே. கணேசரத்தினம் அவர்கள் வெளியூர்களிலிருந்து அழைத்து வந்து தம்முடன் தங்க வைத்திருந்த நாதஸ்வர மேதாவிகளின் வழிகாட்டல் இவருக்குக் கிடைத்ததே இவர் அத்துறையில் மேலும் மேலும் முன்னேற வாய்ப்பளித்தது. அது மட்டுமல்லாமல் அவ் வித்துவான்களுடன் இணைந்து வாசிக்க வாய்ப்புக் கிடைத்ததும் அவர் முன்னேற வழி வகுத்ததென்பது பேருண்மையாகும்.

பத்மநாதன் அவர்களுக்கு கேள்வி ஞானமும்கடிணபயிற்சியும்விடா முயற்சியும் இவர் தமக்கென ஒருவழியை உருவாக்க வழிசமைத்தன. இவர் தாமாகவே ஒரு இளம் இசைவல்லார் குழுவை உருவாக்க எண்ணி பாலகிருஷ்ணன், தட்சணமூர்த்தி, குமரகுரு முதலியவர்களையுந் தம்முடன் இணைத்து ஒரு குழுவை அமைப்பதில் வெற்றி கண்டார். நாளுக்கு நாள் இவர் நாதஸ்வரக்கலையில் முன்னேற்றங் காண இவரைத் தேடிப்பல பட்டங்கள் தாமேயணைந்தன. நாதஸ்வரக் கலாநிதி, இன்னிசை வேந்தன், கலாசூரியர் முதலாய பட்டங்கள் இவரை நாடி வந்து பெருமை பெற்றன. நல்லூர் கந்தன் ஆலயத்தில் பிரதான கலைஞராக ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழாக்களில் நாதஸ்வரம் வாசிக்கும் வாய்ப்பு தொடர்ந்தும் பல ஆண்டுகளாக இவருக்குக் கிடைத்து வந்தது இவரின் மனிதாபிமானச் செயல்களுக்கும் நாதஸ்வரக்கலை வன்மைக்குங் கிடைத்த பாராட்டு என்றே கூறலாம். 1979ல் இவர் இங்கிலாந்தில் வாழுந் தமிழர்களால் அழைக்கப்பட்டு அங்கு இசை பரப்பக்கிடைத்த வாய்ப்பினைத் தொடர்ந்து பல நாட்டுத் தமிழர்களிடமிருந்தும் இவருக்கு அழைப்புக்கள்

*பிறப்பு : 1931*
***இறப்பு** : 2003, ஜூலை 15.*
***ஆரம்பக்கல்வி** : அளவெட்டி சீனன்கலட்டி ஞானோதய வித்தியாசாலை.*
***குருமார்** : தந்தை கந்தசாமி, வலங்கைமான் சண்முக சுந்தரம்பிள்ளை, முல்லை வாசல் முத்துவேற்பிள்ளை பி.எஸ்.ஆறுமுகம்பிள்ளை பி.எஸ்.கந்தசுவாமிப்பிள்ளை சீர்காழி பி.எம்.திருநாவுக்கரசபிள்ளை, திருச்சேரி கிருஷ்ணமூர்த்திப்பிள்ளை*

கிடைத்தன. அங்கெல்லாம் இவர் சென்று அந்த நாட்டு மக்களின் பாராட்டினையும் பெற்றார்.

தம்மூரில் நாதஸ்வரக் கலையைப் பரப்பத் தமக்கொரு நிலையான வாரிசு வேண்டுமென் பதால் தமது புதல்வர்களில் ஒருவரான முரளி என்பவரை அக்கலையில் முன்னேற்றி வைக்க விரும்பினார். அதனால் அவரை இந்தியாவுக்கு அனுப்பி வைத்தார். அங்கு கலைவன்மை பெற்று முரளி நாடு திரும்பினார். நாடு திரும் பிய முரளி இந்தியாவில் இருந்து வந்த அமைதி காக்கும் படையினரில் ஒருவனது குறிவைக்கப் படாத கண்மூடித்தனமான தாக்குதலாற் கொல்லப்பட்டார். இது கலைஞர் பத்மநாதனது வாழ்வில் ஆறாத புண்ணாக அமைந்துவிட்டது.

அந்த அவலம் சிறிது ஆறி மேலும் தம் கலைப்பணியைத் தொடர்ந்து வந்தார். இங்கிலாந்திலிருந்து இவருக்கு மேலுமொரு அழைப்பு வந்தது. அழைப்பை அனுப்பியவர் கள் அவரது இசை விழாவுக்கான ஏற்பாடு களைச் செய்து கொண்டிருந்தனர். கலைஞர் பத்மநாதனும் செல்வதற்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். மனிதனின் பிரேரணைகள் எல்லாம் இறைவனால் அனுமதிக்கப்படுவ தில்லை என்பதை மெய்யாக்கிக் காட்டியது போல அங்கு செல்வதற்கு முன்னே அவர் மரணத்தைத் தழுவிக் கொண்டார். அவரி டத்தை நிரப்ப அளவெட்டிக் கிராமத்தால் இப் போதைக்கு முடியாதெனவே எண்ணத் தோன்றுகிறது. அவர் புகழ் நீடுழி வாழ்க.

## இவர் பெற்ற விருதுகள்



1964இல் பன்னாலையில் நடைபெற்ற சேக்கிழார் மாநாட்டில் முன்னாள் அமைச்சரும் சைவப் பெரியாருமான சேர். கந்தையா வைத்தியநாதன் அவர்களால் நாதஸ்வர கலாநிதி பட்டம் சூட்டப்பட்டார்.

1979இல் மதுரையில் நாதஸ்வரமேதை பொன்னுச்சாமிப்பிள்ளை அவர்களது நூற்றாண்டு விழாவில் இவரது நாதஸ்வர இசைக்கச்சேரியில் எம்.பி.எம். சேதுராமன் அவர்களால் கௌரவிக்கப்பட்டார்.

1982இல் இலங்கையின் அன்றைய ஜனாதிபதி ஜே.ஆர். ஜெயவர்த்தன அவர்களால் கலாசூரி விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்டார்.

1999இல் வடகிழக்கு மாகாண ஆளுநர் விருதைப் பெற்றுக் கொண்டார்.

2003இல் இவரது மறைவின்பின் தேகாந்த நிலையில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் கலாநிதிப் பட்டம் வழங்கி இவரது கலைத் திறமைக்கு கௌரவம் செய்தது.

# எம்.பி. பாலகிருஷ்ணன்



நாதஸ்வர மேதை யாகிய பாலகிருஷ்ணனும் அளவெட்டிக்குப் புகழ் தேடித்தந்த கலைஞர் களில் ஒருவர். இவரது பிறந்தவூர் நெல்லியடி. இவருடைய தந்தையார் ஒரு சிறந்த வாய்ப்பாட்டுக் கலைஞராக இருந்தவர். இவது தந்தையாரிடமே வாய்ப்பாட்டைக் கற்றுத் தேர்ந்தவர். தந்தையாரிடம் கற்ற கலையைத் துணையாகக் கொண்டே பல கச்சேரிகளில் இடம்பிடித்தார். தந்தையார் நாதஸ்வரம் வாசிக்கந் தெரிந்திருந்தவராதலால் இவர் தந்தையாரிடம் முதலில் நாதஸ்வரக் கலையையும் சிறிதளவுக்குக் கற்றுக் கொண்டார். தந்தையாரிடங் கற்றதோடமையாது இந்தியாவுக்குச் சென்று நாதஸ்வரக் கலையைத் தக்க அறிஞர்களிடங் கற்று நல்ல பயிற்சி பெற்றார்.

இவர் நாதஸ்வரக் கலையில் சிறந்த இளங் கலைஞர் என்ற பேர் பெற்ற பின் அளவெட்டிக் கிராமத்துக்கு வந்தார். அளவெட்டியூர் அவருக்கு நன்கு பிடித்துவிட்டது. பத்மநாதனால் உருவாக்கப்பட்ட இளம் நாதஸ்வர தவிற்குழுவில் இணைந்து கொண்டார். இக் குழுவே இவரை நாதஸ்வர மேதையாக வெளியுலகம் அறிய வைத்தது என்பதில் மிகையொன்றும் இல்லை. இவ்விசைக்குழுவே இவர் அளவெட்டியைத் தமது சொந்தவூராக கொள்ள வைத்ததென்பார் கூற்றையும் புறக்கணிக்க முடியாது. இவர் தந்தையிடமும் இந்தியாவிலும் கற்ற இசைக் கல்விக்கு மேலாக அளவெட்டியில் வந்து தங்கிக் கலைபயிற்றிய பிறநாட்டுக் கலைஞர்களிடம் பெற்ற கல்வியே இவரின் கலைத்திறமைக்கு மெருகூட்டியது என் பதையும் மறுப்பதற்கில்லை.

இவர் பத்மநாதனுடன் இணைந்து வாழ்ந்த காலம் தனது வாழ்வின் பொற்காலம் என்பதைச் சொல்லியுள்ளார். நாதஸ்வரத்தில் மட்டுமல்லாமல் இவர் வாய்ப்பாட்டிலும் வல்லவராக இருந்ததே இவர் கலையுலகில் தமக்கென ஒரு தனிப் பாணியை உருவாக்கி முன்னேறப் பெரிதும் உதவியதென்பது இசையுலகின் அபிப்பிராயம். இவரது இசை ஞானத்தை கௌரவித்துப் பட்டம் வழங்க பல இசை மன்றங்கள் முன்வந்தன. சங்கீத நாதஸ்வர இன்னிசைச் செல்வன், நாதஸ்வர மதுரகான பூஷணம், லலிதஸ்வர நாதவாருதி, கலாபூஷணம் என்னும் சிறப்புப்பட்டங்கள் இவரைத் தேடிவந்த பட்டங்களிற் சிலவாகும். இவையெல்லாம் அளவெட்டி பெற்ற பெருமைகளே அளவெட்டித்தாயே இவரைப் பெருங்கலைஞராக உருவாக்கிய தாய் என்பதை மறப்பதற்கில்லை.

பார்வை குன்றிய நிலையிற் கூட இவர் கற்பித்தல் தொழிலை விடாது தொடர்ந்து வயது வந்ததும் ஓய்வு பெற்றார். அதன் மேல் இவ ருடைய இரு கண்களும் மறைந்து விட்டன. தனது கண்களில் ஒன்றையாவது தரும்படி தெய்வங்களை அவர் வேண்டுதல் செய்த துண்டு. தமது வீட்டின் அயலிலுள்ள முத்துமாரி ஆலயத்தில் இருந்து ஆயிரம் கண் படைத்த வளே எனக்கு ஒரு கண்ணையாவது தரமாட் டாயா? என அழுது வேண்டியதுமுண்டு.

தமிழிசைச் சங்கம் என்னும் ஓர் அமைப்பு இந்தியாவில் நடத்திய இசைவிழாவுக்கு இவரும் அழைக்கப்பட்டார். அங்கும் இவர் கௌரவிக்கப்பட்டார். 1999ல் கொழும்பில் கம்பன் கழகத்தால் நடத்தப்பட்ட கலை விழாவில் நாதஸ்வரக் கச்சேரியை நடாத்தியதோடமையாது வாய்ப்பாட்டுக் கச்சேரியிலும் கலந்து கொண்டு தாமொரு இசை மேதை என்பதை நிலை நாட்டினார். இவர் தமிழர் வாழும் வெளிநாடுகள் பலவற்றுக்கும் சென்று இசை பரப்பி அங்குள்ளவரை மகிழ்விப்பதோடு இங்குள்ளாருக்கும் புகழ் தேடித் தந்தவர்.

தமது கலை ஞானம் தம்முடன் மடிந்து விடாது சந்ததி சந்ததியாக வளர வேண்டு மென்ற கலையார்வம் இவர் மனதில் உள்ளது. அதனால் தமது புதல்வர்களாகிய சேகர், சுதா கர் என்னும் இருவரையும் பயிற்றி நாதஸ்வர இசையுலகுக்கு அர்ப்பணித்த நிலையில் அவர்களில் ஒருவரான சேகர் இள வயதி லேயே அமரத்துவம் அடைந்தமை இவரைப் பாதித்தது. இவர் புதல்வர்கள் நாதஸ்வரக் கலையுலகில் இளங் கலைஞர்களாக விளங்கு வது இவருக்கே பெருமை சேர்ப்பதாக உள்ளது.

இவர் தம் பிள்ளைகளை நாதஸ்வரக் கலையுலகிற் பிரகாசிக்கச் செய்ததோடு மாத்திரம் நின்றுவிடவில்லை. இளம் நாவஸ் வர வித்துவான்களாகிய சாவகச்சேரி நாகேந் திரன், இணுவில் காங்கேஸ்வரன், தொண்ட மானாறு கோவிந்தசாமி, சித்தங்கேணி செல்வன், மதுரை இராசரத்தினம் என்பவர் களுக்கு இசைக் கலைக் குருவாக இருந்ததும் இவரைப் புகழேணியின் உச்சத்தில் வைத் துள்ளது.

⌘ ⌘ ⌘

## பார்வதி சிவபாதம் தம்பதிகள்

எண்ணற்ற கலைஞர்களை தன்னகத்தே கொண்டு பெருமை பெற்ற அளவை மண்ணின் முக்கியமான கலைஞர்களாகத் திகழ்பவர்கள் பார்வதி சிவபாதம் தம்பதிகளாவர்.

திரு. சிவபாதம் அவர்கள் மிருதங்கத் துறையில் தன்னிகரற்ற ஒரு துறை தோய்ந்த கலைஞராக அடையாளம் காணப்பட்டவர். மிருதங்க வாத்தியம் மட்டுமன்றி தவில் வாத்தியத்தையும் திறம்பட இசைக்கத் தெரிந்த ஒருவராக அவர் திகழ்கின்றார். எமது தமிழீழ மண்ணின் பல இசையரங்குகளையும், இசைப்பேழைகளையும் தன் தாள லயத்தினால் மெருகூட்டிய சிவபாதம் அவர்கள் பல இந்தியக் கலைஞர்களுக்கு பக்கவாத்தியம் வாசித்து அவர்களது மனம் திறந்த பாராட்டுக்களையும் பெற்றவர். விருதுகளுக்காக வாழாத இந்தக் கலைஞனை வலிகாமம் வடக்கு கலாசாரப் பேரவை "கலைச்சுடர்" விருதினால் கௌரவப்படுத்தியது.

திருமதி. பார்வதி சிவபாதம் அவர்கள் அளவெட்டி மண் தந்த வாய்ப்பாட்டுக் கலைஞர்களுள் முதன்மையானவராகத் திகழ்கின்றார். ஓர் கர்நாடக சங்கீத கலைஞராகத் தன்னை நிலைநிறுத்திக் கொள்ளாது இசையை ஜனரஞ்சகப்படுத்திய முக்கியமான இசையாளராக பார்வதி திகழ்கின்றார். ஒரு காலத்தில் இவரது குரல் வளத்தினால் பல இசைப் பேழைகள் எமது மக்கள் மனதை வருடிச் சென்றதை வரலாறு என்றும் மறவாது.

வன்னிப் போரின் இறுதிக் கணங்களை கண்டு அனுபவித்து வந்த பார்வதி அவர்கள் அண்மையில் மகாஜனசபை கலைஞர் வட்டம் வெளியிட்ட "நிலாக்காலம்" இசைப் பேழையையும் தன் குரல் வளத்தினால் பெருமைப்படுத்தியிருந்தார்.

# எஸ். சிதம்பரநாதன்



நாதஸ்வர வித்துவான் சிதம்பரநாதன் தவிற்காரர் செல்லத்துரை அவர்களின் மகனாவார். இவர் தமது நாதஸ்வரக் கலையைக் கும்பழாவளை ஆலயத்தில் இளமைப்பருவத்திலேயே ஆரம்பித்தவர். இவருடைய தந்தையாரும் கும்பழாவளை ஆலயத்தில் தவிற்கலையில் ஈடுபட்டிருந்தவர். தச்தையாருடன் இணைந்து கலைத் தொண்டு பேணிய இவர் நாதஸ்வரக் கலையில் மிக நாட்டங் கொண்டவராக விளங்கினார். அக் காலத்தில் பிரபல நாதஸ்வரக் கலைஞராகவிருந்த மாவிட்டபுரம் இராசாவிடம் சாஸ்திர ரீதியில் நாதஸ்வரம் பயின்றார். அதன் மேல் இந்தியாவுக்குச் சென்று பிரபல வித்துவான்களிடம் நாதஸ்வரப் பயிற்சி பெற்றார்.

இவர் தமது மாமனாராம் தவிற் கலைஞர் கணேசரத்தினத்தின் வழிகாட்டலில் வருடந்தோறும் அவர் அழைப்பின் பேரில் அவருடன் வந்து தங்கும் வெளியூர்க் கலைஞர்களிடமும் இசைப் பயிற்சி பெற்றார். இவருக்கு இசைத் துறையிற் கேள்வி ஞானம் பெற்றுயர மாமனார் கணேசரத்தினத்தின் உதவி பெரிதும் பயன் பட்டது.

நாதஸ்வரக் கலையரசு பத்மநாதன் ஒரு இசைக்குழுவை அமைத்து பயன் பெரிதும் பெற்றது போல இவரும் தாமாக ஒரு இசைக் குழுவை அமைத்தார். அக்குழுவில் தமது சகோதரனாகிய சிவ குருநாதனையும் இணைத்து பல வருடங் களாக இசைக்கலையை நன்கு வளர்த்தார். இவர் விடாமுயற்சியும் கடின உழைப்பும் உள்ளவராத லினால் இவர் முன்னேற முடிந்தது. "முயற்சியுடை யவர் இகழ்ச்சியடையார்" என்பது தமிழன் கண்ட தாரக மந்திரமல்லவா? நாதஸ்வர இளந்தென்றல் என்ற பட்டத்தை இவர் தமது இளமைக்காலத்திலேயே பெற்று விட்டார். வயது வந்து பெருங் கலைஞராக மாறியபோது இவருக்கு நாதஸ்வரகானவாருதி என்ற பட்டங்கிடைத்தது. இப்பட்ட மூலம் இவர் தமிழர் வாழும் நாடுகளிலெல்லாம் பிரபல இசை மேதையாகக் கணிக்கப்பட்டார். இலங்கை அரசாங்கத்தினால் வழங்கப்படும் கலைஞர்களுக்கான கலாபூஷண விருதினையும் சிதம்பரநாதன் பெற்றுக்கொண்டார். தற்பொழுது கொழும்பை மையமாகக் கொண்டு புலம்பெயர் நாடுகளிலும் ஈழத்திலும் நாதஸ்வர இசை பரப்பி வரும் சிதம்பரநாதன் அளவெட்டி தந்த ஒப்பற்ற நாதஸ்வர கலைஞர் என்பதில் எதுவித ஐயமுமில்லை. இவரது மகன் இளவல் ஜலதரன் வயலின் வாத்தியக் கருவியை இந்திய இசைக்கல்லூரிகளில் கற்று இன்று பலராலும் பாராட்டப்படும் இசை நிகழ்வுகளை நடாத்தி வருகின்றமையும் எம்மண்ணுக்குப் பெருமை சேர்க்கின்றது.

நாதஸ்வர இளந்தென்றல் என்ற பட்டத்தை இவர் தமது இளமைக்காலத்திலேயே பெற்று விட்டார். வயது வந்து பெருங் கலைஞராக மாறியபோது இவருக்கு நாதஸ்வரகானவாருதி என்ற பட்டங்கிடைத்தது. இப்பட்ட மூலம் இவர் தமிழர் வாழும் நாடுகளிலெல்லாம் பிரபல இசை மேதையாகக் கணிக்கப்பட்டார். இலங்கை அரசாங்கத்தினால் வழங்கப்படும் கலைஞர்களுக்கான கலாபூஷண விருதினையும் சிதம்பரநாதன் பெற்றுக்கொண்டார்.

அன்று பத்மநாதனும் பாலகிருஸ்ணனும் இணைந்து செய்யும் இசைக் கச்சேரியைக் காணாத கண்ணும் கேளாத செவியும் பயனில்லாதன என்பதுபோல் இன்று இவரின் இசைப் புலமையும் எங்கும் ஒளி வீசிப் பிரகாசிக்கிறது.

எஸ். சிதம்பரநாதன்

# சங்கீதபூஷணம் வ. க. நடராசா

அளவெட்டியில் இருபதாம் நூற்றாண்டு இசைத் துறைக்கு முக்கியமான ஆண்டாகக் கொள்ளப்படலாம். அவ்விசைப் பரம்பலுக்கு நான் என்று தோள் கொடுத்தவர் வ.க.நடராசன் என்பதை மறைப்பதற்கும் இல்லை மறுப்பதற்கும் இல்லை. பரம்பரையாக இசை கற்றவரும் இசை பரப்பியவரும் மலிந்ததாக இருந்த அளவெட்டியை இசையில் விருப்பமுடைய எவரும் அத்துறையில் முன்னேறலாம் என்ற நிலைக்கு ஆக்கியவர் நடராசா அவர்களே. இசை பள்ளிக்கூடங்களிலோ அல்லது பல்கலைக்கழகங்களிலோ ஒரு பாடமாக்கப்படாதிருந்ததோடு இசையாசிரியர்களுக்கென ஒரு சம்பளத்திட்டம் வகுக்கப்படாதிருந்த காலத்தில் இசையைப் பயின்று அதன் மூலம் இசைக்கலையிற் பலரையும் ஊக்கி அளவெட்டிக் கிராமத்தை இசைக்கலைஞர்களால் நிரப்பியவர் நடராசா அவர்களே.

அளவெட்டியில் இசை பயின்று பத்திரம் பெற்றோர் நாற்பத்தெட்டுப் பேர் இருப்பதாக சங்கீத பூஷணம் நடராசா கூறுகிறார். இவர்களிற் பலர் இன்று வெளிநாடுகளில் இருப்பதும் நாமறிந்ததே. அளவெட்டியில் ஒரு இசைக்கலை மன்றம் அமைத்து அதன் மூலம் இசையின் பெருமைகளையும் அதன் பயன்பாட்டையும் அளவெட்டி மக்களுக்கு உணர்த்தி இசைக்கலை மன்றம் மூலம் இசை வகுப்புக்களை நடத்தி வெற்றி நடை போட்டு இசைக்குப் பெருமை சேர்த்தவர் நடராசா. அவரை இசையுலகிற் புகுத்திய பெருமை அளவெட்டி சதானந்த வித்தியாசாலைத் தலைமையாசிரியர் திரு.அ.பொன்னுத்துரை அவர்களையே சேரும். தமது மாணவன் நடராசாவுக்குச் சங்கீதத்தில் நாட்டம் இருப்பதைக்கண்ட பொன்னுத்துரை ஆசிரியர் அவருடன் வேறு சிலரைச் சேர்த்துச் சதானந்த வித்தியாசாலையிற் சங்கீத வகுப்பினை நடத்தினார். அவ்வகுப்பிற்குச் சிறந்த சங்கீத வித்துவான்கள் பயிற்சியளித்தார்கள். அப் பயிற்சியின் பேறாக வளர்ந்தவரே நடராசா.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சங்கீத பூஷணம், இசைமானி முதலிய பட்டத்துக்குரிய வகுப்புக்கள் நடைபெற்றன. நடராசா சங்கீத பூஷணம் பட்டம் பெறுவதற்காக அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நான்காண்டு கற்றார். இவர் நாட்டின் பலபகுதிகளிலும் இசைக்கச்சேரிகளை நடத்தி வருகிறார். இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனத்தில் பல வானொலி இசைக்கச்சேரிகளை நடத்தியுள்ளதுடன் வருடந்தோறும் திருக்கேதீஸ்வர ஆலயத்திலும் இசை நிகழ்வுகளை நிகழ்த்தி வருகின்றார். சங்கீத பாட ஆசிரிய ஆலோசகராக வலிகாமம் கல்வி வலயத்தில் பணியாற்றியது மட்டுமன்றி யாழ்ப்பாணப் பல்கலைக்கழக நுண்கலைத்துறையின் இசைத் துறையிலும் சில காலம் வருகை விரிவுரையாளராக கடமையாற்றியுள்ளார். இவரிடங் கற்ற மாணவர்கள் இவருக்கு நன்றிக் கடனை தாமும் இசை ஆசிரியர்களாக பணி புரிவதனூடாக செலுத்தி வருகிறார்கள். இன்னும் இசைத்துறையிற் பெருஞ் சேவை செய்யவும் பட்டம் பெற்றதோடு நில்லாது தமது மாணவர் மேலுமுயர இவர் வழிகாட்டுவராக.

அளவை இசைக்கலை மன்றத்தின் தாபகர் அளவெட்டி மகாஜன சபை கலைஞர் வட்டத்தின் போஷகர், வலிகாமம் வடக்கு கலாசாரப் பேரவையின் உபதலைவர், செயலாளர் என கலைத்துறை கௌரவப் பதவிகள் பலவற்றை அலங்கரிக்கும் வீ.கே. எங்கள் மண் தந்த கர்நாடக சங்கீத இசைத்துறையின் ஆணி வேர் என்றால் அதை மறுத்துரைக்க எவரும் துணியார்.

✦ ✦ ✦

சங்கீத பூஷணம் வ. க. நடராசா

# சிற்பக் கலைஞர் சிவப்பிரகாசம்

சிற்பக் கலையில் நன்கு பயிற்சி பெற்று யாழ்ப்பாணம் மத்திய கல்லூரியில் சித்திர ஆசிரியராகப் பணிபுரிந்து அகில இலங்கையிலும் தமது பெயரைப் பொறித்தவர் சிவப்பிரகாசம். இவர் அளவெட்டி வடக்கிலுள்ள சாத்தாகலட்டி என்னும் வட்டாரத்தில் செல்லையா தெய்வானைப்பிள்ளை தம்பதியினருக்கு மூன்றாவது பிள்ளையாகத் தோன்றினார். அவர் தமது ஆரம்ப இடைநிலைக் கல்விகளைச் சீனன் கலட்டி ஞானோதய வித்தியாசாலையில் முடித்துக்கொண்டு ஆங்கிலக் கல்வியை மகாஜனக் கல்லூரியில் தொடர்ந்தார். இவருக்குச் சித்திரத்திலுள்ள ஆர்வத்தைக் கண்டு கொண்ட இவரின் குருவெனத் தகும் இராசையா ஆசிரியரின் தூண்டுதலின் பேரில் பெற்றோர் இவரைக் கொழும்பில் உள்ள அரசினர் நுண்கலைக் கல்லூரியில் சித்திரம் சிற்பம் என்னும் கலைகளைக் கற்க வைத்தனர்.

1928 ஆம் ஆண்டு யூன் மாதம் இருபத்தோராந் தேதி பிறந்த இவர் 1952 ஆம் ஆண்டு நுண்கலைக் கல்லூரியில் சேர்ந்தார். அங்கு நான்கு ஆண்டுகள் கற்று 1956 ஆம் ஆண்டு சித்திரம் சிற்பம் என்னும் இரு நுண்கலைகளிலும் "டிப்ளோமா" பட்டம் பெற்று வெளியேறினார். இவர் தமது கல்வியைப் பயன்படுத்தி உழைப்பதற்கு வழியின்றிக் காலங் கழித்து வந்தார். இவருடைய நிலைமையை அறிந்த ஆசிரியர் ஒருவர் இவரை சிற்பத்துறை ஆய்வாளராகிய கலைப்புலவர் நவரத்தினத்திடம் ஒப்படைத்தார். இவர் சீலைகளுக்கு வர்ணந் தீட்டுதற் கலையிலும் வல்லவராயிருப்பதை அறிந்த கலைப்புலவர் அவரது மனைவியாரையும் அழைத்து அவருடைய விருப்பத்தைப் பெற்று அவருக்குத் தொழில் பெற்றுத் தருவதாகவும் அடுத்த நாளே மத்திய கல்லூரிக்கு வருமாறுங் கூறினார். இவருடைய காரியம் விரைவில் நிறைவேறியது. 1956 ஆம் ஆண்டு முதல் மத்திய கல்லூரியில் சித்திரமுஞ் சிற்பமும் நன்கு கற்பித்து வரலாயினார். இவர் புகழ் அங்கிருந்து நாலா திசைகளிலும் பரவலாயிற்று.

> இதுவரை ஐம்பதுக்கு மேற்பட்ட சிற்பங்களை வடித்துள்ளார். இவர் அமைத்த சிலைகளில் யாழ் மாநகர சபைக்கு அமைத்துக் கொடுத்த இராமநாதன் சிலையும், சங்கிலி மன்னனும் குதிரை சிலை யும், பண்டாரவன்னியன் சிலையும் இவரைப் புகழேணியின் உச்சிப்படியில் ஏற்றியுள்ளன. இவர் அமைத்த உலோகச் சிலைகள் காலத்தால் அழியாதவை.

இவருடைய சிற்பத் திறமையால் இவர் பலருடைய பாராட்டுக்களையும் பதக்கங்களையும் பெற்றார். இவரிடம் பதினைந்துக்கும் மேற்பட்ட தங்கப்பதக்கங்கள் உள்ளன. இவர் சிற்பக் கலை வளர வேண்டுமென்பதற்காக 'சிவசாயி சித்திரக் கோட்டம்' என்னும் கலைக் கூடத்தையமைத்து தமது கலைப்பணியைத் தொடங்கினார். "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற கணியன் பூங்குன்றனார் கருத்துக்கியைய இவர் தமது கோட்டத்தை எங்கு அமைக்கலாமாயினும் அவர் பிறந்த ஊராகிய அளவெட்டியில் அது அமைக்கப்பட்டிருப்பின் அளவெட்டி இளைஞர்களும் பயனடைந்திருப்பர் என்பது எமது அவா.

பிரமன் தான் படைத்த ஒன்று போல் மற்றொன்றை படைக்க அறியான். சிற்பியோ தான் படைத்த உருவம் போல் எத்தனை வேண்டுமானாலும் படைத்து விடுவான் என அறிஞர் புகழ்வார். அவ்வாறே சிவப்பிரகாச

சிற்பக் கலைஞர் சிவப்பிரகாசம்

மும் எந்த உருவத்தையும் அதன் மூல அமைப்புப் போல் அமைக்க வல்லவராக சிற்பக்கலை நிபுணராக விளங்கினார். இத னால் அவரது சிற்பங்களும் ஓவியங்களும் உயிர்களைக் கொண்டு மிளிர்கின்றன.

சிவப்பிரகாசம் அவர்களுக்கு இரு புதல்வர்கள் உளர். அவர்களில் ஒருவர் பொறியியலாளராகவும் மற்றொருவர் வைத் திய கலாநிதியாகவும் விளங்குவது அவர் மேற்கொண்டு வரும் கலைத் தொண்டுக்குக் கிடைத்த பரிசு எனலாம். அவர் இதுவரை ஐம் பதுக்கு மேற்பட்ட சிற்பங்களை வடித்துள்ளார். இவர் அமைத்த சிலைகளில் யாழ் மாநகர சபைக்கு அமைத்துக் கொடுத்த இராமநாதன் சிலையும், சங்கிலி மன்னனும் குதிரை சிலை யும், பண்டாரவன்னியன் சிலையும் இவரைப் புகழேணியின் உச்சிப்படியில் ஏற்றியுள்ளன. இவர் அமைத்த உலோகச் சிலைகள் காலத்தால் அழியாதவை. அவர் கலைப்பணி தொடர்க.

♣ ♣ ♣

# அளவெட்டியில் சங்கீத வளர்ச்சி

அளடிவட்டிக் கிராமம் இசையால் திசை போகியதென்பதற்குப் பல சான்றாதாரங் களை இந்த நூலை வாசிப்போர் கண்டு கொள்வர். இசை சார்ந்த பலதுறைச் செயற்பாடுகள், மலிந்த கிராமம் அளவெட்டி. இப்போது அளவெட்டியில் பல வாய்ப்பாட்டுக் கலைஞர்கள் இசை பரப்பி வருகிறார்கள். ஆரம்ப நாட்களில் பல்வேறு இசை நிகழ்ச்சிகள் பெருகிவந்தபோதும் கர்நாடக சங்கீதம் பரம்பரையாக விளங்கி வந்ததேயொழிய கல்லூரிகளில் கற்று மாதச் சம்பளம் பெறும் துறையாக அரசு, அதை கொண்டு வரும்வரை இப்போதுள்ளதுபோல் கர்நாடக சங்கீத வல்லார் பலர் அளவெட்டியில் தோன்றவில்லை.

இத்துறையில் முதன் முதலில் ஈடுபட்டவர். சங்கீத பூஷணம் வ.க. நடராசா. அவரால் அளவெட்டியில் ஆரம்பிக்கப்பட்ட அளவை இசைக்கலை மன்றம் 1964 இலிருந்து மூன்றாண்டுகள் இசையரங்குகளை அமைத்து இசை விழாக்களைக் கொண்டா டியது. யாழ். குடாநாட்டிலுள்ள சங்கீத வித்துவான்கள் பலர் இவ் இசை விழாவில் பங்குபற்றியதோடு கௌரவிக்கவும் பட்டனர். இவ்விசைக்கலை மன்றம் சார்பில் அளவெட்டி சதானந்தா வித்தியாசாலையில் இசை வகுப்புக்களும் ஆரம்பித்து நடைபெற்று வந்தன. வ.க. நடராசா மட்டுமல்லாமல் பன்னாலையைச் சேர்ந்த பொன் முத்துக்குமாரு என்ற இசைக்கலைஞரும் இவ்வகுப்புக்களை நடாத்துவதில் துணை புரிந்தார். இவ் இசை வகுப்புக்கள் மூலம் 56 இசையாசிரியர்கள் உருவாக்கப்பட்டனர். இவர்களில் பலர் இன்று உலகின் பல பாகங்களிலும் இசைப்பணி ஆற்றுகின்றனர். அவர்களுள் திருமதி. விமலாதேவி நாகேஸ் வரன், திருமதி. திருமகள் இராமச்சந்திரன், திரு. வை. கணேசலிங்கம், திருமதி. தவமணிதேவி தட்சணாமூர்த்தி ஆகியோர் சங்கீத பாட உதவிக் கல்விப் பணிப்பாளர்களாக கடமை புரிவதும் குறிப்பிடத்தக்கது.

# ஆசிரியர் பொன்னம்பலம் (ஆர்ட் மாஸ்ரர்)

அளவெட்டி தெற்கில் வாழ்ந்த ஆசிரியர் பொன்னம்பலம் ஒரு சிறந்த ஓவியக் கலைஞர். ஆசிரியராய் இருந்த அவர் தமது ஓவியக்கலையை உழைக்குந் தொழிலாகப் பயன்படுத்தியதில்லை. அவரின் ஓவியங்கள் அளவெட்டியிலுள்ள ஆலயங்களின் சுவர்களில் இன்றும் இவரை நினைவூட்டிக் கொண்டே காட்சி தருகின்றன. ஓவியத்தில் மட்டுமல்லாமல் நடனக்கலை கூடத்தெரிந்தவராக இருந்தார். அளவெட்டியிலுள்ள அமெரிக்க நாட்டவரான சுப்பிரமணிய சுவாமிகளது ஆச்சிரமத்தில் இவர் சித்திர ஆசிரியராகச் செயற்பட்டவர். சிறுவர்களுக்கு நுட்பமான முறையில் சித்திரம் தீட்டக்கூடிய அறிவைப் போதித்தார். ஆச்சிரமப் பணிகளில் ஈடுபட்டதோடு சமயத் தொண்டுகளிலும் ஈடுபட்டவர். சமயப் பணிக்காக அமெரிக்கா செல்லவும் ஆயத்தமாக இருந்தவர். பின்பு அது தடைப்பட்டுப் போயிற்று.

இவர் பரமேஸ்வராக் கல்லூரியில் நடைபெற்ற பண்டித ஆசிரியக் கலாசாலையிற் கற்று ஆசிரியத்தராதரம் பெற்றவர். பண்டித பரீட்சைக்குத் தோற்றியவர். ஆரியதிராவிட பாஷா அபிவிருத்திச் சங்கப் பரீட்சகர்களாக அன்றிருந்த தமிழறிஞர்கள் இத்தகைய மூன்று வருடங்களில் பட்டம் பெறும் பண்டிதர்களில் நம்பிக்கை வைக்காமல் எல்லோரையும் சித்தியடையாமற் செய்தார்கள். அதனால் பாதிக்கப்பட்டோரில் இவரும் ஒருவர். பலர் அடுத்த வருடப் பரீட்சையிற் பங்குபற்றிய போதும் இவர் அவ்வாறு பரீட்சை எடுக்காது பண்டிதராகாமல் இருந்துவிட்டார்.

இவருடைய தந்தையார் சிதம்பரம்பிள்ளை என்னும் பெயரினார். இவர் பிறந்தவூர் கந்தரோடை. இவர் அளவெட்டி கும்பழாவளை விநாயகர் ஆலயம், பெருமாக்கடவை விநாயகர்ஆலயம், அளவெட்டி நாகவரத நாராயணர் ஆலயம் என்பவற்றின் சுவர்களில் வரைந்த ஓவியங்கள் அவரின் புகழை பறைசாற்றி நிற்கின்றன. நடனக்கலையும் தெரிந்தவராக விளங்கியதனால் அளவெட்டியில் மேடையேறிய நடனங்களில் சிவநடனம் முதலிய நடனங்களைச்செய்து காட்டிப்புகழ் படைத்தார். இவர் ஆசிரிய தராதரம் பெற்று ஆசிரியராகப் பணிபுரிந்து வேதனம்பெற்றதன்றித்தாம்செய்த பொதுப் பணி எதற்கும் பணம் பெற்றவர் அல்லர்.

எல்லாருடனும் அன்பாகப் பேசிப்பழகி இன் முகங்காட்டி வாழ்ந்த அவர் தமது வாழ்நாளில் எல்லோர்க்கும் நண்பராக இருந்ததன்றி எவருடனும் மாறுபட்டதில்லை எனலாம். இவர் நந்தி எனும் புனைப் பெயரில் கட்டுரைகள் எழுதி வெளியிட்டதாகவும் அறிய வருகிறது.

எல்லாருடனும் அன்பாகப் பேசிப்பழகி இன் முகங்காட்டி வாழ்ந்த அவர் தமது வாழ்நாளில் எல்லோர்க்கும் நண்பராக இருந்ததன்றி எவருடனும் மாறுபட்டதில்லை எனலாம். இவர் நந்தி எனும் புனைப் பெயரில் கட்டுரைகள் எழுதி வெளியிட்டதாகவும் அறிய வருகிறது.

◈ ◈ ◈

# ஓவியர் தெட்சணாமூர்த்தி

அளவெட்டிக் கிராமத்தில் வாழ்ந்த ஓவியர்களுள் மிகவும் தனித்துவமான மனிதராக திகழ்பவர் என்.ரி.மூர்த்தி என அறியப்பட்ட தெட்சணாமூர்த்தி அவர்கள். ஒரு தொழில் முறை சார்ந்த ஓவியராக தன்னை அடையாளப்படுத்திக் கொண்டாலும் ஓவியத் துறையில் பல்வேறு நுட்பங்ளையும் அறிந்த மனிதராவும் அவற்றை பலருக்கு பயிற்றுவித்த ஆசானாகவும் திகழ்பவர். வன்னிப் பகுதியில் காந்தரூபன் அறிவுச்சோலை மாணவர்களுக்கும் தனிப்பட்ட ரீதியில் பல்கலைக்கழக சித்திரமும் வடிவமைப்பும் துறை மாணவர்களுக்கும் தனது சித்திரக்கலை நுட்பங்களை பயிற்றுவித்தவர்.

தனது ஆரம்ப நாட்களில் இலங்கை லேக்வுஸ் நிறுவனத்தில் ஒரு ஓவியராக அரச பணியில் இணைந்து கொண்ட இவர் பின்னர் படிப்படியாக தினகரன் பத்திரிகையின் பிரதான ஓவியராக தன்னை திறமையின் வழி மாற்றிக் கொண்டார். அங்கு பணிபுரிந்த நாட்களில் பேராசிரியர் கைலாசபதியுடன் இணைந்து பத்திரிகை ஓவியத் துறையில் பல புதிய நுட்பங்களை கையாண்டு பலரது கவனத்தையும் தன்னை நோக்கி திருப்பினார்.

பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக லேக்க'ஸ் நிறுவனத்தில் பணியாற்றிய பின்னர் யாழ்ப்பாணம் திரும்பி காலச் சூழ்நிலைக்கு ஏற்ப தன்னை ஒரு போர்க்கால ஓவியராக மாற்றிக் கொண்டு பதாதைகள் எழுதுவதிலும் வரைவதிலும் மரணித்தோரின் உருவப்படங்களை வரைவதிலும் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். இதே நாள்களில் ஈழநாடு மற்றும் ஈழநாதம் பத்திரிகைகளிலும் இணைந்து பணியாற்றியதுடன் கோவில்கள் மற்றும் பாடசாலைகளிலும் பல ஓவியங்களை வரைந்ததுடன் தமிழ் கூறும் நல்லுலகம் போற்றும் பெரியார்கள் பலரது உருவப்படங்களையும் வரைந்து இருந்தார். இந்த வகையில் தனது இறுதி நாள்களில் அளவெட்டி சற்குரு சிவாய ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகள் கலாசார நிலையத்தில் வரைந்த சுப்பிரமுனிய சுவாமிகள் மற்றும் யோகர் சுவாமிகளின் உருவப்படங்களும் தான் இறுதியாக வாழ்ந்த இல்லத்தின் சுவரில் வரைந்த சுவாமி விவேகானந்தரின் உருவப்படமும் பார்ப்போரை அதிசயத்தில் ஆழ்த்துவன.

இது மட்டுமன்றி கீரிமலை நகுலேஸ்வர ஆலயத்திலும் தனது இறுதி நாள்களில் பல ஓவியங்களை வரைந்து இருந்தார். பட்டங்கள் மற்றும் பதவிகளை விரும்பாத ஒரு கலைஞனாக வாழ்ந்த இவர் 2004ம் ஆண்டு வலிகாமம் வடக்கு கலாசாரப் பேரவையினரால் "கலைச் சுடர்" எனும் பட்டம் வழங்கி கௌரவிக்கப்பட்ட போதும் அதனை ஏற்க மறுத்து இருந்தார். இவ்வாறு புகழ் விரும்பாது வாழ்ந்த இந்த வித்தியாசமான ஓவியக் கலைஞனின் தூரிகை 2006ம் ஆண்டு சித்திரை மாதம் வரைவதை நிறுத்திக் கொண்டது.

- வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம் -

# ஓவியர் ரமணி

ஓவியம் மற்றும் சிற்பத் துறையில் ஏராளமான படைப்புக்களை உருவாக்கி தனக்கென தனித்துவமான கலைப் பாணியை உருவாக்கிய ஓவியர்களுள் ரமணி என அழைக்கப்படும் சிவசுப்பிர மணியமும் முக்கியமான ஒருவர். அள வெட்டிக் கிராமத்தில் பிறந்து அருணோதயக் கல்லூரியில் கல்வி கற்று, ஓர் நாடறிந்த ஓவியராக புகழ்பெற்ற இவரது கைவண் ணங்கள் எமது ஈழதேசத்தின் பல பாகங்களிலும் பரவிக் கிடக்கிறது.

எமது தாயகத்தில் வெளிவந்த அநேக மான காத்திரமான புத்தகங்களின் அட்டைப் படங்களை அழகாக வரைந்து அவற்றை மேலும் மெருகூட்டிய பெருமைக் குரியவர். அதுமட்டுமன்றி சிறந்ததோர் சிற்பியாக கலைத்துவம் மிக்க பல முக்கியமான சிற் பங்களைப் படைத்த சிறப்பும் இவரைச் சாரும். பாடசாலைகளின் தாபகர்களின் சிலைகள்ட, தெல்லிப்பழை துர்க்காதேவி தேவஸ்தானத்தில் அமைந்துள்ள சிவத் தமிழ்ச் செல்வி தங்கம்மா அப்பாக்குட்டியின் உருவச்சிலை என்பன இவரது கைவண் ணத்திற்கு அண்மைய சான்றுகளாக பலராலும் விதந்துரைக்கப்படுகின்றது.

ஓவியத்துறையில் நீர் வர்ணம் முதற் கொண்டு பல்லூடக ஆக்கங்கள் வரை பல்வேறு ஊடகங்களிலும் பல மரபுகளிலும் ஓவியங்களைப் படைத்துள்ளார். ஈழத்தின் நவீன ஓவிய மரபை உருவாக்கிய பலருள் இவரும் குறிப்பிடத்தக்க ஒரு மனிதராகத் திகழ்கின்றார்.

யாழ்ப்பாணப் பல்கலைகழகத்தின் சித்திரமும் வடிவமைப்பும் துறையின் வருகை விரிவுரையாளராகத் தற்போது கடமையாற்றும் ரமணி ஓர் ஓய்வுபெற்ற சித்திரபாட உதவிக் கல்விப்பணிப்பாளர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். தற் பொழுது அளவெட்டியில் இடம்பெற்ற இடப்பெயர்வைத் தொடர்ந்து காலநியதி கருதி கல்வியங்காட்டில் வசித்துவந்தாலும் எமது கிராமத்துடன் தனது நெருங்கிய தொடர்பைப் பேணி வருகின்றார்.

இலங்கை அரசாங்கத்தினதும் பல்வேறு கலையமைப்புக்களினதும் பாராட்டுக் களையும் விருதுகளையும் பரிசில்களையும் பெற்றுக்கொண்ட ரமணி அவற்றினால் எந்தப்பெருமையும் கொள்ளாது பழகு வதற்கு இனிய மனிதராக இருப்பதும் பாராட்டத்தக்கது. அண்மையில் வடக்கு மாகாண ஆளுநர் விருதும், இலங்கை அரசாங்கத்தின் கலாபூஷண விருதும் பெற்றுக்கொண்டமை குறிப்பிடத்தக்கதாகும்.



**ஆளுநர் விருது பெற்றமைக்காக அளவெட்டி மகாஜன சபை கலைஞர் வட்டம் வழங்கிய கௌரவிப்பின்போது தனது ஆசிரியர் பரநிருபசிங்கம் அவர்களுடன் ரமணி**

# ஓவியர் சுபாஷ் சந்திரபோஸ்

ஓவியத்துறையில் உலகப் பிரசித்தி பெற்ற ஓவியராக இன்று விளங்குபவர் சுபாஷ் சந்திரபோஸ். இவர் அளவெட்டியைப் பிறப்பிடமாகக் கொண்டவர். ஆனால் இன்று புலம்பெயர்ந்து சுவிஸ்லாந்தில் வாழ்ந்து வருகிறார். இவர் அளவெட்டி அருணோதயாக் கல்லூரியிற் கல்வி கற்றார். இவர் தாமாகவே ஓவியக்கலையில் மிகுந்த ஈடுபாடு உள்ளவராக இருந்தார். கல்லூரியில் தாம் படிந்த வகுப்புக்களில் ஓவியத்தையும் ஒரு பாடமாகக் கற்று வந்தாரே ஒழிய அதற்கு மேல் நல்ல பயிற்சி பெற அவருக்கு வாய்ப்புக் கிட்டவில்லை.

இவர் கனிஷ்ர பொதுத்தராதரப்பத்திரப் பரீட்சைக்கு ஓவியத்தையும் ஒரு பாடமாக எடுத்தார். அப்பரீட்சையில் ஓவியத்தில் அவர் பெற்ற திறமைச் சித்தி அத்துறையில் ஆர்வத்தைப் பெருக்க மேலும் அவருக்கு இடங் கொடுத்தது. எனினும் கொழும்பு தொழில்நுட்பக் கல்லூரியில் விசேட பயிற்சி பெற அவரது குடும்பம் அவருக்கு வழிவிடவில்லை. குடும்பத்திற்கு உழைத்துக் கொடுக்க வேண்டிய நிலையிலேயே அவர் அன்றிருந்தார். கொழும்பில் ஒரு அச்சுக்கூடத்தில் வேலை செய்யும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. இக்காலப்பகுதியில் தொழில் மூலம் உழைப்பைத் தேடிக்கொண்டதோடு ஓவியக் கலையின் சிலதுறைகளிலும் பயிற்சி பெறமுடிந்தது. காட்டூன் சித்திரங்களை வரைதல்விளம்பரப்படங்களை வரைந்து கொடுத்தல் என்பவற்றில் அவர் ஈடுபட்டு வந்தார்.

புலம் பெயர்ந்து வெளிநாடு செல்ல வேண்டிய ஆர்வமுங் காட்டாயமும் அவருக்கு ஏற்பட்டது. எங்கு சென்றாலும் ஓவியத்தூரிகையை பிடிக்க அவர் தவறவேயில்லை. தொழில் சார் துறையாக அவர் மேற்கொண்ட ஓவியத்துறை அவரைக் கைதூக்கிவிட முன் வந்தது. அவரது ஓவியங்கள் பலரதும் பாராட்டைப் பெற ஆரம்பித்தன. ஆரம்பத்தில் மரபு தழுவிய ஓவியங்களை வரைந்த அவர் அவற்றில் நவீன ஓவிய யுத்திகளைப் பொருத்தி முன்னேறினார். பல வகையான உணர்வுகளையும்மிக நுட்பமாக வெளிப்படுத்தும் ஆற்றல் இவர் பெற்றுள்ளார். அவரின் ஓவியங்கள் இன்று தமிழீழத்தில் தோன்றியுள்ள யுத்த சூழலையும் அதனால் மிகமிக அவலத்துக்குள்ளாகி வரும் மக்களின் வாழ்வையும் தத்ரூபமாக சித்திரிப்பனவாகவுள்ளன.

பல வகையான உணர்வுகளையும் மிக நுட்பமாக வெளிப்படுத்தும் ஆற்றல் இவர் பெற்றுள்ளார். அவரின் ஓவியங்கள் இன்று தமிழீழத்தில் தோன்றியுள்ள யுத்த சூழலையும் அதனால் மிகமிக அவலத்துக்குள்ளாகி வரும் மக்களின் வாழ்வையும் தத்ரூபமாக சித்திரிப்பனவாகவுள்ளன.

ஐரோப்பிய நாடுகளிலும் வடஅமெரிக்காவிலும் அண்மையில் வெளியான லேசர் இசைத்தட்டுக்களில் இவரது ஓவியங்கள் இடம்பெறுமளவுக்கு இவரின் ஓவியக்கலை வளர்ச்சியடைந்துள்ளது. சுவிஸ்லாந்தில் பாசல் நகரில் நடைபெற்ற நாற்பத்து மூன்று நாடுகளைச் சேர்ந்த ஓவியர்களின் கண்காட்சியில் இவரது ஓவியங்களும் இடம் பெற்றிருந்தன. அதுமட்டுமல்லாமல் சுவிஸ்நாட்டு மாநிலங்கள் பலவற்றிலும் இவரது ஓவியக்கண்காட்சிகளும் நடைபெற்றுள்ளன. இவர் புகழ் மேலும் பரவும் என்பதில் ஐயமில்லை.

* * *

# சித்திரக் கலைஞர் வே. சுந்தரமூர்த்தி

இவர் சண்டிலிப்பாய் என்னும் கிராமத்தைச் சேர்ந்த மண்டுமண்டை என்னுஞ் சிற்றூரிற் பிறந்தவர். அளவெட்டிக் கிராமத்தோடேயே இவருடைய சிற்றூர் நெருங்கிய தொடர்புடையது. அளவெட்டியிலுள்ள சீனன்கலட்டி ஞானோதயா வித்தியசாலையிலேயே இவர் கல்வி பயின்றார். இவருடைய உறவினர் பலர் அளவெட்டிக் கிராமத்தவர்களே. இவர் மணம் முடித்து இல்லற வாழ்வை மேற்கொண்டதும் அளவெட்டியிலேயே.

இவர் கல்வி கற்கும் போதே சித்திரப் பாடத்தில் அதிகம் ஆர்வமுடையவர். இவர் சித்திர ஆசிரியப் பயிற்சி பெற்று மகாஜனக் கல்லூரியிற் சித்திர ஆசிரியராகப் பணி புரிந்தவர். சித்திர பாடத்திற் கற்றுத் தேறியவராயினும் அவர் கல்லாமல் இயல்பாயமைந்த கலை நாடகம். பாடசாலையில் நாடகம் பழக்க முற்படும் ஆசிரியர்கள் அந்நாடகத்தில் நடிக்க இவரையும் ஒருவராகச் சேர்த்துக் கொள்வது வழக்கம். வேலைக்காரனாகவோ கிழவியாகவோ உடல் ஊனமுற்றவராகவோ இவர் நடிக்கும் போது இவருடைய நடிப்பு எவரையும் கவரக் கூடியதாக இருக்கும்.

மகாஜனக் கல்லூரியை சித்திரக் கலையில் முன்னேற்றமடையச் செய்த ஆசிரியர்களில் இவரும் ஒருவர். இவர் 1921ம் ஆண்டு பிறந்தவர். புலம் பெயர்வு காரணமாக கொழும்பு சென்றிருந்த வேளை அங்கேயே இறப்பைத் தழுவிக் கொண்டார். இவர் சித்திரம் நாடகம் என்பவற்றைப் பிறர் தூண்டுதலோ வழிகாட்டுதலோ இன்றி தாமாகவே பயின்று முன்னுக்கு வந்தவர் என்பது முக்கியமானது.

இசையரங்கும் நாடகமும் என்னும் நுண்கலைப்பாடம் இவர் காலத்திற் பல்கலைக் கழகங்களில் கற்பிக்கப்படுவதில்லை. அப்படிக் கற்க வசதியிருந்தால் இவர் பெருங் கலைஞராக உருவாகியிருப்பார். அளவெட்டி மகாஜன சபை மண்டபத்தில் அரங்கேறிய "யானையரசன்" நாடகத்தில் நடித்து இவர் புகழ் பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது.

**சிவப்பிரகாசத்தின் கைவண்ணத்தில் இன்றும் வாழும் ஈழத்தின் முன்னோடிகள்**

- சேர்.பொன். இராமநாதன்
- பாவலர் தெ. அ.துரையப்பாபிள்ளை
- கலாயோகி ஆனந்தகுமாரசுவாமி
- மன்னன் சங்கிலியன்
- வண.பிதா லோங் அடிகளார்
- தெ.து.ஜயரத்தினம்
- குமாரசாமிப்புலவர்
- மேஜர் அல்பிரட் துரையப்பா
- கூட்டுறவுத்தந்தை வீரசிங்கம்
- மறத்தமிழன் பண்டாரவன்னியன்
- வள்ளல் மழுவராயர்
- காசிவாசி செந்திநாதையர்
- திருச்செல்வம்
- இராசமாணிக்கம்
- தவில்மேதை தட்சிணாமூர்த்தி
- தவமணி யோகர்சுவாமி
- தியாகி சிவகுமாரன்
- மணிஜயர் இவற்றுடன்
- அறுபத்து மூன்று நாயன்மார்கள் சிலை
- பாடசாலை வளாகங்களில் சரஸ்வதி சிலை
- பகவத் கீதை சிலை
- மனுநீதிகண்ட சோழன் சிலை
- சுவாமி விவேகானந்தர் சிலை
- இளநங்கை சிலை
- பஞ்சமுக விநாயகர் சிலை
- தசஅவதாரம்
- பார்த்தசாரதி
- வல்லிபுர ஆழ்வார் சிலை

என ஈழ தேசத்தின் பல பாகங்களிலும் கலைஞரின் கைவண்ணம் பரவிக் கிடக்கின்றது.

# கரகதிலகம் ஐயாத்துரை

கரகம்பயின்று அதிற் பல வித்தைகளைக் காட்டி மக்களின் உள்ளங்க ளைக் கவர்ந்து மக்கள் கொடுக்கும் பணத்தைப் பெறுபவர்களாகவே கர கத்தில் ஈடுபடுவோர் அன்றிருந்தனர். இக் கலையில் தேர்ச்சி பெற்றோரைக் கௌரவிக் கும் முறையில் அரசாங்கம் அவ்வவ்போது பட்டங்கள், பதக்கங்கள், பணம் என்பன கொடுப்பதுமுண்டு. எனினும் இக்கலையில் சிறந்த தேர்ச்சி பெற்றோர் இதனால் தமது வாழ்வை வளமுள்ளதாக்கிக் கொண்டனர் என்று கூறுவதற்கில்லை. பழைய சங்க காலத்தில் பாணர், துடிலர் எவ்வாறு கலைத் திறமை பெற்றிருந்தாலும் பிரபுக்களை அடைந்து அவர்களைப் பாடிப் பரிசில் பெற்று வாழ்ந்தது போலவே இவர்களின் வாழ்வும் அமைந்திருந்தது. இந்த வகையில் கரகதிலகம் அவர்களை இத்தகையோருடன் ஒப்பிடமுடி யாது. அவர் கரகத்தால் மாத்திரம் வாழ்ந்த வரல்லர். விவசாயம், மாந்திரீகம் முதலிய பல தொழில் வல்லுனராக இருந்ததால் அவரு டைய வாழ்க்கை மேம்பாடுடையதாக இருந் தது. கரகத்தை மட்டும் நம்பியிருந்தால் அவர் வாழ்வு சூனியந்தான்.

அவருடைய ஆட்டம்பற்பல நுட்பங்களுடைய தாக இருக்கும். அம்மாளுக்குரியதாகப் பேசப்படும் கரகத்தில் இவர் ஈடிணையற்ற ஒரு வீரதீரர் என்றே சொல்ல வேண்டும். கம்பத்தின் மேல் நின்று கரகம் தளம்பாது ஆடுவார். இவர் பென்னம் பெரிய கத்திகளை சமாந்தரமாக வைத்து நால்வர் அவற்றை இருமருங் கிலும் வைத்துப் பிடித்துக் கொள்ள அக்கத்தி களின் மேல் ஏறி நின்று பளபளக்கும் அக் கத்திகள் தமது காலில் ஊனம் விளைவிக்காமல் காலை மாறிமாறி எடுத்து வைத்து ஆடுவார். உரலின் மீது ஏறி அவ்வுரலை உருட்டியுருட்டிக் கரகத்தைத் தலையில் வைத்துக் கொண்டு அவர் ஆடும் ஆட்டம் பார்த்தோர் எவரையும் அதிசயிக்க வைப்பதா கும். இவர் கரகதிலகம் என்ற பட்டத்தை முறை யாகவே பெற்றவர். பல ரது பாராட்டுப் பத்திரமும் பெற்றவர்.

இவர் மண்ணில் அதன் கூர்ப்பகுதி மட் டும் புலப்படும் படி புதைக் கப்பட்ட ஊசியைக் கர கத்தைதலையில்வைத்த படி முதுகுப்பக்கமாக வளைந்து அந்த ஊசியை தமது கண்ணினால் எடுத்துக் காட்டுவார். இவர் இப்படியான சாகச விளையாட்டுக்களின் மத்தியில் மந்திர வித்தையென்று காட்டுவனவுஞ் சிலவுள்ளன. ஒரு முறை தீவுப்பகுதியில் தமது கரக சாகசங் களைச் செய்து கொண்டு நிற்கும்போது கரகம் தலையிலிருந்து தவறி நிலத்தில் விழுந்து விட்டது. அப்போது கரகதிலகம் ஐயாத்துரை கரகத்தை தூக்கிக் கையிற் பிடித்தபடி பின்வரு மாறு "ஏ கரகதிலகம் சாகசவீரனே சனத்தின் மத்தியில் ஒளிந்திருந்து கொண்டு என்னை அவமானப்படுத்த முனைந்து விட்டாய் இப் போது செய்த கெட்டித்தனத்தை இன்னுமொரு முறை செய்ய முடியுமா என உன்னைக் கேட்கிறேன். செய்வாயானால் நான் உன் அடிமை உன்னால் இதை இன்னொரு தரம் செய்ய முடியாது. இது எனது சவால்" என்று கூறிக் கொண்டு கரகத்தைத் தலையில் தூக்கி வைத்து ஆடினார். கரகம் விழவில்லை. எல்

ஏ கரகதிலகம் சாகசவீரனே சனத்தின் மத்தியில் ஒளிந்திருந்து கொண்டு என்னை அவமானப்படுத்த முனைந்து விட்டாய் இப் போது செய்த கெட்டித்தனத்தை இன்னுமொரு முறை செய்ய முடியுமா என உன்னைக் கேட்கிறேன். செய்வாயானால் நான் உன் அடிமை உன்னால் இதை இன்னொரு தரம் செய்ய முடியாது. இது எனது சவால்.

லோரும் கைதட்டி ஆரவாரித்தார்கள். ஐயாத்துரை ஆட்டம் முடிந்த பிறகு தன்னை மந்திரத்தால் அவமானப்படுத்தியவரை மேலும் வாதுக்கு அழைத்து மேடைக்கு வரும்படி சவால் விட்டார் எவரும் வரவில்லை. கரகதிலகம் பெருமையேற்காமையால் இதிலிருந்து கரக ஆட்டம் மந்திர சக்தியால் நிகழ்வதாக ஐயாத்துரை சாதித்து விட்டாரென்பது பலராலும் நம்பப்பட்டது. ஐயாத்துரை என்னும் இக்கரகக்காரருடைய சந்ததியில் வந்த கந்தையா விநாயகலிங்கம் என்பவரும் இவருக்குப் பின் தமது கரகக் கலையைப் பரப்பி வந்த பெருமைக்குரியவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

கரகதிலகம் ஐயாத்துரை அவர்களது கடைசி வாரிசாக சொல்லக்கூடியவர் அவரின் மருமகனாகிய சிவராசா என்பவரேயாவர். இவர் கரகத்தோடு காவடியாட்டத்திலும் திறமை வாய்ந்தவர். அளவெட்டி தமிழ் வளர்ச்சிக் கழகம் கொழும்பில் அளவெட்டியைப் பிறப்பிடமாகக் கொண்ட கொழும்பு வாழ் தமிழர்களின் ஒன்று கூடல் நிகழ்ச்சி ஒன்றினைக் கொழும்பு பம்பலப்பிட்டி சரஸ்வதி மண்டபத்தில் ஒழுங்கு செய்திருந்தது. அன்றைய நிகழ்ச்சி நிரலில் இறுதி நிகழ்ச்சியாகக் குறிப்பிடப்பட்டிருந்தது அளவெட்டி தம்பியையா சிவராசாவின் காவடியாட்டம். இக்காவடியாட்ட நிகழ்ச்சியில் பற்பல சாகச நிகழ்ச்சிகள் அவரால் நடாத்திக் காட்டப்பட்டன. மேடையில் விரிக்கப்பட்டிருந்த சீலை ஒன்றைத் தலையில் காவடி வைத்தபடி அது தாளம் பிசகாது நர்த்தனமாடியபடி இருக்கக் குனிந்து சீலையை உடுத்தியபடி சட்டையையும் போட்டுக் கொண்டு காவடியாட்டத்தைத் தொடர்ந்தார். இன்னும் பற்பல திடுங்கிடுஞ் சம்பவங்களை அவர் அங்கு நிகழ்த்திக் காட்டினார்.

♣ ♣ ♣

## கணபதிப்பிள்ளை முத்தையா

அளவெட்டிக் கிராமத்தின் பிரதான பொருளாதார தாங்குசக்தியாகத் திகழ்வது விவசாயமாகும். பல பெயர்பெற்ற விவசாயப் பெருமக்கள் வாழ்ந்த மண்ணான அளவெட்டியில் திரு. முத்தையா அவர்களுக்கு முக்கிய இடமுண்டு. முத்தையாப்பா என எல்லோராலும் அன்பாக அழைக்கப்படும் இவர் அக்காலத்தில் கல்வியறிவு பெற்ற ஒருவராக இருந்து கொழும்பு மண்ணில் காசாளர் உத்தியோகம் பெற்றபோதும் அதனை விடுத்து சொந்த மண் மீண்டு விவசாயத் துறையில் முன்னோடியாகத் திகழ்ந்தார். பெருமளவான பரப்புக் கணக்கில் பண்ணையாரென வியக்கத்தக்க வகையில் விவசாயம் மேற்கொண்ட முத்தையா அவர்கள் ஏனைய விவசாயிகளுக்கு வழிகாட்டியாகவும், ஆலோசகராகவும் திகழ்ந்தார். மும்மொழிகளையும் சரளமாக உரையாடக்கூடிய இவர் தனது 93ஆவது வயதில் காலமானார். 1993ஆம் ஆண்டு இடப்பெயர்வின்போது தாம் கட்டிக்காத்த விவசாயத்தை விட்டு விலகேன் எனும் பிடிவாதத்துடன் தன் தோட்டத்து வீட்டிலேயே தங்கியிருந்தார். அவ்வேளை போரில் வீழ்த்தப்பட்ட புக்காரா விமானம் இவரது விவசாய நிலத்திலேயே வீழ்ந்தமையும் குறிப்பிடத்தக்கது. இவரது மகன்களான சேனாதிராஜா, சின்னராஜா ஆகியோரும் விவசாயத்துறையில் பெயர் பெற்ற முன்னோடி விவசாயிகளாகத் திகழ்ந்தவேளையில் இளைய மகன் சின்னராஜா காலநியதியினால் தன் வாழ்வை முடித்துக்கொண்டார். மூத்தமகன் சேனாதிராஜா மாட்டுவண்டில் சவாரி, கோழிச் சண்டை போன்ற பாரம்பரிய விளையாட்டுக்களிலும் விற்பன்னராகத் திகழ்வதுடன் இன்றும் அளவெட்டியின் பெயர் சொல்லும் ஓர் விவசாயியாகத் திகழ்கின்றாரெனின் மறுப்பதற்கு எவருமில்லை.

# செல்லப்பா மயில்வாகனம்



அளவெட்டிக் கிராமத்தில் தொண்டர்கள் பலர் தோன்றி மக்கட் பணிகளில் ஈடுபட்டு வந்தனரென்பதற்கு இங்குள்ள தொண்டு நிறுவனங்களே சான்றாவன. சனசமூகநிலையங்களென்றும் கிராம அபிவிருத்திச் சங்கம் என்றும் பாடசாலைகள் என்றும் அரசினர் வைத்தியசாலை என்றும் தபாற் கந்தோர் என்றும்பல இயங்கி வந்தாலும்மக்கள்முயற்சியால் அளவெட்டி முழுவதற்கும் பொதுவாக இயங்கிய அளவெட்டி மகாசன சபை, அளவெட்டி சைவ வாலிபசங்கம் என்னும் இரண்டினையுமே இங்கு முக்கியமாகக் கொள்கிறோம். இவ்விரண்டிலும் ஆண்டு பலவாகத் தலைவராக இருந்து பணிபுரிந்தவர். செ. மயில்வாகனம் அவர்கள். இவர் செல்லப்பாச் சட்டம்பியார் எனப்படும் திண்ணைப் பள்ளிக் கூட ஆசிரியரின் மகனாவார். இவர் அளவெட்டியிற் பிறந்து தந்தையாரின் திண்ணைப் பள்ளிக் கல்வியை முடித்துக் கொண்டு யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியிற் கல்வி பயின்றவரென அறிய முடிகிறது. கல்வியை முடித்த பின் இராமநாதன் கல்லூரியிலும் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியிலும் ஆசிரியராகக் கடமையாற்றினார்.

இவர் மணம் முடித்து ஒரு மகனுக்குத் தந்தையானார். அந்த மகனே யாழ்ப்பாண அரசாங்க அதிபராக இருந்து அனைவராலும் பாராட்டப்பெற்ற சிறீகாந்தா ஆவர். இவர் இளமைக் காலத்தின் பின் அளவெட்டியோடு நெருங்கிய தொடர்பற்றவராக விருந்தார். 1947ம் ஆண்டளவில் இவர் அளவெட்டிக்கு வந்து ஒரு ஆச்சிரமம் அமைத்து வாழத் தொடங்கினார். அதன் பின்னர் அவர் பொதுத் தொண்டுகளில் ஈடுபட்டு அரும்பணியாற்றினார். முதலில் பல்லாண்டுகளாகக் கவனிக்கப்படாதிருந்த காலத்தில் மகாசன சபை சபையின் தலைவரானார். இவர் தலைவராக விருந்த காலத்தில்மகாசனசபைபெருந்தொண்டாற்றியதென்பது யாவருமறிந்ததே. கட்டத் தொடங்கி குறையில் இருந்த மகாசன சபை மண்டபத்தை அரசினர் உதவி பெற்று முழுமையுறச்செய்தவரும்இவரே. இவருடைய முயற்சியின் பேறாக ஒரு நெசவு சாலை உருவாக்கப்பட்டது. இந் நெசவு சாலையில் பெண்பிள்ளைகள் பலர் நெசவுத் தொழிலில் ஈடுபட்டனர். அப்பிள்ளைகளுள் சிலர் பின்னாளில் நெசவாசிரியர்களாக இருந்து அரசினர் வேதனம் பெற்று இன்று ஓய்வூதியமும் பெறுகின்றனர் என்பது மயில்வாகனம் அவர்களது தொண்டுக்கு சான்று பகர்வதாகும். அளவெட்டி மகாசன சபைக் காணியில் ஒரு நெசவு நிலையத்தை அமைத்த பெருமையும் அவருக்குரியதே நெசவுசாலை மட்டுமன்றி அளவெட்டியில் பல பொதுப் பணிகளையும் அவர் நிறைவேற்றியுள்ளார். அளவெட்டி மகாசன சபைத் தலைவராக இருந்து பல பணிகளை நிறைவேற்றியது போலவே அளவெட்டி கும்பிழாவளை பிள்ளையார் ஆலய தர்மகர்த்தாக்கள் சபைத் தலைவராக இருந்தும் பல பணிகளை மேற்கொண்டார். அவர் தலைவராக இருந்த காலத்திலேயே ஆலயத்திருப்பணிகள் பல நிறைவேறின. கும்பிழாவளை ஆலயக் கிழக்கு வாயிற்

**இவர் எந்தப் பொறுப்பை ஏற்றாலும் எந்த நிதியை எடுத்தாலும் அவரது கை கறைபடியாததாக இருந்ததே அவரில் பொதுத் தாபனங்களும் மக்களும் நம்பிக்கை கொள்ளக் காரண மாமைந்ததென்பது மறுக்கமுடியாத பெருமையாகும்.**

கோபுரமும் ஆலயமுகப்பு மண்டபமும் அவர் காலத்திலேயே கட்டி முடிக்கப்பட்டன. தேர்முட்டி, தேர்விடும் மண்டபம், தண்ணீர்த்தாங்கி, தீர்த்தக்கேணி ஆரம்பம் இவைகளும் அவர் காலத்திலேயே நடைபெற்றன. மற்றைய தலைவர்களைப் போலல்லாமல் தனது நேரத்தின் பெரும் பகுதியை இந்தத் தாபனங் களின் வளர்ச்சிக்காகவே செலவிட்டாரென்பது குறிப்பிடத்தக்கது.

பொதுப் பணிகள் மட்டுமல்லாமல் தனிப்பட்டவர்களின் குறைமுடிக்க உதவவும் அவர் பின்னின்றாரல்லர். நோயுற்ற ஒருவர் தம்மை வைத்தியரிடம் கூட்டிச் செல்ல உதவிகேட்டாலும் அவர் உதவி செய்பவர். அவருடைய மகன் அரசாங்க அதிபராக இருந்ததாலும் அவர் முன்னாளில் பிரபல கல்லாரியில் ஆசிரியப்பணி பூண்டதாலும் அவரைத் தெரியாத அரசாங்க அதிகாரிகள் இல்லையென்றே கூறலாம் தமது பிள்ளைக்கு ஏதாவது உத்தியோகம் எடுத்துக் கொடுக்கும்படி யாருங்கேட்டாலும் தம்மாலாகிய உதவி புரிய அவர் பின்னின்றதில்லை. இன மதபேதமின்றி எல்லார்க்கும் உதவுவது அவர் இயல்பு. அரசாங்க சட்டசபை உறுப்பினராயும் பாராளு மன்ற உறுப்பினராயும் இருந்த சு. நடேச பிள்ளை அவர்களோடு நெருங்கிய நட்புப் பூண்ட இவர் மூலம் எத்தனையோ கிராமமக் கள் நடேசபிள்ளையை அணுகி தமது தேவையைப்பூர்த்தி செய்ததும் உண்டு இராமநாதன் அறக்கட்டளை நிதியத்துக்கு சட்டபூர்வமான பொறுப்பாளியாகவும் இவர் இருந்தார் என்பதும் குறிப்பிடத்தக்கது. இவர் எந்தப் பொறுப்பை ஏற்றாலும் எந்த நிதியை எடுத்தாலும் அவரது கை கறைபடியாததாக இருந்ததே அவரில் பொதுத் தாபனங்களும் மக்களும் நம்பிக்கை கொள்ளக் காரண மாமைந்ததென்பது மறுக்கமுடியாத பெருமை யாகும். அருணோதயாக் கல்லூரியை அரசினர் பொறுப்பேற்ற போது முகாமை யாளராக இருந்தவரும் இவரே.

அளவெட்டியிலிருந்த ஒரு அரசாங்க உத்தயோகத்தர் சட்டபூர்வப் திருமணப் பதிவில்லாமலே திருமணம் செய்து கொண்டார். பிள்ளைகள் இருந்தபோதும் அவர் தம் திருமணப் பதிவை மேற்கொள்ளாமல் இருந்தது துரதிஷ்டவசமானது. இவர் அக்கால விதானையாராக இருந்தும் இவ்வாறு நடந்து கொண்டது கண்டிக்கதக்கதே. திடீரென இறந்து விட்டார். அவரது குடும்ப நிலையை உணர்ந்தார் மயில்வாகனம். அக்குடும்பத்துக் குதவ பெரிதும் முயன்றார். அவர் முயற்சியின் பேறாக விதானையாரின் மனைவிக்கு விதவை ஓய்வூதியம் கிடைப்பதாயிற்று. இவ்விதவை இன்றும் ஓய்வூதியம் பெறுகிறா ரென்பது குறிப்பிடத்தக்கது. இவரின் தொண்டு இவ்வாறு நயப்புக்குரியது.

● ● ●

# மக்கள் தொண்டன் வ. பொன்னம்பலம்

இவர் அளவெட்டியிலுள்ள பாடசாலைகளில் கற்று மேற்ப்படிப்பை ஸ்கந்தவரோதயாக் கல்லூரியில் முடித்தவர். இங்கும் உயர்கல்வியை முடித்தபின் பட்டப்படிப்பிற்காக இந்தியா சென்றார். முதுகலைமாணி படிப்பை முடித்துக் கொண்டு திரும்பினார். இவர் அக்காலத்தில் பிரபலம் வாய்ந்திருந்த பொதுவுடமைக் கொள்ளையின்பால் ஈர்க்கப்பட்டார். ஆரம்பத்தில் தந்தை செல்வாவின் தலைமையில் ஆரம்பமான தமிழரசுக் கட்சியில் இணைந்திருந்த போதும் பின்னர் 'கொம்மியூனிஸ்ட்' என்னும் பொதுவுடமைக் கட்சியில் இணைந்து கொண்டு இக்கட்சியின் வளர்ச்சிக்காகப் பாடுபட்டார்.

பொன்னம்பலம் சிறந்த பேச்சாளர் என்பதிலும் பொதுநலத் தொண்டர் என்பதிலும் எவருக்கும் மாறுபட்ட கருத்திருக்கமுடியாது. இவர் தமது கவர்ச்சிகரமான மேடைப் பேச்சின் மூலம் பலரைத் தன்பால் ஈர்த்தார். பொதுவுடமை தத்துவம் எடுபடாத மக்களைக் கூட அவருடைய பேச்சாற்றல் கவர்ந்திழுத்தது. சிறுபான்மைத் தமிழர் பெரும்பாலோர் அவரது கட்சிக்கு ஆதரவு வழங்க முன்வந்தனர். இப்படி ஆதரவு பெற்றும் நாடாளுமன்றத் தேர்தலில் பல முறை போட்டியிட்டும் ஒரு முறையாவது வெல்லமுடியாது போயிற்று. அவர் தமிழரசுக் கட்சியில் இணைந்திருந்தால் அவர் பாராளுமன்றத்துக்கு தெரிவாகியிருப்பார் என்பதில் ஐயமேயில்லை.

இவர் பொதுப் பணிகளில் ஈடுபட்டு மக்களுக்கு நல்ல சேவையாற்றியவர் என்பதை எவரும் மறுக்கமாட்டார். அளவெட்டி மத்திய ஐக்கிய பண்டகசாலை பலநோக்குக் கூட்டுறவுச் சங்கமாக மாற்றப்பட்ட பின் அச்சங்க நிர்வாகிகள் கூட்டுறவுச் சங்க விதிகளுக்கு மாறாக நடந்து கொண்டதால் கூட்டுறவு ஆணையாளர் அத்தவறினைச் சுட்டிக்காட்டிய போது அந்நிர்வாகத்திலிருந்த அத்தனை பேரும் பதவியைத் துறந்தனர். அதன் மேல் நடைபெற்ற பொதுச் சபைக்கூட்டத்தில் பொன்னம்பலம் தலைவராக தேர்ந்தெடுக்கக்கப்பட்டார். இவருடைய இயக்குனர் சபை சங்க வெள்ளி விழாவைச் சிறப்புற நடத்தியதோடு சங்கத்தையும் ஊழல் இன்றி நிருவகித்தது. அதனால் கூட்டுறவாளர்களின் பாராட்டும் பொன்னம்பலம் அவர்களுக்கு கிடைத்தது.

1978இல் அளவெட்டி மகாஜனசபை மண்டபத்தில் நடைபெற்ற பாரதி விழாவில் ஒரே மேடையில் நானும் என் கணவரும் வீ.பி. அண்ணா அவர்களும் பேசினோம். அன்றுதான் முதற்தடவையாக வீ.பி. அண்ணா அவர்களின் பேச்சினை நான் முற்றாகக் கேட்கமுடிந்தது. தனியொருவருக்குணவில்லையெனில் ஜெகத்தினை அழித்திடுவோம், வயிற்றுக்கு சோறிடல் வேண்டும் இங்கு வாழும் மனிதருக்கெல்லாம் என பாரதி பாடல்கள் பலவற்றை அடுக்கடுக்காக எடுத்துக்கூறி ஆக்ரோஷமான உரையொன்றை நிகழ்த்தி பட்டினியில்லாத மனித சமூகம் ஏற்பட உழைப்பதே உனது முதற்பணி என வலியுறுத்தினார். - திருமதி மங்கையற்கரசி அமிர்தலிங்கம்.

கூட்டுறவுத் திணைக்களம் சிந்திப்பதற்கு முன்னமே அளவெட்டி ப.நோ.கூ. சங்கம் அளவெட்டியில் நட்டத்தில் இயங்கியவையும் இயங்காதவையுமான சங்கங்களைத் தமது நிர்வாகத்தின் கீழ்க் கொண்டு வந்தது 1971ம் ஆண்டில் அரசாங்கம் பலநோக் கூட்டுறவுச் சங்கங்களில் பல பண்டசாலைகளை இணைக்கும் சட்டத்தைக் கொண்டு வந்தது. வலிவடக்கில் தெல்லிப்பளைக் கூட்டுறவுச்சங்கத்தில் ஐம்பதுக்கும் மேற்பட்ட பண்டசாலைச் சங்கங்கள் இணைக்கப்பட்டன. சுன்னாகம் பலநோக்கு கூட்டுறவுச்சங்கமும் அவ்வண்ணமேயாயிற்று. பொன்னம்பலம் அவர்களுக்கு அப்போது அரசியலிற் செல்வாக்கு இருந்ததால் அளவெட்டி மல்லாகம் பலநோக்குக் கூட்டுறவுச்

சங்கம் என ஒரு சங்கம் உருவாக்கப்பட்டது. பொன்னம்பலம் கூட்டுறவிலிணைந்து செயற் படாவிட்டால் அளவெட்டி மல்லாகம் கூட்டுறவுச் சங்கம் உருவாக்கப்படாமல் அங்குள்ள பண்ட சாலைகள் தெல்லிப்பழை அல்லது சுன்னாகம் சங்கத்துடன் இணைக்கப்பட்டிருக்குமென்பது உண்மையாகும். ஆரம்பத்தில் பொன்னம் பலம் அவர்களே அளவெட்டி மல்லாகம் பலநோக்கு கூட்டுறவுச் சங்கத் தலைவருமா னார். அரசாங்கத்தில் சுதந்திரக் கட்சியின் செல்வாக்கு மிக்கிருந்ததால் பின்னர் அக் கட்சியைச் சேர்ந்த வ. முருகையா என்பவர் தலைவரானார்.

பொன்னம்பலமவர்கள் அளவெட்டி மல்லாகம் கிராமசபைத் தலைவராகத் தெரிவு செய்யப்பட்டதற்கும் அவர் அளவெட்டி மல்லாகம் கூட்டுறவுச் சங்கத்தலைவராக இருந்து ஆற்றிய சேவையே காரணமாகும். கிராமசபைத் தலைவராக இருந்த காலத்தில் அவராற்றிய சேவைகள் பலவாகும்.

முன்னைய காலத்தில் கீழிச் சந்தை யெனும்பெயருள்ள சந்தை நடந்து வந்த காணி அரசினர்க்குரியதாயிருந்தது. அந்நிலம் ஒன்றுக்கும் பயன்படாமல் இருந்தது. அதனைப் பயன்படுத்தி சமாச மண்டபம் என்றொரு மண்டபத்தை மல்லாகம் கிராமசபைக்குரிய தாகக் கட்டுவித்தார். அதில் கிராமசபையின் வாசிகசாலையொன்று நடைபெறுவதற்கான ஒழுங்குகளையுஞ் செய்தார். அவ்வாசிகசாலை இன்று பல பத்திரிகைகளையும் பல புத்தகங் களையும் கொண்டதாய் பலர் வாசிப்பதற்கும் புத்தகம் பெறுவதற்கும் உரிய இடமாக இயங்குவது அவருக்கு பெருமை சேர்ப்பதாக உள்ளது. அங்கு வாசிகசாலைப் பொறுப்பாளர் ஒருவரும் உதவியாளரும் பணிபுரிகின்றனர்.

அளவெட்டி தெற்கில் வாழ் மக்களுக்கு மறக்கறி வாங்கவும் புலாலுணவு பெறவும் சந்தையில்லாக் குறை நெடுநாளாக நிலவி வந்தது. அக்குறையைப் போக்கியவரும் பொன்னம்பலம் அவர்களே. அளவெட்டி அருணோதயாக் கல்லூரிக்குப் பக்கத்தி லுள்ள மலைவேம்படி என்னுமிடத்தில் தனியார் காணியொன்றைக் குத்தகைக்கு பெற்று ஒரு சந்தையை உருவாக்கினார். அச்சந்தை நல்ல முறையில் நடந்து மக்க ளுடைய பொருள்களை வாங்குமிடமாவும் விற்குமிடமாவும் செயற்பட்டு வந்தது. மல்லாகம் கிராம சபைத் தலைவராக பின்னாளில் வந்த சுவாமி நாதன் பாஸ்கரன் என்பார் அச் சந்தைக்கு எதிர்ப்புறமாகவிருந்த காணியை கிராமசபைக்காக கொள்வனவு செய்து அக் காணியில் சந்தைக்கெனக் கட்டிடமும் அமைத் துக் கொடுத்ததும் இங்கு குறிப்பிடத்தக்கது.

பொன்னம்பலம் அவர்களை பெரும் பான்மை சிங்களவரைக் கொண்ட பொது வுடமைக்கட்சி சமத்துவமாக நடத்த முன்வர வில்லை. அதனால் விரக்தியடைந்த இவர் அக்கட்சி அங்கத்துவ பதவியையும் துறந்தார். பழையபடி தமிழரசுக் கட்சியை நாடினார். தேர் தலில் கட்சியின் வெற்றிக்காகவும் உழைத்தார். கட்சி அத்தேர்தலில் பெரும் வெற்றியீட்ட இவரின் ஒத்துழைப்பும் ஒரு காரணம் என லாம். இந்த ஞானம் இவருக்கு முன்னமே வந்திருந்தால் இவர் பாராளுமன்ற உறுப்பி னராவது நிச்சயத்தில் நிச்சயமே. இக்கிரா மத்துக்குத் தொண்டு செய்த பெருமக்கள் வரி சையில் இவருக்கும் சிறப்பான ஓரிடமுண் டென்பதில் ஐயமில்லை.

**வி.பியின் வாழ்க்கைக் குறிப்புக்கள்**

1930: மார்கழி 18ல் பொன்னம்பலம் பிறந் தார். பிறப்பிடம் யாழ் மாவட்டத்திலுள்ள அளவெட்டிக் கிராமம். பெற்றோர் வல்லிபுரம் பொன்னம்மா தம்பதிகள்.

1935: ஆரம்பக் கல்வி குருநாகலில் உள்ள திருக்குடும்ப கன்னியர் மடப் பாட

சாலை. போதனா மொழி, ஆங்கிலம், சிங்களம்.

1937: தாய்மொழிக் கல்வியின் அவசியம் கருதி பெற்றோர் சிறுவன் பொன்னம் பலத்தை அளவெட்டி அருணோதயக் கல்லூரியில் சேர்த்தனர். வி.பி.யின் ஆரம்பகாலக் கல்வி வழிகாட்டிகள் அருணோதயக் கல்லூரி அதிபர் திரு. சிதம்பரம்பிள்ளை (பொன்னையா), வகுப்பாசிரியர் திரு.தவசிப்பிள்ளை செல்லையா.

1939: ஐந்தாம் வகுப்பு மாணவனான வி.பி.க்கு ஆசிரியர் திரு.தவசிப்பிள்ளை செல்லையா இந்திய சுதந்திரப் போராட்டம் பற்றிய விபரங்களை கற்பித்தலும் அவற்றால் அவர் கவரப்படுதலும்.

1940: இவரது தகப்பனார் நோய் காரணமாக வேலையில் இருந்து ஓய்வு பெறுதலும் குடும்பம் அளவெட்டிக் கிராமத்துக்குத் திரும்புதலும். இதனால் குடும்பத்தில் பொருளாதார நெருக்கடி. இதே ஆண்டில் வி.பி.யின் பத்தாவது பிறந்த தினத் தன்று அவரது இளைய சகோதரர் மாசிலாமணி பிறந்தார். யாழ் மாவட்டக் கல்லூரிகளுக்கு இடையேயான பேச்சுப் போட்டியில் முதலிடம் பெறுதல்.

1943: எட்டாம் வகுப்பில் சித்தி பெற்ற பின் மேல் வகுப்புக்கு ஸ்கந்தவரோதயக் கல்லூரியில் தனக்கும் நண்பர்கள் பதினாறு பேருக்கும் அனுமதி தர அதிபர் திரு.ஒறேற்றர் சுப்பிரமணியத் திடம் கோரிக்கை விடுத்தார். இதுவே ஒறேற்றர் சுப்பிரமணியத்துடன் வி.பி.க்கு முதல் சந்திப்பு. அனைத்து மாணவர் களுக்கும் ஸ்கந்தாவில் அனுமதி கிடைத்தது. வி.பி.க்கு வயதில் மூத்த வரும் அவரின் நண்பனுமான அளவெட்டி யைச் சேர்ந்த திரு. விஜயரெத்தினம் அவர்களின் இடதுசாரிச் சிந்தனை களால் கவரப்படல். ஆசிரியரான திரு.என்.எஸ்.கந்தையா என்ற இடது சாரிக் கருத்துக் கொண்டவரின் தொடர்பும் கிடைத்தல்.

1944: தோழர் பீற்றர் கெனமனை அளவெட்டி மகாஜனசபை மண்டபத்தில் பேசு வதற்கு அழைத்தல்.

1946: வி.பி.யின் சகோதரி செல்வநாயகம் ஞானபூங்கோதை இயற்கை மரணம்.

1947: சென்னை கிறிஸ்தவக் கல்லூரியில் பட்டப்படிப்பை ஆரம்பித்தல். இதற்கு இராமநாதன் கல்லூரி ஆசிரியை செல்வி க.செல்லம்மா, ஸ்கந்தவரோ தயக் கல்லூரி ஆசிரியர் திரு.மாணிக்க வாசகர் ஆகியோரின் உதவியும், ஆலோசனையும் கிடைத்தன. கிறிஸ் தவக் கல்லூரி அதிபர் திரு.சந்திரன் தேவநேசன் அவர்களின் சமூகப் பணிகளாலும் இடதுசாரி வழியிலான செயற்பாடுகளினாலும் கவரப்படுதல். (திரு.சந்திரன் தேவநேசன் அவர்கள் திரு.லெஸ்லி குணவர்த்தனாவின் மைத்துனர்)

1948: கல்லூரி விடுமுறையில் அளவெட்டி திரும்புதல். பொருளாதார நெருக்கடியின் காரணமாக மேற்படிப்பு தொடரமுடியாத நிலை ஏற்படுவதை உணர்ந்த இவரின் பெரியதாயார் செல்லம்மாவும் அவரது கணவர் திரு.இராசேந்திரம் அவர்களும் மேற்படிப்புக்கு தொடர்ந்து பொருளா தார உதவி புரிதல்.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியுடன் தன்னை இணைத்துக் கொள்ளல். கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களான ப.ஜீவானந்தம், எம்.கல்யாண சுந்தரம், பார்வதி கிருஷ்ணன், பி.ராமமூர்த்தி, மற்றும் குன்றக்குடி அடிகளார், அறிஞர் அண்ணா, காமராஜர், ஈ.வி.கே.சம்பத் போன்றோரைச் சந்தித்து அறிமுகம் பெறல்.

1949: சென்னை கிறிஸ்தவக் கல்லூரித் தமிழ்ப் பேரவைத் தலைவராகத் தெரிவு செய்யப்படல். அதே கல்லூரியில் புனித தோமையர் விடுதிக்கு புதிய யாப்பினையும் உருவாக்குதல். சென்னை கிறிஸ்தவக் கல்லூரியில் இராமச்சந்திரன் சுற்றுக் கிண்ணத்தைப் பேச்சுப் போட்டியில் முதலிடம் பெற்றுத் தனதாக்குதல்.

1950: இக்காலப் பகுதியில் சென்னை, தாம்பரம் பகுதியில் சேரிமக்களின் புனர்வாழ்வுக்கு உழைத்தல். ஏழைகளின் அடிப்படைக் கல்வி வசதிக்கும் சுகாதார வாழ்வுக்கும் கிறிஸ்தவக் கல்லூரி அதிபர் சந்திரன் தேவநேசனோடு இணைந்து செயற்படுதல். சென்னை தாம்பரத்தில் ரிக்சா தொழிலாளர்களின் உரிமைப் போராட்டத்தில் தோழர் ஜீவா தலைமையில் தன்னையும் ஈடுபடுத்தல். பட்டப்படிப்பு முடித்துக் கொண்டு தாயகம் திரும்பி இலங்கை கம்யூனிஸ்ட் கட்சியுடன் தன்னை இணைத்தல்.

1951: ஸ்கந்தவரோதயக் கல்லூரி ஆசிரியராக நியமனம் பெறுதல். அதிபர் ஒறேற்றர் சுப்பிரமணியமும் ஆசிரிய நண்பர்களான திரு.விஜயரெத்தினம், பேராசிரியர் ப.சந்திரசேகரம், திரு.சுந்தரசிவம், மாதகல் வ.கந்தசாமி, வித்துவான் சி.ஆறுமுகம், திரு.சி.பொன்னம்பலம், முகாமையாளர் திரு.வி.தர்மலிங்கம் ஆகிய இடதுசாரிகருத்துக்கொண்டவர்கள் பலரின் தோழமை உறவைப் பெறுதல்.

1952: மல்லாகம் கிராம சபை உறுப்பினராகப் போட்டியின்றித் தெரிவு செய்யப்பட்டார்.

1954: ஆவணி மாதத்தில் திரு.அ.அமிர்தலிங்கம் அவர்களுடன் சங்கானையில் ஒரே மேடையில் விவாதம். திரு.அமிர்தலிங்கம் அவர்களின் திருமணப்பதிவு நடைபெற்ற அதே தினமே அக்கூட்டம் நடைபெற்றது.

1956: திருமணம். மனைவி காரைநகரைச் சேர்ந்த கணபதிப்பிள்ளை - தெய்வானைப்பிள்ளை தம்பதிகளின் மகள் பூரணம்.

காங்கேசன்துறைத் தொகுதியில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் முதல் தடவையாக திரு.எஸ்.ஜே.வி.செல்வநாயகம், திரு.சு.நடேசபிள்ளை ஆகியோருடன் போட்டியிடுதல். இத்தேர்தலில் எஸ்.ஜே.வி. செல்வநாயகம் அவர்கள் பாராளுமன்ற உறுப்பினராகத்தெரிவு செய்யப்படுகிறார். 5000க்கும் சற்றுக் கூடுதலான வாக்குகளை வி.பி. பெறுகிறார்.

1958: சோவியத் ஒன்றியத்தில் இடம்பெற்ற சர்வதேச வாலிபர் மாநாட்டில் இலங்கைப் பிரதிநிதியாகக் கலந்து கொள்ளல். அங்கிருந்து திரும்பும் வழியில் செஞ்சீனத்தில் பிரதமர் சூ என் லாய் அவர்களைச் சந்தித்தல்.

1959: காங்கேசன்துறைத் தொகுதியில் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளைகள் கிராமம் தோறும் ஏற்படுத்துதல். இதற்கு பக்க பலமாக தோழர் கே.ஏ.சுப்பிரமணியம் நின்று செயற்படுதல். கிராமங்கள் தோறும் ஜனசமூக நிலையங்களையும், பாரதி வாசிகசாலைகளையும் ஆரம் பிக்க ஊக்குவித்தல். இப்பணியைத் தொடர்ந்து கட்சிக் காரியாலயமும் படிப்பகமும் சுன்னாகத்தில் திறக்கப்பட்டன. இப்பணியில் தோழர். எஸ்.ரி.என். நாகரெத்தினம் சகல வழிகளிலும் உதவினார். படிப்பகத்தில் பத்திரிகைகளைப் பெறுவதற்குரிய நிதியுதவியை அன்று இலங்கை - சோவியத் நட்புறவுச் சங்கத்தின் யாழ் கிளைத் தலைவராகவும், தாய்ச் சங்கத்தின் உபதலைவராகவும் கடமையாற்றிய திரு.வி.தர்மலிங்கம் வழங்கினார்.

1960: மார்ச் பொதுத் தேர்தலில் உடுவில் தொகுதியில் கம்யூனிஸ்ட் கட்சி வேட்

பாளராகப் போட்டியிடல். தமிழரசுக் கட்சியின் சார்பில் இவரது நெருங்கிய நண்பர் திரு.வி.தர்மலிங்கமும், சம சமாஜக் கட்சி சார்பில் திரு.பி.நாகலிங்க மும், தமிழ் காங்கிரஸ் சார்பில் ஆசி ரியர் திரு.சிவநேசன், அவர்களும் சுயேச்சை வேட்பாளராக சிறந்த கல்வி மானும் முதுபெரும் இடதுசாரியுமான திரு.ஹன்டி பேரின்பநாயகம் அவர் களும் போட்டியிட்டனர். தேர்தலில் திரு.வி.தர்மலிங்கம் வெற்றி பெற்றார். ஆயினும் வி.பி. - தர்மர் நட்பு தொடர்ந்து வளர்ந்தது.

1961: கார்த்திகை 9ம் திகதி மூத்த மகன் மாவலிராஜன் பிறப்பு.

1962: மல்லாகம் - அளவெட்டிக் கிராம சபையின் உபதலைவராகத் தெரிவு.

1963: சீன-சோவியத் பிரிவுகளின் சித்தாந்த முரண்பாடு முளைவிட ஆரம்பித்த காலம். கம்யூனிஸ்ட் கட்சியின் யாழ் மாவட்ட மகாநாடு யாழ் நகர மண்ட பத்தில் நடைபெற்றது. மாவட்ட செயலா ளராக வி.பி. போட்டியின்றித் தெரிவு.

ஸ்கந்தவரோதயக் கல்லூரியை அரசு பொறுப்பேற்றமையால் தனியார் நிர்வாகத்தின் கீழிருந்த இராமநாதன் கல்லூரியில் ஆசிரியப் பணியைத் தொடர்ந்தார்.

1964: சர்வதேச கம்யூனிஸ்ட் முகாமில் சீன சோவியத் பிளவு. இதில் சோவியத் அணியுடன் வி.பி. தன்னை இணைத்துக் கொண்டு தனது பணியைத் தொடர்ந்தார்.

1965: ஆவணி 25 இரண்டாவது மகன் நமுனகுவன் பிறப்பு. கூட்டுறவுத்துறை யில் வி.பி. பிரவேசம். அளவெட்டி ஐக்கிய பண்டகசாலைச் சங்கத்தின் தலைவராக தெரிவு செய்யப்பட்டார்.

1966: முள்ளியவளை வித்தியானந்தாக் கல்லூரி அதிபராக நியமனம். விஞ்ஞான ஆய்வு கூடமும், மாணவர் விடுதியும் நிறுவியதுடன் க.பொ.த.ப. (உயர்தர) வகுப்பையும் அக்கல்லூரியில் மீள ஆரம்பித்தார்.

1968: ஸ்கந்தவரோதயக் கல்லூரிக்கு ஆசிரி யராக மீளல். ஒரு சில மாதங்களில் ஆசிரிய சேவையிலிருந்து ஓய்வு பெற்று முழுநேர அரசியல் பிரவேசம்.

அளவெட்டி - மல்லாகம் இணைந்த பலநோக்குக் கூட்டுறவுச் சங்கமாக விரிவாக்கம் செய்தல். இலங்கையி லேயே இரண்டாவது கூட்டுறவுக் கிராமிய வங்கியை ஆரம்பித்தல். இதன் மூலம் விவசாயிகள் கடன் பணம் பெறும் வசதி உண்டானது.

1969: ஆண்டு மல்லாகம் அளவெட்டி கிராம சபையின் தலைவராகத் தெரிவு செய் யப்பட்டார்.

1970: காங்கேசன்துறைத் தொகுதிக்கான தேர்தலில் ஐக்கிய முன்னனி வேட் பாளராக பெரியார் எஸ்.ஜே.வி.செல்வ நாயகம், பேராசிரியர் சி.சுந்தரலிங்கம் திரு.எஸ்.திருநாவுக்கரசு, பாரிஸ்டர் அம்பலவாணர் ஆகியோரை எதிர்த்துப் போட்டியிட்டு எண்ணாயிரத்துக்கதிக மான வாக்குகள் பெற்று இரண்டாவதாக வந்தார்.

இலங்கைக் கூட்டுறவு மொத்த விற்பனை ஸ்தாபனத்தின் இயக்குனர் சபைக்குத் தெரிவு செய்யப்படல்.

1971: அகில இலங்கைக் கிராம சபைத் தலைவர்கள் சங்க சமாஜத்தின் வட பிராந்தியக் கிளைக்குத் தலைவராக தெரிவு செய்யப்படல். அதே ஆண்டு மேற்படி சங்க தேசிய சபையின் உப தலைவராகவும் தெரிவு செய்யப்பட்டார். இலங்கை கம்யூனிஸ்ட் கட்சியின் தேசிய மாநாட்டில் இனப்பிரச்சனைக் குரிய தீர்வாக தமிழரின் சுயநிர்ணய உரிமையை அங்கீகரிக்குமாறு வற் புறுத்தல்.

1973: கொக்குவில் தொழில்நுட்பக் கல்லூரியின் பகுதி நேர விரிவுரையாளராக நியமனம்.

ஆலயங்களில் மிருகவதைத் தடைச் சட்டத்தை அமுல்படுத்தும்படி ஐக்கிய முன்னனி அரசைக் கோருதல். தனது தொகுதியில் சாதி அடிப்படையிலான பிரேத வண்டில் முறையையும்இ ஒரு சில ஜாதியினரின் குலத் தொழிலாகக் கணிக்கப்பட்ட பிரேதம் சுமக்கும் முறை, பறையடித்தல் ஆகியவற்றுக்கு எதிராகக் குரல் கொடுத்தல்.

1974: வாழ்க்கைத் துணைவியார் பூரணம் இயற்கை எய்தினார். தனது துணைவியாரின் இறுதிச் சடங்கில் பிரேதம் சுமத்தலையும், பறை அடித்தலையும் ஒரு குறிப்பிட்ட ஜாதியினரை விட்டுச் செய்யாது ஓர் மாற்றத்தினை ஏற்படுத்தினார்.

1975: வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த காங்கேசன்துறை இடைத் தேர்தலில் ஐக்கிய முன்னனி வேட்பாளராக வி.பி. பெரியார் செல்வநாயகத்தை எதிர்த்துப் போட்டியிட்டார். தேசிய இனப் பிரச்சினைக்கான தீர்வாக கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய குழுவின் ஒப்புதல் பெற்ற ஐந்து அம்சத்திட்டத்தை தனது தேர்தல் உறுதிமொழியாகக் கொண்டு அதனை கைநூலாக வெளியிட்டுத் தொகுதியெங்கும் தீவிர பிரசாரம் செய்தார். தேர்தல் வேட்புமனுத் தாக்கலுக்கு முதல்நாள் இரவு ஐக்கிய முன்னணி அரசின் பிரதிநிதிகளான அமைச்சர்கள் குமாரசூரியர், பீற்றர்கெனமன், லெஸ்லி குணவர்த்தனா ஆகியோர் காங்கேசன்துறையில் வைத்து வி.பி.யை சந்தித்தனர். இச்சந்திப்பின் போது அமைச்சர் குமாரசூரியர் ஐந்து அம்சத் திட்டம் கம்யூனிஸ்ட் கட்சியின் திட்டமே தவிர ஐக்கிய முன்னனி அரசின் திட்டமல்ல என்ற கருத்தை முன்வைத்தார். வி.பி. குழப்பமடைந்த நிலையில் தேர்தலில் போட்டியிட மறுப்புத் தெரிவித்து வீடு திரும்பினார். அன்றிரவு அவரது வீட்டில் வைத்து தோழர் பீற்றர் கெனமன் இனப்பிரச்சனைக்கு மூன்று மாத காலத்திற்குள் தீர்வு காணப்படும் என அளித்த உறுதிமொழியை ஏற்று வி.பி. வேட்புமனுத்தாக்கல் செய்து தேர்தலில் போட்டியிட்டார். இத்தேர்தலில் ஏறக்குறைய பத்தாயிரம் வாக்குகளைப் பெற்றார்.

1975:- மார்ச் 31ம் திகதி முள்ளானையைச் சேர்ந்த புவனேஸ்வரி நாகரெத்தினத்தை மறுமணம் செய்து கொண்டார்.

1976: தோழர் பீற்றஉ கெனமனால் அளிக்கப்பட்ட உறுதிமொழி காற்றில் பறக்க விடப்பட்டதையடுத்து கம்யூனிஸ்ட் கட்சியின் வடபிரதேசக்கிளை தமிழ் மக்களின் சுயநிஉணய உரிமையை அங்கீகரிக்கும் படி மத்திய குழுவுக்கு ஏகமனதாக பரிந்துரை செய்தது. இந்தப் பரிந்துரையை ஏற்க முடியாத நிலை வருமானால் வடபிரதேசக் கம்யூனிஸ்ட் கட்சி சுயாதீனமாக இயங்க வேண்டி வரலாம் என வடபிரதேசச் செயலாளராக இருந்த வி.பி. மத்திய குழுவுக்கு எச்சரித்தாஉ. அதனைத் தொடஉந்து மத்திய குழு உறுப்பினஉ தோழஉ லெஸ்லி குணவஉத்தனா யாழ்ப்பாணம் வந்து வடபிரதேசக் கிளையின் தீஉமானத்தை திருத்தி எழுதும் படி கேட்டுக் கொண்டாஉ. வி.பி. மறுத்து நிற்க கட்சியின் மற்றுமொரு முக்கிய உறுப்பினரான தோழஉ வைத்திலிங்கம் அவஉகளின் பெயரில்

திருத்தப்பட்ட தீஉமானம் ஒன்றை பத்திரிகைகளுக்கு வெளியிடப்பட்டது. இதனால் வி.பி. அதிப்தியுற்று தனது செயலாளஉ பதவியை ராஜினாமாச் செய்தாஉ. மத்திய குழு பின்னஉ வி.பி.யை கட்சியில் இருந்து வெளியேற்றியது.

இதனையடுத்து தமிழஉ மத்தியில் உள்ள இடதுசாரிச் சிந்தனை கொண்டவஉகளை ஒருமுகப்படுத்தி தமிழ் பேசும் மக்கள் இயக்கமாக "செந்தமிழஉ இயக்கம்" என்ற அமைப்பினை உருவாக்கி அதனைத் தமிழஉ விடுதலைக் கூட்டணியுடன் இணைத்துச் செயல்பட முனைந்தாஉ.

1977:- காங்கேசன்துறைத் தொகுதியில் பொதுத் தேஉதலின் போது திரு.அ.அமிஉதலிங்கம் அவஉகளை வேட்பாளராக தானே முன்மொழிந்தாஉ.

தமிழஉ விடுதலைக் கூட்டணியுடன் நடத்திய மே தின விழாவில் முதன் முறையாக செந்தமிழஉ இயக்கமும் பங்கு பற்றியது.

1978:- வைகாசி 12ல் வி.பி.யின் புதல்வி செஞ்சுடஉ பிறப்பு.

1979:- குடும்ப சூழ்நிலை காரணமாக சாம்பியா நாட்டுக்குப் பயணமாதல். அங்கு லூசாகாவில் இருந்த கூட்டுறவுக் கல்லூரியில் விரிவுரையாளராகப் பதவியேற்றல்.

1983:- சாம்பியாவில் மாரடைப்பு நோய் முதன் முதலாக ஏற்பட்டு சோவியத் நாட்டில் சிகிச்சை பெறுதல். சில காலம் கழித்து தமிழஉ விடுதலைக் கூட்டணியின் செயலதிபஉ திரு.அமிஉதலிங்கத்தின் அழைப்பை ஏற்று தாயகம் திரும்புதல்.

இவ்வாண்டு மன்னாரில் நடைபெற்ற தமிழஉ விடுதலைக் கூட்டணியின் மாநில மாநாட்டில் பொருாதார செயலாளராகத் தெரிவு செய்யப்பட்டாஉ.

யூலை இனப்படுகொலையைத் தொடஉந்து நாட்டில் எழுந்த அரசியல் சூழ்நிலை காரணமாக கூட்டணித் தலைவஉகளோடு தமிழ் நாட்டுக்குச் சென்றார்.

1984:- சென்னையில் தமிழர் விடுதலைக் கூட்டணி அலுவலகத்தில் பணி புரிந்து கொண்டு சென்னை கிறிஸ்தவக் கல்லூரியில் தான் கல்வி பயின்ற சமயம் தனது அதிபராக இருந்த திரு.சந்திரன் தேவநேசன் அவர்களால் நடத்தப்பட்டு அவரின் மறைவின் பின் அவரது துணைவியாரால் தொடஉந்து செயற்படுத்தப்பட்டு வரும் "Roof for the roofless" என்ற சமூக சேவை நிறுவனத்தில் இணைந்து சமூக சேவையிலும் ஈடுபட்டாஉ.

1985:- தமிழ் மக்களின் விடுதலைக்காக ஆயுதப் போராட்டத்தை முன்னெடுத்துச் சென்ற போராளிக் குழுக்களை ஒன்றிணைக்கப் பாடுபட்டார்.

இவ்வாண்டின் இறுதிப் பகுதியில் கனடாவில் குடியேறினார்.

1986:- ஒட்டாவில் உள்ள இரட்சண்ய சேனையில் பணியாற்றினார்.

1988:- இருதய நோய்க்கு ஆளாகி பாரிய அறுவைச் சிகிச்சைக்கு உள்ளானார்.

1991:- மீண்டும் இருதய நோய்க்கு ஆளானார்.

1993:- தனது அரசியல் குருவும் அதிபருமான ஒறேற்றர் சுப்பிரமணியத்தைக் கனடாவில் சந்தித்தார்.

ஸ்கந்தவரோதயக் கல்லூரிஇ இராமநாதன் மகளிர் கல்லூரி பழைய மாணவஇ மாணவிகள் கூட்டத்தில் தனது பழைய ஆசிரிய சகாக்களையும்இ பழைய மாணவர்களையும் சந்தித்து உரையாடினார்.

1994:- பங்குனி 5ம் திகதி ஒறேற்றர் திரு.சுப்பிரமணியம் அவஉகளின் அஞ்சலிக் கூட்டத்தில் உரையாற்றி முடித்து "உங்களிடம் இருந்து விடை பெறுகிறேன்" என சபையோருக்கு கை கூப்பி வணக்கம் கூறி இவ்வுலக வாழ்வினின்றும் விடை பெற்றுக் கொண்டாஉ.

நன்றி பொன்மலர் 1994



அளவெட்டி – மல்லாகம் ப.நோ.கூ. சங்கம் என பெயர் மாற்றம் செய்யப்படமுன்னர் அளவெட்டி ப.நோ.கூ. சங்கம் எனவே திகழ்ந்தது. இதற்கு ஆதாரமான இப்புகைப்படத்தில் தந்தை செல்வநாயகத்துடன் அமரர் வி. பொன்னம்பலம் மற்றும் இந்நூலின் தொகுப்பாசிரியர் பண்டிதர் க. நாகலிங்கம் ஆகியோர் இருப்பதைப் படத்தில் காணலாம்.

# கிருஷ்ணா வைகுந்தவாசன்

"எனது பெயர் கிருஷ்ணா. ஸ்ரீலங்காவிற்கும் இந்தியாவுக்குமிடையே இருக்கும் இருபத்தைந்து இலட்சம் மக்களைக் கொண்ட பலம்பொருந்திய தமிழீழத்திலிருந்து வந்திருக்கின்றேன். தமிழீழம் போன்ற அடக்கி ஒடுக்கப்பட்டுள்ள சிறிய தேசங்கள் உலகின் ஆக உயர்ந்த மன்றமான இந்தச் சபையில் தமது முறையீடுகளை வைக்கமுடியாதென்றால் நாங்கள் எங்கேதான் போவது? தயவு செய்து ஒரே ஒரு நிமிடம் என்னைப் பேசுவதற்கு அனுமதியுங்கள். ஸ்ரீ லங்கா அரசாங்கம் தனது இனக் கொலைக் கொள்கையை தொடருகின்றது....."

இக்குரல் 1978ஆம் ஆண்டு ஒக்டோபர் 10ஆம் நாள் வியாழக்கிழமை நியூயோர்க் நகரில் ஐ.நா. பொதுச்சபைக் கூட்டத்தில் ஒலித்த ஓர் உண்மையின் குரல். இக்குரலுக்குச் சொந்தக்காரர் எங்கள் அளவெட்டிக் கிராமத்தின் ஓர் புகழ்பூத்த சட்டத்தரணியும் தமிழ் ஆர்வலருமான கிருஷ்ணா வைகுந்தவாசன் ஆவார்.

இலங்கையில் வழக்கறிஞராகவும், பத்திரிகையாளராகவும் பணியாற்றிய பின்னர் சாம்பியா நாட்டில் நீதிபதியாகக் கடமையாற்றி ஓய்வுபெற்ற பின் இலண்டன் சென்று வழக்கறிஞராகப் பணியாற்றினார்.

உலக நாடுகளைச் சேர்ந்த உயர்மட்டத் தலைவர்கள் சுமார் 2000பேருக்கு மேல் கூடியிருந்த உலகின் உயர் சபையான ஐ.நா சபையில் இலங்கையின் வெளிநாட்டு அமைச்சர் எப்படியிருப்பார் என்று எவருக்குமே தெரியாத சூழ்நிலையில் ஐ.நா. சபையின் பொதுச்சபைத் தலைவர் இலங்கையின் வெளிநாட்டு அமைச்சரை உரையாற்ற அழைத்த நேரத்தில் தடித்த, தலைநரைத்த வைகுந்தவாசன் பேராளர் வரிசை ஒன்றிலிருந்து எழுந்து சென்று மேடையேறியபோது இலங்கையின் பிரதிநிதிகளைத் தவிர வேறு யாருமே வைகுந்தவாசனை அறிந்திருக்கவில்லை. அன்றைய தினம் பொதுச்சபைக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கியவர் கொலம்பியாவைச் சேர்ந்த இன்டல்சியோ லிபியானோ என்பவர் ஆவார். அவரும் வைகுந்தவாசனை இலங்கையின் வெளிநாட்டு அமைச்சர் என்றே எண்ணிக்கொண்டார். அதனால் மிக வேகமாக மேடையில் ஏறிய வைகுந்தவாசனுக்குச் சிரம் தாழ்த்தி வணக்கம் செய்தார். இலங்கையின் வெளிநாட்டு அமைச்சர் ஐ.நா. வில் பேசுவதற்கு தனது இருக்கையைவிட்டு எழும்புவதற்கு முன்னரேயே வைகுந்தவாசன் எழுந்து சென்று மிகவும் கம்பீரமான தொனியில் ஆங்கில மொழியில் உலக சபையில் சொல்லவேண்டியதைச் சொல்லிவிட்டார்.

இதன் பின்னர் உலகம் முழுவதுமே வைகுந்தவாசன் பிரபலமானார். உலகின் பிரபல ஊடகங்கள் அவரை பிரதானமான செய்தித் தலைப்புக்களாக்கின. பல முன்னணி ஊடகவியலாளர்கள் அவரைப் பேட்டி கண்டு தமது பத்திரிகைகளில் வெளியிட்டார்கள். இவை மூலமாக வைகுந்தவாசன் ஈழத் தமிழர் பிரச்சினையை உலகின் அரங்கில் எடுத்துரைத்தார். 1990ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஐ.நா. வில் தமிழன் - என் முதல் முழக்கம் எனும் நூலையும் வெளியிட்டார். 2005ஆம் ஆண்டு ஜனவரி நாலாம் திகதி லண்டனில் காலமானார்.



*இந்தியப் பிரதமர் இந்திராகாந்தியுடன் வைகுந்தவாசன்*

கிருஷ்ணா வைகுந்தவாசன்

# சின்னப்பு தம்பதிகள்

சின்னப்பு அவர்கள் அளவெட்டி வடக்கில் கணபதிப்பிள்ளை தம்பதியினருக்கு புத்திரராகத் தோன்றியவர். இவர் இப்போது அருணோதயக் கல்லூரி எனப் பேசப்படும் அளவெட்டி ஆண்கள் ஆங்கிலப் பாடசாலையில் கற்று மலேசியாவில் உத்தியோகம் வகித்தவர். அங்கு உத்தியோகத்திலிருந்தபோதே இங்கு நிலபுலங்களை வாங்கித் சேமித்திருந்தார். அப்போது தாம் உத்தியோகக் கடமையை விட்டபின் யாழ்ப்பாணம் வந்து மனைவி மக்களுடன் வாழ்வதைக் குறியாகக் கொண்டே இங்கு தமது பணத்தில் காணிகளை வாங்கியிருந்தார். சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் இலங்கை ஒரு யுத்த பூமியாக மாறியது. இங்கு தமிழ் மக்களது சொத்துச் சுகங்களெல்லாம் காலத்திற்குக் காலம் பறிக்கப்படுவதும் உயிருக்கு அச்சுறுத்தல் ஏற்படுவதும் வழக்கமாகியது. தென்னிலங்கையில் தமிழர் படுகொலை செய்யப்படுவதும், அவர்களது சொத்துக்கள் அபகரிக்கப்படுவதும் சாதாரண நிகழ்ச்சியாய் விட்டதாலும் வெளிநாடுகளில் வாழ்ந்த தமிழ் மக்கள் தமது தாயகத்திற்கு வர அஞ்சினர் அத்தகையவர்களில் சின்னப்பு குடும்பமும் இணைந்து கொண்டது.

சின்னப்பு தம்பதியர் ஈழநாட்டில் வந்து குடியேறுவதில்லை எனத் தீர்மானித்தபின் யாழ்ப்பாணத்திலுள்ள தமது சொத்துக்களை விற்று மலேசியாவுக்குக் கொண்டுசெல்ல விரும்பினர். இருந்தபோதும் விற்ற பணத்தை அங்கு கொண்டு செல்வதில் இருந்த சிக்கலை உணர்ந்தார். இதனால் அப்பணத்தை இலங்கையில் முதலீடு செய்யவும் அம்முதலீட்டிலிருந்து வரும் வட்டியை அறப்பணிகளுக்கு வழங்கவும் தீர்மானித்தார். சேமிக்கும் பணம் எக்காலத்தும் அழிவுபடாமல் இருப்பதற்காக அதனை கொழும்பு இராமகிருஷ்ணமிஷனில் சேமித்தார். அப்பணத்திலிருந்து வரும் வட்டியை அளவெட்டியிலுள்ள பாடசாலைப் பிள்ளைகளுக்கு பாடசாலைப் பிள்ளைகளுக்குப் பயன்படச் செய்யவும் விரும்பினார். குறிப்பாக அளவெட்டி அருணோதயக் கல்லூரியின் பரிசளிப்பு நிகழ்ச்சிக்குப் பயன்படுத்துவதே அவரது நோக்கமாக இருந்தது. அருணோதயக் கல்லூரி பரிசளிப்பு விழாவின்போது விழாவில் பங்குபற்றுவோருக்கு சிற்றுண்டி வழங்குதல், மாணவர்களுக்குப் பரிசில்கள் வழங்குதல் என்பவற்றுக்கே அப்பணம் செலவு செய்யவேண்டுமெனவும், சிற்றுண்டியாக என்ன சிற்றுண்டி வழங்கவேண்டுமெனவும் அவர் குறிப்பிட்டிருந்தார். உதாரணத்திற்குச் சொல்வதால் அங்கு வழங்கப்படும் மோதகம் நான்கு அவுன்ஸ் கொண்டதாக இருக்கவேண்டும் என்பது அவர் ஆணை. இவ்வாறு ஒவ்வொரு விடயத்தையும் நுட்பமாக வரையறுப்பது அவர் இயல்பு என்பதைப் புலப்படுத்தவே இவ்வுதாரணம் கூறப்பட்டது. நிதியத்தை மேற்பார்வை செய்வதற்கு ஓர் தத்துவக் காரரையும் அவர் நியமித்திருந்தார். முதலில் அவர் நியமித்த தத்துவக்காரர் திரு. செ. மயில்வாகனம் அவர்கள் ஆவார். ஐயாயிரம் ரூபா வரை கொண்ட அப்பணம் அக்காலத்தில் ஓரளவுக்குப் போதுமானதாக இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. இப்போது பரிசளிப்பு விழாச் செலவு லட்சங்களை எட்டியுள்ளது.

அருணோதயக் கல்லூரிக்கு மட்டும் கொடுக்கப்பட்ட இந்நிதி காலப்போக்கில்

மற்றைய பாடசாலைகளான சதானந்தா, அருணாசலம், சீனன்கலட்டி என்பவற்றுக்கும் அவற்றிற்குத் தனித்தனி ஆயிரம் ரூபா மாத்திரமே கொடுக்கப்படுகிறது.

சின்னப்பு தம்பதியரின் கணிப்பின்படி இந்நிதியுதவி சூரிய சந்திரன் இருக்கும்வரை கொடுக்கப்பட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதாம். தமது உழைப்பை தமது கிராமம் காலாகாலமாக அனுபவிக்க வாய்ப்பளித்த அவர் செயல் பாராட்டுக்குரியதே. பின்னாளில் அந்நிதியின் தத்துவக்காரராக அருணோதயக் கல்லூரியின் முன்னாள் அதிபர் அமரர் அ. விஸ்வநாதன் அவர்கள் செயற்பட்டார்கள். அவருடன் வேறு நால்வரும் சேர்ந்த பஞ்சாயத்திடமே இந்நிதிப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ளது. பாடசாலைகளுக்கு மட்டுமன்றி ஆலயத் திருப்பணிகளுக்கும் சின்னப்பு தம்பதிகயினர் உதவியதாக அறியமுடிகிறது. கும்பழாவளை விநாயகர் ஆலய தேர் முட்டி கட்டவும் இவர்களது நிதி பயன்பட்டதாக ஆலய வரலாற்றுக் குறிப்பில் உள்ளது.

## சோமசுந்தரம் அருணாசலம்

சோமசுந்தரம் - நாகம்மா தம்பதியினர் அளவெட்டி தெற்கில் வாழ்ந்த சைவப் பெருமக்களாவர். இவர்களின் இரண்டாவது புதல்வராகத் தோன்றியவரே அருணாசலம்.

1919-11-08 ஆம் திகதி பிறந்த இவர் கல்வியை நிறைவு செய்து எழுதுவினைஞராக அரச பணியில் இணைந்து அப்பணியை சிறப்புறச் செய்ததனால் படிப்படியாக உயர்ந்து உதவி அரசாங்க அதிபரானார். இவரது தந்தையார் சோமசுந்தரம் ஒரு ஆசிரியர். இளவாலை புனித ஹென்றியரசர் கல்லூரியில் கற்பிக்கும் காலத்தில் கல்லூரி நிர்வாகம் சைவப் பிள்ளைகளை கிறிஸ்தவர்களாக மாற்றுவதுற்கு எடுத்த முயற்சிகளைக் கண்டு சில சைவப்பிள்ளைகளையும் அழைத்துக் கொண்டு அக்கல்லூரியை விட்டு வெளியேறி சுழிபுரம் விக்டோரியாக் கல்லூரியில் சேர்ந்தார்.

அளவெட்டி சைவ வாலிபர் சங்கத்தை அமைப்பதில் முன்னின்று உழைத்த இவர், கும்பழாவளை விநாயகர் ஆலயத்தில் பல உபயங்களை ஆற்றியதோடு அச்செலவுக்கு ஆலய அருகிலுள்ள காணியொன்றை ஒதுக்கிவைத்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. அக்காணியை அவரது மகளும் அருணாதயக் கல்லூரி அதிபர் கதிர்காமசேகரம் அவர்களின் மனைவியுமான திலகவதி ஆசிரியர் விற்று அப்பணத்தை ஆலயத் தர்மகர்த்தாக்களிடம் அவ் உபயத்திற்காக ஒப்படைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

உதவி அரசாங்க அதிபர் அருணாசலம் பல வறிய குடும்பங்களுக்கு உதவி செய்ததுடன் பலருக்கு உத்தியோக வாய்ப்புக்களையும் ஏற்படுத்திக் கொடுத்தார். அவர் தமது பணத்தில் குறிப்பிடத்தக்கதொரு தொகையை அருணோதயக் கல்லூரியில் பயிலும் ஐந்தாம் வகுப்பு மாணவர்களுக்கு புலமைப்பரிசில் வழங்குவதற்கு ஒதுக்கி வைத்தார். சின்னப்பு தம்பதிகள் நிதிய தத்துவக்காரரில் இவரும் ஒருவராக இருந்தார். 13.04.2002இல் அன்னார் அமரத்துவம் ஆனார்.

# செல்லப்பா நாகலிங்கம்

மலையாள புகையிலை வியாபாரியும் 'கிட்டங்கி நாகலிங்கத்தாரென' எல்லாராலும் அழைக்கப்பட்டவரும் ஆகிய இவர் அளவெட்டியில் வாழ்ந்த பணம் படைத்த ஒருவராக விளங்கினார். அளவெட்டி மகாசன சபை வாசிகசாலை இயங்கும் காணியை வேறிருவரோடு சேர்ந்து வாங்கி அளவெட்டி மகாசன சபைக்கு உபகரித்தார். அளவெட்டி மத்தியில் ஒரு சைவப்பாடசாலை இல்லாக்குறையைத் தீர்க்க இவர் விரும்பினார். அதனால் தமது சொந்தக் காணியில் அளவெட்டி 'சதானந்தா வித்தியாசாலை'யைத் தாபித்தார். இவ்வித்தியாசாலை பல்லாண்டு காலமாக அப்பகுதி மக்களுக்கு மிக்க கல்விச் சேவை வழங்கி வந்தது. இப்பாடசாலை இன்றும் இயங்கி வருகிறதெனினும் தனது பழைய பொலிவையிழந்து மூடப்படும் நிலையிலேயே இன்று இருக்கிறதென்பதை எவரும் மறுக்கத் துணியார். நாகலிங்கம் அவர்கள் அப்பாடசாலைக்கு வரும் பிள்ளைகளுக்கு பல வகையிலும் உதவி புரிந்தார். புத்தகம், அப்பியாசக் கொப்பி என்பவற்றை வாங்க வசதியற்ற மாணவர்களுக்கு தமது பொறுப்பில் அவற்றை வாங்கிக் கொடுக்க வழிசெய்தார். சில பிள்ளைகளுக்கு உடை வழங்கியதும் உண்டு.

பாடசாலை 1920களில் ஆரம்பிக்கப்பட்ட போதும் மிக விரைவில் வளர்ச்சி கண்டு சிரேட்ட பாடசாலை தராதர வகுப்புவரை வகுப்புக்களைக் பெற்று உயர்ந்தது. இப்பாடசாலை பல துறைகளிலும் பல சாதனைகளை புரிந்ததென்பது எல்லோருமறிந்ததே. சமய பாடப் பரீட்சைகளில் இப்பாடசாலை முண்ணணியில் திகழ்ந்தது. ஒருமுறை கொழும்பு விவேகானந்தா சபையினர் நடாத்திய சமய அறிவுப் போட்டியில் மேற்பிரிவில் முதற் பரிசு பெற்றது. அதுமட்டுமல்லாமல் அச்சபை நடாத்திய கவிதைப் போட்டியிலும் முதலிடம் பெற்றது. பேச்சுப் போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளும் பத்திரங்களும் பெற்றுக் கொண்டது. இப்பாடசாலை செய்த சாதனைகளை அவ்வித்தியாசாலையின் முகப்புத் தூண் ஒன்றில் பொறித்துள்ளதை இன்னும் காணலாம்.

அளவெட்டி கும்பழாவளை விநாயகர் ஆலய மகோற்சவ நாட்களில் கம்பன் கழகத்தின் விவாதமேடை சுழலும் சொற்போர் பட்டிமன்றம் ஆகிய நிகழ்வுகளில் கம்பவாரிதி ஜெயராஜூடன் கலந்து கொண்டமையையும், அவ்விரவுகளில் கிட்டங்கி வீட்டில் வயிறார மட்டுமன்றி அறுசுவையாய் உண்ட இரவு உணவுகளும் என்றும் மறக்கமுடியாத அனுபவங்களாகும். - செஞ்சொற் ஆறு. திருமுருகன்.

இவ்வித்தியாசாலையின் தலைமையாசிரியராக திரு.அ.பொன்னுத்துரை என்பவர் இருந்த காலம் வித்தியாசாலையின் பொற்காலம் எனலாம். கல்வியைப் பொறுத்தவரை தலைமையாசிரியர் பொன்னுத்துரை அவர்களை ஒரு தீர்க்கதரிசியெனலாம். இவர் அரசாங்கம் வற்புறுத்தாத காலத்திலேயே தொழிற் கல்வி யின் அவசியத்தை உணர்ந்து கொண்டு அதனைத் தமது பாடசாலையில் அறிமுகஞ் செய்து வைத்தார். நெசவு தொழிலை அளவெட்டியில் முதல் முதலில் அறிமுகம் செய்து வைத்தவர் பொன்னுத்துரை அவர்களே. நெசவுத் தொழிலைத் தொடங்கியதோடு நெசவுத் தொழில் கற்பிப்பதற்கு ஆசிரியர் ஒருவரையும் நியமித்தார் பன்ன வேலையையும் அறிமுகப்படுத்தினார். பன்னவேலை ஆசிரியரையும் நியமித்து அத்தொழிலில் மாணவர் சிரத்தைக் காட்ட வழிசமைத்தார் விவசாயத்துறையிலும் அக்காலத்தில் இவ்வித்தியாசாலை பெரிதும் ஈடுபாடுடையதாக இருந்

தது. இக்கால கட்டத்தில் ஆங்கிலப் பாடசாலையுடன் போட்டி போடும் அளவுக்கு இப் பாடசாலை பணிபுரிந்ததென்பது குறிப்பிடத்தக்கது.

நாகலிங்கம் அவர்கள் அமரரான பின்னும் அப்பாடசாலை முகாமையாளராக வந்த அவரின் சகோதரர் தாமோதரம்பிள்ளை அவர்களும் தமது தமயனார் சென்ற வழியிலேயே பாடசாலையை நடத்திவந்தார். பாடசாலைகளை அரசாங்கம் பொறுப்பேற்றது சதானந்த வித்தியாசாலையைப் பொறுத்தவரை ஒரு துன்பியல் நிகழ்ச்சி என்று கூறலாம். பல நூற்றுக்கணக்கான மாணவர்களைக் கொண்டிருந்த அப் பாடசாலையை அரசினர் பொறுப்பேற்ற பின் சில பத்து மாணவர்கள் கொண்டதாக அதாவது "உலக்கை தேய்ந்து உளிப்பிடியான கதையாக" மாறிவிட்டது.

இப் பாடசாலையை இனியெழுப்புவது சிரமமென்றே எண்ணத் தோன்றுகிறது. இருந்த போதும் அதிபர் ஆசிரியர்கள் பழைய மாணவர்கள் முயற்சியின் பேறால் இது மீளுருப் பெற வேண்டும் என்பதே எமது அவா. அரசினர் நலிந்த மெலிந்த பாடசாலைக்கு நல்லாசிரியர்களை அனுப்பி அதனை நிமிர்த்தெழச் செய்வதை விட்டு அப்பாடசாலைக்கு பற்றாக்குறையான ஆசிரிய வளத்தை வழங்குவதனால் இப்பாடசாலை தனது தாபகர் நாகலிங்கம் அவர்கள் எண்ணத்துக்கு மாறாக கீழ்நோக்கிச் செல்கின்ற தென்பது மெய்யே.

இப்பாடசாலையும் சீனன்கலட்டி ஞானோதயா வித்தியாசாலை என்பனவும் நல்ல முறையில் இயங்க வேண்டுமாயின் இப்பாடசாலைகளுக்கு நல்லாசிரியர்களை நியமிப்பதோடு அயலில் உள்ள கல்லூரிகளில் ஐந்தாம் வகுப்புக்குட்பட்ட வகுப்புக்களை இல்லாமற் செய்வதவசியமென்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

◈ ◈ ◈

## மயில்வாகனம் சிறிகாந்தா

அளவெட்டிக் கிராமத்தை தன் செயற்திறனினால் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்த அமரர் சைவப்பெரியார், சமூக சேவையாளர் செ. மயில்வாகனத்தின் ஏக புதல்வனாக அவதரித்தவரே சிறிகாந்தா அவர்கள். இளவயதில் தனது தாயை இழந்தபோதும் தந்தையின் அரவணைப்பிலும் வழிகாட்டலிலும் கல்வியில் சிறந்தோங்கி பின்னாளில் யாழ் மாவட்டத்தின் (முதல் தமிழ்) அரசாங்க அதிபராகப் புகழ் பெற்றார்.

யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் கல்வி கற்ற இவர் தன் பட்டப்படிப்பைப் பூர்த்தி செய்து இலங்கை நிர்வாகசேவைப் பரீட்சையில் சித்திபெற்று அரசாங்க அதிபராகப் பதவியுயர்வு பெற்று பணி செய்தார். ஈழநாடு தந்த தனிப்பெரும் தவமகன் யோகர் சுவாமி அவர்களுடன் நெருங்கிய தொடர்பினைக் கொண்டிருந் இவர் அவரது சீடராக வாழ்ந்து மறைந்தார்.

இவர் அரசாங்க அதிபராகப் பதவி வகித்த காலத்தில் இவரது தந்தையார் அளவெட்டி மகாஜனசபையின் தலைவராக இருந்தபோதே அளவெட்டியில் ஓர் நெசவு சாலை அமைக்கப் பெற்றது.

தந்தையின் முயற்சியில் தனயனின் பணிப்பின் பேரில் அமைக்கப்பட்ட அவ் நெசவு சாலை சிறிகாந்தா அவர்களினாலயே திறந்து வைக்கப்பட்டது. இன்று நெசவுக் கைத்தொழில் வழக்கொழிந்து போனதனால் அவ் நெசவு நிலையம் மூடப்பட்டு அம்மண்டபம் அமரர் மயில்வாகனம் மண்டபம் என பெயர் சூட்டப்பட்டு மகாஜனசபை நூலகம் மற்றும் அளவெட்டி அபிவிருத்தி மன்ற ஆங்கில, சிங்கள, கணினி வகுப்புக்களுக்கு பயன்பட்டு வருகிறது.



இலங்கை அரசாங்கத்தின் மின்சக்தி மற்றும் சக்தித் துறை அமைச்சின் செயலாளராக ஸ்ரீகாந்தா அவர்கள் கடமையாற்றிய காலத்திலேயே எமது அளவெட்டிக் கிராமத்தின் வீதிகளுக்கு அவரது முயற்சியால் மின்சாரம் கிடைக்கப்பெற்றது.

## ச. சிதம்பரப்பிள்ளை (பொன்னையா மாஸ்ரர்)

அளவெட்டியில் வாழ்ந்த ஆசிரியர் பலர் தாமுண்டு தமது தொழிலுண்டு என்ற எண்ணத்தோடு பொதுப்பணிகளில் ஈடுபடாதிருந்தவர்கள். அதற்கு மாறாகத் தமது ஆசிரியத் தொழிலோடு நின்றுவிடாது பொது நலப்பணிகளில் ஈடுபட்டுக் கிராம முன்னேற்றத்துக்குப் பாடுபட்டோர் வரிசையில் சந்திரவர் சிதம்பரம்பிள்ளை என்று அழைக்கப்படும் பொன்னையா மாஸ்ரருக்கும் ஒரு முக்கிய இடமுண்டு. இவர் ஆசிரியப் பணி ஏற்ற காலம் முதல் பொதுப்பணிகளிலும் ஈடுபட்டு வந்தார்.

அளவெட்டி மகாசன சபையை அமைத்து அதற்குரிய மண்டபங் கட்டுதல், அளவெட்டி சைவவாலிபர் சங்கத்தை சிறப்புற நடத்துதல், அளவெட்டி கிராம முன்னேற்றச் சங்கத்தை இயக்குதல், அளவெட்டி பிரசவ விடுதியைத் தொடக்கி நடத்துதல், அளவெட்டியில் தபாற் கந்தோர் ஒன்றை நிறுவுதல், முதலாய பல பணிகளையுந் திறம்பட நடைமுறைப்படுத்த உழைத்தவர்களில் இவருக்கு முக்கியமான இடமுண்டு.

தமது ஆசிரியச் சேவையை அளவெட்டி ஆண்கள் ஆங்கில பாடசாலையில் தொடங்கி அப்பாடசாலை அருணோதயாக் கல்லூரியாகத் தரமுயர்ந்த பின்பே ஓய்வு பெற்றார். தரமுயர்வதற்குக் காரணமாக இருந்தவர்களில் இவர் முக்கியமானவர் என்பது உண்மையே. ஆங்கிலப் பாடசாலை அருணோதயாக் கல்லூரியாகியது இவர் அதிபராக இருந்த காலத்தில் தான் என்பது குறிப்பிடத்தக்கது. 1911ம் ஆண்டு பிறந்த இவர் 1928ம் ஆண்டு அளவெட்டி ஆங்கில வித்தியாசாலையில் ஆசிரியரானார் என்பது வியப்பிற்குரியது. மிக இளம்வயதிலேயே இவர் ஆசிரியப் பணியில் இறங்கிவிட்டாரென்பது கவனிக்கத்தக்கது. ஆங்கிலம், தமிழ், சைவ சமயம், விஞ்ஞானம், கணிதம் முதலிய பல பாடங்களையும் சிரேஷ்ர தராதரப்பத்திர வகுப்பு முதல்கீழ் வகுப்பு வரை எல்லா வகுப்புக்களுக்கும் கற்பிக்க கூடிய ஆற்றல் இவரிடமிருந்தது.

இவரிடம் புத்திசாலித்தனமாகச் சந்தர்ப்பத்திற்கேற்ப நடந்துகொள்ளும் அறிவாற்றலும் இருந்தது. வித்தியாசாலையின் முகாமையாளரின் மகன் பட்டதாரியாக வந்தவேளை தலைமைப் பொறுப்பை அவருக்குக் கொடுத்து தாம் உப அதிபரானது இவரது குணவியல்பை வெளிப்படுத்துகிறது. இப்படி விட்டுக்கொடுத்த பெருங்குணமே அதிபர் சிவசுப்பிரமணியம் கல்லூரியை விட்டுப் பிரிந்தபோது இவர் அதிபராவதற்கு வழிவகுத்தது எனலாம். கேம்பிறிட்ச் சீனியர் பரீட்சையில் தேறியவுடன் ஆசிரியராகிய இவர் ஆசிரியராக இருந்து கொண்டே ஆங்கில ஆசிரிய தராதரப்பத்திரப் பரீட்சையில் சித்தியடைந்தார். ஆசிரிய தராதரப் பத்திரத்தோடு கற்பித்திருந்தால் இவர் அதிபராக வருவதற்குஞ் சந்தர்ப்பம் இல்லாமற் போய்விடும். ஆனால் அவர் 1947ம் ஆண்டு கொழும்பில் இரண்டு வருட ஆசிரியப் பயிற்சிக்குச் சென்றார். ஆனால் அப்பயிற்சியை அவர் ஒரு வருடத்தில் முடித்துக் கொண்டு திரும்பினார். இது அவரின் திறமைக்குக் கிடைத்த பரிசாகக் கொள்ளலாம்.

**காத்திருக்கிறது கல்லூரி.....**

பொன்னையா மாஸ்ரர் அருணோதயக் கல்லூரி வரலாற்றில் மறக்கமுடியாத ஒருவர். அவர் நினைவைத் தாங்கி ஓர் விளையாட்டில்லம் அண்மையில் உருவாக்கப்பட்டதுடன் அவரது குடும்பத்தினர் அமரரது ஞாபகமாக கல்லூரிக்கு ஓர் நூலகக் கட்டடத்தை ஆக்கித் தர இருப்பதாக அறிகின்றபோது மகிழ்வாக உள்ளது.

பொன்னையா மாஸ்ரர் 1955ம் ஆண்டள வில் பொது வேலைகளிலீடுபடுவதிலிருந்து ஒதுங்கிக் கொண்டார். பொதுப் பணிகளில் இருந்து ஒதுங்கிவிட்டபோதும் அவர் அவை நல்ல முறையாக இயங்குகின்றனவா என் பதைக் கண்காணிக்கத் தவறவில்லை. பொதுத் தாபனங்களின் வருடாந்தக் கூட்டங் களில் அவற்றைத் திறம்பட நடத்தமுடியாத வர்கள் பிரேரிக்கப்பட்டால் அப்பிரேரணையை தவிர்க்க முயல்வார். அளவெட்டியில் எவரும் அவர் முன்னின்று அவர் பிழையை எடுத்தி யம்பத் துணியார். அவர் புலம்பெயர்ந்த காலத்தில் புலம்பெயர்ந்து தங்கிய இடத்தில் 1993ம் ஆண்டு காலமானார்.

* * *

## நாகலிங்கம் வேதநாயகன்



அளவெட்டிக் கிராமம் தந்த அரசாங்க அதிபர்களுள் ஒருவராகத் திகழ் பவரே நாகலிங்கம் வேதநாயகன் ஆவார். இந் நூலின் தொகுப் பாசிரியரான பண்டிதர் க. நாகலிங்கத்தின் மூத்தமகனா இவர் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் தன் உயர்தரக் கல்வியைக் கற்று யாழ்ப்பாணப் பல்கலைக்கழக விஞ்ஞானப் பட்டதாரியாக வெளியேறினார்.

தன் அரச சேவையின் ஆரம்பமாக ஆசிரிய சேவையில் இணைந்துகொண்ட வேதநாயகன் பின்னர் இலங்கை நிர்வாக சேவை திறந்த போட்டிப் பரீட்சையில் சித்திபெற்று இலங்கை நிர்வாகசேவை அதிகாரியாக நியமனம் பெற்றார்.

வலிகாமம் வடக்கு தெல்லிப்பழை பிரதேச செயலர் மற்றும் வலிமேற்கு சண்டி லிப்பாய் பிரதேச செயலர் ஆகிய பதவிகளை வகித்து தன் நேர்மைத்திறனான நிர்வாகத் திறனினால் மக்கள் மத்தியில் நன் மதிப்பைப் பெற்றார். பின்னர் கிளிநொச்சி மாவட்ட மேலதிக அரசாங்க அதிபராக பதவி உயர்வு பெற்று பணியினைத் தொடர்கையில் அம்மாவட்டத்தின் அரசாங்க அதிபராக உயர்வு பெற்றார்.

போர் நெருக்கடியான காலகட்டத்தில் தனது அர்ப்பணிப்பு மிக்க சேவையால் வன்னிப் பிரதேச மக்களுக்கு அத்தியாவசிய தேவைகளை இயன்றவரை பூர்த்தி செய்து கொடுத்ததுடன் அவர்களது துன்பங்கள், துயரங்களிலும் பங்கெடுத்தார். சிறிது காலம் சந்தேகத்தின் பேரில் அரச தடுப்புக்காவலில் இருந்து பின்னர் நீதிமன்றினால் குற்ற மற்றவர் எனத் தீர்ப்பளித்து விடுவிக்கப்பட்டார். அதன்பின் முல்லைத்தீவு மாவட்ட அரசாங்க அதிபராக பதவி நியமனம் பெற்று மீள் குடியமர்ந்த அம்மாவட்ட மக்களின் நலன் களில் அதிக அக்கறை எடுத்து செயற்பட்டு ~~வருகிறார்~~.

வந்தார். பின்னர் தற்போது மன்னார் மாவட்ட அரச அதிபராக நியமனம் பெற்று தமது பணியை தொடருகின்றார்.

# அதிபர் சிவபாதசுந்தரம்

1916ம் ஆண்டு வைகாசி முதலாம் நாள் அமரர்கள் சின்னத்தம்பர் தம்பதிகளின் மகனாக அளவெட்டி மண்ணின் மகுடத்தில் ஓர் முத்தாகப் பிறப்பெடுத்தார் அமரர் அதிபர் சிவபாதசுந்தரம் அவர்கள். தனது ஒன்பதாவது வயது வரை முதனிலைக் கல்வியை அருணோதயக் கல்லூரியில் கற்ற இவர், பின்னர் மலேசியாவில் உள்ள மக்ஷல் ஆங்கிலப் பாடசாலையில் தனது ஆரம்பக் கல்வியை நிறைவுசெய்து கொண்டார். மலேசியாவில் கல்வி கற்றபோது ஒவ்வொரு வருடமும் அதிசிறப்புத் தரத்தை தனது கல்விப் பெறுபேறுகளிலே பெற்றுக்கொண்டதன் விளைவாக விக்ரோறியாக் கல்வி நிறுவகத்திலே இரண்டாம் நிலைக் கல்வியைப் பெறும் வாய்ப்பினைப் பெற்றுக்கொண்டார். பாடசாலைக் கல்வியை நிறைவுசெய்து கொண்டபின் லண்டன் கேம்பிறிட்ஜ் பல்கலைக் கழகத்தினால் மலேசியாவில் நடாத்தப்பட்ட பரீட்சையிலும் அனைத்துப் பாடங்களிலும் அதிவிசேட திறமையுடன் சித்தியடைந்தார். இதன் பின் இலங்கை திரும்பி ஆங்கில இலக்கியத்திலே தனது பட்டப்படிப்பை நிறைவு செய்ததோடு, அதில் வெளிப்படுத்திய திறமை காரணமாக ஐந்து வருட முழுமையான புலமைப்பரிசு ஒன்றை லண்டன் கேம்பிறிட்ஜ் பல்கலைக்கழகம் இவருக்கு வழங்கியது. இந்நிலையில் தனது முதுமாணிப் பட்டப்படிப்பை (M.A) நிறைவு செய்துகொண்டு மேலும் கல்வியைத் தொடர எத்தனித்தவேளையில் இரண்டாம் உலகப் போரின் விளைவு காரணமாக இலங்கைக்கு மீளத் திரும்பவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதனால் மேலும் கல்வியைத் தொடரமுடியாத துர்ப்பாக்கிய நிலை ஏற்பட்டது.

இலங்கை திரும்பியதும் தனது 26ஆவது வயதில் கந்தரோடை ஸ்கந்தவரோதயக் கல்லூரியின் அதிபராக நியமனம் பெற்று அக்கல்லூரியின் வளர்ச்சிக்குப் பெரிதும் பங்காற்றினார்.

1944 தொடக்கம் 1945 வரையான ஒரு வருட காலப்பகுதிக்கு வடபகுதிக்கான பாடசாலை மேற்பார்வையாளராக (Inspector of Schools) தனது சேவையை எமது பாடசாலைகளுக்கு நல்கினார். 1945ம் ஆண்டு தற்போது யாழ்ப்பாணப் பல்கலைக்கழகமாக நிமிர்ந்து நிற்கும் பரமேஸ்வராக் கல்லூரியினது உப அதிபராகப் பதவியேற்று அக்கல்லூரியின் நிர்வாகத்தை மிகத்திறமையாக வழிநடத்தினார். இதன் விளைவாக 1952ஆம் ஆண்டு அக்கல்லூரியினது அதிபராகப் பதவி உயர்வு பெற்றார். அதிபராகக் கடமையாற்றிய வேளைகளில் கல்லூரித் தாபகர் அமரர் சேர். பொன். இராமநாதன் அவர்கள் கல்வி, விளையாட்டு மற்றும் மத கலாசாரத் துறைகளில் கண்ட கனவுகளையும் கொண்ட எண்ணங்களையும் நிறைவேற்றுவதற்காக தனது அர்ப்பணிப்பான சேவையை வழங்கத் தவறவில்லை.

**அதிபர் சிவபாதசுந்தரம் தன்வாழ்நாள் முழுவதும் தனது அறிவுப் புலமையை ஆழ்ந்த சிந்தனை உணர்வை, ஆளுமைத் திறனை எமது சமூக மேம்பாட்டுக்காகச் செலவிட்டார். பின்நாளில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் அமரருக்கு கௌரவ கலாநிதிப் பட்டம் வழங்கிக் கௌரவித்தமை குறிப்பிடத்தக்கது.**

இவரது ஆளுமைத் திறன், அர்ப்பணிப்பு மிக்க அதிபர் சேவையின் பேறாக 1968இல் அதிசிறப்புத்தர அதிபராக (Super Grade

Principal) வண்ணை வைத்தீஸ்வராக் கல்லூரிக்கு நியமனம் பெற்றார். 1972இலே அரச சேவையில் இருந்து ஓய்வுபெறும் வரை அக்கல்லூரி வளர்ச்சிக்காக உழைத்த அமரர் சிவபாதசுந்தரத்தினது அரச துறை வாழ்வு அதிபராக ஆரம்பித்து அதிபராகவே நிறைவு பெற்றமையால் அவரை எல்லோரும் இன்றும் அதிபர் சிவபாதசுந்தரம் என அழைப்பதில் வியப்பேதுமில்லை.

அதிபர் சிவபாதசுந்தரம் தன்வாழ்நாள் முழுவதும் தனது அறிவுப் புலமையை ஆழ்ந்த சிந்தனை உணர்வை, ஆளுமைத் திறனை எமது சமூக மேம்பாட்டுக்காகச் செலவிட்டார் என்பதற்குச் சான்றுகளாகப் பின்வருவனவற்றுக் குறிப்பிடமுடியும்.

- வடபகுதி அதிபர்கள் சங்கத்தின் தலைவராகப் பணியாற்றியமை.
- யாழ். போதனா வைத்தியசாலையின் நிர்வாகக் குழுமத்தின் தலைவராகச் செயற்பட்டமை.
- உயர் கல்விக்கான தேசியப் பேரவையின் அங்கத்தவராகப் பதவிபெற்றமை.
- யாழ்ப்பாணப் பல்கலைக்கழகப் பேரவை உறுப்பினராகப் பணியாற்றியமை.

பின்நாளில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் அமரருக்கு கௌரவ கலாநிதிப் பட்டம் வழங்கிக் கௌரவித்தமை குறிப்பிடத்தக்கது.

ஆன்மீகத் துறையிலும் ஈடுபாடு அதிகம் கொண்ட இவர், யோகர் சுவாமிகளின் சிந்தனைகளினால் வசப்பட்ட ஒருவராகி அவரது மிக நெருக்கமான பக்தர்களுள் ஒருவராக வாழ்ந்து சிவயோக சுவாமி சிவதொண்டன் நிலையத்தின் உபதலைவராகவும், தலைவராகவும் பதவி வகித்து பெரும் பணியாற்றினார்.

ஆன்மீகத்துறை ஈடுபாடு போன்று பிரபல அரசியல்வாதியும் சட்டத்தரணியுமான அமரர் ஜி.ஜி. பொன்னம்பலத்தின் மறைவு வரை அரசியலிலும் ஈடுபாடு கொண்டிருந்தவர் பின்னாளில் அதிலிருந்து ஒதுங்கிக்கொண்டார். இத்தகைய பல்துறை ஆளுமை மிக்க அதிபரைப் பெற்ற அளவெட்டித் தாய் மீண்டும் தன் மடி சிலிர்த்துக்கொள்கிறாள் இத்தொகுப்பின் மூலமாக.............!

# அ. விஸ்வநாதன்



அளவெட்டி அருணோதயக் கல்லூரியில் கற்பித்த நல்லாசிரியர்களில் இவரும் ஒருவர். அருணோதயக் கல்லூரி ஆசிரியராக இருந்ததோடு அளவெட்டிக் கிராமத்தில் சில பொதுத் தொண்டுகளிலும் ஈடுபட்டவர். பொதுத் தொண்டுகளில் முதலிற் சைவ வாலிப சங்கச் செயலாளராகவே புகுந்தார். அக் காலத்தில் சைவ வாலிப சங்கம் பல நற்பணிகளை மேற்கொண்டிருந்தது. இவர் செயலாளராகவிருந்த காலம் நாற்பதுகளின் முற்பகுதியென்றே கருதுகின்றேன். அக் காலத்தில் அளவெட்டியிலுள்ள சைவப் பாடசாலைகளுக்கிடையே போட்டிப் பரீட்சைகளை நடத்துதல், பரீட்சைகளில் திறமை காட்டுவோருக்கு பரிசில்களை வழங்குதல், வருடாந்தக் கூட்டங்களை அதிவிமரிசையாக நடத்துதல், இடையிடையே அறிஞர்களையழைத்துச் சைவப் பிரசங்கங்களை நடத்துதல், பாடசாலைகளில் சந்தான குரவர் குருபூசை நடைபெற ஒழுங்குகள் மேற்கொள்ளுதல், ஆலயங்களில் சமய குரவர் குருபூசைகளை நடத்துதல் முதலான பலப்பல நிகழ்வுகள் கடமைகள் சைவ வாலிப சங்கத்துக்குரினவாயிருந்தன. இவர் செயலாளராக இருந்த காலத்தில் இவை அனைத்தும் ஒழுங்காக நடைபெற்றன.

அளவெட்டி கும்பழாவளைப் பிள்ளையார் ஆலயத்தின் தர்மகர்த்தாக்கள் சபையின் செயலாளராகப் பல் லாண்டுகள் கடமையாற்றினார். இவர் செயலா ளராயிருந்தபோது ஆலயப் பணிகள் பல நிறை வேறின. ஆலயத்தில் நடைபெறும் புராண படனம் முதற் பல பணிகளிலும் ஈடுபட்டவர் ஆவார். கும்பழாவளை விநாயகராலய பணி நிறைவேறிய பின் பெருமாக்கடவை விநாயக ராலயம், அழகொல்லை விநாயகராலயம், துர்க்கையம்மன் ஆலயம் முதலான பல ஆலயங்களிலும் இவர் பணி தொடர்ந்தது. இவர் நல்ல குரல்வளம் உள்ளவராதலின் புராணப் படிப்பில் இவரைப் பங்குபற்றச் செய்வதில் ஆலயங்கள் போட்டியிட்டன.

ஏழாலை கலாநிதி மு.கந்தையா B.A. அவர்களின் நூல் வெளியீட்டுச் சபையின் தலைவராக இருந்து அவர் இறந்த பின்னும் அவரது ஆக்கங்கள் சில வெளியிடுவதற்கு உதவினார். கேணிக்கரை வைரவர் ஆலய தருமகத்தாக்கள் சபைத் தலைவராகவும் இருந்துள்ளார்.

♦ ♦ ♦

# ஆசிரியர் பரநிருபசிங்கம்

ஆசிரியர் பரநிருப சிங்கம் அருணோதயாக் கல்லூரியிற் கற்பித்தவர். கற்பித்தலில் திறமை வாய்ந்த ஆசிரியர் என்று பெயர் எடுத்தவர்களில் இவரும் ஒருவர். பொதுப் பணி என்பதை இவர் விரும்புவதில்லை என்பதே பலரது அபிப்பிராயம். பொதுப் பணிக்கென்று புறப்பட்டவர்கள் பலர் செய்யும் பண்பற்ற செயல்களைக் கண்டு இவர் அதில் ஈடுபடாமல் இருந்திருக்கலாம் என்றே எண்ணத்தோன்றுகிறது. பொதுப்பணியில் ஈடுபடாமல் விட்டாலும் யாரேனும் உதவி கேட்டால் அதை மன மகிழ்வோடு செய்து கொடுப்பவர் என்பது எல்லோர்க்கும் தெரியும். சமயம், கணிதம் என்பனவே அவர் எடுத்துக் கொண்ட முக்கிய துறைகள். இத்துறைகளில் மிகவல்லவர். அருணோதயாவில் இவர் ஒரு கணித ஆசிரியராகவே மதிக்கப்பட்டார். பாடசாலை நேரசூசியை அமைத்தல், ஆசிரியர் சம்பளத்தை பங்கிட்டுக் கொடுத்தல் என்பவற்றை இவரே நீண்ட காலமாக கவனித்தவர். தேவையில்லாமல் தங்களை பிரசித்தப்படுத்த ஆங்கிலம் பேசுவோரைக் கண்டால் இவருக்குப் பிடிக்காது. யாரும் இப்படி நடந்து கொண்டால் நேரே குத்திக் காட்டிவிடுவார். சொல்ல வேண்டியவற்றை அஞ்சாது சொல்லிவிடுவார்.

இவர் சற்குரு யாரேனும் உளரோ என்று நாடுபவர். முதலில் சற்குணசிங்கம் உபாத்தியார் எனப்படும் 'சுவாமி சிவசத்தரைக்' குருவாக ஏற்றவர். அவருடைய விவேகம் அவரைக் கவர்ந்த போதும் வெகு நாள் இவர் நட்பு நீடிக்கவில்லை. பின்னர் சிந்தனைச் செல்வர் கைலாசபதியைக் குருவாக ஏற்று நீண்டநாள் ஏன் கைலாசபதி இறக்கும் வரை அவரையே பற்றியிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

இவருடைய மகன் இறைகுமாரன் அநியாயமாக கொல்லப்பட்டதால் இவர் பெரிதும் உளத்தாக்கமுற்றார். எனினும் விதியைப் பெரிதும் நம்புபவராதலால் அக்கொலை காரணமாக மனந் தளர்ந்திடார். அடுத்து அவருடைய மனைவியும் இந்திய இராணுவச் சிப்பாய் ஒருவனின் இலக்கு வைக்கப்படாத தேவையற்ற துப்பாக்கிச் சூட்டினால் மரணத்தைத் தழுவியதும் குறிப்பிடத்தக்கது. இவருடைய மக்கள் பலர் வெளிநாடுகளில் வாழ்வதால் இவரும் அந்நாடுகளை வட்டமிட்டே திரிகிறார். இவர் இப்போது உடல்நிலை தளர்ந்தவராக கனடாவில் வசிப்பதால் அவர் இலங்கையில் வந்து அளவெட்டியிற் தங்குவது சாத்தியமாகுமோ தெரியவில்லை.

ஆசிரியர் திரு. ச. பரநிருபசிங்கத்திற்கும் எனக்கும் நெருங்கிய தொடர்பு 15 வருடங்களுக்கு மேல் இருந்து வருகிறது. தமிழ், இலக்கண இலக்கியங்களில் என்னிடம் சந்தேகம் தெளிவதுண்டு. பரநிருபசிங்கத்தின் தமிழறிவு, தமிழ்ப் பண்தர்களின் அறிவுக்கு எத்துணையும் குறைந்ததன்று. நுண்ணறிவு, தருக்கரீதியான விவேகம் இவருடைய தனிச் சிறப்புக்கள்.

- பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை

* * *

[illegible]

ஆசிரியர் பரநிருபசிங்கம்

# அதிபர் ந. சிவபாதன்

அருணோதயக் கல்லூரி அதிபர்களாகப் பணிபுரிந்தவர்களில் கல்லூரியை வளர்த்த சிலரில் ஒருவர் சிவபாதம் அவர்கள். கல்லூரி ஆசிரியராக இருந்ததை விட அதிபராக வந்தபோதே அவர் கல்லூரி நலன்விரும்பிகளால் கணிக்கப்படும் ஒருவரானார். எல்லோரோடும் இனிமையாகப் பேசிப் பண்புடன் பழகும் சாதுரியம் இவருக்குண்டு. இவர் கோட்டக் கல்வி அலுவலராகச் சென்றதால் கல்லூரித் தலைமை இவரைவிட்டு நீங்கியது.

இவர் பல சமூகத் தொண்டுகளுடனுந் தம்மையிணைத்துக்கொண்டு அவற்றின் வளர்ச்சிக்காகப் பாடுபட்டவர். அளவெட்டி சைவ வாலிபர் சங்கம், கும்பழாவளைப் பிள்ளையார் ஆலய தர்ம கத்தாக்கள் சபை என்பவற்றில் இவர் பெரிதும் ஈடுபாடுடையராகத் தொண்டாற்றினார். கும்பழாவளைப் பிள்ளையார் ஆலய உபயகாரராக இருந்ததோடு தொண்டுகள் பல புரிந்தவராகவும் விளங்கினார். ஆசிரியராக இருந்தபோதே இவர் பொதுமக்களிடம் பணம் சேர்த்து முக்கியமான கட்டிட வேலைகளை முடித்தவர். இவரை அதிபராக்குவதில் அப்போது காங்கேசன்துறைத் தொகுதிப் பாராளுமன்ற உறுப்பினராகவிருந்த அமிர்தலிங்கம் அவர்கள் பெரும் பங்காற்றினார்.

புலம்பெயர்வு காரணமாக இவர் கொழும்பில் தங்க நேர்ந்ததால் இவர் கும்பழாவழைப் பிள்ளையார் ஆலயத் திருப்பணியில் தொடர்ந்தும் ஈடுபட முடியாது போய்விட்டது. எனினும் கட்டிட வேலை முடிந்து கும்பாபிஷேகம் திருவிழா என்பன நடைபெற்றபோது அவர் கொழும்பிலிருந்து வந்து அவற்றிற் பங்குபற்றியது குறிப்பிடத்தக்கது. இவருடைய மனைவியார் அமரராகிவிட்டதாலும் அவருக்கு ஒரேயொரு மகளே இருப்பதாலும் அவரும் மகளுடன் கொழும்பிலேயே தங்க வேண்டியதாயிற்று.

இவர் ஒரு சிறந்த எழுத்தாளர் என்பதை அவருடைய மைத்துனர் பக்தவக்சலனது நினைவு மலரில் இவருடைய நினைவஞ்சலி மூலம் தெளிவாகக் கண்டு கொள்ளமுடிந்தது. அவருடைய ஆவியோடு உரையாடிய வகையில் அவரெழுதியதைக் கொண்டு அவரெழுத்தாற்றலைக் கண்டு மனம் மகிழ்ந்தது. இப்படியான எழுத்து வளமுடைய ஒருவர் ஒரு கதையையாவது எழுத முன்வராமை எழுத்துலகுக்குச் செய்த தொண்டாகாது. அவர் வயது நிரம்பியவராகி விட்டதால் இனி எழுதுவது முடியாத காரியமாம்.

◈ ◈ ◈

# ச. சிதம்பரப்பிள்ளை (B.Sc. மாஸ்ரர்)

கல்விமானும் சிறந்த ஆசிரியரும் நல்ல விவேகியுமாக அளவெட்டியில் வாழ்ந்தவர்களில் 'பி.எஸ்.சி மாஸ்ரர்' எனப் பேசப்படும் ச.சிதம்பரம்பிள்ளையும் ஒருவர். இவர் கலைப்பட்டதாரி மட்டுமல்லாமல் விஞ்ஞானப் பட்டதாரியுங்கூட. இவர் தமிழ் ஆங்கிலம் சமஸ்கிருதம் என்னும் மும்மொழியும் அறிந்தவர். இவர் அளவெட்டியில் முப்பதுகளில் பொதுத் தொண்டுகளில் ஈடுபட்டவர். பின்பு தமது கற்பித்தலிலும் நூல்கள் எழுதுவதிலும் காலத்தை செலவிட்டதால் பொதுத் தொண்டுகளில் ஈடுபடமுடியவில்லை. எனினும் தம்மாலியன்ற உதவிகளை மற்றையோர் கேட்கும் போது அவர் செய்யத் தவறியதில்லை.

இவர் பரமேஸ்வராக் கல்லூரியில் ஆசிரியராகவிருந்தவர். 1936ம் ஆண்டு பரமேஸ்வராக் கல்லூரியில் அரசாங்க சபை உறுப்பினராகவிருந்த சு.நடேசன் அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட பண்டித ஆசிரிய கலாசாலையிலும் ஆசிரியப் பணிபூண்டார். அக் கலாசாலையில் விஞ்ஞானம், கணிதம், சரித்தரம், கற்பித்தல் முறைகள், கற்பித்தல் விதிகள், என்ற பாடங்களைக் கற்பித்தவர் இவரே. அக் கலாசாலை மாணவர்கள் பண்டிதப் பரீட்சைக்குத் தோற்ற வேண்டியிருந்தால் மற்றைய பாடங்களைத் திருப்பிப் பார்ப்பதற்கே இவர்களுக்கு நேரங் கிடையாது. சிதம்பரம்பிள்ளை ஆசிரியரின் கற்பித்தல் முறையானது பாடங்களைத் திருப்பிப் பார்க்க வேண்டிய தேவை யில்லாமற் செய்து விடும். இவரையொரு உத்தம ஆசிரியர் எனக் கூறலாம். பரமேஸ்வர பண்டித ஆசிரிய கலா சாலையின் அதிபராக இருந்தவர் புலோலி குமாரசாமிப் புலவரின் இளைய மகனாகிய கலாநிதி சிவப்பிரகாசம் அவர்கள். அங்கு வித்து வான் கார்த்திகேசுவும் நவநீதகிருஷ்ண பாரதி யாரும் பண்டித வகுப்புப் பாடங்களைக் கற்பித் தனர். கார்த்திகேசு பாடங்களை நன்கு ஆயத்தப்படுத்தியே வகுப்புக்கு வருவார். வகுப்புக்கு ஒன்பது மணிக்கு வந்தால் வகுப்பு முடியும் பன்னிரண்டு மணி வரையும் பெரும்பாலும் கதிரையில் அமராதே கற்பிப்பார். பாரதியார் ஆயத்தஞ் செய்ய வேண்டிய தேவையில்லாதவர். கலா நிதி சிவப்பிரகாசமும் அத்தகையவரே. இந் நால்வரின் கூட்டும் அதிசயமானது. மதுரைப் பண்டிதப் பரீட்சையில் அங்கு கற்றோர் பலர் சித்தியடைய இந்நாற் கூட்டே முக்கியம் எனலாம்.

♣ ♣ ♣

ச. சிதம்பரப்பிள்ளை (B.Sc. மாஸ்ரர்)

## கவிஞர் கந்தவனம்



இவர் கவிஞராத லோடு சிறந்த எழுத்தா ளருமாக இருப்பதால் அவர் பற்றிப் புலவர்கள் பகுதியில் எழுதியிருக்க லாமெனச் சிலர் கருத லாம். இவர் தென்மராட்சியிற் பிறந்து குரும்ப சிட்டியில் மணம் முடித்து வாழ்ந்தவராதலால் அவர் கலைப்புகழை அளவெட்டி பெறுவது சேராத்தனம் என்பதால் அங்கு சேர்க்காமல் அளவெட்டி அருணோதயாக் கல்லூரியின் ஆசிரியராகச் சேவை செய்தவர் என்பதால் அக்கல்லூரி ஆசிரியர் வரிசையில் அவருக்கு இங்கு இடமளிக்கப்பட்டது.

கவிஞர் கந்தவனம் அவர்களின் சேவை கிட்டத்தட்ட ஒருவருட காலமே அருணோதயாக் கல்லூரியில் இடம் பெற்றது. அக்காலப் பகுதியில் அவர் செய்த சேவை மகத்தானது. அருணோதயாக் கல்லூரியின் ஆரம்பப் பிரிவுப் பாடசாலையைக் கட்டி முடித்தவர் அவரே. நிர்வாகத்திலும் அவர் திறமை மிக்கவராக இருந்தார். எல்லா ஆசிரியர்களோடும் அன்பா கப் பழகி அவர்களுடைய முழுச்சேவையும் கல்லூரிக்குப் பயன்பட வழி செய்தவர். அவர் கல்லூரி அதிபராக வந்தபின் அவர் குறித்த ஒரு அரசியற் கட்சியினரோடு நன்கு பழகுவது மாற்றுக் கட்சியினருக்குப் பிடிக்கவில்லை அ த ன ா ல அவ ா க ளு டை ய சிபாரிசின் பேரிலே அதிபராயிருந்த கந்த வனம் வேறிடத்துக்கு மாற்றப்பட்டார். அவரு டைய சேவையை விரும் பிய சில ஆசிரியர்களின் தூண்டுதலின் பேரில் மாணவர்கள் சில நாள் கள் கல்லூரியைப் பகிஷ் கரித்தனர். வகுப்புக் களில் சில மாணவர் களே இருந்ததால் வகுப் புக்கள் நடைபெற வில்லை. அதிபரும் வகுப்புகளுக்குச் செல்லுமாறு ஆசிரி யர்களைத் தூண்ட வில்லை.

சில நாள்களின் பின் அதிபர் சிவராசசிங்கம், இம்மாற்றத்தை செய்வித்தவரின் தூண்டுதல் காரணமாக மாணவர் ஒருவர் இருந்தாலும் வகுப்புக்குப் போய் கற்பிக்கும்படி ஆசிரியர்களைப் பணித் தார். பின்பு படிப்படியாக வேகந் தவிர்ந்துவிட்டது. ஒரு நல்ல அதிபரை அளவெட்டி அருணோ தயா இழந்தது. கவிஞரும் வேறு பாடசாலைக் குப் போய்விட்டார். இப்போது கனடாவில் கலைத் தொண்டாற்றுகிறார். அவர் புகழ்பூத்து வாழ்க.

### விசேட தரவுகள்

இலக்கிய உலகம், கவியரங்கில் கந்தவனம், கீரிமலையினிலே, பாடுமனமே, எத்தாளம், முத்தான தொண்டர், பத்துப்பாட்டு, ஆறுமுகம் ஆகிய கவிதை நூல்களுக்குச் சொந்தக்காரன். புவியியல் நூல்கள் பலவற்றைத் தந்த புலமையாளன். அளவெட்டி மக்களதும் அருணோதயா மாணவர்களினதும் அன்பினைப் பெற்ற நல் அதிபர கவிஞர் கந்தனம் வனம்.

கவிஞர் கந்தவனம்

# சட்டத்தரணி இளையதம்பி

அளவெட்டியிற் பல சட்டத்தரணிகள் இருந்தார்கள். இன்னும் இருக்கிறார்கள். அப்படியிருந்தும் மூத்த சட்டத்தரணியும் இப்போது எம்மத்தியில் மறைந்து விட்டவருமான சீ. இளையதம்பி அவர்களைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறோம். இளையதம்பி அவர்கள் சிவில் உரிமை சம்பந்தமான வழக்குகளில் ஒரு அப்புக்காத்துவோடு அல்லது அவருக்கு மேலான தகுதியுள்ளவரோடு வாதிட்டு தன் கட்சியை நியாயப்படுத்தக் கூடிய வல்லமை பெற்றவராக இருந்தார். அவர் சட்டத்தரணி ஆவதன் முன் சிறிது காலம் ஆசிரியத் தொழிலில் ஈடுபட்டவரென அறிகிறோம். அவரது ஆசிரியத்தொழில் அளவெட்டி ஆங்கில வித்தியாசாலையிலேயே இடம் பெற்றது என்பதையும் அறிய முடிகிறது.

இளையதம்பி அவர்கள் சமதான நீதவானாகவும் உத்தியோகப்பற்றற்ற நீதவானாகவும் விளங்கினார். அளவெட்டி கும்பழாவளை ஆலய உரிமை சம்பந்தமாக நீதிமன்றில் வழக்கு நடந்த போது பூசகர் சார்பாக இவர் வழக்கில் சட்டத்தரணியாக நியமிக்கப்பட்டார். வழக்கு நீண்ட நாளாக நடைபெற்றது. ஈற்றில் சட்டத்தரணி இளையதம்பி அவர்கள் இருபகுதி யாரும் இணங்கிக் கொள்ளக் கூடிய வகையில் வழக்கை முடிவுக்கு கொண்டு வந்ததோடு அத்தீர்ப்பை நீதிமன்றம் மூலம் வழங்குவித்துக் கிராமத்தில் ஒரு சுமுக நிலையை ஏற்படுத்திய செயல் எல்லோராலும் பாராட்டப்பட்டது.

இவரது குடும்பம் பெரியது. இவர் பத்துப் பிள்ளைகளின் தந்தை யாக இருந்து அவர்களைக் கல்வியிற் பெரி தும் முன்னேற்றமடையச் செய்தார். ஒரு மகன் அளவெட்டியிலேயே முதன் முதல் வைத்திய கலாநிதிப் பட்டம் பெற்றவர். இவருடைய மக்க ளிற் பலர் இன்றும் வெளிநாடுகளில் வாழ்கின் றனர். இவருடைய மைத்துனரான கண்ணுத்துரை என்பவர் பிரபல அட்வக்கேற்றாக இருந்து மறைந்து விட்டார். இவருடைய பிள்ளைகளில் மூத்தவரான மங்கையர்க்கரசியும் வைத்திய கலாநிதி மகேந்திரனும் அமரத்துவம் அடைந்து விட்டனர். இவருடைய பேரப்பிள்ளையாகிய ரேவதி என்பவர் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராக இருப்பது பெருமைப்படத்தக்கதே. இவருடைய ஒரு மகன் சட்டத்தரணியாக இருந்து ஆங்கிலப் பெண்மணியை மணம் முடித்து இங்கிலாந்திலேயே வாழ்கிறார்.

* * *

# பொறியியற்துறைப் பேராசிரியர் எஸ். மகாலிங்கம்

1926ம் ஆண்டு தை மாதம் 16ம் நாள் செல்லத்துரை தம்பதிகளின் மகனாக மகாலிங்கம் அவர்கள் அளவெட்டி மண்ணிலே பிறந்தார். அவரது குடும்பம் பொருளாதார மேம்பாடு கருதி மலேசியாவுக்குப் புலம்பெயர ஆரம்பக்கல்வியை கோலாலம்பூர் மக்ஷ்வெல் ஆங்கிலப் பாடசாலையில் பெற்றுக்கொண்டார். இரண்டாம்நிலைக் கல்வியை மலேசியாவில் அமைந்திருந்த விக்டோறியாக் கல்வி நிறுவகத்தில் பெற்றுக்கொண்டு தனது பல்கலைக்கழகக் கல்விக்காக இலங்கைத் தொழிநுட்பக் கல்லூரியிலே (கொழும்பு) இணைந்து கொள்வதற்காக 1946ம் ஆண்டு தனது 20ஆவது வயதில் நாடு திரும்பினார்.

1946இல் இருந்து 1950வரை அங்கு கல்வி கற்று 1950ம் ஆண்டு இலண்டன் பொறியியல்துறைப் பட்டதாரியாக தனது முதலாவது பட்டப்படிப்பைப் பூர்த்தி செய்கின்றார். இதன் விளைவாக இலங்கைப் பல்கலைக்கழகத்தின் பொறியியல் பீடத்திலே உதவி விரிவுரையாளராக நியமனம் பெற்றார்.

பின்னர் பட்டப்பின் படிப்புக்காக இங்கிலாந்துக்குச் சென்று அங்கு (ளுாநககநைடன) பல்கலைக்கழகத்திலே கல்வி கற்று 1956ம் ஆண்டு பொறியியற்துறைக் கலாநிதியாக தகுதி பெறுகின்றார். அதன் பின் நாடு மீண்டதும் இலங்கை பல்கலைக்கழகத்திலே இயந்திரவியல் பொறியியல் துறை (Mechanical Engineering) விரிவுரையாளராக இணைத்துக் கொள்ளப்படுகின்றார்.

இவரது திறமையின் அடிப்படையிலே 1961ம் ஆண்டு சிரேஷ்ட விரிவுரையாளராகப் பதவி உயர்வு பெறுகின்றார். அதனைத் தொடர்ந்து விஞ்ஞானக் கலாநிதி (Doctor of Science) பட்டத்தைப் பொறியியல் துறைக்காக 1969இல் லண்டனில் பெற்றக்கொண்டார். அதன் விளைவாக அதே ஆண்டு இயந்திரவியற்துறைப் பேராசிரியராக நியமிக்கப்பட்டு தனது பணியைத் தொடர்ந்து 1996ம் ஆண்டு பேராதனைப் பல்கலைக்கழகத்திலிருந்து ஓய்வு பெற்றுக்கொண்டார். ஓய்வுபெற்ற பின்னரும் 1996 தொடக்கம் 2005வரையான காலப்பகுதியிலே இயந்திர பொறியியற் துறையின் வருகைப் பேராசிரியராகக் கடமையாற்றியமையும் இங்கு குறிப்பிடத்தக்கது.

தகவுள்ள பல பொறியியலாளர்களை பிரசவித்த அளவை மண் இவர் கொண்ட புகழினால் தான் நிமிர்ந்து கொள்கிறாள்.

# கலாநிதி மு. சண்முகநாதன்

கலாநிதி சண்முகநாதன் அவர்கள் தனது ஆரம்பக் கல்வியை கொட்டாஞ்சேனை விவேகானந்த வித்தியாசாலையில் 1940ஆம் ஆண்டு தமிழ்மொழி மூலம் கற்றார். 1943இல் கொட்டாஞ்சேனை நல்லையன் கன்னியர் மடம் வித்தியாசாலையில் ஆங்கிலமொழியிற் கற்றார். 1943 செப்டம்பரில் தனது தாயாரை இழந்தார். இதன் விளைவாக இவர் தனது ஆரம்பக் கல்வியைத் தனது சொந்த ஊரான அளவெட்டி சீனன்கலட்டி ஞானோதய வித்தியாசாலையில் 1943/44இல் தமிழ்மொழி மூலம் தொடர்ந்தார். 1945இல் மீண்டும் அளவெட்டி ஆங்கில கலவன் பாடசாலையில் தனது ஆரம்பக் கல்வியைத் தொடர்ந்தார்.

1945 - 1950 வரை தனது இடைநிலைக் கல்வியை அளவெட்டி அருணோதயக் கல்லூரியிலும் சிரேஷ்ட இடைநிலைக் கல்வியை 1951 - 1954 வரை வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியிலும் கற்று 1955ம் ஆண்டு இலங்கைப் பல்லைக்கழகத்துக்கு மிக விசேட புலமைப் பரிசில் அடைவுடன் (Exhibition Scholarsip) தெரிவு செய்யப்பட்டு அங்கு பொறியியற் பட்டம் பெற்று வெளியேறி னார். பட்டப்பின் படிப்பு விசேட புலமைப்பரிசில் பெற்று மேற்படிப்புக்காக இங்கிலாந்து சென்று பட்டப்பின் படிப்பை 1960 - 1964 வரை இலண்டன் இப்பீரியர் கல்லூரியில் நீர்வளம் சம்பந்தமான ஆராய்ச்சியைத் தொடரும் வாய்ப்புப் பெற்றார்.

**இக்கால எல்லையில் இவர் பெற்ற பட்டங்கள்**

- இலங்கைப் பல்கலைக்கழகத்தில் பொறியியற்பட்டம் 1ம் வகுப்பு.
- இலண்டன் இம்பீரியல் கல்லூரியில் பொறியியல் டிப்ளோமா.
- இலண்டன் பல்கலைக்கழக கலாநிதிப் பட்டம்
- இலண்டன் சிவில் பொறியியலாளர் நிறுவனத்தின் அங்கத்துவம்.

**தொழில் ரீதியான விபரம்**

இவரது கல்விச் செயற்பாட்டில் இடையில் 9 மாதகாலம் கொழும்பு பல்கலைக்கழக பொறியியற் பீடத்தில் அறிவுறுத்தல் விரிவுரையாளராகவும், பின்னர் 6 மாதங்கள் இலங்கைப் பொதுவேலைகள் திணைக்களத்தில் உதவிப் பொறியியலாளராக ஹோமாகமவில் இராணுவக் கட்டட மேற்பார்வையாளராகக் கடமையாற்றியமையால் ஒரு சிறிது தடங்கல் ஏற்பட்டது.

1964 - 65இல் ஐக்கிய இராச்சியத்தில் வலிங்போட் ஆராய்ச்சி நிலையத்தில் ஆரம்ப வடிவமைப்பு நிலையில் இருந்து தேம்ஸ் நதி தடை அணைத்திட்டம் உட்பட நானாவித பொறியியற் பிரச்சினை சம்பந்தமான தொழில் நிமித்தமும், கடலடி எண்ணெய்க் குழாய் வடிவமைப்பிலும் இரு ஆண்டுகள் கழிந்தன.

1965 - 1973 வரை பேராதனைப் பல்கலைக்கழகத்தில் பொறியிற் பீடத்தில் சிரேஷ்ட விரிவுரையாளராகக் கடமையாற்றிய காலத்தில் நீர்வள முகாமைத்துவமும் கட்டுப்பாடும் என்பது பற்றி கலை, விஞ்ஞான மாணவர்களுக்கு விரிவுரை ஆற்றினார்.

1973இல் தனது மனைவியுடனும் மகளுடனும் இங்கிலாந்து சென்று வலிங்ஸ் போர்ட் நீரியல் ஆராய்ச்சி நிலையத்தில்

1997இல் பதவியிலிருந்து ஓய்வுபெறும்வரை எதிர்பார்த்ததைவிட அதிக காலம் கடமை யாற்றினார்.

இவரது ஆராய்ச்சியின் மையப் பொரு ளாக வளர்முக நாடுகளில் நீர் சம்பந்தமான பிரச்சினைகளை அடையாளம் காணலும் அதற்குரிய தீர்வினை அடைதலுமாக அமைந்தது. அத்துடன் இலங்கையில் உள்ள "கடுல்ல" நீர்ப்பாசனத் திட்டங்கள் போன்ற திட்டங்களைச் செயற்படுத்துவதன் மூலம் வினைத்திறன் மிக்க நீர்ப்பாசனத் திட்டங்களை அமைப்பதேயாகும்.

இதனைத்தவிர நில்வளகங்கை நீரை கடல் நீர் உட்புகுந்து மாசுபடாது வீட்டுத் தேவை களுக்கு உபயோகிப்பது போன்ற திட்டங்களும் மையப்பொருளில் அடங்கும். இவைகளைப் போன்ற ஆசியாவிலும், ஆபிரிக்காலும் மேலும் 20 நாடுகளில் இவ்வகையான திட்டங்கள் உள்ளடக்கப்படு கின்றன.

நீரியல்வள வேலைத்திட்டமானது கடல் கடந்த அபிவிருத்தி அலகுடன் இணைக்கப் பட்டு 15 தொடக்கம் 30 விஞ்ஞான வள வாளர்களுடன், மாதிரிக் கட்டுமானப் பணி யாளர்கள், கருவி வடிவமைப்பாளர்கள், எழுது வினைஞர்கள், நிர்வாக அதிகாரிகள் ஆகி யோருடன் தெரிவு செய்யப்பட்டதொரு துறை யில் அபிவிருத்தியடைவதற்கான சந்தர்ப் பங்களை வழங்கி, திட்டமிடல் முகாமை யாளரும் அவரது குழுவினரும் சேர்ந்து சர்வ தேச மட்டத்தில் உயர் தொழில் நிபுணர்களின் உதவும் கொள்கையுடன் அபிவிருத்தியை அடைவதற்கான முயற்சியாகும்.

கலாநிதி சண்முகநாதன் அவர்கள் 1973இல் சிரேஷ்ட விஞ்ஞான அலுவலராக வும் பின்னர் நீரியல் ஆராய்ச்சி நிலைய (இதுவே HR Wallingford எனப் பின்னர் பெயர் மாற்றம் செய்யப்பட்டது) அதிபராக 8 விஞ்ஞானி கள் செயற்படும் நீர் வள பிரச்சினைப் பகுதியின் தலைவர் பதவி வகித்தார். 1982இல் நிர்வாக மற்றும் தொழில்நுட்ப தலைமை நிர்வாகியாக நெறிப்படுத்தினார். 1997இல் ஓய்வு பெறும் வரை இப்பதவியிலேயே கடமையாற்றினார்.

சர்வதேச மட்டத்தில் தனது சேவைக் காலத்தில் பின்வரும் ஆர்வமூட்டும் முயற்சி களைப் பொறுப்பெடுத்து நடாத்தும் சந்தர்ப் பங்கள் கிடைத்தன.

1) புதுடில்லியை மையமாகக் கொண்ட நீர்ப்பாசனம், வடிகால் வெள்ளக் கட்டுப்பாடு தொழிற்கழகத்தின் சர்வதேச நீர்ப்பாசன, வடிகால் கழிவுகளின் தவிசாளராக (ICID) 1987 தொடக்கம் 1990 வரை பதவி வகித்தார்.

2) 1991 தொடக்கம் 1996 வரை ICID யின் ஆராய்ச்சி அபிவிருத்தி நிரந்தர நிர்வாக சபையில் தலைவர்.

3) 1990 - 1997 வாஹிங்டனில் அமைந்த உலக வங்கியின் நீர்ப்பாசன வடிகால் அபிவிருத்தி திட்ட சர்வதேச ஆலோ சனைச் சபையில் அங்கத்தவர்.

4) உலக வங்கி அமைத்த இந்தியாவின் நர்மதாநதிப் பள்ளத்தாக்கு அபிவிருத்தித் திட்ட சூழலில் ஏற்படும் தாக்கங்கள் பற்றிய ஆலோசனைச் சபையின் நெறியாளர்.

5) தென் ஆபிரிக்காவில் உள்ள ஜொகனஸ்பேர்க் அணைக்கட்டுச் சார்ந்த உலகக் கமிஷன் பற்றிச் சிறப்பாக ஆனால் பொதுவாக அணைக்கட்டுச் சார்ந்த நீர்ப்பாசனம், வடிகால் என்பவைகளின் வகிபங்கு பற்றிய மீள்பார்வையைச் செயற்படுத்தினார்.

6) நேர்வே உதவித் திட்டத்தினூடு பின்னாளில் விதந்துரைக்கப்பட்ட யாழ்ப்பாண நீர் வளங்கள் பற்றிய இலங்கை அரசாங்கத்தின் செயற்பாட்டை மீள்பார்வையிட்டார்.

7) யேமன் அரபுக் குடியரசின் றுயளைஅயச திசை திருப்பும் திட்டத்தை மீள்பார்வையிட்ட 3 நிபுணர் குழுவில் உலக வங்கியின் நியமனம் பெற்ற ஒருவராகச் சேவை செய்தார்.

# Brief Summary of the Education and Professional career of Dr. K. Sanmuganathan

**Education**

Primary schooling was started at the Vivehanandha Vidyalaya, Kotahena around 1940 in the Thamil medium and switched on to the English medium when he joined the Good Shepherd's Convent, Kotahena in 1943. This was interrupted by his mother's death in September 1943 and the resulting move to Alaveddu. The different systems of education meant moving back to the Thamil medium at the Gnanodaya Vidyalaya, Alaveddi during 1943/44 and then again to the English medium at the Alaveddi Mixed English School in 1945.

His secondary education was first at Arunodhaya College (1945/50) and later at Jaffna College, Vaddukoddai (1951/54). He entered the University of Ceylon in 1955 with an Exhibition Scholarship and completed his degree in engineering winning a Government scholarship to pursue post graduate education in England. This led him to imperial College, London (1960/64) to purpose a research in water resources.

**By way of qualifications he obtained :**

- A first class honours degree in engineering from the University of Ceylon;
- A Diploma of Imperial College, London;
- A PhD from the University of London and an
- Associate membership of the Institution of Civil Engineers, London.

**Professional Career**

The educational process was interrupted by a brief spell of nine months as an instructor at the University of Colombo Engineering Faculty and a six month employment as Assistant Engineer working for the Sri Lanka's then Public Works Department, involved in the construction of the Army Cantonment in Homagama.

Another short break was a two year (1964/65) spell at the United Kingdom's Hydraulics Research Station in Wallingford working on miscellaneous engineering problems including the Thames Barrier (then being in the design stage) and the design of oil pipelines on sea beds.

Then came a spell (1966-73) as a lecturer, later Senior lecturer at the Faculty of Engineering in the University in Peradeniya (it has changed names from University of Ceylon to University of Peradeniya) primarily teaching students the

art and science of controlling the power and resources provided by water…

He, now with a wife and daughter, moved back to England and to the Hydraulics Research Station Wallingford in 1973. As it turned out, this proved a much longer spell than initially anticipated, in fact up to his retirement in 1997. The principal area of work at HR was to do with identifying and seeking solutions to problems associated with water relevant to developing countries. Improving the water use efficiency of irrigation schemes such as the Kaudulla Irrigation Scheme in Sri Lanka or ensuring that the domestic water intake at the Nilwala Ganga does not get polluted by salt water, are local examples of a project that covered some twenty countries, mostly in Asia and Africa.

The work at HR attached to the Overseas Development Unit of around 15 to 30 scientific staff supported by the institution's infrastructure of model builders, instrument designers, clerical and administrative staff, provided opportunities to develop as a scientist in the chosen field, manager of projects and staff, and also to work at the international level with leading professionals in the field evolving aid policy and seeing developmental initiatives to fruition.

Dr. S started in 1973 as a Senior Scientific Officer and later as Principal Scientific Officer at the Hydraulics Research Station (later named HR Wallingford) leading a section of around eight scientists working on water resource problems. In 1982 he became the technical and administrative head directing the work of the Unit. He continued in this position until his retirement in 1997.

During this period he had the opportunity to undertake a number of interesting tasks at the international front. He was :

- The Chairman of the Working Group on Irrigation, Drainage and Flood Control of the International Commission on Irrigation and Drainage (ICID) based in New Delhi from 1987 to 1990;
- The Chairman of the Permanent Committee on Research and Development of the ICID from 1991 to 1996;
- A member of the Advisory Board of the International Programme of Research in Irrigation and Drainage (IPTRID) based at the World Bank in Washington from 1990 to 1997;
- The director of a consultancy to review the environmental impacts of the Narmada Valley Development Project in India, Commissioned by the World Bank;
- Carried out a review of the role of irrigation and drainage with particular reference to dams as part of the work of the World commission on Dams based in Johannesburg, Republic of South Africa;
- Reviewed and later prepared fresh proposals for the development of water resources in Jaffna for the Government of Sri Lanka through the Norwegain Aid Programme;
- A member of the World Bank team of three professionals appointed to review the design of the Wadi Mawr diversion scheme in Yemen Arab Republic.



Name : **Chelliah SIVAYOGANATHAN**
Date of birth : 30.12.1947
Home Address : Periakinattady, Alaveddy North, Alaveddy
Occupation of father : Farmer
Civil stutus : Married (wife and 3 children)

Schools attended : Sathananda Vidyalayam, Alaveddy (Grade 1-4)
Mahajana College, Tellippalai [Grade 5 – GCE (A/L)]

Entered the University of Peradeniya in October 1967

Present designation : Senior Professor, Department of Agricultural Extension, Faculty of Agriculture, University of Peradeniya

Educational Qualifications : B.Sc. Agric. (Ceylon) – 1971, M.Agr.St. (Queensland, Australia) – 1979, Ph.D. (Texas, USA) – 1982

Other Positions : Former Head, Dept. of Agricultural Extension, University of Peradeniya Former Chairman, Board of Study in Agricultural Extension, Postgraduate Institute of Agriculture, University of Peradeniya.
Former Chairman, Board of Trustees, Hindu Temple, University of Peradeniya.

Work Experience : Research Officer, Dept. of Agriculture, 1971 – 72
Extension Officer, Mahaweli Development Board, 1973 – 75
Visiting Fulbright Fellow, University of Connecticut, USA, 1994 – 95
Institutional Advisor, Integrated Food Security Program, Trincomalee, 2000 – 01

Seminars / Workshops / Training Programs Attended :
: Participated in many local and overseas seminars / workshops / training programs.
Countries visited include Australia, USA, Italy, Belgium, South Korea, Philippines, Thailand, Nepal, India, Bangladash

Publications : 30 research papers in refereed journals, 7 chapters / papers in books, 28 monographs / reports, 30 scientific communications.

Editing of Journals / Publications : Edited a large number of seminar proceedings and journal papers.

Prof. C. Sivayoganathan

# செ. குமாரசாமி

இலங்கைப் பாராளு மன்றத்தில் தமிழ் ஆங்கிலம் என்னும் இருமொழிகளிலும் இணைவேக உரைப்பெயர்ப்பாளராகக் கடமையாற்றி ஓய்வு பெற்றவர் குமாரசாமி அவர்கள். ஓய்வு பெற்ற பின்னும் அரசாங்கத்தால் அவ்வப்போது இவர் சேவைக்கு அழைக்கப்படுவது இவரின் சேவையின் இன்றியமையாமையைப் புலப்படுத்துவதாக உள்ளது. இவர் ஆரம்பக் கல்வியை சண்டிலிப்பாய் சிறாப்பர் பாடசாலையில் முடித்துக் கொண்டு மேல் நிலைக் கல்வியை ஸ்கந்தவரோதயாக் கல்லூரியிலும் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியிலும் கற்றார். இருமொழிப் புலமையாளராக இவர் விளங்கினார். தமிழில் சிறந்த எழுத்தாளராகவும் இவர் உள்ளார்.

இவர் தமது கல்வியை முடித்துக் கொண்டு எத்தகைய தொழிலுக்கும் போகாமல் இருந்த போது தமிழரசுக் கட்சியின் தலைவர் தந்தை செல்வாவுடன் இவருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. அவருடைய கூட்டங்களிற் கலந்து கொண்டு கட்சியின் கொள்கை விளக்கத்திலும் இவர் ஈடுபட்டார். இவருடைய நேர்மையையுந் தன்நலங்கருதாச் சேவையையும் அறிந்து கொண்ட தந்தை செல்வா இவரைத் தம்முடைய அந்தரங்கச் செயலாளராக அமர்த்திக் கொண்டார்.

இவர் தந்தை செல்வாவின் கொழும்புக் காரியாலயத்தில் கடமையாற்றிக் கொண்டிருந்த போது இலங்கைப் பாராளுமன்றத்துக்கு உரை பெயர்ப்பாளர் ஒருவர் தேவைப்பட்டார். அதற்கு இவர் விண்ணப்பித்து அப்பதவியைப் பெற்றார். பின்னாளில் பேராசிரியராயிருந்த சிவத்தம்பி என்பவர் முதலாய பலர் இப்பதவிக்கு விண்ணப்பித்த போதும் இவர் திறமையடிப்படையில் தெரிவு செய்யப்பட்டார் என்பது குறிப்பிடத்தக்கது. இணைவேக உரைப்பெயர்ப்பாளர்களில் இவர் சிறப்பாக சேவையாற்றியதால் இவர் எல்லோரது நன்மதிப்பையும் பெற்றார். அமெரிக்க விண்வெளிப் பயணம் பற்றிய இவரது நேர்முக உரைபெயர்ப்பு மிகப்பிரபலம் வாய்ந்தது. அவ்வுரைபெயர்ப்புக் காரணமாக இவர் "அப்பலோ" குமாரசாமி எனவும் அழைக்கப்பட்டார். இலங்கை இனப்பிரச்சினை காரணமாகத் திம்புவில் நடைபெற்ற சர்வகட்சி மாநாட்டிலும் இவர் உரைபெயர்ப்பாளராக இருந்தார். அதிலும் இவரது திறமை வெளிப்பட்டதால், பூட்டான் குமாரசாமியும், திம்புக் குமாரசாமியும் ஆனார். இவர் ஆங்கிலத்தைக் கற்க விரும்புவோருக்குச் சொல்லிக் கொடுக்க எப்போதும் ஆயத்தமாக உள்ளார்.

> எந்தத் துறையிலும் எந்தக் கிராமத்திலிருந்தும் எந்த இரவல் நாடாதும் எல்லாத் துறையிலும் எந்தக் கிராமத்துக்கும் எந்தத் துணையும் வழங்கவல்ல வளம்பல கொண்ட கிராமம் அளவெட்டி. பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பாராட்டும் பழுதிலா விழுமியங்களுக்கு உயர்ந்து அறம் ஆற்றி, பொருள் ஈட்டி, இன்பம் காணும் வீடு அளவெட்டி - பூச்சொரியும் பொன்னொச்சி மலரில் செ. குமாரசுவாமி.

இவர் தமிழ் மொழியிலுள்ள சிறந்த நூல்களைக் கற்க வேண்டுமென்பதில் இன்றும் மிக்க ஆர்வமாக உள்ளார். தமிழில் என்ன இருக்கிறது எனப்பலரும் கருதி ஆங்கிலக் கல்வியைத் தொடர்ந்த காலத்திலும் இவர் தமிழ் மொழியின் அருமை பெருமைகளை எடுத்துச் சொல்லி வந்தார். நகர வாழ்விலும் கிராம வாழ்வே சிறந்ததென என்றுங் கருதுபவர். இவர் 1927ம் ஆண்டு அளவெட்டி வடக்கு கூத்தஞ்சீமா என்னுமிடத்தில் செல்லையா தம்பதிகளின் ஏகபுத்திரனாகத் தோன்றினார்.

❖ ❖ ❖

செ. குமாரசாமி

# சுதேச வைத்தியர்கள்

சுதேச வைத்தியர்களாக குழந்தைப்பிள்ளை வைத்தியர் என்றும் முறிவு தறிவு வைத்தியர் என்றும் பலதுறை வைத்தியர் கண்வைத்தியர் எனவும் நின்ற பலர் முன்னாளில் அளவெட்டி யில் இருந்திருக்கலாம். எமது அறிவுக்கெட்டிய கால வைத்தியர் பற்றியே நாமிங்கு பேசமுடி யும் எமது இளமைக்காலத்தில் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகிய நாலிங்கம், வைத்தியப் பிள்ளை என்னும் இருவர் குழந்தைப் பிள்ளை வைத்தியர்களாக கரவச்சை என்னும் இடத்தில் இருந்து சிறப்பாக வைத்தியத் தொழிலைப் பேணினர். அவர்களில் மூத்தவராகிய நாக லிங்கம் கொக்குவிலில் மணம் முடித்து அங் கேயே நிரந்தரமாக குடியேறி வைத்தியத்தொ ழிலை மேற்க்கொண்டார். வைத்தியப்பிள்ளை என்பவர் அளவெட்டியிலிருந்து வைத்தியத் தொழிலை சிறப்பாக நடத்தி வந்தார். இவரு டன் இவருடைய பரம்பரைத் தொழில் முடிவுற்ற தென்றே கொள்ள வேண்டியுள்ளது.

இவர்களைப் போல தில்லையம்பலம் என் னும் வைத்தியரின் புத்திரர்களாகிய கதிரித் தம்பி, கந்தையா என்போர் சுதேச வைத்தியத் துறையில் சிறந்து விளங்கினர். கதிரித்தம்பி என்பவர் பிரபலம் வாய்ந்த குழந்தைப்பிள்ளை வைத்தியராகவிருந்தார். கந்தையா வீட்டிலி ருந்து வைத்தியம் செய்வதோடமையாது துவிச் சக்கர வண்டியிற் சென்று வெளியூர்களிலும் வைத்தியம் செய்வதுண்டு கட்டுவன், வயா விளான், மயிலிட்டி பலாலி முதலிய கிராமங் களுக்கும் இவர் செல்வார். இவர்கள் மூவரது வைத்தியமும் பரம்பரை வைத்தியமே. இவர் கள் தங்கள் முன்னோரிடம் கற்ற கல்வியைப் பயன்படுத்தியே வைத்தியத்தில் ஈடுபட்டனர். இவருடைய தந்தையார் தில்லையம்பலம் குழந்தைப்பிள்ளை வைத்தியத்தில் பெரும் புகழானவர் என்பர்.

இவர்களுக்குப் பின் குழந்தைப்பிள்ளை வைத்தியத்தில் ஈடுபட்டவர் வைத்தியலிங்கம் என்பவர். இவர் ஆங்கிலமும் படித்தவர். ஆனால் ஆயுள்வேதமோ சித்த வைத்தியமோ கல்லூரி களிற் கற்றவர் அல்லர். இவருடைய வைத்தியத் திறமையால் இவரை நாடி அளவெட்டியுள்ளார் மட்டுமல்லாமல் அயலக்கிராமத்தவர்களும் அளவெட்டிக்கு வருவதுண்டு.

அளவெட்டி உந்துடையென்னும் இடத்தில் பரம்பரையாக வைத்திய விற்பன்னர்கள் தோன்றிப் பிணிதீர்ப்பதில் முன்னணியில் நின்றார்களெனக் கேள்விப்படுகிறோம். இப் பரம்பரையில் வந்தவரே அம்பலவாணர் என்பவர் இவர் பல நோய்களுக்கும் வைத்தியராக விளங்கினார்.

கட்டுச் சுத்துக்கள், ஆறாத புண்கள், தலை யிடி காச்சல் முதலாகிய சகல ரோகங்களுக்கும் இவர் சிறந்த மருத்துவராக விளங்கினார். இவர் ஆயுள் வேதக்கல்லூரியில் படித்துத் தேறிய ஆயுள் வேத வைத்தியருமாக இருந்தது இவருடைய குலவித்தைக்கு மேலும் மெருகூட்டு வதாக இருந்தது. அரசினர் வைத்தியசாலை வைத்தியர்களால் தீர்க்க முடியாதிருந்த நோய் களையும் தீர்த்த பெருமைக்குரியவர் அம்பல வாணர். இவர் வைத்தியராக இருந்த காலத்தில் அளவெட்டிக் கிராமம் நோய் கண்டஞ்சாத கிராமமாக மிளிர்ந்தது என்பது வியப்பன்று.

வைத்தியத்துறையில் மிக்க புகழ் பெற்ற இன்னொருவர் வைரமுத்து. இவரும் ஒரு சிறந்த வைத்தியராவார். இவர் தந்தையாரும் வைத்தியராக இருந்ததால் இவர் வைத்தியம் குலவித்தையாகும். தந்தையும் தனயனும் சிறந்த விசகடி வைத்தியர்கள். நாய்க்கடிக்கு பெயர் பெற்ற வைத்தியராக இருவரும் விளங் கினர். விசர்நாய்கடியைக்கூட பின்விளைவில் லாமல் தீர்த்து வைத்தவர்கள் இவர்கள் என் றால் இவர்களின் விசகடி வைத்திய பண்பை மேலும் எடுத்துப் பேசவும் வேண்டுமோ? பாம் புக்கடி, புலிமுகக்கடி, கருங்குழவித்தாக்குதல்

முதலிய நோய்களால், இவ்விருவரும் (தந்தையும் மைந்தனும்) இருந்த காலத்தில் எமது கிரா மத்தில் இறந்தோர் சிலர் என்றே கூறலாம். மகன் இராசதுங்கம் சன்னி, சுவாதம், வாதம் முதலாய நோய்களுக்கும் வைத்தியராகச் செயற்பட்டார். இவருடைய ஏக மகளும் மேநாட்டு வைத்திய முறையைக் கற்று வைத் திய கலாநிதிப் பட்டம் பெற்று வைத்திய கலா நிதி தெய்வேந்திரம் என்பவரை மணம் முடித்து ஆங்கில வைத்தியத் துறையில் ஈடுபட்டதால் எமது சுதேச வைத்தியத்துறைக்கு நலிவேற் பட்டதென்பது மிகையாகாது.

அளவெட்டியிலிருந்த புகழ்பெற்ற கண் வைத்தியர் ந.செல்வவிநாயகமூர்த்தியென்பவர். இவருடைய தந்தையாரும் கூட கண்வைத்திய ராகவே இருந்தவர் என அறியவருகிறது. அரசினர் வைத்திய சாலை டாக்டர்களால் கைவிடப்பட்ட கண்வருத்தங்களைக் கூடதீர்த்து வைத்த பெருமைக்குரியவர்கள் நல்லதம்பியும் மகன் செல்வமூர்த்தியுமாவர். கண்ணில் ஏற்படுகின்ற சகல ரோகங்களுக்கும் இவர்கள் வைத்தியம் செய்து நோயைக்குணமாக்கியது உலப்பிரசித்தமானது இக்கிராம மக்கள் மட்டு மல்லாமல் யாழ்ப்பாணத்தின் பிறபகுதி மக்கள் தீவுப்பகுதி மக்கள் வன்னிப்பகுதி மக்கள் என்று பலரும் அளவெட்டி கண்வைத்தியரை அடைந்து அளவெட்டியிலேயே தங்கியிருந்து நோய் தீர்த்து செல்வது அக்கால அளவெட்டி மக்கள் அனைவருக்கும் தெரிந்த சங்கதியே. கண்ணில் தையலூசி ஒன்று குற்றிய நிலையில் தம்முடைய தந்தையாரிடம் ஒரு பெண்மணி யைக் கொண்டு வந்த கதை பற்றி செல்வநாய கம் அவர்கள் சொல்லியதை அப்படியே வாசகர் களுக்கு அறியத்தருவோம்.

"ஒரு நாள் ஒரு பெண்ணைக் கண் வைத் தியத்திற்காக எனது தந்தையாரிடம் கொண்டு வந்தார்கள். பெண்ணின் ஒரு கண்ணில் தைய லூசியொன்று ஆழமாகக் குத்தியிருந்தது. அதை இழுத்தெடுத்தால் கண்விழியும் அதனு டன் வந்து விடுமென்பது எல்லார்க்கும் அச்சத்தை ஏற்படுத்தியிருந்தது. எனது தந்தையார் ஒரு கட்டுத் தென்னீர்க்கு சீவி எடுத்துவரும்படி கூறினார். விரைவில் ஈர்க்கும் கொண்டு வரப்பட்டது. ஈர்க்கில் தலை வைத்துப் பெண்ணைக் கிடக்கும்படி தந்தையார் கூறினார். அப்படியே பெண் கிடந்த பின் ஊசித்துவாரத்தில் நூலைக் கோர்த்து நூலின் இரு பக்கத்தையும் வீட்டு இறப்பில்(தூண்) கட்டினார். அதன் மேல் ஈர்க்கை ஒவ்வொன்றாக இழுத்தெடுக்கும்படி கூறினார். ஈர்க்கு இழுபட்டு வரும் போது ஊசி கண்ணிலிருந்து விலகி வெளியே வந்துவிட்டது. என்றாரவர் கண் வைத்தியர் நல்லதம்பி அவர்களின் அறிவுத் திறம் மெச்சத்தக்கல்லவா?

இனி மகன் நல்ல தம்பி அவர்களின் திறமையைப் பார்ப்போம் இது அருணோதயா கல்லூரி அதிபராக இருந்த ச.சிதம்பரப் பிள்ளை அவர்கள் கூறியது. "ஒரு நாள் பரமேஸ் வராக் கல்லூரி அதிபர் சிவபாதம் என்னிடம் வந்து தனது ஒரு கண்ணில் ஏதோ உருட்டுவ தாகவும் யாழ்ப்பாணம் அரசினர் வைத்தியசா லையில் காட்டிக் கூட அதன் காரணம் தெரிய வில்லை என்றும் கூறினார். நான் அவரைக் கண் பரியாரியிடம் கூட்டிச் சென்றேன். அவர் கண்ணைத்திறந்து கவனித்தார். வாங்கில் படுக்கும்படி கூறி கூரையிலிருந்த ஓலைச்சட்டம் ஒன்றைக் கிழித்தெடுத்து கண்ணில் எதையோ தட்டினார் பிறகு எழுந்திருக்கும்படி கூறி உருட்டு கிறதோ என்று கேட்டார். அவர் கண்ணீரைத் துடைத்துக் கண்ணை இமைத்து இப்போது உருட்டவில்லை என்று கூறினார். சுருட்டுக் குடிக்கும்போது புகையிலைத் தூசு கண்ணிற் புகுந்து விட்டது என்றார் கண்வைத்தியர்" இதன் மூலம் கண் வைத்தியர் செல்வவிநாயகமூர்த்தி யின் திறமை நன்கு புலனாகுதல்லவா? இப்படி யான நல்லதம்பி, செல்லவிநாயகமூர்த்தி அவர்களின் பரம்பரை வைத்தியம் அவர்க ளுடன் அற்றுப்போயிற்று.

# வைத்தியப் பாதையில்...

அளவெட்டி அலுக் கையில் வாழ்ந்த லோப் பையா மரிய நாயகம் என் பவரும் சிறந்த விஸகடி வைத்தியராக வைத்தியம் செய்து வந்தார். பாம்புக் கடி, தேள்கடி, நாய்க்கடி, குளவிக்கடி, போன்ற விசங்களுக்கு உள்ளூர் மூலிகை மருந்துக்கள் மூலம் எதிர்த்தாக் கங்கள் கொடுத்து விசத்தை அகற்றுவதில் திறமை வாய்ந்தவராக இருந்தார். இவர் விசக்கடி வைத்தியராக அரசதிணைக்களத் தில் பதிவு செய்யப்பட்ட வைத்தியராவார். அத் தோடு கிணற்றுக்கு நிலையம் பார்ப்பதில் மிகவும் புகழ்படைத்தவராக இருந்தார். குறிப் பாக எத்தனை அடி ஆழத்தில் நீரூற்றுக் கிடைக் கும் என அச்சொட்டாக கூறக்கூடிய திறமை படைத்தவர். யாழ்ப்பாணத்தில் மட்டுமல்லாது வன்னிப்பகுதியிலிருந்தும் மக்கள் வந்து கிணற்றுக்கு நிலையம் எடுக்க இவரை அழைத்துச் செல்வதுண்டு.

கால்நடை வைத்தியர் விசுவலிங்கம் (விசு வர் என அழைக்கப்படுவர்) அளவெட்டி மேற் கில் பிறந்து வாழ்ந்தவர். ஆடு, மாடுகளுக்கு ஏற்படும் பல்வேறு வித நோய்களுக்கு மூலி கைச் செடிகளை மருந்தாகப் பயன்படுத்தி நோய்களை குணமாக்கிவிடுவதில் திறமை யானவர். கன்று ஈனமாட்டாது அவதியுறும் ஆடு, மாடுகளுக்கு ஆயுதம் எதுவும் பாவிக் காது நாட்டு முறையில் பக்குவமாக கைவைத்து இழுத்து பிறப்பித்து தாயையும் கன்றையும் காப்பாற்றிக் கொடுப்பதில் கைதேந்தவராக விளங்கினார். கால்நடைகளுக்கான நவீன வைத்திய முறை பரவாத அந்தக் காலத்தில் வைத்தியர் விசுவர் அவர்கள் அளவெட்டிக் கிராமத்தவரால் மட்டுமல்லாது, அயல் கிரா மத்தவர்களாலும் கால்நடைகளைக் காப்பாற் றும் கடவுளாக மதிக்கப்பட்டு வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

முறிவு தறிவு வைத் தியர் பரம்பரையொன்று அளவெட்டியில் நன்கு செயற்பட்டுவந்து பெரும் பிரசித்தமான அப்பரம் பரையின் கடைசி வைத்தி யராகத் திகழ்ந்தவர் காசிப்பிள்ளை கணப திப்பிள்ளை அவர்களா வர். இவருடைய வைத்தி யமும் யாழ்ப்பாணம் முழுவதும் பிரசித்தமா னது. கால் கை முறிந்த வர்கள், கயிறிழுத்துநசி யுண்டவர்கள், கட்டு, புண் முதலியவற்றால் சிரமப்பட்டவர்கள், கிணற் றில் விழுந்து உடல் எங் கும் வருத்தமுற்றவர் கள், வண்டில் சில்லே றியவர்கள், பனை தென்னை மரங்களிலிருந்து விழுந்தவர்கள் எனப் பலவகையாலும் தாக்குண்டவர்களுக்கு ஆறுதல் தருமிடமாக அமைந்தது காசிப்பிள்ளை கணபதிப்பிள்ளை வைத்தியசாலையே. இங்கு எந்நேரமும் நோயாளர் நடமாட்டம் குறையா மலே காணப்படும். நோயாளர் கூக்குரல் ஓயாத இடமாகவும் அது காணப்படும் யாழ்ப்பாணத் தில் அக்காலத்தில் பெயர் பெற்ற இத்தகைய வைத்தியசாலைகளில் ஒட்டப்புலம் சமர்த்தர் வைத்தியசாலையும் அளவெட்டி கணபதிப் பிள்ளை வைத்தியசாலையுமே முக்கியமா னவை. இவரிடம் வருவோரில் பெரும்பாலா னோர் பூரண சுகம் பெற்றுச் செல்வதால் இவருடைய பெயர் எங்கும் பரவியிருந்தது. அவருக்கு இரு பெண்பிள்ளைகளேயிருந்த மையால் அவருடைய வைத்தியம் அவருக்குப் பின் செயலிழக்க நேர்ந்தது எமது துரதிஸ்ரமே. அளவெட்டியில் இன்று ஆயுள்வேத வைத்தியர் கள் பலர் இருக்கிறார்கள். ஆவர்களில் சிலர் சிறந்த வைத்தியராவும் உள்ளனர். எனினும் நோயாளர்கள் ஆங்கில வைத்தியத்தை நாடுவதனால் இவர்களிடம் வருவோர் தொகை முன்னர் போல இல்லையெனலாம். அளவெட்டி அலுக்கையில் வாழ்ந்த நாகமுத்துசிவலிங்கம் என்பவர் சிறந்த வாதரோக பதிவு செய்யப்பட்ட வைத்தியராக மதிக்கப்பட்டு வந்தவர். இவர் தனது மைத்துனர் இணுவில் சு.இராமலிங்கம் வைத்தியரிடம் குரு - சிஷ்ய முறையாக வைத்தியத்தைக் கற்றவர்.

இது காலும் வைத்தியத் துறையில் சிறந்து விளங்கி அமரத்துவம் எய்திய வைத்தி யர்களை பற்றிச் சிந்தித்தோம். மேலும்

நா. சிவலிங்கம் - வாதரோகம்

தற்போது பாரம்பரிய வைத்தியத் துறையில் ஈடுபடும் வைத்தியர்கள் பற்றிய குறிப்புக்களைக் காண்போம்.

விநாயகமூர்த்தி தனக்குமார், நாகலிங்கம் மகேஸ்வரன் திருமதி சம்பூர்வராணி கிருஸ்ண ராசா, வைத்தியலிங்கம் வரதலிங்கம் என்பவர் களே இன்று வாழ்ந்துவரும் ஆயுள்வேத வைத் தியர்கள் ஆவார். விநாயகமூர்த்தி தனக்குமா இணுவிலைச் சேர்ந்தவர் அளவெட்டியில் மணம் முடித்து அளவெட்டியிலே வைத்தியத்தில் ஈடு பட்டு அளவெட்டியிலேயே வாழ்ந்து வருகிறார். இவர் நாடி பார்த்து நோய் கண்டறிந்து வைத்தி யஞ் செய்வதில் வல்லவரென்பர். ஆங்கில வைத் தியரால் கைவிட்டநோயாளிகள் இவரையடைந்து தாம் நோய் நீங்கியதாக பலர் வாய்கேட்டுள்ளோம்.

நாகலிங்கம் மகேஸ்வரன் என்பவர் தமது வீட்டில் வைத்து வைத்தியம் செய்வதோடு அளவெட்டி தெற்கிலும் ஒரு வைத்திய நிலை யத்தை நடத்தி வருகிறார். இவரிடம் நோயாளர் பலர் வருவதுண்டு குழந்தைப் பிள்ளை வைத்திய ரென்ற போதிலும் இவரிடம் பலவிதமான நோயாளர்களும் வந்து ஆறுதல் பெற்றுக் கொள்கின்றனர். இவரும் ஒரு சிறந்த வைத்தி யராகவே பெயரெடுத்துவருகிறார்.

திருமதி. சம்பூர்வராணி கிருஸ்ணராசா என்பவர் அளவெட்டியில் பிறந்தவர் கந்தரோ டையில் மணம் முடித்தவர் பின்னும் அளவெட்டி யில் வைத்தியசாலையொன்றைத் திறந்து நிர்வகித்து வந்தவர். இப்போது தமது கணவரு டன் சேர்ந்து கந்தரோடையிலுள்ள அவருடைய இல்லத்தில் வைத்தியத் தொழில் ஈடுபட்டு வருகிறார் இவரும் சிறந்த வைத்தியரெனப் நற்பெயர் பெற்றவர்.

வரதலிங்கம் என்பவர் வைத்திய கல்வியை நன்கு கற்றவர். ஆங்கில வைத்தியமும் தெரிந் தவர். இவருக்கு தந்தையாரின் வைத்தியமும் குலவித்தையாக கைகொடுத்துதவுகிறது என் பது பொய்யாகாது இவர் அளவெட்டியிலுள்ள தமது இல்லத்திலிருந்தே தொழில் ஈடுபட்டு வருகிறார். இவரது துணைவியார் ரூபிணி யாழ். மாவட்ட மேலதிக அரசாங்க அதிபராக பணி புரிகிறார்.

இப்போது ஆயுள்வேத வைத்தியர்களும் ஆங்கில மருத்துவர்கள் போலவே செயற்பட்டு வருகின்றனர். பெரும்பாலும் ஆங்கில மருத்து வர்கள் கொடுக்கும் மருந்துகளையே இவர் களும் பயன்படுத்தி வருகின்றனர். இதனால் சுதேச வைத்தியங்களான ஆயர்வேத சித்த வைத்தியம் என்பன நாளடைவில் அழிந்து விடக்கூடிய அபாய நிலைமை ஏற்பட்டுள்ளது. ஆயள்வேத வைத்தியம் பலவழிகளால் மேனாட்டு வைத்தியத்திலும் மேலானது. அதை நாம் கைவிடுவது நமது நாட்டுக்கு பேரிழப்பாகும் இப்போது பல்கலைக்ழகத்தில் சித்தவைத்தியமும் வைத்தியத்தில் ஒரு துறை யாகப் பேணப்பட்டு கற்பிக்கப்பட்டு வருகிறது. இங்கே கற்போரும் வைத்தியத்தில் ஈடுபடும் போது மேனாட்டு மருந்துகளைப் பயன்படுத்து வராயின் சித்தவைத்தியமும் நீண்ட வாழ்வு பெற முடியாதென்பது உண்மையே. சுதேச வைத்தியத்தில் மூலிகளைக் கண்டறிவது மருந்துகளைத தயாரிப்பது என்பவற்றால் வரும் சிரமமே நோயாளிகளும் வைத்தியர் களும் மேலைத்தேய வைத்தியமுறைகளை நாடுவதற்குக் காரணம் எனலாம் இந்தியாவில் சுதேச வைத்தியத்தை அழியாமல் காப்பதற்கு நடவடிக்கைளை அரசாங்கம் எடுத்து வருவது உண்மை. எனினும் ஆங்கில மருந்துகளை இலகுவாகப் பெறக்கூடியவசதியும் நோய் விரைவில் குணமாகும்மென்ற நம்பிக்கையும் மக்கள் மனதில் இருக்கும் வரை சுதேச வைத்தியங்களுக்கு வாழ்வளிப்பது இலகு வான ஒன்றல்ல வென்பதுண்மையே.

# அளவெட்டியில் சோதிடம்

சோதிடம் என்பது வேதத்தின் அங்கங்களில் ஒன்று. எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும் என்பதில் எண் எனபது சோதிடத்தையே குறிப்பது என்பர். வேதத்தில் நம்பிக்கையுள்ளோர். வேதங்களையும் புறக்கணிக்க மாட்டார். ஆனால் சோதிடத்தை நம்பாதவர்களும் நம்நாட்டில் உளர்.

*"சந்தமுஞ் சோதிடமும் என்றாங் கிவை பிதற்றும்*
*பித்தரிற் பேதையா ரில்"*

என்கின்றது நாலடியார் என்னும் நூல். நாலடியார் சமண நூல் என்பதை நினைவு கூர்ந்து கொண்டு இச்செய்யுட் பகுதியில் பொருள் காண்போம். சந்தம் என்பது இலக்கணம், சோதிடம் என்ற இவை பற்றிப் பிதற்றுகிற பித்தர்களைப் போல அறிவீனர் எங்கும் இலர் என்பதே இதன் கருத்தாகும். வேதத்தில் நம்பிக்கையில்லாத சமணர்கள் வேதத்தின் அங்கங்கள் ஆகிய வியாகரணம் எனப்படும் இலக்கணத்தையும் சோதிடத்தையும் நம்பாமை வியப்பன்று சோதிடத்தையும் இலக்கணத்தையும் பற்றிச் சமணர்கள் மடடுமல்ல வேதத்தை நம்புவோரும், இவற்றில் நம்பிக்கை வைத்து இவற்றை இறுகப்பிடித்து தங்கருமமாற்றுவாரைக் கண்டிப்பதில் கூட தவறில்லையென்க. சமணர்களும் இவற்றை இறுகப்பற்றி தங்கருமம் இழைப்போரைப் பற்றியே இவ்வாறு கூறினர் என்றுங் கொள்ளலாம். உண்மையில் சோதிடம் பொய்க்காத ஒரு கலையென்பது பல அறிவியல் அறிஞர்களால் நிலைநாட்டப்பட்டுள்ளது என்பதை நாம் ஞாபகத்தில் வைத்திருக்கவேண்டும். இத்தகைய சோதிடக்கலையை முறையாகப் படித்தறியாத பேதையவர் இது பற்றிப் பிதற்றுவது சமணருக்கு மட்டுமல்லாமல் சோதிடக்கலையில் தேர்ந்தவர்களுக்கும் கண்டனத்துக்குரியதே.

சோதிடக் கலையை முறையாகப் படித்த மேதைகள் எம்நாட்டில் மாத்திரமல்லாமல் வேறு நாடுகளிலும் இருக்கிறார்கள். இவர்களின் சோதிடம் பொய்த்ததில்லை சோதிடத்தை நன்கு கற்ற மேதாவிகள் கூட தவறுதலால் ஏற்பட்ட கணிப்பால் பொய்ப்படுவதும் சாத்தியமே. இதனால் "சோதிடர் பொய்க்கலாம் சோதிடம் பொய்க்காது' என அறிஞர் கூறுவது ஏற்றுக் கொள்ளப்படத்தக்கதே.

இத்தகைய சோதிடக்கலையை முறையாகக் கற்று சோதிடத்தை நமது நாட்டு மக்கள் நம்பும்படி செய்த மேதைகள் நம் நாட்டில் இருப்பது நமக்கு பெருமை தருவதே. இக்கலையில் தேர்ச்சி பெற்ற சோதிடர்களாக விளங்கி மறைந்த இருவர் பற்றிப் பார்ப்போம். இவர்களில் ஒருவர் சோதிடர் சின்னப்பு மற்றயவர் சோதிடர் சின்னத்தம்பி எனப்படும் அளவெட்டி ஆங்கிலப் பாடசாலைத் தலைமையாசிரியர். இவர்களின் சோதிடத் திறமையை இங்கு காண்போம்.

❖ ❖ ❖

# சோதிடர் மு. சின்னப்பு

**விசேட தரவுகள்**

*அளவெட்டியில் வாழ்ந்த புலவராக*

அளவெட்டி சீனன் கலட்டி ஞானோதயா வித்தியாசாலையில் நீண்ட காலம் தமிழாசிரியராக கடமையாற்றியவர் சின்னப்பு ஆசிரியர். இவர் பாலபண்டித பரீட்சையில் தேறியவர். ஆனால் பொதுவாக தமிழ் அறிவில் பண்டிதர் சிலரினும் மேம்பட்ட விசேட அறிவுள்ளவர். அவர் கருவிற் திருவுடையாராகவே திகழ்ந்து இல்லறத்தில் இணையாது பிரமச்சாரியாகவே வாழ்ந்து வந்தார். ஓய்வு பெறும் வயது வருமுன்னரேயே அவர் ஓய்வு பெற்றார். இவர் ஓய்வு பெறுவது எதற்காக என்று பலரும் தம்முள் தாமே உசாவினர். அவர் தமது குடும்பத்தினர் வாழ்ந்து வந்த இடத்துக்குத் தூரமாக உள்ள காணியொன்றினை விலைக்கு வாங்கி ஒரு மடம் போன்ற சாயலில் ஒரு வீடு கட்டி அதில் வாழ்ந்தார். இவருக்குத் துணையாக அந்த வீட்டில் வேறொரு துறவியையும் கொண்டு வந்து இருத்தினார். இந்தத் துறவி வேறு யாருமில்லை. அவர் சிந்தனைச் செல்வர் கைலாசபதியென்பாரின் குருவாகிய இரத்தின சபாவதி என்பவரே ஆவார். அவரும் ஒரு நைட்டியப் பிரமச்சாரி என்பதோடு ஓய்வு பெற்ற ஆசிரியரும் கூட. அவரிடமே சின்னப்பு உபாத்தியார் சோதிடம் கற்றறார். இவர் மட்டுமல்லாமல் கணபதிப்பிள்ளை ஆசிரியரும் இவரிடமே சோதிடம் கற்றவர். இவர்கள் மாத்திரமல்லாமல் சிந்தனைச்செல்வர் கைலாசபதி மற்றும் பொன்னம்பலம் ஆசிரியர், சி.கதிரவேலு ஆசிரியர் என்போரும் இவரிடம் படிக்க வருவதனால் சோதிடம் மட்டுமல்லாமல் சமய நூல்களும் அங்கு ஆராயப்பட்டதாகக் கூறுவர்.

இங்கு கற்ற அனைவரினும் சின்னப்பு உபாத்தியார் சோதிடசாஸ்திரத்தில் மிக்க திறமையுள்ளவராக விளங்கினார். சோதிட நூல்கள் பலவற்றைத் தாமாகவே கற்றவர். சோதிட சாஸ்திரத்தில் இவருக்கு இணையாவோர் யாரேனுமுண்டோ என்று எண்ணுமளவுக்கு சோதிடத்தில் நுண்ணறிவு உடையவராக இவர் விளங்கினார். இவர் சோதிட சாஸ்த்திரத்தில் யாழ்ப்பாணத்தில் இவருக்கு இணையாவோர் யாரேனும் உண்டோ என்று கூறுமளவுக்கு அறிவாற் சிறந்து விளங்கினார். சோதிட சாஸ்த்திரத்தில் கலாநிதிபட்டத் தகுதிக்குரிய ஒருவர் இவரென்பது மிகையாகாது.

இவரிடம் சோதிட விடயமாக பலரும் வந்ததால் அவர்களின் வரவைக்கட்டுப்படுத்த இவர் ஒருவழி கண்டு பிடித்தார். குறிப்பெழுதுதல், விவாகப் பொருத்தம் பார்த்தல், சாதகம் எழுதுதல் முதலாயவற்றிற்கு இவர் இவ்வளவு பணம் எனப் பிரகடனப்படுத்தினார். அப்பணம் மிகக் குறைந்த தொகையாக இருந்த போதும் வருவோர் தொகையைக் கட்டுப்படுத்த உதவியது என்பதுண்மையே.

பணம் பெற்றுச் சோதிட வேலைகளை கவனித்ததால் மிகச் தெளிவான எழுத்து முறையில் எழுதிக் கொடுக்க ஆள் தேவைப்பட்டது. அதனால் பன்னாலையைச் சேர்ந்த தமிழ் நன்கு கற்ற கந்தையா என்பவரை இவர் எழுதுவதற்கு அமர்த்தினார். இக் கந்தையா என்பவர்

புலவர்மணி க.சு.நவநீதகிருஸ்ண பாரதியாரது திருவாசக ஆராய்ச்சிப் பேருரையை அச்சிடு வதற்குகேற்ற வகையில் எழுதிக் கொடுத்தவர் என்பது குறிப்பிடற்பாலது. கந்தையா ஆசிரியத் தொழில் புரிய மலைநாடு செல்ல நேரிட்டதால் ஆசிரியர் இராசநாயகம் என்பவரை அமர்த்தி னார். கந்தையாவும் இராசநாயகமும் ஆசிரியர் சின்னப்புவிடம் சாதகக்குறிப்புப் பலன் கணித் தல், பொருத்தம் பார்த்தல் என்பவற்றைத் தாமா கவே செய்யக்கூடிய அளவுக்கு கற்றுவிட்டன ரென்பது பிறகு அவ்விருவரும் தாமாகத் தொழில் செய்ததன் மூலம் அறிய வந்துள்ளது.

ஈற்றில் சின்னப்பு ஆசிரியர் தம்மில்லத் துக்கு அண்மையிலிருந்த பொன்னுத்துரை என்பவரைத் தமது எழுத்து வேலைக்கு நிய மித்தார். அவர் சோதிடத்தை சின்னப்பு ஆசிரி யரிடம் முறையாகக் கற்றுக் கொண்டார். சின்னப்பு ஆசிரியர் அமரத்துவம் அடைந்த பிறகு அவர் அத்தொழிலைத் திறமையாகச் செய்வதோடு நல்ல வருமானமும் பெற்று வரு கிறார். அவர் தம்மை சின்னப்பு ஆசிரியரின் மாணவன் என்றே பிரகடனப்படுத்தித் தொழில் புரிகிறாரென்பது அவர் குருவுக்குக் கொடுத்த கௌரவமாகும்.

◈ ◈ ◈

# என்றும் நினைவிருக்கும் இறைவனும் உமாவும்

மரணம் திடீர் திடீரெனத் தலைகாட்டும் போதெல்லாம் எனக்கு இப்போது பயமேற்படுவதில்லை. எல்லாவற்றையும் எதிர்பார்த்துக்கொண்டு எதற்கும் சித்தமாகக் காத்திருப்பதில் ஒரு நிம்மதி புலப்பட்டு அவ்விதமே இருந்து வருகிறேன் என தன் நாட்குறிப்பேட்டின் கடைசி வரிகளை குறித்துச் சென்றவர் திரு. உமைகுமாரன்.

அளவெட்டிக் கிராமத்தின் சமூக, பொருளாதார, கலாச்சார, அரசியல் எழுச்சியை ஏற்படுத்தியவர்களில் மிக முக்கியமானவர்களாக இறைவனும், உமாவும் திகழ்கின்றார்கள். ஈழவிடுதலைப் போராட்டத்தின் ஆரம்ப நாட்களில் அர்ப்பணிப்பு மிக்க போராளிகளாக தம்மை இணைத்துக் கொண்டு பின்னாளில் வஞ்சகத்திற்கு பலியாகிய விதைகளாகத் திகழ்பவர்கள். பெருவிருட்சமாக வளர்ந்து தமிழ்த்தேசிய அரசியலில் முக்கிய இடம்கொள்ளத்தக்க தலைமைத்துவத் திறனும், அரசியல் அறிவும், தூரநோக்குப் பார்வையும் தீர்க்க தரிசனமும் கொண்ட இவர்கள் வஞ்சகத்திற்குப் பலியானமை எமது இனத்தின் துரதிஷ்டமே.

இவர்களின் துடிப்பான செயற்பாட்டினால் எமது அளவெட்டி மண்ணும் குறிப்பாக மகாஜனசபை அமைப்பும் கண்ட வெற்றிகள் பல. பல புதிய விடயங்களை எமது அளவெட்டி மக்களுக்கு அறிமுகப்படுத்திய முன்னோடிகளாக இவர்கள் திகழ்கின்றார்கள்.

என்றும் இணைபிரியாத நண்பர்களாகத் திகழ்ந்த இறைகுமாரனும் உமைகுமாரனும் மரணத்திலும் இணைந்தே பயணித்தார்கள். இறைவன் அரசியல் ஞானத்தில் கற்றறிந்தவராகவும், சிந்தனைத் திறன் மிக்கவராகவும் ஈழத்து இளைஞர்களை வழிநடத்தக்கூடிய வல்லமை மிக்கவராவும் திகழ்ந்தவர். இவர்களின் இழப்பின் தன்மை, வாழ்வின் பதிவுகள் அளவெட்டிக் கிராம வரலாற்றில் ஓர் தனி அத்தியாயம்.

# கணபதிப்பிள்ளை உபாத்தியார்

**விசேட தரவுகள்**

*அளவெட்டியில் வாழ்ந்த புலவராக*

சோதிடக்கலையில் விற்பன்னராகத் திகழ்ந்த இன்னொருவர் கணபதிப் பிள்ளை ஆசிரியர். இவர் அளவெட்டி ஆண்கள் ஆங்கில பாடசாலையின் தலைமையாசிரியராக இருந்தவர். அவருடைய பாடசாலை நாமம் சின்னத்தம்பி என்பது. இவரும் சின்னப்பு ஆசிரியருடன் சேர்ந்தே சோதிடம் கற்றவர். இவர் சோதிடத்தைத் தொழிலாகக் கொண்டு நடத்ததாமல் இலவசமாகச் சோதிட ஆலோசனை வழங்குபவர். சோதிடத்தில் சின்னப்பு ஆசிரியருக்கு இணையாகச் சொல்லக் கூடிய அறிவாற்றல் மிக்கவர். இவர் சோதிடத்தை பலரும் அறிய வேண்டுமென்ற வேட்கையுடையவர்.

இவரும் ஓய்வு பெறும் வயது வருமுன்னரே ஓய்வு பெற்றவர். ஓய்வு பெற்ற பின்பே சோதிடத்தில் தோய்ந்தவர். சோதிடத்தில் எல்லோரும். பயிற்சி பெற வேண்டுமென்பதற்காகச் சோதிட வாசகம் என்ற பெயரில் இரு புத்தகங்களை எழுதினார். இவர் தனித்து நின்றே அப்புத்தகங்களை எழுதினாலும் அப்புத்தகத்தை எழுதியோர் பெயரில் சின்னப்பு ஆசிரியரையுஞ் சேர்த்துக் கொண்டார். இது அவருக்குக் கௌவரமளிக்குஞ் செயலோ அல்லது புத்தகத்தின் மதிப்புயரும் என்பதற்காகச் செய்யப்பட்ட செயலோ என்பது விளங்கவில்லை.

முதலாவது புத்தகம் படித்தவர்கள் ஒரு பிள்ளை பிறந்த நேரங் கொடுக்கப்பட்டால் பிள்ளையின் சாதகக்குறிப்பை எவரது துணையுமின்றி எழுதக்கூடிய அறிவைப் பெறுவதற்கு வழிகாட்டித் தன்மையில் எழுதப்பட்டது. இரண்டாவது புத்தகம் அதற்கு மேலும் சோதிட அறிவைப் பெறுவதற்காக எழுதப்பட்டது. இப்புத்தகங்களை எழுதினாலும் அவற்றை விற்றுப் பணஞ் சேர்க்க வேண்டுமென்னும் எண்ணம் இவருக்கு இருந்ததில்லை. புத்தகங்கள் பெரும்பாலும் இலவசமாகவே விநியோகிக்கப்பட்டன.

இவர் புத்தகங்களை இலவசமாகக் கொடுத்தது வியப்பானது. ஏனெனில் இவர் தமது ஓய்வு காலத்தையும் பிறர்க்கு உதவுவதிலேயே கழித்தவர். தமிழாசிரியர் பலர்க்கு ஆங்கிலம் சொல்லிக் கொடுத்து அவர்கள் ஆங்கில சிரேட்ட பாடசாலைத் தராதரம் பெற உதவியவர். அவர் இவ்வகுப்புக்களைப் பணம் பெறாமலேயே பல்லாண்டு நடத்தியவர். வகுப்புக்கள் முதலில் அருணோதயாக்கல்லூரியில் நடந்த போதும் பின்னர் அவரது வீட்டில் நடத்தப்பட்டது. வகுப்பு வாரநாள்களில் பின்னேரத்திலும் சனி, ஞாயிறு நாள்களில் காலையிலும் நடைபெறும்.

இவர் கற்பித்த காலத்தில் அதாவது தலைமையாசிரியராகயிருந்து இவர் பாடசாலையை நடத்திய காலத்தில் அளவெட்டி ஆங்கில பாடசாலை யாழ்ப்பாண பாடசாலைகள் அனைத்திலும் சிறந்ததென்னும் கருத்து அரசினர்க்கு இருந்ததாக அறிய வருகிறது. இவர் பாடசாலையை நடத்திய முறை பலராலும் சிலாகித்துப் பேசப்பட்டது. தெல்லிப்பழை மகாசனக் கல்லூரியின் சிற்பி அதன் அதிபர் ஜெயரத்தினம் என்றால் அளவெட்டி அருணோதயக் கல்லூரியின் சிற்பி கணபதிப்பிள்ளை ஆசிரியரே.

கணபதிப்பிள்ளை உபாத்தியார்

இவரிடம் பழமையைப் பேணும் பண்பு மிகுந்திருந்தது. ஆலயங்களில் தாழ்த்தப்பட்டோர் உட்செல்வது தொடர்பாக நடைபெற்ற விசாரனைச் சபை முன் அவர்களை உள்ளே செல்ல விடக்கூடாது என வாதித்தவர்களில் இவரும் ஒருவர். ஆனால் இவர் தாழ்த்தப்பட்ட மக்களிடம் மிக்க அனுதாபமுள்ளவரென்பது அறியப்பட வேண்டியது.

தற்போது அளவெட்டியில் சோதிடத்தில் திறமை வாய்ந்த இருவருளர். அவர்களில் ஒருவர் தெல்லிப்பழை உதவி அரசாங்க அதிபர் பணிமனையில் தலைமை லிகிதராகவிருந்த செல்லத்துரை என்பவர். இவர் தனது ஆங்கிலப்புலமை மற்றும் தட்டெழுத்து அனுபவம் என்பவற்றை வைத்துக் கொண்டு அளவெட்டி மக்களுக்கு ஆற்றிவரும் சேவை பாராட்டத்தக்கது. மற்றையவர் சின்னப்பு ஆசிரியரின் மாணாக்கர் பொன்னுத்துரையென்பவர். எமது மண் கண்ட புலப்பெயர்வுகளின் பின் விளைவாய் பொன்னுத்துரை அவர்கள் தற்போது மானிப்பாயிலேயே நிரந்தரமாகத் தங்கி சோதிட சேவையாற்றினாலும் மீளவும் அளவெட்டி மண்ணுக்கு வரவேண்டும் என்பதே எமது அவா. வேறும் பல சோதிட துறைசார் விற்பன்னர்கள் அளவெட்டியில் இருந்தனர் எனினும் அவர்கள் இறந்து விட்டனர். சோதிடக் கலை மக்கள் மத்தியில் பரவவேண்டும்மென்பதில் அறிஞர் பலரும் ஒத்த கருத்துடையரே.

✦ ✦ ✦

## பண்டிதர் வரிசையை அலங்கரிக்கும் அளவெட்டி அறிஞர்கள் சிலர்....

பண்டிதர் சிவசம்பு அவர்களையடுத்து இந்நூலின் ஆசிரியர் பண்டிதர் க. நாகலிங்கம் அவர்கள் பண்டித பட்டம் பெற்றுக் கொண்டார். அவரைத் தொடர்ந்து பண்டிதர் க. சின்னத்துரை அவர்கள் பண்டித பட்டம் பெற்றார். இவரும் ஓர் பயிற்றப்பட்ட ஆசிரியராக கொல்லங்கலட்டி தமிழ் வித்தியாசாலையில் கற்பித்தார். ஓய்வுபெறுவதற்கு சில காலம் முன்னதாக அளவெட்டி சீனன்கலட்டி ஞானோதயா வித்தியாசாலை அதிபராகக் கடமையாற்றி ஓய்வுபெற்றார்.

அளவெட்டி வடக்கில் வாழ்ந்த சி. தம்பையா என்பவரும் பரமேஸ்வரா பண்டித ஆசிரிய கலாசாலையில் கற்றுப் பண்டித பட்டம் பெற்றவர். இவர் அளவெட்டியை விட்டு யாழ்ப்பாணத்தில் மணமுடித்து வாழ்ந்தமையால் இவர் பணியை அளவெட்டி பெறமுடியாது போயிற்று. இவர்களை விட மல்லாகத்தில் பண்டிதர் பொன்னுத்துரையால் ஆரம்பித்து நடைபெற்ற பண்டித வகுப்பில் சித்தியடைந்த யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாவிருத்திச் சங்கப் பண்டிதர்களும் சிலருளர். பண்டிதை கு. மனோன்மணி, பண்டிதர் த. இராசரத்தினம், பண்டிதை த. அன்னலட்சுமி, பண்டிதர் இராசபூபதி என்போர் இவ்வகைப் பண்டிதர்களாவர். இவர்களில் முன்னைய இருவரும் ஆசிரியப் பணி செய்தவர்கள். பண்டித பட்டம் பெற்றோர் சிரேஷ்ட தராதரப் பத்திரப் பரீட்சையில் தமிழ்ப் பாடத்தில் திறமைச் சித்திபெற்றிருந்தால் மட்டுமே ஆசிரிய நியமனம் பெற முடியுமென்ற குருட்டுச் சட்டத்தால் பின்னைய இருவரும் ஆசிரிய நியமனம் பெறமுடியாது போனமை கவலைக்குரியதே.

முள்ளானை எனும் கிராமத்தில் பிறந்து அளவெட்டியில் மணமுடித்த பண்டிதர் இராசரத்தினம் என்பவரும் ஆசிரியப் பணி செய்த பண்டிதராவார். இவர் மனைவியும் ஆசிரியப் பயிற்சிபெற்ற ஆசிரியராக இருந்ததுடன் பிள்ளைகளும் வைத்தியர்களாகவும் பொறியியலாளர்களாகவும் உயர்ந்து நிற்கின்றனர். அன்னார் இங்கிலாந்து மண்ணில் அண்மையில் அமரத்துவம் அடைந்தார்.

# அளவெட்டிக் கிராமத்தில் நிகழ்ந்த புலம்பெயர்வு

1992ஆம் ஆண்டு ஓகஸ்ட் மாதம் இருப தாந்தேதி அளவெட்டிக்கும் புலம்பெயர்வு நோய் தொற்ற ஆரம்பித்துவிட்டது. அன்று விடியற் காலை வழக்கம் போலவே மலர்ந்தது. கோழிகள் கூவின. ஆலங்களில் மணியோ சையும் ஒலித்தது. மக்கள் தமக்கு அன்று காலை எட்டு மணியளவில் என்ன நேரப்போ கிறதென்பதை அறியாது, தெரியாது அமைதி யாக அன்றாட தேவைகளை கவனித்துக் கொண்டிருந்தனர். சிறிது நேரஞ் சென்றவுடன் ஸ்ரீலங்கா படைத்தரப்பினர் அளவெட்டிக் கிராமத்தின் வடபகுதியில் நுழைந்து விட்டனர் என்ற பேச்சு அளவெட்டி கும்பழாவளைப் பிள்ளையார் ஆலய வளாகம் வரை பரவ ஆரம்பித்தது. எனினும் அளவெட்டியின் வடபகுதியிலிருந்து இடம் பெயர்ந்து தெற்கு நோக்கிப் பரபரப்புடன் சென்ற மக்கள் வந்து செய்தி சொல்லும் வரை அச்செய்தி வதந்தி யாகவே மதிக்கப்பட்டது.

அளவெட்டி செட்டிச்சோலை வீதிக்கு வடபாலுள்ளோர் எல்லாரும் தமது கைக்கடங் கிய உடைமைகளை எடுத்துக்கொண்டு வெளியேறிய போதுதான் இடப்பெயர்வு என்பது ஏற்பட்டுவிட்டதென்ற எண்ணம் மக்கள் மனத்திற் பதியலாயிற்று. "ஐயோ புலி ஐயோ புலி" என்று விளையாட்டுக்காகக் கத்திய சிறுவன் ஒருநாள் உண்மையாகவே புலி வந்ததைக் கண்டதுபோலவே அளவெட்டி மக்களுக்கு அன்று இது புதிய அனுபவம். எனினும் அளவெட்டியில் ஒரு பகுதியை மட் டுமே அவர்கள் அன்று ஆக்கிரமிக்க முடிந் தது. அளவெட்டி செட்டிச்சோலை வரையும் அன்று இராணுவத்தினரின் ஆக்கிரமிப்பு இருந்தபோதும் தேரிட்டி ஒழுங்கைப் பகுதிவரை மக்கள் அன்று பிற்பகலே சென்று வரத் தொடங்கி விட்டனர். தேரிட்டிக்கு வடக்கேயுள்ள பிரதேசம் மட்டுமே ஆள்நடமாட்டம் அற்றதாகக் காணப்பட்டது.

அளவெட்டி கும்பழாவளை விநாயகர் ஆலயப்பகுதியும் அதன் வடபால் செட்டிச் சோலை வீதி வரையுள்ள பகுதி மக்கள் அன் றாடம் சென்று தமது பொருட்களில் எடுக்க கூடியவற்றை எடுக்கவும் தமது நிலையான சொத்துக்களைப் பார்வையிட்டு வரவும் முடிந்தது. ஆனால் 1995ம் ஆண்டுக்குப் பின் அளவெட்டிப் பிரதேசத்துக்குச் செல்வது பயங்கரமாகவே இருந்தது. இது தொண் ணூற்றைந்தாம் ஆண்டின் முற்பகுதிக்கதை அவ்வாண்டு பிற்பகுதியில் யாழ்ப்பாண மக்களில் வடமராட்சி தென்மராட்சியைச் சேர்ந்த மக்கள் தவிர ஏனையோர் புலம்பெயர வேண்டிய துர்ப்பாக்கியநிலை ஏற்பட்டுவிட்டது. அவ்வாறு புலம் பெயந்தோரில் ஒரு பகுதியினர் தென்மராட்சியில் தங்கினர் இன்னொரு பகுதியினர் வடமராட்சியில் குடிகொண்டனர். பிறிதொரு பகுதியினர் வன்னிப் பெருநிலப் பரப்பில் குடியேறினர். இன்னொரு பகுதியினர் சிங்களப் பெரும்பான்மையோரைக் கொண்ட தமிழர் தாயகத்துக்கு அப்பால் உள்ள ஊர் களில் தமது இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர். இவர்களுக்கெல்லாம் மேலாக வேறொரு பகுதியினர் வெளிநாடுகளே பாது காப்பானவை என்று எண்ணித் தங்கள் குடும்பத்துடன் வேற்று நாடுகளிற் சென்று குடியேறினர். இத்தகைய இப்பெரும் புலம் பெயர்வுகளால் எமது நாட்டு மக்கள் பட்ட துன்பதுயரங்கள் வார்த்தைகளால் வடிக்க முடியாதவை. எமது அளவெட்டிக் கிராமமும் தனது பொழிவை இழக்க இவ் இடப்பெயர்வு களே பிரதான காரணிகளாயின.

வெளிநாடுகளை நோக்கிக் குடிபெயர்ந் தோர் உற்றார், உறவினர் ,ஊரவர் என்போரு டைய தொடர்புகளை அறுத்த நிலையிலேயே பெரும்பாலும் வாழவேண்டிய நிலைக்குள் ளான போதும் அவர்கள் ஓரளவுக்கு அகால மரணப்பயம் பொருளாதாரப்பிரச்சனை என்பன இல்லாதவர்களாகவே வாழ்க்கைத் தேரை ஓட்டினர் என்று கூறிவிடலாம். ஆனால் அவர்கள் எதிர்நோக்குகின்ற வேறொரு பிரச்சனை அவர்களின் பிள்ளைகள் ஏன் அவர்களின் சந்ததி தமிழராக சைவசமயத்த வராக கலாச்சார விழுமியங்கள் சிதையா தோராக வாழ்வார்களோ என்பது பெரும் பிரச்சினை என்பதில் ஐயமில்லை. எனினும் தற்போதைய உலகில் உயிரினும் ஓம்பத்தக் கது வேறொன்றின்மையால் தத்தமது உயிரைக் காப்பாற்றிக் கொண்டால் அதுவே பரமதிருப்தி என்றளவுக்கு மக்கள் மன எண்ணம் அமைந்திருந்தது.

வெளிநாடு சென்றோர் கதை இவ்வாறாக கொழும்பு முதலிய உள்நாடுகளில் இடம் பெயர்ந்தோர் கதை பற்றிச் சிந்திப்போம். உள்நாடுகளாகிய கொழும்பு முதலிய இடங் களிற் குடியேறியோர் அங்குள்ள வீட்டு வாடகை உட்பட வாழ்க்கைச் செலவுகளை ஓரளவு சமாளிப்பதற்குரிய வசதி படைத்தவராகவே இருந்தனர். இவர்களது பிள்ளைகள் வசதி யுள்ள பாடசாலையிற் கல்விகற்கவும் வசதி யிருந்தது. இதனால் இவர்கள் இடம்பெயர்ந் தோமென்ற உணர்ச்சியின்றி வேறெவ்வித கஷ்டமுமின்றி வாழக்கூடியதாக இருந்தது. இவர்கள் இடம்பெயர்வுக்கு முன்னமே பணம் படைத்தவராக அல்லது இவர்களுடைய சுற்றத்தவர்கள் வெளிநாடுகளில் முன்னரே குடியேறிப் பணஞ் சம்பாதித்தவராயிருந்தனர் என்பது உண்மையே. எமது அளவெட்டிக் கிராமத்திலிருந்து இடம்பெயர்ந்து தென்ம ராட்சியிலோ அல்லது வடமராட்சியிலோ வாழ்விடம் பெறமுடியாதவர்களே பெரும்பா லும் வன்னிப் பகுதிகளுக்கு இடம்பெயர்ந் தோராவர். இவர்களுக்கு வாழ்க்கை வசதிகள் பெரும்பாலும் இல்லையென்பது உண்மையே. இவர்கள் எப்போது சொந்தவிடத்திற்குப் போவோமென அங்கலாய்த்துக் கொண்டிருந் தார்கள். 1995ம் ஆண்டு ஐப்பசியில் இடம் பெயர்ந்த மக்கள் திரும்பவும் தத்தம் ஊர் களுக்கு செல்லமுடியும் என்னுங் கதை வானொலி முதலிய ஊடகங்கள் ஊடாகப் பரப்பப்பட்டது. அப்போது மக்கள் தாம் வெளியேறிய பலாலி மயிலிட்டி முதலிய இடங்களுக்குச் சென்று குடியேறலாம் என்ற நம்பிக்கையோடு தாம் இடம்பெயர்ந்து தங்கியிருக்கும் இடங்களிலிருந்து யாழ்ப் பாணம் வந்து சேர்ந்தனர். இப்படி வந்த பலருக்கு ஏமாற்றமே காத்திருந்தது. ஏனெ னில் யாழ்ப்பாணத்தின் வடபகுதியாகிய வலி காமம் வடக்கில் பெரும்பகுதி உச்சப் பாது காப்புப் பிரதேசம் என முத்திரை குத்தப்பட்டு அங்கு மக்கள் தமது வீடு வாசல்களைப் பார்க்கவும் அனுமதிக்கப்படவில்லை. இது தமது சொந்த இடங்களுக்குச் சென்று சொந்த வீடுகளில் வசிக்கலாம் எனவும் தமது சொந்த காணி பூமிகளில் பயிர்ச் செய்கையில் ஈடுபட்டுத் தமது வாழ்வை வளப்படுத்தலாம் எனவும் நம்பி வந்த மக்கள் எண்ணங்களில் மண் விழுத்தி யது என்பதைத்தவிர வேறு எதைச் சொல்ல லாம்.

1992ஆம் ஆண்டு தமது வீடுகளை விட்டு வெளியேறிய மக்கள் ஆறு ஆண்டுகளின் பின் மீளக்குடியேற வந்தவர்களுள் அனேகர் மீண்டும் குடியிருப்பதற்குத் தாமாகவே வீடுகளைத் தேடவேண்டிய நிலை திரும்பவும் ஏற்பட்டது. அதுமட்டுமல்லாமல் இப்போது நடைபெறும் இராண்டாயிரத்தெட்டாமாண்டை நோக்கும்போது இவர்கள் பதினாறாண்டு தம் வீடு வாசலை இழந்திருப்பதை உலக நாடுகள் கண்டுங்காணமல் இருப்பது எத்துணை அநீதியென்பதை, உலக வல்லரசு நாடுகளான

அமெரிக்கா, இந்தியா முதலிய நாடுகள் கண்மூடி மௌனியாகிக் கண்டுங் காணதது போல இருப்பது மனித உரிமைகளைப் பொறுத்தளவில் மிக மிக மோசமான விடய மென்பதை எவர்தாம் மறுக்கமுடியும்? உலகம் நாட்டுக்கு நாடு தேசத்துக்குத்தேசம் பொது வான கொள்கைகளைக் கடைப்பிடிப்பதை விட்டு தனக்குப் பந்தம் பிடிக்கும் நாடுகளுக்கு ஒரு நீதியும் மற்றையோருக்கு வேறொரு நீதியும் பேசி வருவதை எவர் தாம் சுட்டிக் காட்டுவார். தமது சொந்த வீடுகளில் குடியிருக்க விடாததோடு அவ்வீடுகள் சொந்த நிலபுலங் கள் என்பவற்றுக்கு நட்டஈடாவது வழங்காமல் அம்மக்களை சொந்த நாட்டிலேயே அகதி களாக்கி அவர்களின் குடியிருப்புக்களில் இராணுவத்தினரை குடியேற்றி அராசகம் புரிவதை எவர்தாம் நியாயமென்று சொல்ல முடியும்?

1996 இல் மீளக்குடியமர்ந்த மக்கள்கூட அளவெட்டியின் முழுப்பிரதேசத்திற்கும் செல்லக்கூடிய நிலை அன்று தோன்ற வில்லை. அளவெட்டியூடாகச் செல்லும் பண்டத் தரிப்பு தெல்லிப்பழை வீதிக்கு வடக்குப் புற மாயமைந்த அளவெட்டிக் கிராமப்பகுதி மக்கள் சென்று குடியேறக்கூடிய நிலை அப்போது தோன்றவில்லை. அளவெட்டிக் கிராமப்பகுதி இளவாலை சென்ஸ் ஜேம்ஸ் தேவாலயத்தை உள்ளடக்கிய வேர்க்குத்திக்கடவை என்னும் பகுதியையும் உள்ளடக்கியதென்பதைப் பலருமறியாதிருப்பது புதுமையன்று. கீரிமலை சேந்தான்குளத்தைத்தொடுமொரு சிறு நிலப் பரப்புக்கூட அளவெட்டியைச் சேர்ந்ததென் பதை அறியாதவர் அறியாதரே. அளவெட்டிக் கிராமம் இப்போது நிர்வாக வசதிக்காக கிழக்கு வடக்குகளில் வெட்டிக்கொத்திக் குறைக்கப் பட்டிருப்பது பலருக்கும் தெரியாமல் இருக்க லாம். அளவெட்டி வடக்கிலிருந்து கேணிப்பிட்டி மயானம் அளவெட்டி அம்பாள் கோயில் அள வெட்டி டச்சுறோட் மாரியிட்டிப் பகுதியிலிருந்து வடக்கு நோக்கி வரும் தெல்லிப்பழை பண்டத் தரிப்பு வீதியைச் சந்திக்கும் பகுதி என்பன வெல்லாம் அளவெட்டியிலிருந்து பிரித்தெடுக் கப்பட்டுத் தெல்லிப்பழையின் பகுதியாக்கப் பட்டுவிட்டது. அளவெட்டி வடக்கு கூத்தன் சீமா சந்தை கூடப் பன்னாலையை நோக்கி நகர்ந்து விட்டது. பழைய அளவெட்டியை ஆக்கிப் படைக்க நாமோர் போராட்டம் நடத்தினாலும் நல்லதென நினைக்கத் தோன்றுகிறது.

அளவெட்டிக்குப் போகலாமென்ற அறி வித்தல் வந்தவுடன் அளவெட்டியைப் போய்ப் பார்க்கத் துணிந்தவர்கள் ஒரு சிலரே அள வெட்டிப் புதர் மண்டிக் கிடந்தது. பற்றைக்காடு வீட்டுக்கூரை மட்டும் வளர்ந்திருந்தது. சில வீட்டு முகடுகளைக் கூடத் தேடிப்பிடிக்க முடியாதபடி பூனாறி (கடுகு நாவல்) இப்பிலிப்பில் என்பன தமது கைவரிசையைக் காட்டி நின்றன. மக்களை ஊருக்கு அழைக்கு முன்னமே அரசாங்கம் பிரதான ஒழுங்கைகளில் இருந்த புற்கள் புதர்களை ஒருவாறு அகற்றியிருந்தது. சிலர் தமது வளவுகளைத் தமது செலவில் திருத்தினர். சிலர் தமது வீடுகளுக்குப் போவதற்குத் துடியாய்த் துடித்தனர். ஆயினும் அயலாரும் உற்றார் உறவினரும் வராது என்ன செய்வதென கலங்கினர்.

இது இவ்வாறிருக்க அளவெட்டியில் 1995இல் நிகழ்ந்த பெரும் புலம்பெயர்வின் போது கூடத்தமது வீட்டை விட்டுவிடாது வீடு களில் தங்கியிருந்தோர் சிலர் இருந்தன ரென்பதைக் குறிப்பிட வேண்டும். இவர்களை இராணுவத்தினர் ஒன்று சேர்த்து அளவெட்டி கும்பழாவளை விநாயகராலயத்தில் தங்க வைத்தனர். சிலர் இளவாலையிலும் தங்க வைக்கப்பட்டனர். இக்குழுவில் வெளியிடஞ் செல்லாது ஆலய மடத்தில் தங்கியிருந்தோரில் இரு முதியவர்கள் உற்றார் உறவினர்கள் இல்லாத நிலையில் மரணத்தை தழுவிக் கொண்டமையும் நாம கேள்விப்பட்டதே.

அளவெட்டிக் கிராமத்தில் பல வீடுகளில் சின்னஞ் சிறிய களவுகள் நேர்ந்ததுமுண்டு. ஆலய வீதியில் சன நடமாட்டம் இருந்ததால் அப்பகுதிகளில் மக்கள் விட்டுச்சென்ற மாடுகள் அக்கம் பக்கத்திலுள்ள புற்கள், இலைகுழைகள், தளிர்களை மேய்ந்துவிட்டு கோவில் வீதிகளில் தங்குவது வழமையாகிவிட்டது. சிலர் மாடுகளைப் பிடித்துக்கட்டிப் பால் கறந்ததுமுண்டெனக் கதையடிபட்டதுமுண்டு. வைத்த நெல் மூட்டைகளைக் காணவில்லை என்றும் புளிப்பானைகள் களவு போய்விட்டன வெனவும் குரல் எழுப்பியோருமுண்டு. இப்படித் தமது பொருள் பண்டங்களைப் பலரும் இழந்த நிலையிலேயே மீள்குடியேற்றம் ஆரம்பமானது. சொந்த மண்ணில் மிதிக்கப் போகிறோம் என்ற உள்ளக்களிப்புடன் வந்தவர்கள் வீட்டுப்படலைகளைக் காணவில்லையென்றும் கூரை ஓடுகள் அடித்து நொருக்கப்பட்டன என்றும் எழுப்பிய அவலக்குரல் நாலுதிசைகளிலும் செவிகளை நிறைத்தன.

கண்ணி வெடிகளில் காலிழந்தோர் சிலர். வீட்டு வளவுகளில் கண்ணிகள் புதைக்கப்பட்டிருக்குமோ என்று அஞ்சியோர் சிலர். கண்ணி வெடிகளை அகற்றித் தருவோமென்று பணம் பேசி அவற்றை அகற்றி அல்லற்பட்டோரும் இருந்தனர். எவ்வாறாயினும் தமது சொந்த வீடுகளிற் குடியேறி விடவேண்டுமென்னும் ஆசையால் பல கஷ்டநஷ்டங்களையும் தாங்கிக்கொண்டு வளவிலிருந்த பற்றைகளை அகற்றியும் பழுதுபட்டிருந்த கூரைகள், கதவுகள், யன்னல்கள் என்பவற்றைத் திருத்தியும் ஓரளவுக்கு குடியேறக்கூடிய வசதிகளை ஏற்படுத்திக் குடியேறியோரும் சிலராவர். குடியேறியவர்களுக்கு தேவையான பொருள் பண்டங்களை வாங்குவதற்குச் சந்தைகள் இல்லை. பலநோக்கு கூட்டுறவுச் சங்கப்பணிமனையும் கிளைக்கடைகளும் இயங்கக்கூடிய நிலையில் இல்லை. பிள்ளைகள் படிப்பதற்கு எந்தப் பாடசாலையும் இயங்கக்கூடிய நிலையில் இல்லை. சில பாடசாலைகள் குண்டு வீசி அழிக்கப்பட்டிருந்தன. அளவெட்டி சீனன் கலட்டி ஞானோதயா வித்தியாசாலை மண்மேடாகவே காட்சியளித்தது. அயலில் இருந்த வீடுகளில் ஒன்றிலேனும் மக்கள் குடியேறி வாழக்கூடிய வசதியுள்ளதாகவில்லை. சதானந்தா வித்தியசாலை சிறிது சேதத்துடன் காணப்பட்டது. ஆனால் படிக்கப் பிள்ளைகள் எவரும் இல்லை. அருணோதயாக் கல்லூரி பெரிய சேதத்துக்குள்ளாகி இருந்தது. பக்கங்களில் அதாவது கல்லூரியின் தெற்கு மேற்கு வடக்குப்பகுதிகளில் இராணுவ முகாம்கள் தென்பட்டன. இராணுவத்தின் கெடுபிடிகள் சோதனைகள் அடையாள அட்டை பறிப்பு என்பன இடம்பெற்றன. இதனால் அருணோதயாக் கல்லூரிக்குப் பக்கமாகச் செல்லும் சங்கானை றோட்டு மக்கள் பாவனைக்குப் பயன்பட்டுக் கொண்டிருந்தது. ஆனால் சனநடமாட்டம் மிகமிகக் குறைவு அப்பகுதியிலிருந்து பனையடைப்பில் விறகு பொறுக்கச் சென்ற ஒருவர் ஒரு காலை இழந்த பின் எவரும் பனையடைப்பில் உட்செல்லத் துணியவில்லை. அளவெட்டி அரசினர் வைத்தியசாலையின் சில கட்டிடங்கள் கூரை இல்லாமல் காட்சியளித்தன. தபாற் கந்தோரும் சேதமடைந்த நிலையிலேயே காணப்பட்டது.

வாழ்க்கை வசதிகள் வேண்டாம் எங்கள் வீடுகளிற் படுத்துறங்கினாலே போதும் என்ற அசுரத்துணிவுடையோர் தங்கள் வீடுகளிற் குடியேறி வாழத் தலைப்பட்டனர். பொருள் பண்டம் வாங்கச் சுன்னாகம் சந்தையே முதலில் அவர்களுக்குக் கைகொடுத்தது. நோயாளரும் சிகிச்சைக்காக வெளியூர்களுக்குச் செல்ல வேண்டியிருந்தது. அளவெட்டி மல்லாகம் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம் இணுவிலில் இயங்கியது. இவ்வாறு பற்பல வசதியீனங்களுக்கு மத்தியிலேயே அளவெட்டி மக்கள் தமது வாழ்க்கையை கடத்த வேண்டிய துர்ப்பாக்கிய நிலையில் இருந்தனர்.

அக்கால கட்டத்தில் தெல்லிப்பழைப் பிரதேச செயலராகவிருந்த பத்தினியம்மா திலகநாயகம் போல் தமது அதிகார வரம்புக் குட்பட்டு வாழும் மக்களைத் தம்மாலியன்றளவு வசதிகளுடன் வாழ வைக்க விரும்பினார். அதற்காகப் பாடசாலைகளின் அதிபர்களை அழைத்துத் தத்தமது தலைமையிலுள்ள பாடசாலைகளை உரிய இடத்தில் கொண்டு வந்து நடத்துமாறு கேட்டுக்கொண்டார். சில பாடசாலைகளின் அதிபர்கள் அக்கோரிக் கையை ஏற்றுத் தமது பாடசாலைகளை அள வெட்டிக்கு கொண்டுவரச் சித்தமாக இருந் தனர். ஆனால் அதிபர்கள் சிலர் பாடசாலை வளவில் கண்ணிவெடி இருக்கலாம் யாராவது கண்ணிவெடியிற் சிக்கிக் கொண்டால் யார் அதற்குப் பொறுப்பு என்று பேசி அக்கோரிக் கையை தட்டிக்கழித்தனர். அளவெட்டி அரு ணோதயாக் கல்லூரி அளவெட்டிக்கு வந்தால் மட்டுமே மற்றைய பாடசாலைகளும் அளவெட் டிக்கு வருவது சாத்தியமாகும் என்ற நிலைப் பாடும் அதிபர்கள் சிலரின் எண்ணமாக இருந்தது. அளவெட்டி அருணோதயாக் கல் லூரி நிர்வாகம் அருணோதயாக் கல்லூரியை அளவெட்டிக்கு கொண்டு வருவதில் முழுமன தோடு ஒத்துழைக்காததால் அக்கோரிக்கை நிறைவேறவில்லை. தெல்லிப்பழை பிரதேச செயலாளர் அருணோதயாக் கல்லூரியை அளவெட்டிக்கு கொண்டு வருவதில் முனைப் பாக இருந்ததாலும் அளவெட்டி மக்களும் இதில் ஆர்வங் காட்டியதாலும் அளவெட்டியி லுள்ள பாடசாலைகள் 1997ஆம் ஆண்டு பிற் பகுதியில் அளவெட்டியில் மீண்டும் இயங்கலா யின. பாடசாலைகள், பலநோக்கு கூட்டுறவுச் சங்கக் கிளைகள், சந்தை என்பன அளவெட் டிக் கிராமத்திற்கு வந்த பின் அளவெட்டி கலகலப்பாகத் தொழிற்பட்டது.

இந்நிலை அளவெட்டியைப் பிறப்பிடமாகக் கொண்டு தற்போது கனடா, சுவிஸ், இங்கி லாந்து, அவுஸ்திரேலியா, ஜேர்மனி, பிரான்ஸ் முதலிய பிறநாட்டவர் செவிகளிலும் எட்டியது. இந்நிலை பற்றிச் சிந்தித்த அளவையூர் மைந்தர்கள் சிலர் பற்றி இனிக் கவனிப்போம்.

◈ ◈ ◈

## பண்டிதர் வரிசையை அலங்கரிக்கும் அளவெட்டி அறிஞர்கள் சிலர்....

பண்டிதர் சிவசம்பு அவர்களையடுத்து இந்நூலின் ஆசிரியர் பண்டிதர் க. நாகலிங்கம் அவர்கள் பண்டித பட்டம் பெற்றுக் கொண்டார். அவரைத் தொடர்ந்து பண்டிதர் க. சின்னத்துரை அவர்கள் பண்டித பட்டம் பெற்றார். இவரும் ஓர் பயிற்றப்பட்ட ஆசிரியராக கொல்லங்கலட்டி தமிழ் வித்தியாசாலையில் கற்பித்தார். ஓய்வுபெறுவதற்கு சில காலம் முன்னதாக அளவெட்டி சீனன்கலட்டி ஞானோதயா வித்தியாசாலை அதிபராகக் கடமையாற்றி ஓய்வுபெற்றார்.

அளவெட்டி வடக்கில் வாழ்ந்த சி. தம்பையா என்பவரும் பரமேஸ்வரா பண்டித ஆசிரிய கலாசாலையில் கற்றுப் பண்டித பட்டம் பெற்றவர். இவர் அளவெட்டியை விட்டு யாழ்ப்பாணத்தில் மணமுடித்து வாழ்ந்தமை யால் இவர் பணியை அளவெட்டி பெறமுடியாது போயிற்று. இவர்களை விட மல்லாகத்தில் பண்டிதர் பொன்னுத்துரையால் ஆரம்பித்து சங்கப் பண்டிதர்களும் சிலருளர். பண்டிதை கு. மனோன்மணி, பண்டிதர் த. இராசரத்தினம், பண்டிதை த. அன்னலட்சுமி, பண்டிதர் இராசபூபதி என்போர் இவ்வகைப் பண்டிதர் களாவர். இவர்களில் முன்னைய இருவரும் ஆசிரியப் பணி செய்தவர்கள். பண்டித பட்டம் பெற்றோர் சிரேஷ்ட தராதரப் பத்திரப் பரீட்சை யில் தமிழ்ப் பாடத்தில் திறமைச் சித்திபெற்றி ருந்தால் மட்டுமே ஆசிரிய நியமனம் பெற முடியுமென்ற குருட்டுச் சட்டத்தால் பின்னைய இருவரும் ஆசிரிய நியமனம் பெறமுடியாது போனமை கவலைக்குரியதே.

முள்ளானை எனும் கிராமத்தில் பிறந்து அளவெட்டியில் மணமுடித்த பண்டிதர் இராச ரத்தினம் எ[illegible]ணி செய்த பண்டிதராவார். இவர் மனைவியும் ஆசிரியப் பயிற்சிபெற்ற ஆசிரியராக இருந்ததுடன் பிள்ளைகளும் வைத்தியர்களாகவும் பொறி யியலாளர்களாகவும் உயர்ந்து நிற்கின்றனர்.

## கனடா சிதம்பரசிவன் முதலிய நன்மைந்தர்கள்

எங்கள் அளவெட்டிக் கிராமம் பொதுத்தாபனங்கள் இன்றைய நிலையெய்துவதற்கு முன்னின்று உழைத்தவர்களில் முக்கியமானவர் அளவெட்டிப் பெருமாக்கடவையைச் சேர்ந்த சிதம்பரசிவன் என்பவராவர். அவரது தந்தையும் தாயும் ஆசிரியர்களாக இருந்தவர்கள். எவ்வாறாயினும் அவருள்ளம் தொண்டு பேணும் உள்ளமாகவிருந்தது. புலம்பெயர்ந்த மக்களை - குறிப்பாக அளவெட்டி மக்களை நல்வாழ்வு வாழ வைக்க வேண்டுமெண்பதில் அவர் பேரார்வங்காட்டினார். அளவெட்டி மக்கள் ஊரை விட்டு உறவை விட்டு இடம் பெயர்வதற்கு முன்னரே அளவெட்டி மக்களுக்கு உதவ வேண்டும் என்னும் எண்ணம் கனடாவில் வாழ்ந்த இளைஞருக்கு ஏற்பட்டது பாராட்டுக்குரியது. முதலில் அளவெட்டி அருணோதயாக் கல்லூரியின் நிலையை உயர்த்த வேண்டும் என்னும் எண்ணமே கனடாவிலுள்ள இளைஞர் மனதில் எழுந்தது. அருணோதயாக் கல்லூரி உயர்ச்சியடைந்தால் அளவெட்டி மக்கள் எல்லோரதும் கல்வி நிலைமேம்படும் கல்வி மேம்பட்டால் தொழில் வாய்ப்புக் கிட்டும் தொழில் வாய்ப்புக்கிட்டினால் அளவெட்டியின் பொருளாதாரமும் மேம்படுமென்பது இவர்களின் கருத்தாக இருக்கலாம். "வரப்புயர" என ஔவை அரசனை வாழ்த்தியதையும் இங்கு ஒப்புநோக்கிப் பார்க்கலாம். 1984ம் ஆண்டு அருணோதயாக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கக் கனடாக்கிளை ஆரம்பிக்கப்பட்டபோதும் 1997ம் ஆண்டு வரையும் அக்கிளையாற் செய்யக்கூடிய எதுவுமில்லாதிருந்ததென்பது கவனத்திற் கொள்ளத்தக்கது. ஏனெனில் அக்கால கட்டத்தில் அருணோதயாக் கல்லூரி அளவெட்டியில் இயங்க முடியாதிருந்ததென்பதை ஞாபகப்படுத்துவது நல்லது.

சிதம்பரசிவன் அளவெட்டி அருணோதயாக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கச் செயலாளரானதும் அளவெட் டிக்கு அருணோதயாக் கல்லூரி மறுபிறவி யெடுத்து வந்ததும் அளவெட்டிக் கிராமம் செய்த நற்பயனேயென்று கூடக் கூறிவிடலாம். இதை அளவெட்டி ஆசிரியர் ஒருவர் வருணித்தது போல காவல் நாயும் வர உறியும் அறுந்து விழுந் தது என்று கூறுவது பொருத்தமானதே. நான் அளவெட்டியிலுள்ள பொதுத்தாபனங்களையும் குறிப்பிட்டு அவற்றுக்கு கனடாக்கிளையின் பொருள் பொதிந்த உதவிகள் கிட்டியதையும் குறிப்பிடலாம். அளவெட்டி மக்கள் கனடாக்கிளை பற்றியோ அதில் பணிபுரியும் தொண்டர்களைப் பற்றியோ தெரியாதிருந்த போது சிதம்பரசிவன் பொதுத்தொண்டுக்கு ஏற்ற ஒருவரைப் பிடித்துத் தரும்படி அருணோதயாவின் முன்னாள் ஆசிரியர் பரநிரூபசிங்க மாஸ்ரரை விசாரித்துள்ளார். அவர் என்னையே சிபார்சு செய்து விட்டு எனக்கு கடிதம் எழுதினார். சிதம்பரசிவனும் கடிதமூலம் என்னுடன் தொடர்பு கொண்டார். அவருக்கு நான் ஒரு கடிதமூலம் எனது வயோதிப நிலையை எடுத்துக்காட்டி நீங்கள் விரும்பினால் எனது மகன் வேதநா யகனுக்கு அனுப்பும்படி கேட்டுக் கொண்டேன். வேதநாயகம் அப்போது தெல்லிப்பழைப் பிரதேச செயலாளராக இருந்தாரென்பது குறிப்பிடத்தக்கது. சிதம்பரசிவன் அவரைக் கேளாமலே ஒரு கணிசமான பணத்தை அவர் பெயருக்கு அனுப்பிவிட்டார். மகன் பணங்கிடைத்ததும் பணத்தையுங் கொண்டு என்னிடம் வந்தார். பணத்தை தமது பெயருக்கு அனுப்ப வேண்டாம் எனவும் அவ்வாறு அனுப்பினால் அது தமது வருமான வரிக்கணக்கில் தாக்கத்தை ஏற்படுத்தும் எனவும் கூறினார். நான் மகனுடன் அளவெட்டி மல்லாகம் பலநோக்கு கூட்டுறவுச் சங்கத்துக்குச் சென்று சங்கப் பணிப்பாளர் செ. இரா

சேந்திரம் அவர்களை இணங்கச் செய்து எனது பெயரிலும் இராசேந்திரம் பெயரிலும் ஒரு கணக்கைத் திறந்து பணத்தை வைப்பிலிட் டோம். சிதம்பரசிவனுடன் பேசும் போதெல்லாம் அவர் "பாடசாலைகளுக்கோ மற்றைய பொதுத்தாபனங்களுக்கோ தேவையான காணிகளை இப்போதே கொள்வனவு செய்து விடுங்கள். பிறகு காணிகள் விலையேறிக் கொள்வனவு செய்யமுடியாத நிலை ஏற்படும். நாங்கள் தேவையான பணத்தை வெளிநாடு களில் உள்ள அன்பர்களிடஞ் சேர்த்து அனுப்பு வோம்" என்றும் கூறுவார். இவ்வாறு அளவெட்டி மக்களுக்குள் பலவகையாலும் உதவ முன் வந்தவர் சிதம்பரசிவனாவார். இவர் தனது பணத்தை மட்டும் கொடுத்தார் என்பதற்கில்லை. இவர் பலரிடமும் பணஞ் சேர்த்தே அளவெட்டியை வளப்படுத்தினார் என்பது பொருத்தமானது. இவர் எரிந்த விளக்கைத் தூண்டிப் பயன்பட வைத்தார். தமது பணத்தையும் தேவையறிந்து கொடுத்துதவியவர் என்பதில் ஐயமில்லை. இவரைப் போல முன்னிருந்த செயலாளர்கள், தலைவர்கள், நிர்வாக சபை உறுப்பினர்கள் ஆகிய அனைவரும் அளவெட்டிக்கிராம வளர்ச்சியிற் பங்கேற்றனர் என்பதைக் கூறாமல் விட்டால் அது நன்றி கொன்ற பாவமாகும்.

சைவம் நவரத்தினத்தாருடைய வீடு வளவு கிணறு என்பன அளவெட்டி அருணோதயாக் கல்லூரிக்கு எத்துணை இன்றியமையாதன என்பதைக் கல்லூரியோடு சம்பந்தப்பட்ட அனைவரும் அறிவார். இந்த வீட்டுடன் கூடிய காணியைக் கல்லூரிக்காக வாங்கும்படியும் அதை காலந் தாழ்த்தாது செய்யும்படியும் கனடாவாழ் அருணோதயாக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கக் காப்பாளர் பரநிரூப சிங்கம் ஆசிரியரும் செயலாளர் சிதம்பரசிவனும் என்னைக் கேட்டுக் கொண்டனர். அத்தேவைக் காக ஒரு நலன்புரிச்சங்கம் எம்மால் அமைக் கப்பட்டது. அதன் தலைவராக நானும் செய லாளராக சட்டத்தரணி சுந்தரலிங்கமும் தனாதிபதியாக சிவப்பிரகாசம் கந்தசாமியும் செயற்பட்டதுண்டு. அளவெட்டி முழுவதையும் அடக்கியதாக அந்நலன் புரிச்சங்க அங்கத் தவர் தெரிவு செய்யப்பட்டிருந்தனர்.

காணிக்கு விலை பேசுவதற்கு நலன்புரிச் சங்கத் தலைவரான நானும் கல்லூரி அதிபர் மகேந்திரராசாவும் உபஅதிபர் பத்மநாதனும் சென்றிருந்தோம். காணி உரிமையாளர் விலையிற் பிடிவாதமாக நின்றதாற் காணியின் விலையை அன்று முடிவுகட்டாமல் விட்டு வந்தோம். பின்பு ஒருநாள் சட்டத்தரணி சுந்தரலிங்கத்தையும் தனாதிபதி கந்தசாமி யையும் அனுப்பிக் காணியின் விலை முடிவு செய்து கொண்டோம். கனடாவின் பணமும் கிடைத்தது காணியும் எழுதப்பட்டது.

அளவெட்டியிற் பிறந்து கனடாவில் வாழும் அன்பர்களது பேருதவியால் அருணோதயாக் கல்லூரியின் பல தேவைகள் பூர்த்தி செய்யப் பட்டதை ஆவணப்படுத்தும் முகமாக இங்கு குறிப்பிட விரும்புகிறோம். கல்லூரிப் பணி களில் முதலாவதாக நிறைவேறியது மாண வரின் தண்ணீர் தாகத்தைத் தீர்க்கும் முயற்சியே எனலாம். நீர்த்தாங்கி கட்டப்பட்டு நீர் விநி யோகிக்கும் குழாய்களும் போடப்பட்டு புதிதாக நீரிறைக்கும் இயந்திரமும் கொள்வனவு செய்யப்பட்டதோடு மாணவரின் முக்கிய தேவையொன்று நிறைவேற்றப்பட்டதை மகிழ்ச்சியோடு குறிப்பிட விரும்புகிறோம்.

அதன் மேல் கனடா வாழ் அளவெட்டி மைந்தர்களின் பண உதவியினால் நீர் விநியோகத்திற்கு அடுத்ததாக ஒரு லட்சத்து முப்பத்தெண்ணாயிரம் ரூபா செலவில் நூலகத் தளபாடக் கொள்வனவு நடைபெற்றது. முப்பத்தெண்ணாயிரம் ரூபாவுக்கு நூல் நிலையத்துக்கு அவசிய தேவையான புத்த கங்களும் கொள்வனவு செய்யப்பட்டன. ரூபா ஐம்பதாயிரம் விளையாட்டு உபகரணங்

களுக்கு ஒதுக்கப்பட்டது. இவையெல்லாம் செய்யப்பட்டும் மண்ணின் மைந்தர்கள் அனுப்பிய பணத்தில் ரூபா இருபதாயிரம் கையிருப்பில் இருந்தது குறிப்பிடத்தக்கது. அன்பர் சிதம்பரசிவன் மூலமாக அளவெட்டி அருணோதயாக் கல்லூரி வளர்ச்சிக்குப் பணங்கொடுத்த கனடாவாழ் அளவெட்டியின் மைந்தர்கள் அனைவரும் பாராட்டுக்குரிய வர்களே. குறிப்பாக அளவெட்டி ஆறுமுகம் பொன்னம்பலமும் அவர் தம் துணைவியார் செல்லம்மா என்பவரும் தங்கள் சொந்தப் பணத்தில் பெருந்தொகையைக் கொடுத்து அளவெட்டி சைவம் நவரத்தினத்தின் வீட்டை யும் காணியையும் கல்லூரிக்காகக் கொள்வனவு செய்ய வைத்த செயற்கருஞ் செயலை அளவெட்டி மக்கள் மறக்கமாட்டார்கள் என்பதை நினைவூட்டுகிறோம்.

அளவெட்டி அருணோதயாக் கல்லூரிக்கு கனடா வாழ் அளவெட்டியூரவர்கள் சைவம் நவரத்தினம் அவர்களின் காணியை வாங்கிக் கொடுத்ததுமட்டுமல்லாமல் அதன் பக்கத்தில் அமைந்துள்ளதும் கல்லூரியின் முன்னாள் அதிபர்திரு.சு.சிவசுப்பிரமணியம் அவர்களுக்குச் சொந்தமானதுமான காணியையும் கல் லூரிக்கு வாங்கிக் கொடுத்தவர்களும் அளவெட்டி மண்ணின் மைந்தர்களாக உதித்துக் கனடாவை வாழிடமாகக் கொண்ட இளைஞர்களே என்பதையும் நாம் மறந்துவிடலாகாது. இன்னும் அருணோதயாக் கல்லூரிக்கு வேண்டிய பலபணிகள் இம் மைந்தர்களாலே நிறைவேற்றப்படுமென நம்பும் எமது எதிர் பார்ப்புக்கள் எப்போதும் போல இனியும் நிறைவேறும் என்பது உண்மையே.

அளவெட்டி அருணோதயாக் கல்லூரியின் முன்னாள் அதிபர் கவிஞர் கந்தவனம் அவர் களும் கல்லூரியின் முன்னாள் ஆசிரியர் பரநிரூபசிங்கம் அவர்களும் கனடாவில் இப்போது தங்கியிருப்பது கல்லூரிச் சமூகத்துக்கு வாய்ப்பான நிகழ்வு என்பதில் ஐயமில்லை. அருணோதயாக் கல்லூரியைப் பொறுத்தவரை இவ்விருவரதும் சேவைகள் இவர்களைப் பற்றி தனித்தனி எழுதிய கட்டுரைகளிலும் குறிப் பிடப்பட்டுள்ளன விபரம் அங்கே காண்க.

அளவெட்டி அருணோதயாக் கல்லூரி பற்றி இரண்டாயிரமாம் ஆண்டு கனடாவாழ் அளவெட்டி மண்ணின் மைந்தர்கள் வெளிப் படுத்திய அருணோதயாக் கல்லூரி 2000 என்னும் மலர் அளவெட்டியில் உள்ள அனை வரும் வாசித்தறிய வேண்டியது. இதன் மகுட வாசகம் **பூச்சொரியும் பொன்னொச்சி மரம்** என்பதையும் ஞாபகப்படுத்த விரும்புகிறோம். இம்மலரில் அளவெட்டியைப் பற்றிய பலபுதிய செய்திகளை அதை வாசிப்போர் அறிந்து கொள்வார் என்பதில் ஐயமில்லை. அளவெட்டி யைப் பற்றிய பொது வர்ணனைகள் பலகாலம் அளவெட்டியை மறந்து வெளிநாடுகளில் தங்கியிருந்தோருக்கு அளவெட்டியைப் பற்றிய ஒரு பொது அறிவைத் தருவனவாம். அளவெட்டி மண்ணில் இது வரை மிதித்தறியாதோரும் பலர் கனடா முதலிய பிறநாடுகளில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது புதுமையன்று. வெளிநாடுகளிற் பிறந்து வெளிநாட்டு மொழி, வெளிநாட்டுப் பண்பாடு, கலாச்சாரம் என்ப வற்றில் வளர்ந்த பலர் இன்று அளவெட்டிக்கு வந்தால் அவர்களுடன் உரையாடத் தமிழ் தெரிந்தவர்களால் முடியாது என்பதை நாம் மறந்துவிடலாகாது. அளவெட்டியில் பிறந்து வளர்ந்த தமிழ்க் குடும்பத்தினரின் இரு பிள்ளைகள் ஒருமுறை அளவெட்டி அரசினர் வைத்தியசாலைக்கு வந்திருந்தனர். அவர்களின் பெரிய தந்தையார் ஒருவர் அவர்களை அழைத்து வந்தார். அவர்களுக்குத் தமிழில் சில சொற் கள் விளங்குமேயன்றித் தமிழ்மொழி அவர் களுக்குத் தெரியாது. அவர்கள் ஆங்கிலத்தி லேயே எம்முடன் பேசினார்கள் என்பதை நினைக்க நெஞ்சு திடுக்கிடுகிறது. எதிர்

காலத்தில் இவர்கள் ஆங்கிலக் கனவான்களை மணம் முடித்து ஆங்கிலேயராகவே வாழ்வர் என்பதில் ஐயமும் உண்டோ? பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானிலும் நனி சிறந்தனவே என்ற அறிஞர் கூற்று இவர் களைப் பொறுத்தவரை பயனற்றதாகி விடுமென்பதை மறுக்கவும் முடியுமோ?

♣ ♣ ♣

## பொ.கணேஸ்வரனும் லண்டன் வாழ் மைந்தர்களும்

**விசேட தரவுகள்**

*அளவெட்டியில் வாழ்ந்த புலவராக*

அளவெட்டியில் பிறந்து வளர்ந்து படித்துப் பட்டம் பெற்று தாம் முயன்ற துறைகளில் பட்டப்படிப்புக்கு மேலாகவும் நிபுணத்துவக்கல்வி பெற்றோர் பலர் இன்று வெளிநாடுகளிற் பணிபுரிந்து சீருஞ் சிறப்புமுற வாழ்ந்தாலும் அவர்களுடைய உன்னதமான கல்வி எங்கள் நாட்டிற்கு பயன்படாது போனது எமக்குப் பேரிழப்பே என்பதில் ஐயமில்லை. அளவெட்டியிற் பிறந்த பொன்னம்பலம் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர் கணேஸ்வரன் என்பவர். இவர் யாழ்ப்பாணத்தில் தமிழ்க் கல்வியை முடித்துக் கொண்டு இங்கிலாந்து சென்று அங்கே தொடர்ந்து கற்றுப் பொறியியலாளராக மலந்தார்.

இவர் இளமை தொட்டே பிறருக்கு உதவ வேண்டும் என்னுஞ் சுயசிந்தனையுடையவர். நற்பணிகளை ஊக்கி உதவுவதில் சிரத்தையுடையவர். இவருடைய தொண்டு காரணமாக அளவெட்டி வடக்கு தவளக்கிரி முத்துமாரி அம்மன் கோவில், அழகொல்லை விநாயகர் ஆலயம் புனர்நிர்மாணத் திருப்பணி, அளவெட்டி மகாசன சபைக் கட்டிடம் என்பன கனிசமான அளவு உதவி பெற்றன. இந்த உதவியை இவர் மட்டுஞ் செய்தாரல்லர். இங்கிலாந்தில் தற்போது குடியேறிப் பெரு வாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கும் அளவெட்டி மண்ணின் மைந்தர்கள் அனைவரும் சேர்ந்து செய்த உதவியே இதுவென்றால் மிகையாகாது. அளவெட்டி தவளக்கிரி முத்துமாரி அம்மன் கோவில் நித்திய பூசைக்கு உதவுவதோடு கிழமையில் ஒரு நாளைக்கு அன்னதான நிகழ்ச்சிகளுக்கும் இங்கிலாந்து வாழ் அளவெட்டி பிள்ளைகளே உதவி வருவதும் குறிப்பிடத்தக்கது. அளவெட்டியைப் பிறந்த ஊராகக்கொண்ட இங்கிலாந்து வாழ் மைந்தர்கள் அளவெட்டி மகாசனசபை கட்டிட நிர்மானத்திற்குத் தேவையான பணத்தை திரட்டி அனுப்புவதாக வாக்களித்த போதும் ஒரு மூன்று லட்சம் ரூபா வரையிலேயே இப்போது அனுப்பியுள்ளனர். மிகுதிப் பணம் அனுப்புவதில் தாமதம் ஏறபட்டதற்குரிய காரணம் விளங்கவில்லை. பணம் தருவதாக வாக்களித்தோர் பணத்தைக் கொடாது விட்டது ஒரு காரணமாக இருக்கலாம். அல்லது மகாசனபை குறிப்பிட்ட வேலையை முடிக்கமாட்டாது என்று கருதியது மற்றுமொரு காரணமாக இருக்கலாம். அளவெட்டி மக்கள் சங்கம் இவ்வேலையை முடிப்பதற்கென ஒரு தொகைப் பணத்தை அனுப்பிய பின் மௌனஞ் சாதிப்பது பொருத்தமற்றது. கணேஸ்வரன் அப்போது சபைத்தலைவராக அல்லது செயலாளராக இருந்தால் இதற்குரிய காரணத்தை வெளிப்படையாகச் சொல்லியிருப்பார். அவர்கூட எங்கோ பிழையிருப்பதை அறிந்து அதையெடுத்துச் சொல்லி தாம் பழிகாரராக வராமலிருப்பதற்கே அவரின் மௌனம் பயன்படுகின்றது போலும். கணேஸ்வரன் அவர்கள் இப்போது சுகயீனமுற்றிருப்பதால் அவரால் பொதுத் தொண்டுகளில் ஈடுபட முடியாதிருக்கிறதென்றும் ஒரு கதையும் கேட்கப்படுகிறது.

திரு.பொ. கணேஸ்வரன் அளவெட்டியில் நிகழ்ந்த பல பொதுமக்கட் பணிகளுக்குத்

தாராளமாக உதவியவரென்பதால் அவரை நெருங்கி உதவி கேட்பதற்கும் கிராமத் தொண்டர்கள் அஞ்சுகின்றனர் போலும் பொதுசன வேலைகளில் நாட்டஞ் செலுத்து வோர் இப்போது இங்கு குறைவாகவே காணப்படுகின்றனர். இப்போது தானுண்டு தன் வேலையுண்டு என மக்கள் வாழ்வதால் பொதுத்தாபனங்கள் பணிசெய்ய முடியாத நிலை ஏற்பட்டுள்ளது என்றே கூறலாம். மக்கள் இவ்வாறு மனமாற்றமடைந்து பொதுத் தொண்டில் ஈடுபாடு குறைவதற்கும் காரணமில் லாமல் இல்லை. அளவெட்டிக் கிராமத்தில் ஆயிரத்துத் தொளாயிரத்து இருபதுகளில் தொடர்புசாதன வசதிகள் மிகமிகக் குறைவு. அக்காலத்தில் ஒரேயொரு வானொலி தான் அளவெட்டி முழுவதற்கும் பயன்பட்டது. இவ்வானொலி அப்போதைய அளவெட்டி வெள்ளியம்பத்தை எனப்பட்ட இடத்தில் இருந்தது. இப்போது அவ்விடம் வெள்ளியம்பதி எனக் கூறப்படுகிறது. பெயர் பெற்ற ஆசிரிய ராகப் பரமேஸ்வரக் கல்லூரியிலும் பரமேஸ்வர பண்டித ஆசிரிய கலாசாலையிலும் பணிபுரிந்த B.Sc மாஸ்ரர் என அன்பாக அழைக்கப்படும் சிதம்பரம்பிள்ளை ஆசிரியரது வளவில் தான் அந்த வானொலியிருந்தது. ஆனால் இன்றைய நிலை அப்படியல்ல வீட்டுக்கு வீடு வானொலி மற்றும் தொலைக்காட்சியுண்டு. சில வீடுகளில் ஒன்றுக்கு மேற்படவும் வானொலிகள் உண்டு. சென்ற நூற்றாண்டின் மத்திய காலத்திலி ருந்தே வாசிகசாலைகளைத் தாபிப்பதில் மக்கள் ஆர்வங்காட்டினர். வாசிகசாலைகளில் அக்காலத்தில் இரண்டொரு தமிழ்ப் பத்திரி கைகளே காணப்படும். அவற்றை வாசிப்போர் பயன்படுத்தும் முறையும் இக்கால இளைஞர் களுக்கு நகைப்புக்குரியதாகவே இருக்கும்.

சில வாசிகசாலைகளில் அக்காலத்தில் ஒரு பத்திரிகை மாத்திரம் இருக்கும். அது பெரும்பாலும் வீரகேசரி அல்லது தினகரனாக இருக்கும். சென்ற நூற்றாண்டின் மத்திய பகுதியில் இரண்டாவது பத்திரிகையாகச் சுதந்திரனும் இடம்பெறும். இப்பத்திரிகைகளில் பிரித்தெடுக்கக்கூடிய எத்தனை இதழ்கள் உண்டோ அத்தனையையும் தனித்தனியாக எடுத்து ஒவ்வொருவரும் ஒவ்வொன்றை வாசிப்பார். வளர்ந்தவர்களிடம் பத்திரிகையை ஒப்படைத்து விட்டு சிறியவர்கள் அவர்கள் வாசித்து முடியும் வரை காத்திருக்கவேண்டிய நிலை இருக்கும். பத்திரிகைகள் சனசஞ்சார மற்ற நேரங்களிற் களவாடப்படுவதும் சாதா ரண விடயமே. ஆனால் இப்போது நிலைமை முற்றும் மாறானது. அனேகமான வீடுகளில் ஒரு பத்திரிகையாவது சொந்தமாக இருக்கும். சில வீடுகளில் தினப்பத்திரிகை, வாரப்பத் திரிகை, மாதப்பத்திரிகை முதலான பல பத்திரிகைகளும் காணப்படும். ஆதலால் இப்போது வாசிகசாலைகளின் தேவையும் அருகிப்போய்விட்டது. சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதியில் அரசினர் தமது நன்கொடை யின் மூலம் நாடெங்கும் சனசமூக நிலையங்கள் அமைந்ததோடு வருடாந்தம் அவற்றுக்கு நிதி யுதவி அவற்றைச் சிறப்பாக நடத்தவுதவினர். அந் நிதி நன்கு பயன்படுகிறதோ என்பது கேள்விக்குரியதே. தற்போது அரசினர் பணத்தை மட்டும் நம்பிச் சனசமூக நிலையங்களை நடத்துவோருக்கு அந்நிதி போதியது அன்று.

இந்நிலையில் வெளிநாட்டாருடைய பணத்தை நம்பி சனசமூக நிலையங்களும் வாசிகசாலைகளும் இயங்குகின்றன. அள வெட்டியில் இயங்கும் இத்தகைய சங்கங்கள் வெளிநாட்டவரால் போஷிக்கப்படுகின்றன. அளவெட்டியில் உள்ள சங்கங்கள் விரும்பிக் கேட்டால் நிதியுதவி வழங்க கணேஸ்வரன் முதலிய பலர் வெளிநாட்டில் காத்திருக்கின் றனர் என்பது உண்மையே. ஆனால் இன்று அளவெட்டியில் உள்ள பல சங்கங்களை நடத்துவோர் அவற்றை நல்லமுறையில் நடத்த வேண்டுமெனும் அக்கறையுள்ளவர்களாக இல்லாதிருக்கிறார்கள். காற்றுள்ள போதே

தூற்றிக் கொள்ளத் தெரியாதவர்களே இவர்கள். இன்று வெளிநாட்டார் தம் ஊரவர்க்கும் அயலவர்க்கும் உதவக்கூடிய மனப்பாங்குள்ளவர்களாகவும் வசதி படைத்தோராகவும் இருக்கிறார்கள். இனி வருங்காலங்களில் இந்நிலை தொடர்ந்து நிலவும் என்பதை எதிர்வு கூறமுடியாது. ஆதலால் அளவெட்டியிலுள்ள பொதுத்தாபனங்களிற் பணிபுரிவோர் துயில் கொள்வதை விடுத்து உசார்ப்பட்டு தாம் தலைமை வகிக்கும் அல்லது தமது நிர்வாகத்தில் இயங்கும் பொதுத்தாபனத்துக்கு உடனடியாகத் தேவைப்படுவன எவையெனத் தெரிவு செய்து கனடாவிலுள்ள சிதம்பரசிவன் அல்லது இங்கிலாந்திலுள்ள கணேஸ்வரன் அல்லது சுவிஸ்சில் உள்ள சிவபாலன் அல்லது அவுஸ்திரேலியாவிலுள்ள சுந்தரேஸ்வரன் என்போரில் ஒருவரோடு அல்லது பலரோடோ தொடர்பு கொண்டு உங்கள் பொதுப்பணிகளை நிறைவேற்றுவீர்களாக? நீங்கள் கேளாமல் இருக்க அவர்கள் அனுப்பி வைப்பார்கள் என்பது மடமை. கேளுங்கள் தரப்படும் தட்டுங்கள் திறக்கப்படும் என்பது பொய்யாகுமோ?

கணேஸ்வரன் அவர்கள் முன்பள்ளிகளுக்கு எல்லாம் மாதந்தோறும் பணவுதவி செய்வதாகக் கூறிச் சென்றவர். அளவெட்டிக் கிராமத்தில் பல முன்பள்ளிகள் இயங்கி வருகின்றன. அவற்றை நடத்துவதில் பொறுப்பாயிருப்பவர்கள் பெருஞ்சிரமப்படுகிறார்கள் என்பது எல்லோர்க்குந் தெரியும். அந்த முன்பள்ளி ஆசிரியர்களைத் திரட்டி அவர்கள் ஒவ்வொரு முன்பள்ளியிலும் படிக்கும் மாணவர் தொகை, அம்மாணவர் ஒவ்வொருவரிடமும் இருந்து மாதாந்தம் சேர்க்கும் பணம். பணந் தருவதில் பின்னடிக்கும் குடும்பத்தவர்களின் பெயர், அவர்களின் குடும்ப நிலை, பணத்தை செலுத்தாமைக்குரிய காரணம் என்பன அடங்கிய பிள்ளையின் விபரக் கோவையைத் தயாரித்து அன்பர் கணேஸ்வரனுக்கு அனுப்பினால் அவர் உதவப்பின்னில்லார் என்பது எனது அபிப்பிராயம். இதுவரை எவரும் எம்முயற்சியுஞ் செய்யாதிருந்துவிட்டு வெளிநாடுகளில் உள்ள அன்பர்களை குறைகூறுவது சரியல்ல.

அளவெட்டிக் கிராமத்திற்கு இன்று தேவைகளிலெல்லாம் முக்கியமானது உணவுத் தேவையே. உணவுக்கு பற்றாக்குறை நேர்ந்திருப்பதற்குக் காரணம் யாழ்ப்பாணத்துக்கு கொழும்பிலிருந்து வரும் பாதை மூடப்பட்டதே. இது அரசாங்கத்தின் அராசகத்தனததை வெளிப்படையாகக் காட்டுகிறது. பாதை தடைப்பட்டு உணவுப் பொருள் கடல் மார்க்கமாக குறைந்தளவில் வருவதால் பொருட்களுக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டுப் பொருட்கள் விலையேறியுள்ளன. அதனால் பாதிக்கப்பட்ட கிராமங்களில் அளவெட்டியும் ஒன்று. இந்நேரம் அளவெட்டி அன்பர்கள் வெளிநாடுகளில் இருந்து கொண்டு உதவலாம்.

* * *

## சிவபாலன் - சுவிஸ்நாட்டு அளவெட்டி மைந்தர்கள்



சிவபாலன் அளவெட்டி வடக்கிற் பிறந்தவர். ஒரு விவசாயியின் மகனா வார். அவர் படித்து தொழில் வாய்ப்புக் கிட்டாமையால் வெளிநாடு செல்ல விரும் பினார். இவர் சுவிஸ் நாட்டைச் சேர்ந்து உழைத்துத் தமது குடும்பத்தை நன்கு கவ னித்து வருகிறார். தந்தையுடன் அளவெட்டியில் வாழுங் காலத்தில் இவரும் சிறந்த விவசாயி யாகவே விளங்கினார். இவர் வெளிநாடு சென்று மணம் முடித்துக் குடும்பத்துடன் அங்கேயே வாழ்ந்து வருகிறார்.

அளவெட்டிக் கிராமத்தை மறந்திடாத வெளிநாட்டு அன்பர்களில் இவருக்கும் மகத்தான இடமுண்டு. அளவெட்டி தபால் நிலையத்தை அதற்கென உரித்தான ஒரு காணியில் கட்டிடம் அமைந்து இயங்கச் செய்வதே தொண்டுள்ளம் படைத்த அளவெட்டி மக்களின் கருத்தாக நீண்ட நாள் ஆசையாக இருந்து வந்துள்ளது. அளவெட்டி தபாற்கந் தோர் ஆரம்பித்த காலம் முதல் அது வாடகைக் கட்டிடங்களிலேயே நடைபெற்றது. அளவெட்டி யோடு தொடர்புடைய எல்லா அன்பர்களுக்குந் தெரிந்ததே. முதலில் அளவெட்டி தபாற்கந்தோர் அருணோதயாகக் கல்லூரிக்கு அருகில் இருந்த ஒரு கட்டிடத்தில் இயங்கி வந்தது. பின்னர் அது அளவெட்டி அரசினர் வைத்திய சாலைக்கு பக்கத்தில் இருந்த தனியார் கட்டிடத்தில் இயங்கி வந்தது. அக்கட்டிடச் சொந்தக்காரர் கட்டிடத்தை தமக்கு விட்டுத் தரும்படி தபால் நிலையத்துக்கு நெருக்குதல் கொடுக்கத் தொடங்கினர். எக்காலமும் வாட கைக் கட்டிடத்தில் தபாற்கந்தோரை நடத்துவ தால் காலத்துக்குக் காலம் ஏற்படும் நெருக்கடி களையுணர்ந்த அளவெட்டி அரசினர் வைத்தி யசாலை நலன்புரிச்சங்கம் கனடாவிலுள்ள அளவெட்டி அன்பர் களை அளவெட்டியில் கட்டிடம் கட்டுவதற்கு ஒரு காணியை வாங்கித் தரும்படி கேட்டுக் கொண் டது. அப்போது அன்பர் சிதம்பரசிவன் அருணோதயாக் கல்லூரிக்கு எதிர்ப்புறமாக இருந்த காணியை ஒழுங்கு செய்து பரப்பு ஒரு லட்சம் ரூபாவாக மூன்று பரப்புக்கும் மூன்று லட்சம் ரூபாவாக வாங்க ஒழுங்கு செய்தார். ஆனால் பணத்தை எப்படிப் பெறலாம் என்று யோசித்த அவர் சுவிஸ் சிவபாலனுக்கு அந்த விடயத்தை தெளிவுபடுத்தி உதவி செய்யுமாறு கேட்டுக்கொண்டார். சிவபாலன் காணிக்குரிய பணத்தை சுவிஸ் நாட்டில் இருக்கும் அளவெட்டி அன்பர்களிடம் சேர்ப்பதாகவும் முதலில் தமது சொந்தப் பணத்திலிருந்து தருவதாகவும் வாக்குறுதி தந்தார்.

அன்பர் சிவபாலன் பணத்துக்குப் பொறுப்பேற்ற பின்னர் அக்காணியில் கட்டிடம் அமைக்க அரசாங்கம் உதவி செய்யாவிட்டால் சுவிஸ் வாழ் அளவை அன்பர்களின் சீற்றத்துக்குத் தாம் ஆளாக வேண்டி வருமெனச் சிதம்பரசிவன் அஞ்சினார். அளவெட்டியிலுள்ள நலன் புரிச்சங்கம் இது சார்பாக சுவிஸ் சிவபாலனுடன் தொடர்பு கொண்டு கேட்டபோது அவர் பின்வருமாறு பதில் தந்தார். "எப்போதாவது தபாற்கந்தோர்க் கட்டிடத்துக்குக் காணி வேண்டுந்தானே. ஆதலால் கிடைத்த இந்த வசதியான காணியைக் கைவிட்டால் பிறகு காணியைத்தேடுவதே முடியாததாகிவிடும். ஆதலால் நான் பணத்தை உடனடியாக அனுப்புகிறேன் காணியை முதலில் தபால் திணைக்களத்திற்கு உறுதி முடித்துக் கொடுங்கள்" என்பதாம் இக்கூற்று சிதம்பரசிவனுக்கு பெருந் திருப்தியை ஏற்படுத்தியது பணமும் அனுப்பப்பட்டது காணியும் எழுதப்பட்டது.

இவ்வாறு வெளிநாடுகளில் வாழும் எமது ஊர்மக்களின் உதவி தாராளமாக கிடைத்தும் அதனைப் பயன்படுத்த அளவெட்டி மக்கள் மிகமிக விழிப்பாயிருந்தும் அக்காணியை உரியவேளையிற் பயன்படுத்தமுடியாமற் போனதற்குந் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அதிலும் மேல்மட்டத்தில் உள்ள அதிகாரிகளின் அசமந்தப் போக்கே காரணம் என்று கூறுவது ஏற்புடையதாகலாம். பணம் கிடைத்துக் காணியும் தபால் திணைக்களத்துக்கு எழுதப்பட்டும் ஆண்டுகள் பல சென்றுவிட்டன. தெய்வம் விடை கொடுத்தாலும் பூசாரி விடை கொடாத கதையாகக் காரியங்கள் முடிந்துவிட்டன. 2006ம் ஆண்டு இந்த தபால் நிலையக் கட்டிடத்துக்கு பெருமெடுப்பில் அத்திவாரக் கல்லும் நாட்டப்பட்டது. தபால் திணைக்கள அதிகாரிகள் மட்டுமல்லாது அரசாங்க அதிபர் கூடச் சமூகமளித்துச் சுபவேளை பார்த்து அடிக்கல் நாட்டப்பட்டபோதும் வேலைகள் தொடர்ந்து நடைபெறாததால் ஒதுக்கப்பட்ட பணமும் பயன்படாமற்போகும் நிலை ஏற்பட்டுள்ளது. அரசாங்கம் விழிப்புணர்வுடன் செயற்படாமையால் பல அரசாங்க வேலைகளுக்காக ஒதுக்கப்படும் பணம் வேலை முடியாமலே திரும்பவும் வந்த வழியே போய்விடுவது ஆண்டாண்டு தோறும் நடைபெறும் வழமையான நிகழ்ச்சியாதலால் ஆண்டாண்டு தோறும் அழுது புராண்டாலும் இந்நிலை மாறுமென்பது சாத்தியமாகாது. இது தொன்று தொட்டு வந்த ஒரு மரவணு வியாதி.

சென்ற ஆண்டு (2006) அளவெட்டி தபாற்கந்தோர் கட்டிடம் கட்டி முடிக்கப்பட்டு விடும் அது இனிக் காலகாலமாக புதுக்கட்டிடத்திற் புதுப் பொலிவுடன் இயங்கும் என்று எதிர்பார்த்திருந்த அளவெட்டி அன்பர்கள் ஏமாற்றமடைந்ததோடு விரக்தி நிலையில் உள்ளனர். அன்பர் சிவபாலன் தமது கடமையைச் சரிவரச் செய்து விட்டார். அவருக்கு அளவெட்டி மக்களின் வாழ்த்தும் நன்றியும் உரித்தாகுக.

தற்போது அளவெட்டிக் கிராமத்தின் அபிவிருத்திக்கென தனியாக அளவெட்டி அபிவிருத்தி மன்றமென ஒரு அமைப்பு தாபிக்கப்பட்டு தனது செயற்பாடுகளை முன்னெடுத்து வருகின்றது. இதில் அளவெட்டி நலன்புரிச் சங்கம் சுவிஸ் கிளையினரது பங்களிப்பு பல வழிகளிலும் பாராட்டத்தக்கது. குறிப்பாக ஐந்தாம் தர புலமைப்பரிசில் பரீட்சைக்குத் தோற்றிய மாணவர்களுக்கும், ஏனைய கிராம இளைஞர், யுவதிகளுக்குமென தமது செலவீனத்தில் இலவச ஆங்கில வகுப்புக்களை நடாத்தி வருகின்றது. அதுமட்டுமன்றி எமது கிராமத்தின் தகவல்களையும் செய்திகளையும் உலகத் திசை யாவும் பரந்து வாழும் உறவுகள் உடனுக்குடன் தெரிந்துகொள்ளத்தக்க விதத்தில் நவீன தொழில்நுட்ப உலகின் சவால்களுக்கேற்ற விதத்திலும் அளவெட்டிக் கிராமத்துக்கென ஓர் இணையத் தளத்தினையும் இவர்களே நடாத்தி வருகின்றனர்.

அத்துடன் இங்கு மேலும் ஒரு செய்தியை நான் பதிந்தாக வேண்டும். வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம் எனும் இந்நூலினை சிறந்த முறையில் வெளிக்கொணர்வதற்குத் தனது சொந்தப் பணத்தினைத் தந்து எமது கிராமத்தின் வரலாற்றை ஆவணமாக்க உதவிய அந்த வரலாற்றுப் பதிவும் திரு.செல்லத்துரை சிவபாலனையே சாரும். இவருக்கு தனிப்பட்ட ரீதியில் எனது நன்றிகள் உரித்தாகட்டும். அவரது ஊர் சார்ந்த பற்றுணர்வு உயர்வு பெற இறையருள் சித்திக்கப் பிரார்த்திக்கின்றேன்.



address

# புலம்பெயர்ந்தும் அளவெட்டியை மறவாத பெயர் குறிப்பிடாத அன்பர்கள்

அளவெட்டியை மறவாத புலம்பெயர்ந்து பிறநாடுகளில் வாழ்வோரைப் பற்றி அவர்கள் அளவெட்டிக்கு ஆற்றிய பணிகளுடன் அவர்களின் பெயரையும் வெளிப்படுத்த வேண்டும் என்பது எமது பேரவா. ஆனால் இதற்கு வெளிநாடுகளில் இருக்கும் எம்முடன் தொடர்பு கொள்பவர்களின் ஆதரவு இதனை எழுதும் வரை எமக்கு கிடைக்கவில்லை. வெளிநாட்டில் இருப்போருடைய தயவினாலும் ஆதரிப்பாலுமே அளவெட்டியில் உள்ள பல குடும்பங்கள் ஒருவாறு உயிரைப் பிடித்துக் கொண்டு வாழமுடிகிறது. இங்கு அரசாங்கம் போக்குவரத்துப் பாதைகளை மூடி மக்களைப் பட்டினி போட்டதால் உணவுப் பண்டங்களைப் பெற முடியாத நிலை ஏற்பட்டது. உணவுப்பண்டங்களின் விலை யானை விலை குதிரை விலையாக மாற்றம் பெற்ற போது வெளிநாடுகளிலுள்ள அன்பர்கள் தாம் சார்ந்த குடும்பங்களுக்குப் பண உதவி செய்யாது விட்டால் இங்குள்ளார் பலர் சாவைத் தழுவுவதன்றிப் பிழைப்பதற்கு மார்க்கமேயில்லை. தங்கள் தங்கள் உறவுகளை மட்டுங் கவனித்து பணம் அனுப்புவோர்கள் கூடப் பாராட்டத் தக்கவர்கள் என்பது புனைந்துரையல்ல.

ஒரு காலத்தில் அளவெட்டியில் வாழ்ந்த குடும்பங்களைச் சேர்ந்த பிள்ளைகள் பலர் அருணோதயாக் கல்லூரியில் (அப்போது அளவெட்டி ஆண்கள் ஆங்கிலப் பாடசாலை) எட்டாம் வகுப்பு அல்லது அதற்கு உட்பட்ட வகுப்புகளிற் படித்து விட்டு மலேசியா, பர்மா முதலிய நாடுகளுக்குச் சென்று பணமீட்டித் தங்கள் குடும்ப நிலையை உயர்த்தினர். இரண்டாவது உலகமகாயுத்தம் ஏற்பட்டதால் குறிப்பிட்ட நாடுகளுக்குச் செல்வதும் உழைப்பதும் கடினமாயிற்று. அக்காலகட்டத்தில் மலையாளம் புகையிலை எங்கள் கிராம மக்களுக்கு கைகொடுத்து உதவியது. இந்திய அரசாங்கத்தில் புகையிலை இறக்குமதித் தடையால் மலையாளம் புகையிலை வியாபாரம் படுத்து விட்டது இதனால் அளவெட்டிப் புகையிலை உற்பத்தியாளரும் வியாபாரிகளும் பெரிதும் பாதிக்கப்பட்டனர். இக்காலத்தில் ஐரோப்பிய அமெரிக்க நாடுகளில் சென்று பொருளீட்டும் நிலை ஏற்பட்டது. அது இன்று வரையும் நின்று நிலவுகிறது. அன்றாடம் கஞ்சிக்கே வழியில்லாத பலகுடும்பங்கள் வீடுவாங்க காணிவாங்க வங்கியிற் பணஞ் சேமிக்க இப்புலம் பெயர்வு வழி சமைத்தது. ஆனால் இந்நிகழ்வால் நேர்ந்த பெருநட்டம் குடிசனத் தொகையில் தமிழர்கள் மிகச் சிறுபான்மையோராக வந்ததே எனலாம்.

அளவெட்டிக் கிராமத்துக்கு நேர்முகமாகவும் மறைமுகமாகவும் உதவினோர் பலராவர். சிலர் நேரே பணம் அனுப்பியதால் இங்குள்ள தனிப்பட்ட மக்களும் பொதுத் தாபனநிர்வாகிகளும் அவர்களை நன்கறிந்து வைத்துள்ளனர். சிலர் பொதுத் தேவைக்குப் பணம் சேகரிப்பவர்களிடம் பணம் கொடுப்பதால் அவர்களின் பெயர் விபரம் இங்குள்ளவர்களுக்குத் தெரிவதில்லை. அப்படிப்பட்ட நிலையில் உள்ளார் இக்கட்டுரையை வாசிக்கும் போது சீற்றமடையலாம். எழுதியவர் மேல் தமது வெறுப்பை உமிழலாம். இந்நூல் வெளிவரும் போது அவர்கள் தம் பெயரையும் தாம் அளவெட்டிக்குச் செய்த உதவியையும் குறிப்பிட்டு எழுதினால் இந்த நூலை வெளியிடும் அளவெட்டி மகாஜனசபை நிர்வாகிகள் அவர்களையும் மறுபதிப்பில் சேர்க்க அல்லது ஒரு சிறு பிரசுரத்தை வெளியிட முடியும் என அவர்கள் அனைவர்க்கும் வேண்டுகோள் விடுக்கிறோம். புலம் பெயர் மக்கள் பற்றி அரை குறையாக வெளியிட்ட கருத்துக்களுக்காக வருந்துகிறோம்.

# அளவெட்டி அன்றும் இன்றும்

அளவெட்டிக் கிராமம் ஆங்கிலேயர் ஆட்சிக்காலம் முடியும் வரையும் இருந்த கலாசாரப் பண்பாடு, தொழில்முறை என்ப வற்றுக்கும் அதன் பின் ஆறு தசாப்தங்களின் பின்னிருக்கும் நிலைக்குமுள்ள வித்தியா சங்களை இன்றுள்ள இளைஞர் பரம்பரைக்கு விளங்க வைப்பதே இக்கட்டுரையின் நோக்க மாகும்.

அந்நியர் ஆட்சிக் காலத்தின் பிற்பகுதியில் மக்கள் வாழ்க்கை முறையில் சிறுசிறு மாற் றங்கள் ஏற்பட்டபோதிலும் இன்று காணப்படும் பாரிய மாற்றங்களின் தோற்றம் அன்று பெரிதாகத் தெரியவில்லை. ஆனால் அந்நியர் ஆட்சி மறைந்தபின் எமது நாடாகிய இலங்கைத் தீவின் வாழ்க்கை முறைகளில் நிகழ்ந்த மாற்றங்கள் பல.

அளவெட்டி யாழ்ப்பாணத்திலிலுள்ள ஒரு கிராமம். யாழ்ப்பாணம் ஈழத்தின் ஒரு பகுதி. இது தமிழர்களால் நெடுங்காலம் ஆட்சி செய்யப்பட்டது. யாழ்ப்பாண அரசைவிட வன்னிப் பெருநிலப் பரப்பையும் தமிழர் களாகிய வன்னியர்களே ஆண்டு வந்தனர். கிழக்கு மாகாணமும் அப்படியே. அக்கால மக்களின் வாழ்க்கை முறையில் அந்நியரால் பெருமாற்றத்தை ஏற்படுத்த முடியவில்லை. சமய சம்பந்தமான தாக்கங்களைத் தவிர, வேறு மாற்றங்கள் பெரிதாக ஏற்படவில்லை. மக்கள் பரம்பரைத் தொழில்களையே மேற்கொண்டி ருந்தனர். ஒரு மரணவீடு அல்லது விவாக வீடு என்றால் அங்கு நிகழவேண்டிய பல தொழில் களுக்கும் அவ்வத்துறையில் பரம்பரையாக ஈடுபட்டோருக்கு அறிவித்தால் அவர்கள் தத்தம் தொழிலை நிறைவேற்றி வைப்பர். அவர் களுக்குரிய சம்பளங்களும் முதியோர்களால் நிர்ணயிக்கப்பட்டிருக்கும். கிராமப் பெரியார் சிலர் இவ்விடயத்தில் பணங் கொடுப்பவருக்கும் பணம் பெறுபவருக்கும் பிரச்சினை ஏற்படாத வாறு தீர்த்து வைப்பார்.

இம்முறை எமது அளவெட்டிக் கிராமத் திலும் பண்டுதொண்டு நாடு சுதந்திரமடையும் வரை நின்று நிலவியது. விவாக வீட்டில் மங்கலகரமான இசையெழுப்புவோர் அள வெட்டிக் கிராமத்தின் வடபாலிருந்தனர். மரண வீட்டில் அமங்கல ஒலியாகிய நெய்தற் பறையறைவோர் தென்பாலிருந்தனர். மற்றும் முடி திருத்தும் வினைஞர், சலவைத் தொழி லாளர் என்போரும் தத்தமக்குரிய பகுதிகளில் ஒருசேர இருந்தனர். பொற்கொல்லர், இரும்பு வினைஞர் என்போரும் அப்படியே தத்தம் கடவைகளில் வாழ்ந்து வந்தனர். கடவை என்பது குடியிருப்புக்களின் அன்றைய பெயராகும்.

கிராம மக்களின் உணவுத்தேவை பெரும் பாலும் கிராம மக்களிற் பெரும் பகுதியினராக விருந்த விவசாயிகளால் நிறைவு செய்யப்பட்டது. போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் காலத்தில் இந்தியாவைத் தவிர வேற்று நாடுகளுக்குக் காலடி எடுத்துவைக்காத மக்கள் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் மலேசியா, பர்மா முதலிய நாடுகளுக்குச் சென்று உழைக்க முயன்ற தோடு அங்கு குடும்பத்தாரோடு வாழுதலையுஞ் சிலர் மேற்கொண்டனர். மலேசியா, அளவெட்டி மக்களின் பொருளாதாரத்துக்குப் பேருதவி புரிந்து வந்தது என்பது உண்மையாகும். அளவெட்டி மட்டுமல்ல, யாழ்ப்பாணக் குடாநாடு முழுவதினதும் காசுப் புழக்கத்துக்கு மலை யாளம் புகையிலை ஐக்கிய வியாபாரச் சங்க மொன்று யாழ்ப்பாணத்தில் ஆரம்பிக்கப்பட்டுச் சிறப்பாக நடைபெற்று வந்தது. அச்சங்க முகாமையாளராகத் தெற்களவெட்டியைச் சேர்ந்த அ. சுப்பையா என்பவர் செயலாற்றி னார். இவர் அருணோதயக் கல்லூரி, அருணா

சலம் தமிழ் வித்தியாசாலை என்பனவற்றின் தாபகராகவிருந்த அருணாசல உடையாரின் மகனாவார். இவரே அருணோதயக் கல்லூரி யின் அதிபராகவிருந்த சிவசுப்பிரமணியம் என்பவரின் தந்தையுமாவார். அக்காலத்தில் புகையிலை வியாபாரச் சங்கம் பெரும் இலாபத்தில் நடைபெற்றதனால் அதிலிருந்து வரும் இலாபம் சங்கத்திற்குப் புகையிலை கொடுக்கும் அன்பர்களுக்கும் பெருந்தொகை யாகக் கிடைத்து வந்தது. மலையாள மக்கள் புகையிலை உற்பத்தியைத் தொடங்கியதாலும் உலகின் பல பாகங்களிலும் புகையிலை உபயோகத்தால் வரும் நோய்களின் தாக்கம் பிரசாரப் படுத்தப்பட்டதாலும் புகையிலைச் செய்கையில் பாதிப்பு ஏற்பட்டது. இத்தாக்கம் அளவெட்டிக் கிராமத்தையும் பெரிதும் பாதித்தது. புகையிலைச் செய்கையை இவர் கைவிடாதபோதும் அதனால் வரும் இலாபம் குறைந்ததாகவே கிடைத்தது.

புகையிலைச் செய்கையின் இடத்தை வெங்காயச் செய்கை ஓரளவுக்குப் பிடித்துக் கொள்ளலாயிற்று. வெங்காயச் செய்கையால் அளவெட்டி மக்களின் பொருளாதாரம் பெரிதும் உயர்ந்தது. வெங்காயச் சங்கங்களும் யாழ்ப்பாணத்தின் பல கிராமங்களிலும் ஆரம்பிக்கப்பட்டன. அளவெட்டி பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம் வெங்காயத்தை விவசாயி களிடமிருந்து பெற்றுக் கொழும்புக்கு அனுப்பிப் பெரும் இலாபமீட்டியது. ஆரம்பத்தில் வெங்காயத்தைச் சேமித்துவைக்கக்கூடிய வழிவகை தெரியாதபடியால் வெங்காய அறுவடை முடிந்தவுடனேயே அவற்றைச் சந்தைப்படுத்த வேண்டிய தேவை விவசாயி களுக்கிருந்தது. அதனாற் சங்கத்துக்குக்கூட வெங்காயத்தைச் சாக்குகளில் அடைத்து அனுப்பும்போது ஒரு பகுதி வெங்காயம் அழுகிப் போவதால் வெங்காய வியாபாரம் சங்கங்களுக்கே நட்டத்தில் முடிந்தது. பின்னர் வெங்காயத்தைச் சிறு சிறு ஓலைக் கூடுகளில் நிரப்பிப் பின் சாக்கிலிட்டு அனுப்பும் முறை கண்டுபிடிக்கப்பட்டது. வெங்காயக் கூடுகள் காற்றோட்டமுள்ளனவாகப் பின்னப்பட்டதால் வெங்காயத்தைச் சில நாள்களுக்கு அழு காமல் வைக்கக்கூடிய நிலை ஏற்பட்டது. இது சங்கத்துக்கும் வெங்காய உற்பத்தியாளர் களுக்கும் ஆறுதல் தருவதாக இருந்தது.

வெங்காயத்தைக் கூடைகளில் இட்டு அனுப்பும் முறை கண்டுபிடித்ததால் வெங்காயக் கூடு பின்னும் கைத்தொழிலும் கிராமங்கள் தோறும் முன்னேற்றமடைந்தது. ஓய்வு நேர முள்ள பெண்களும் சிறுவர்களும் இந்தக் கைத்தொழில் மூலம் பணம் சேர்க்கக்கூடிய வழியும் பிறந்தது. பனை மரங்களை வளர்த் தோருக்கும் ஓலை வியாபாரம் அவர்களின் பொருளாதாரத்தில் முன்னேற்றத்தை உண்டாக்கியது. இந்தியாவில் வெங்காயத்தை எவ்வாறு சேமிக்கிறார்கள் என்பதைக் கண்ட றியச் சென்ற குழுவினர் செய்த சிபார்சின் பிரகாரம் வெங்காயத்தை அறுவடை செய்த நிலத்திலேயே உலரவிட்டுப் பத்துப் பதினைந்து அல்லது இருபது கிலோ நிறையுள்ள பிடி களாகக் கட்டி அவற்றை வெயிலும் மழையுந் தாக்காத வெளிச்சமும் காற்றோட்டமும் இருக்கக்கூடிய கொட்டில்களில் அதற்கெனப் பரப்பப்பட் மரங்களிற் கட்டிச் சேமித்து வைத்து அந்த வெங்காயத்தை ஏறத்தாழ ஓர் ஆண்டு வரை அழுகல் நோய் தாக்காமற் பாதுகாக்கக் கூடியதாக இருந்தது. இதனால் வெங்காயத்தை அறுவடை செய்த உடனேயே சந்தைப்படுத்த வேண்டிய தேவை இல்லாமற்போயிற்று. இதனால் வெங்காயக் கூடு பின்னுங் கைத் தொழிலும் நின்று போயிற்று. இலங்கையில் தமிழர் சிங்களவர் மோதல் ஏற்பட்டதால் யாழ்ப்பாணத்திலிருந்து கொழும்புக்குப் புகையிரத சேவை இல்லாத நிலை ஏற்பட்டது. வவுனியா வரை புகையிரதப் பாதையுந் தகர்க்கப்பட்டதால் கொழும்புக்கு வெங்காயம் அனுப்புந் தொழிலிலும் பாதிப்பு ஏற்பட்டது.

லொறி முதலியவற்றில் அனுப்பிய முறையும் அரசாங்கம் A9 பாதையை மூடிய பின் கைவிடப்பட்டது. இப்போது வெங்காயம் உள்ளூர்ப் பாவனைக்குப் பயன்படுவதன்றி ஏற்றுமதிப் பொருளாகும் நிலை வெகுவாகக் குறைந்துவிட்டது. ஒரு போகம் வெங்காயம் விலை குறைந்து விட்டால் மறுபோகம் வெங்காய உற்பத்தியைக் கைவிடுகிறார்கள். கைவிட்டவுடன் வெங்காய அறுவடைக் காலத்தில் வெங்காயம் கிலோ நூறு ரூபாவுக்கும் மேலாக போகச் செய்கையை மேற்கொண்ட வர்கள் மிகமிகப் பெரிய இலாபத்தை அடை கிறார்கள். அது கண்ட மற்றைய விவசாயிகள் ஈட்டுக்களை அடகு வைத்து வெங்காயத்தைத் தாராளமாக உற்பத்தி செய்கிறார்கள். அவ்வுற்பத்திப் பெருக்கத்தினால் வெங்காய விலை திடீரெனச் சரிந்து கிலோ ஐந்து ரூபாவுக்குங் குறைவாகப் போய்விடுகிறது. இதனால் வெங்காயச் செய்கை நம்பிச் செய்யக்கூடாத ஒன்றாகி விட்டது. கொழும்பு செல்லும் புகையிரதப் பாதையும் வாகனப் பாதையும் மூடப்பட்ட மையும் யாழ்ப்பாண வெங்காயச் செய்கை யாளரின் வயிற்றில் விழுந்த பேரிடி என்றே கூறலாம்.

அளவெட்டி விவசாயிகளுக்கு இலாபந் தந்த பயிர் வகைகளில் முந்திரிகைச் செய்கையும் கடந்த சில ஆண்டுகளுக்கு முன் லாபந் தருவதொன்றாக அமைந்திருந்தது. ஆனால் அதுவும் இப்போது உள்ளூர்த் தேவைக்கு மட்டும் பயன்படுத்தப்படுவதால் அதன் உற்பத்தியிலும் பெரும் வீழ்ச்சி காணப்படுகிறது. முந்திரிகைச் செய்கை அளவெட்டியில் பழங்காலந்தொட்டுச் சிலரால் பின்பற்றப்பட்டது. அளவெட்டியிலுள்ள வேர்க் குத்திக் கடவை என்னும் பகுதியில் சென்ற நூற்றாண்டின் முற்பகுதி தொட்டு அச்செய்கை நடைபெற்றுவந்தாலும் அவுஸ்ரேலியா விலிருந்து வந்த நல்லின முந்திரிகைச் செய்கை சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதியில் பெருக ஆரம்பித்தது. அளவெட்டியிற் பல முந்திரிகைத் தோட்டங்கள் தோன்றின.

முந்திரிச் செய்கையாளர் யாழ்ப்பாணத் துக்கும் கொழும்புக்கும் போக்குவரவுத் தொடர்பு சுலபமாக நடைபெற்ற காலப்பகுதியில் அதிக லாபஞ் சம்பாதிக்கக் கூடியதாக இருந்தாலும் போக்குவரத்துப் பிரச்சினை ஏற்பட்ட காலத்தில் அப்பயிர்ச் செய்கையாளரும் பெரிதும் பாதிக்கப்பட்டனர். அது மட்டுமல்லாமல் யாழ்ப்பாணத்திலுள்ள நீர்வேலி முதலிய பல கிராம விவசாயிகள் வாழைத் தோட்டங்கள் மூலமே தமது பொருளாதாரத்தை விருத்தி செய்தனர். அளவெட்டிக் கிராமமும் வாழைத் தோட்டங்கள் மலிந்த கிராமம். போக்குவரத்துத் தடை காரணமாக அளவெட்டியில் வாழைச் செய்கையும் உலக்கை தேய்ந்து உளிப்பிடி யான கதையாகப் போயிற்று. உருளைக்கிழங்குச் செய்கையினாலும் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் விவசாயிகள் பெரும் பயன் பெற்றனர். உருளைக் கிழங்கு அறுவடை நிலையை அடையும்போது வெளியூர்க் கிழங்குகளை யாழ்ப்பாணத்துக்குக் கொண்டு வரும் வியாபாரிகளைத் தடை செய்யாத காரணத்தால் உருளைக் கிழங்குச் செய்கையும் நட்டத்தில் முடிகிறது. யாழ்ப்பாண விவசாயி எதைச் செய்து எப்படிப் பிழைப்பான்? விவசாயம் அளவெட்டிக்கு மாத்திரமல்ல, யாழ்ப்பாணம் முழுவதற்கும் பயன்தராத ஒரு தொழிலாக மாறிவிட்டது. இந்நிலையில் யாழ்ப்பாணம் முழுவதற்கும் அளவெட்டியுட்பட வாழ்வளிக்கும் வாய்ப்பான தொழில் மேலை நாடுகளிற் சென்று பொருளீட்டுவதே என்பதைக் கிராம மக்கள் பலருங் கண்டு கொண்டனர்.

கனடா, இங்கிலாந்து, சுவிஸ், நோர்வே, அமெரிக்கா, பிரான்ஸ் முதலிய நாடுகளுக்குப் பலரும் புலம்பெயர்ந்து வாழ ஆரம்பித்தனர். இலங்கையில் இனக்கலவரமேற்பட்டு அதனால் இலங்கைத் தமிழருக்கு அரசாங்கமும்

இராணுவமும், சிங்கள மக்களும் இழைத்து வருங் கொடுமையை உணர்ந்தே மேற்குலக நாடுகள், மத்திய முக்கு நாடுகள், அவுஸ்ரேலியா முதலிய நாடுகள் தம் நாட்டில் ஈழத்தமிழர் குடியேறுவதிற் கடும்போக்கைக் கையாளாது விட்டதால் பல லட்சக் கணக்கான மக்கள் அந்நாடுகளிற் குடியேறிப் பணஞ் சம்பாதித்துத் தம்மையும் தம்மைச் சார்ந்தவர்களையும் காப்பாற்றக்கூடிய நிலை இன்றுள்ளது. வெளிநாடுகள் இடங்கொடாவிட்டால் தமிழ் மக்களின் ஒரு பாகம் பட்டினிச் சாவை மேற் கொண்டு அழிந்திருக்கும் என்பது திண்ணம். பிற நாடுகளில் எமது மக்கள் வாழ்வதால் எமது இனம் இலங்கை அரசினதும் இலங்கை இராணுவத்தினதும் சிங்களப் பேரினவாத சக்திகளிடமும் இருந்து தப்ப முடிகிறதென்பதைக் கூறும் அதே நேரம் தமிழ் மக்களின் கலாசார விழுமியங்கள் அழிந்துபடுவதோடு தமிழினமும் சுருங்கி வருகினறதென்பதையும் நாம் ஞாபகத்திற் கொள்வது அவசியம்.

இன்று வெளிநாடுகளிற் சைவ ஆலயங் களையமைத்துச் சைவராக வாழவும் தமிழ் மொழியைத் தமது பிள்ளைகளுக்கும் கற்பித்து அவர்களைத் தமிழராக வாழவும் இந்தத் தலைமுறை மக்கள் முயற்சிக்கிறார்கள் என்பது உண்மையானாலும் எதிர்வருந் தலைமுறையினர் நாம் வாழும் நாட்டுடன் எமது பண்பாடு, கலாசாரங்களை மறந்து இணைந்து கொள்ளமாட்டார்கள் என்பதற்கு உத்தரவாதம் உண்டோ? இவ்வாறு பல நாடுகளிலும் பல ஆண்டுகளின் முன் குடியேறி யவர்களின் வம்சாவழியினர் அந்த நாட்டவர் போலாகியதையும் நாம் மறப்பதற்கில்லை.

இது இவ்வாறாக அளவெட்டி அன்றும் இன்றுமென்ற கட்டுரைத் தலையங்கத்தின் மறுபக்கமும் ஒன்று உண்டென்பதை உணர்ந்து அதை ஆராயாமல் இக்கட்டுரையை முடிப்பது பொருத்தமாகாது. அளவெட்டி ஏறத்தாழ எண்பதாண்டுகளின் முன் எப்படியிருந்த தென்பதை நாமறிவோம். எண்பதாண்டு களின் முன் அளவெட்டிக்கும் விளானுக்கும் சண்டிலிப்பாய்க்கும் சொந்தமான விளாவெளி என்றும் செம்மண் சார்ந்த நிலப்பரப்பு ஒன்றிருந்தது. அது வளமான நிலமாயும் அப்பகுதியிலுள்ள கிணறுகள் செழிப்பான நன்னீருடையனவாயிருந்தும் அதனைப் பயன்படுத்தி விவசாய பூமியாக்குந் தேவை மக்களுக்கு இல்லாதிருந்தது. நீர்ப்பாய்ச்சு தலில் இருந்த சிரங் காரணமாக ஒரு விவசாயி அரை ஏக்கர் காணியில் மட்டும் பயிர்ச் செய்கையை மேற்கொண்டான். அக்காலப் பணவருவாய்க்குரிய பயிராகப் புகையிலை உற்பத்தியிருந்தபோதும் ஐந்து பரப்புக் காணிக்குமேல் புகையிலைச் செய்கையை எந்த விவசாயியுஞ் செய்வதில்லை. புகை யிலைக் கன்று விளைந்து அறுவடையாகுமுன் அந்தக் காணியில் ஒரு பகுதியில் கத்தரிச் செடி நடப்பட்டுவிடும். புகையிலைக் கன்று விளைந்து வெட்டப்பட்டபின் கத்தரியும் மிளகாயுஞ் செய்கை பண்ணப்படாத பகுதியில் தினை உற்பத்தி செய்யப்படும். தினை செய்யும் காணியில் உடன் பயிராக மரவள்ளிச் செய்கையும் இடம்பெறும் தினை எழுபது நாட்பயிர். நாற்று மேடையில் இருபத்தைந்து நாட்கள் வரையிருக்கும். நாற்றைப் பிடுங்கி நடடபின் நாற்பத்தைந்து நாளில் அது அறுவடையாகிவிடும். அதன்மேல் மரவள்ளிச் செடிக்கு ஊறுவிளையாமல் அந்நிலத்தில் பாசிப்பயறு பயிரிடப்படும். பாசிப் பயிற்றை விதைத்து மண்வெட்டியால் நிலத்தைச் சாறிப் பாத்தி கட்டிவிடுவர். அதுவும் அதிக நீர்ப் பாய்ச்சலை வேண்டாத பயிராதலால் இரண்டு மூன்று முறை நீர்ப்பாய்ச்சுதலோடு அது பூத்துக் காய்த்து நெற்றாகிப் பயன் தந்து விடும். நெற்றையெடுத்து வெயிலிற் காயவிட்டுச் சிறு தடியினால் அடித்துக் கோதையும் பயற்றையும் வெவ்வேறாக்கிப் பயற்றைத் தமது தேவைக்குக் கூடுதலாக இருப்பின் சந்தைப்படுத்துவர்.

ஒருபுறம் தினை விளைந்து கொண்டிருக்க மற்றொரு காணியில் குரக்கன் நாற்று வளர்க்கப்படும். குரக்கன் செய்கைக்கு நீர் அதிகந் தேவைப்படுவதால் அது பெரும்பாலும் மாரியை அண்டிய காலப்பகுதியிலேயே செய்கை பண்ணப்படும். எனினும் குரக்கன் கதிர் வெட்டப்பட்ட பின் கதிரைக் காயவிடுவதற்கு வெப்பந் தேவைப்படுவதால் பெருமழை தொடங்குவதற்கு முன்பாக அறுவடை செய்யக் கூடியதாக அது பயிரிடப்படும். பெரும்பாலும் புரட்டாதி மாதம் முடிவதற்கு முன் குரக்கன் அறுவடையாவதற்கு வாய்ப்பாகவே குரக்கன் பயிர் செய்கை பண்ணப்படும். குரக்கன் ஒட்டு எனப்படுந் தண்டு மாடுகளுக்கு நல்ல உணவாகும்.

குரக்கன் பயிர் செய்கை பண்ணப்பட்ட நிலம் புகையிலைச் செய்கைக்கு ஏற்ற தென்பதால் குரக்கன் அறுவடையாகி அதன் தாள் (பூட்டு) அகற்றப்பட்ட பின் அந்நிலம் புகையிலைச் செய்கைக்கு ஏற்ற வகையில் பசளையிடப்படும். அளவெட்டி மட்டுமல்லாமல் யாழ்ப்பாண விவசாயிகள் அனைவரதும் கவனமும் புகையிலைச் செய்கையிலேயே தங்கியிருக்குமென்பது மிகையன்று. முதலில் வீடு வேய்ந்து பின்னர் புதிய ஓலையால் வேயும்போது கழிக்கப்படும் பழைய ஓலைகள் புகையிலைப் பயிருக்குரிய நிலத்தில் புதைக்கப்படும். ஓலை பசளையாக இடப்படு முன் அந்நிலத்தில் மாடு ஆடு என்பன கட்டப்பட்டு அவற்றின் கழிவாகிய சாணம், ஆட்டுப்பிழுக்கை என்னும் இயற்கைப் பசளைகள் இடப்படும். ஓலைத் தாழ்வை முடிந்தபின் மேலும் ஆடு மாடுகள் கட்டப்படும். மாடுகள் தொட்டில்களிலும், ஆடுகள் அட்டாளை களிலும் கட்டப்படும். தொட்டில் அட்டாளை என்பன இன்றுஞ் சிற்சில இடங்களிற் காணப்பட்டாலும் ஓரளவுக்கு அவை மறைந்த பண்டங்களாக மாறிவிட்டன. கட்டி வளர்க்கப் படாத ஆடுகள் பட்டிகளில் அடைக்கப்படும். மாடுகள் இரு பக்கமும் கட்டையடித்து இறுக்கக் கட்டப்பட்ட கயிற்றில் மாடுகளின் காலில் அல்லது கழுத்திற் கட்டப்பட்ட கயிறுகள் அவை படுத்துறங்குவதற்கு வசதியான தூரத்தில் இணைக்கப்படும். மேய்ச்சல் மாடு அல்லது பட்டி மாடு என்று சொல்லப்படும் இம்மாடுகள் ஒரு நாட்கூலி ஐந்து சதம் தொடக்கம் பத்துப் பதினைந்து சதம் வரையிருக்கும். நிலத்தைப் பண்படுத்துவதற்கு உழவு அல்லது மண்வெட்டிக் கொத்துதல் பயன்படும். உழவுக்கு மாடுகளே பயன் படுத்தப்படும். கலப்பை உழவுக்குப் பயன்படுங் கருவி. அதுவும் நூதனசாலைக்குரிய காட்சிப் பொருளாகவே இன்று மாறிவிட்டது. நிலம் பண்படுத்திப் பசளையிட்டபின் புகையிலைக் கன்று நடுகை செய்யும் காலம் வரும்போது அந்நிலத்திற்கு இலை குழைகளாகிய பசுந்தாட் பசளையைப் பயன்படுத்துவார்கள். புகையிலைக் கன்று நட்ட நிலத்தில் இரு ஆண்டுகள் மாற்றுப் பயிர் செய்தபோதும் புகையிலைக் கன்றுக்கு இட்ட பசளையே அப்பயிர்களெல்லாவற்றுக்கும் பயன்படும். ஆதலால் புகையிலைக் கன்றுக்குக் கைகோணாது பசளையிட விவசாயி விரும்புவான். கத்தரி, மிளகாய்த் தோட்டத்தில் இராசவள்ளி, வள்ளி, கருணை, மோதகவள்ளி, நெடுராசவள்ளி, சிறுகிழங்கு முதலாய கிழங்கு வகைகளையும் ஊடுபயிராக உண்டாக்கிப் பயன்பெறுவான். இன்னும் ஒரு ஆயிரங்கன்று புகையிலைக் கன்றுப் பயிர் செய்யும் நிலத்தில் இடையிடையே சில வாழைகளை நாட்டி அவற்றால் பயன் பெறுவோருமுளர்.

தோட்டங்கள் இவ்வாறாக நீர்ப்பாய்ச்சல் வசதியற்ற செம்பாட்டு நிலத்தில் வரகைப் பயிர் செய்வது விவசாயிகளின் வழக்கம். வரகு ஒரு வருடம் விதைத்த காணியில் மறுவருடம் விதைப்பதில்லை. நிலம் புல் பூண்டுகளோடு இருப்பதால் ஆடு மாடுகள் விதைக்கப்படாத நிலத்தில் புல்பூண்டுகளை மேய்ந்து அந்

நிலத்தைச் செழிப்புறச் செய்யும். செம்பாடு பயிர் செய்த நிலத்திலும் பயிர் செய்யாத நிலத்திலும் வரகைப் பயிர் செய்வது விவசாயிகளின் வழக்கம். வரகு ஒரு வருடம் விதைத்த காணியில் மறுவருடம் விதைப்பதில்லை. நிலம் புல் பூண்டுகளோடு இருப்பதால் ஆடுமாடுகள் விதைக்கப்படாத நிலத்தில் புல்பூண்டுகளை மேய்ந்து அந் நிலத்தைச் செழிப்புறச் செய்யும். செம்பாடு பயிர் செய்த நிலத்திலும் பயிர் செய்யாத நிலத்திலும் சிவனார், காய்விளாய் என்னும் பூண்டுகள் முளைப்பது சரளம். இவை தோட்டங்களுக்குப் பசுந்தாட் பசளையாகப் பயன்படும். அளவெட்டிக் கிராம மக்கள் தேவைக்கு மேலாக இவை கிடைப்பதால் வேற்றூர் மக்களும் அளவெட்டிக்கு வந்து இவற்றை விதைத்து வரகை வளரவிடாது வரகுப் பயிருக்கு ஊனமாக இருக்கும் பூண்டுகளைப் பயிர்ச்செய்கையாளரின் அனுமதியோடு பணங்கொடாமலே பிடுங்கிச் செல்வர். ஆனால் பயிர் செய்யாத நிலச் சொந்தக்காரர் பணங்கொடாமல் அவற்றைப் பிடுங்க விடார். அத்தகைய நிலத்தில் பிடுங்குவதோடு கத்தியால் வெட்டியும் அவற்றை எடுப்பர். கட்டுவன், வயாவிளான், புன்னாலைக்கட்டுவன், ஏழாலை, குப்பிளான் முதலிய பல கிராமங் களில் இருந்து பெண்களும் ஆண்களுமாக மாரி காலத்தில் இத்தொழிலில் ஈடுபடுவதை அக்காலத்திற் காணலாம்.

இப்போது சிவனார் முதலிய பசுந்தாட் பசளை முளைத்துப் படர்ந்திருக்குஞ் செம்பாட்டு நிலங்கள் தோட்டங்களாகிவிட்டன. நூற்றுக் கணக்கான கிணறுகள் இந்நிலங்களில் தோண்டப்பட்டுள்ளன. இச்செம்பாட்டுக் கிணற்று நீர் உவர்ப்பில்லாத நன்னீர் ஒவ்வொரு விவசாயியும் இறைக்கும் இயந்திரம், உழவு யந்திரம், அறுவடை செய்யும் யந்திரம் முதலியவற்றைப் பயன்படுத்தி ஏக்கர்க் கணக்கில் விவசாயஞ் செய்ய முன்வந்ததால் நிலக்கீழ்நீர் உப்புத்தன்மை ஏற்வடுவதற்கு வாய்ப்பாகிவிட்டது. இந்த மாற்றம் அளவெட்டியில் ஏற்பட்டது. அளவெட்டி மக்கள் பெருந்தொகை யாகப் புலம்பெயர்ந்த ஆயிரத்துத் தொள்ளா யிரத்துத் தொண்ணூற்றிரண்டாமாண்டு ஆவணிமாதம் இருபதாந் தேதிக்கு முற்பட்ட காலப் பகுதியிலேயேயாம். இப்போதும் அளவெட்டி விவசாயிகள் பலர் அளவெட்டியில் இல்லை. அவர்கள் வெளிநாடுகள் சென்று விட்டதால் அவர்கள் குடியிருந்த வீடுகள் பல அழிந்தும் சிதைந்தும் சிங்கள இராணு வத்தின் கைவரிசைக்கிலக்காகிக் கிடக் கின்றன. தோட்டங்களைப் புலம்பெயர்ந்த விவசாயிகளின் உறவினர் ஒருவாறு பயன் படுத்திவருகின்றனர். அவர்கள் மட்டு மல்லாமல் அதியுயர் உச்சவலயப் பாது காப்புப் பிரதேசங்களில் அமைந்துள்ள கிராமங்களில் இருந்து இடம்பெயர்ந்து வெளிநாடு செல்ல வசதியற்றோர் இவர்களின் வீடுகளையும் வயல்கள், தோட்டங்களையும் பயன்படுத்துவதால் அவை பாதுகாப்பாக உள்ளன. சுமுக நிலை ஏற்பட்டு வலிகாமம் வடக்கில் நிர்க்கதியான மக்கள் தமது இருப்பிடங்களுக்குச் சென்றுவிட்டால் அளவெட்டிக் குடியிருப்புகளும் பயிர் செய்யுமிடங்களும் வெறுமையாய் விடுமென்பது நிச்சயம்.

செம்பாட்டு நிலங்கள் மட்டுமல்லாமல் பனங்காணிகள் கூட விவசாய நிலமாக்கப் பட்டதால் அளவெட்டியில் மட்டுமல்லாமல் யாழ்ப்பாணத்தின் பல பயன்தரும் பனைகள் அழிக்கப்பட்டமையும் கருதற்பாலது. போதாக் குறைக்கு இலங்கை இராணுவம் அளவெட்டி யிலிருந்த பனைகளை வெட்டிச் சரித்துப் பாதுகாப்பரணாக்கியது. நாட்டின் வளத்தை வளர்த்த யாழ்ப்பாண மக்கள் கற்பகதருவெனப் பண்டுதொட்டுப் பேணிக்காத்த பனைக்கு

வந்தவடு யாழ்ப்பாணத்தைப் பிடித்த அட்ட மத்துச் சனி என்போம்.

அளவெட்டியில் முன்னோரமைத்த பல பண்பாட்டு நிலைகள் இன்றில்லாமற் போனதையும் நாம் நினைத்துப் பார்க்க வேண்டும். போக்குவரத்துக்குரிய இடங்களில் களைப்புற்ற வழிப்போக்கர்கள் ஆறிப்போ வதற்காகப் புண்ணியசீலர்கள் அமைந்த சங்கடப்படலை என்பதை இழந்தோம். இதனைத் தங்கிடும் படலை எனக் சிலர் திருத்தியும் கூறுவர். ஆலயங்களில் இருந்த கேணிகளை மடைத்தனமாக அழித்து நிலத்தடி நீரை உவர்ப்பாக்க உறுதுணை யானோம். கால்நடைகள் நீருண்ணவும் தினவு தீர்க்கவும் அமைத்த நீர் தேங்கு தொட்டி களையும் தினவு தீர்க்கும் ஆதீண்டு குற்றி களையும் சிதைத்தோம். பாரஞ்சுமந்து செல்வோர் தம் பாரங்களை வைத்து இளைப் பாறும் சுமைதாங்கிகளைக் கூட நாம் எங்கள் இளம் சந்ததியினருக்கு காட்சிச் பொருளாக வேனும் விட்டுவைக்கவில்லை. குரக்கனை மாவாக்கப் பயன்படுத்திய திரிகை, அரைப் பதற்குப் பயன்படுத்தப்பட்ட அம்மி கூட கோடியில் கிடந்து மண்ணுள் அமிழ்ந்து விட்டதும் உண்மை. பனையோலையால் செய்த பல பொருட்களையும், கைவிட்டோம். பெட்டி, கடகம், பாய், துலாக்கொடி, பட்டை முதலிய பலப்பல பாவனைப் பொருட்களையும் இழந்தோம். தமிழர் கலாசாரம் வாழ்ந்த முறை என்பவற்றையும் தொலைத்தோம். தமிழ் மொழிக்கல்வி கூட முன்பிருந்த நிலையில் இன்று இல்லை. தொல்காப்பியம் போன்ற தமிழ்ப் பொக்கிஷங்களும் தமிழர்களால் புறக்கணிக்கப்பட்டே வருகிறது. சமயக் கல்வியும் தேயும் நிலையிலேயே உள்ளது.

எனினும், இந்நிலையினை நாம் கைகட்டிப் பார்த்து நிற்றல் ஆகாது. காலம் எமக்கு விதித்த கடமையைச் செய்து எமது பண்பாட்டு விழுமியங்களையும், கலாசார மரபுகளையும் காலத்தால் அழியாது காக்கவும் எமது அடுத்த தலைமுறை அவற்றை அறியவும் வேண்டுவன செய்யவேண்டியது எங்கள் அனைவர் முன்னும் விரிந்துள்ள வரலாற்றுக் கடமையாகும். இதனை உணர்ந்து நாம் அனைவரும் ஒன்றுபட்டு எமது பண்பாட்டுத் தனித்துவத்தை பேணுவதற்கு உழைப்போமாக.

## நாகலிங்கம் வேதநாயகன்

அளவெட்டிக் கிராமம் தந்த அரசாங்க அதிபர்களுள் ஒருவராகத் திகழ்பவரே நாகலிங்கம் வேதநாயகன் ஆவார். இந் நூலின் தொகுப்பாசிரியரான பண்டிதர் க. நாகலிங்கத்தின் மூத்தமகனா இவர் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் தன் உயர்தரக் கல்வியைக் கற்று யாழ்ப்பாணப் பல்கலைக்கழக விஞ்ஞானப் பட்டதாரியாக வெளியேறினார்.

ன நிர்வாகத்

# அளவெட்டியில் நாடகக்கலை

கலைகள் மலிந்த கிராமங்களில் ஒன்றாக அளவெட்டிக் கிராமமும் கருதப்படுகின்றது. அக்கலைகளுள் தேடல் கணக்கிற்கு அப்பாற்பட்ட இ பழைமை வாய்ந்த ஒரு கலையாக இ அளவெட்டிக் கிராமத்தில் வேரூன்றி தற்பொழுதும் பேணப்பட்டு வரும் ஒருகலையாக இடம்பெற்று வருவது நாடகக் கலையாகும். இக்கலை காலத்தின் தேவைக்கேற்ப பல்வேறு வடிவங்கள் இ கோலங்களில் அரங்கேற்றப்பட்டு வந்தமை அறியக்கூடியதாக உள்ளது. நாடகக் கலையில் ஆஉவம் வைத்து இ அதை வளஉத்தெடுப்பதில் ஈடுபாடு காட்டி இக்கிராமத்தில் வாழ்ந்து அமரத்துவம் பெற்ற கலைஞஉகளையும் இ வாழ்ந்து கொண்டிருக்கும் கலைஞஉகளையும், நாடகக்கலை பெற்று வந்த பரிணாம வடிவங்களையும் ஆவணப்பிவாக்குவதே இத்தொகுப்பின் நோக்கமாகும்.

அளவெட்டிக் கிராமத்தின் நாடகக்கலை அமைவை மூன்று கட்டங்களாக பிரித்து நோக்குவது பொருத்தமுடையதாகும். அவை

01. ஆரம்ப காலகட்டம். (இன்றைய சந்ததிக்கு முன் உள்ள மூன்றாவது சந்ததி)
02. இடைக் காலகட்டம். (இன்றைய சந்ததிக்கு முன் உள்ள சந்ததி)
03. நடப்பு காலகட்டம். (இன்றைய சந்ததி)

## ஆரம்ப காலகட்டம்

சினிமாக்கள், வானொலிகள், தொலைக்காட்சிகள் அளவெட்டிக் கிராமத்தில் புகாத காலகட்டத்தில் இ மக்கள் தமது பொழுது போக்கு வடிகாலாக கூத்து வடிவத்தில் நாடகக் கலையைக் கையாண்டாஉகள். குறிப்பிட்ட நாட்களில் இ குறிப்பிட்ட ஓஉ இடத்தில் கூத்துக்கள் நடைபெற்று வந்துள்ளன. அளவெட்டியில் கூத்து நடைபெற்ற அந்த குறிப்பிட்ட இடம் "கூத்தஞ்சிமா" என்ற பெயரோடு இன்றும் அழைக்கப்பட்டு வருவதாக பலரும் நம்புகிறாஉகள். மெழுகப்பட்ட வட்டமான மண்திட்டி மேடையாக இ சூழ்வெளிச்சத்தில் நாடகம் கூத்து என்ற வடிவத்தில் ஆடப்பட்டு வந்துள்ளது. இங்கு ஆட்டத்திற்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. அனுமாராட்டம்இ கரகாட்டம்இ காவடியாட்டம்இ மயிலாட்டம்இ



பாம்பாட்டம்இ செம்பாட்டம் போன்ற ஆட்டங்களே அக்கால நாடக வடிவங்களாக அமைந்தன. கதைப் போக்கில்லாத ஆட்டங்களே நாடகம் என்ற வடிவத்தில் இடம்பெற்றன. பின்னஉ இது சிறிது வளஉச்சியடைந்து பின்னனி இசையோடு சேஉந்த ஆட்டமாக கூத்து வடிவம் பெற்றது. காமன் கூத்துஇ மதனகாமராசன் கூத்துஇ கண்டி அரசன் கூத்து இவ்வகையானவை ஆகும். பின்னனி இசையாக உடுக்கு வாசிக்கப்பட்டு வந்துள்ளது. அம்மன் இ முருகன் ஆலய தெம்மாங்கு இசைப்பாடல்கள் ஆட்ட கூத்துக்களில்

இடம்பெற்றதும் உண்டு. கூத்துக்களில் பங்குபற்றிய கலைஞுகள் "கூத்தாடி" என்ற பட்டப்பெயரையும் சேூத்து அழைக்கப்படும் வழக்கம் இருந்து வந்துள்ளது. கூத்தாடிகளின் அடுத்த சந்ததியான அவூகளுடைய பிள்ளைகள் "கூத்தாடியின் மகன்" இ "கூத்தாடியின் மகள்" என அழைக்கப்பட்டு வந்தமை இ அளவெட்டியில் கூத்து என்ற வடிவத்தில் நாடகக்கலை இருந்துள்ளது என்பதை ஆதாரப்படுத்தப்படுகின்றது. இத்தகைய ஆட்டங்கள் அடுத்த சந்ததியினரிடம் காணப்பட்டமை இ முற்சந்ததியினரால் இவை பரிமாறப்பட்டுள்ளன என்பதை உறுதிப்படுத்துகின்றது. இக்காலகட்டத்தில் நாடகக்கலையை ஆட்டவடிவத்தில் ஆரம்பித்து வைத்தவூகளுடைய பெயூகள் தேடலுக்கு அப்பாற்பட்டதாக இருப்பதால் இவூகளுடைய பெயூப்பட்டியலைப் பதிவு செய்ய முடியாமை துரதிஷ்டமாகும்.

**இடைக் காலகட்டம்**

N.K.தியாகராசா பாகவூ இ P.U.சின்னப்பா , M.L.வசந்தகுமாரி போன்ற இசை மேதைகளின் இசைமழை பொழியும் சினிமாப்படங்கள் காட்சிக்கு வந்தகாலம் இக்காலகட்டமாகும். அவைகளின் தாக்கம் அளவெட்டிக்கிராம நாடகத்துறையிலும் மாற்றத்தை ஏற்படுத்தியது. ஆட்டக் கூத்துக்கள் சிறிது சிறிதாக மறைந்து இசை நாடகங்களாகவும் இ இசைக் கூத்துக்களாகவும் நாடகக்கலை வடிவம் மாறத்தொடங்கியது. பலகைகள் கொண்டு அமைக்கப்பட்ட இ திரைச்சீலைகள் கட்டப்பட்ட மேடைகளில் "காஸ் விளக்குகளின்" வெளிச்சத்தில் இ ஆூமோனியம் இ மிருதங்கம் இ உடுக்கு பின்னனி இசையாக அமைய இசை நாடகங்களும் இ இசைக் கூத்துக்களும் மேடை ஏறத்தொடங்கின. அளவெட்டியின் பல்வேறு இடங்களில் நாடக மேடைகள் தோன்றின. ஒலிபெருக்கி பாவனைக்கு வராத காலமாகையினால் உச்ச சுருதியில் இ பிசிலுதட்டாமல் பாடக்கூடிய குரல்வளம் உடையவூகளே நாடக நடிகூகளாக பங்கேற்க முடிந்தது. வசனங்கள் குறைவாகவும் இ சுத்தமான கூநாடக இசைப்பாடல்கள் நிறைந்ததாகவும்



நாடகங்கள் அமைந்தன. இந்த வகையிலே புராண நாடகங்களாக "திருநீலகண்டூ" இ "சிறுத்தொண்டூ" இ "நந்தனாூ" இ "வள்ளி திருமணம்" போன்றவையும் இ சரித்திர இசை நாடகங்களாக "அரிச்சந்திரா" இ "சத்தியவான்சாவித்திரி" இ "நல்லதங்காள்" இ "பனை அரசன்"இ அல்லி அூச்சுனா" இ "கோவலன் கண்ணகி" இ "பளக்கொடி" இ பூதத்தம்பி" போன்றவையும் சிந்து நடைக்கூத்தாக "காத்தவராயனும்" மேடை ஏற்றப்பட்டு வந்துள்ளன. அளவெட்டிக் கிராமத்தில் வாழ்ந்த சரவணை ஆசிரியூ இ பூலோகசுந்தரம் ஆசிரியூ இ பொன்னுத்துரை ஆசிரியூ இ அப்புத்துரை இ மு.கிருஷ்ணசாமி இ வை.சிதம்பரம்பிள்ளை இ அ.கணேசமூூத்தி இ இ.கந்தையா வல்லிபுரம் இ ஐ.குலசேகரம் இ தம்பிப்பிள்ளை போன்றவூகள் நாடக நடிகூகளாகவும் இ இவூகளில் சிலூ அண்ணாவிமாூகளாகவும் இருந்து நாடகக் கலையை வளூத்து அமரராகி விட்டனூ.

சில நாடகங்களில் அயல் கிராமத்து கலைஞஊகளான இணுவில் மாசிலாமணி இ பொன்னாலை கிருஷ்ணஊ இ விளான் செல்வராசா இ கன்னிகா பரமேஸ்வரி இ மல்லாகம் சின்னையா பாகவதஊ போன்றோஊ எமது கலைஞஊகளுடன் சேஊந்து சில நாடகப் பாத்திரங்களை ஏற்று நடித்து அளவெட்டியில் நாடகக்கலையை வளஊக்க உதவினஊ.
நாடகங்களுக்கிடையில் கரகத்திலகம் ஐயாத்துரை அவஊகளின் கரகாட்டம் தவறாது இடம்பெறுவது வழக்கம். இக்கால கட்டத்தில் நாடகங்களுக்கு பின்னனி இசை வழங்கிய விளான் ஆஊமோனிய வித்துவான் நாகலிங்கம் இ அளவெட்டி பொன்னுசாமி இ மிருதங்க வித்துவான் மல்லாகம் கோடை இடி ஆறுமுகம் போன்றவஊகளை நாம் மறந்துவிட முடியாது.

இக்கால கட்டத்தில் அளவெட்டி கிழக்கில் காத்தவராயன் சிந்துநடைக்கூத்து பிரபல்யமான ஒன்றாக ஒவ்வொரு சனிக்கிழமையும் நடைபெறுவது வழக்கமான ஒன்றாக இருந்து வந்துள்ளது. காத்தவராயன் கூத்து தொடஊந்து எட்டு



மணித்தியாலங்கள் நடைபெறும். நீண்டநேர நாடகம் ஆனமையினாலும் இ நாகம் முடிவு வரை பாடி ஆடி நடிக்கும் வகையைச் சேஊந்ததாலும் ஒவ்வொரு நாடகப் பாத்திரத்தையும் இருவஊ பங்கேற்று நடிப்பஊ. இந்நாடகத்தை அண்ணாவியராக இருந்து நெறிப்படுத்தியவஊ "சின்னப்பஊ" என்னும் முதியவஊ. இச்சிந்து நடைக்கூத்தில் வேலஊஇ சின்னத்தம்பி இ கந்தஊ இ செல்லையா இ மூளிசின்னத்தம்பி இ செல்லத்துரை இ சின்னவியஊ இ அப்புத்துரை இ தம்பையா இ மாரிமுத்து இ இராசா இ சோமசுந்தரம் ஆகியோஊ முக்கிய நாடகப் பாத்திரங்களை ஏற்று நடித்துள்ளாஊகள். இதே கலைஞஊகள் நல்லதங்காள் இ அரிச்சந்திரா போன்ற இசை நாடகங்களையும் மேடை ஏற்றி உள்ளாஊகள். இக்கலைஞஊகளின் பிள்ளைகளில் பெற்றோரது நாடகப்பரம்பரை மரபணு செறிந்துள்ளதால் அவஊகளும் நாடகத்துறையில் ஈடுபாடு உடையவஊகளாகக் காணப்படுகிறாஊகள். இதனால் நாடகப் பரம்பரை ஒன்று அளவெட்டியில் தொடஊந்து நிலை கொண்டு வருகிறது. இது அளவெட்டி நாடகத்துறைக்கு கிடைத்த ஒரு வரப்பிரசாதமாகும். இக்காலகட்ட இறுதியில் வாழ்ந்த இரு கலைஞஊகளை நாம் மறந்துவிட முடியாது. ஒருவஊ அளவெட்டி வடக்கில் வாழ்ந்த ஆசிரியஊ கதிரேசம்பிள்ளை அவஊகள் மற்றையவஊ அளவெட்டி தெற்கில் வாழ்ந்த ஆசிரியஊ அருட்கவி வினாசித்தம்பி அவஊகள் இவஊகள் இருவரும் நாடக நடிகஊகளாக மட்டுமல்லாது இ நாடக ஆக்ககஊத்தாக்களாகவும் இ நாடக வசன கஊத்தாக்களாகவும் இ நாடகப் பாடல் ஆசிரியஊகளாகவும் இ நாடக இசை அமைப்பாளஊகளாகவும் இ நாடக இயக்குனஊகளாகவும் இருந்து பல நாடகங்களை மேடை ஏற்றி அளவெட்டியின் நாடகத்துறையில் தமது சுவடுகளை பதித்தவஊகளாவஊ. இவஊகளின் நாடகத்துறைப் பிரவேசத்தால் அளவெட்டிக் கிராமத்தின் வடக்கும் தெற்கும் நாடகத்துறையில் சோடை போகாது சமநிலையில் நிமிஊந்து நின்றன.

## நடப்புக் காலகட்டம்

இது தற்காலச் சந்ததியினருக்குரிய காலகட்டமாகும். இக்காலகட்ட ஆரம்பத்தில் சினிமாப்படங்களின் வருகையும் இ ஆதிக்கமும் அதிகரித்தமையால் இசை நாடகங்களின் வீரியம் குறைந்து வசனத்தை மூலதானமாகக் கொண்ட சமூக நாடகங்கள் வெளிவரத் தொடங்கின. மின் ஒளி இ ஒலிபெருக்கி வசதிகள் இக்காலகட்டத்தில் கிடைத்தமை வசனங்களைப் பேசி நடிக்கும் நாடகப்பாணி உருவாவதற்கு துணை புரிந்தன. இந்த வகையில் அளவெட்டி கிழக்கில் "வடக்கும் தெற்கும்" இ "அத்தம்மா" இ "சண்டியன்தம்பிப்பிள்ளை" இ "நீவூக்குமிழி" இ "மாறியது நெஞ்சம்" இ "மன்னிக்கமாட்டாயா" இ "மறக்க முடியுமா" போன்ற சமூக நாடகங்கள் மேடை ஏறின. இந்நாடகங்களை ப.முருகையா என்பவூ எழுதி வசனம் அமைத்து நெறியாள்கை செய்துள்ளாவூ. அளவெட்டி கிழக்கில் உள்ள இளைஞூகளான தேவராசா இ சிவராசா இ முரகானந்தம் இ பொன்னுத்துரை இ தேவி இ சவுந்தரராசன் இ சுகுணதாஸ் இ செல்வநாயகம் இ குலம் இ உதயன் இ காந்தன் இ கொபூவூ இ கந்தசாமி இ தவயோகராசா இ சிறீ போன்றவூகள் இந்நாடகங்களில் நாடகப் பாத்திரங்களை ஏற்று நடித்துள்ளனவூ. இவூகளில் தேவராசா இ முரகானந்தம் இ சிவராசா போன்றவூகள் இசை நாடகத்துறையிலும் புகழ் பெற்ற நடிகவூகளாக விருதுகள் பெற்றுள்ளனவூ. தேவி இ பொன்னுத்துரை இ குலம் போன்றவூகள் நாடகத்துறையில் நிறைந்த அனுபவம் உள்ளவூகளாக இருக்கின்றனவூ. இக்காலகட்ட பிற்பகுதியில் பெண்களும் நாடகத்துறையில் ஈடுபடத் தொடங்கினவூ. அந்த வகையில் கஜிதா இ பத்மாதேவி இ குயீனா இ நஜீரா இ ஜெயவதனி போன்றவூகள் குறிப்பிடத்தக்கவூகள்.

இக்கால கட்டத்தில் பாடசாலைகளிலும் விழாக் கொண்டாட்டங்களின் கலை நிகழ்ச்சிகளில் ஒரு அங்கமாக நாடகக்கலை வளவூந்து வந்திருக்கிறது. ஆசிரியவூ வினாசித்தம்பி இ ஆசிரியவூ நாகராசா இ ஆசிரியவூ அருளம்பலம் இ ஆசிரியவூ சிவபாதம் இ ஆசிரியவூ செல்லையா இ ஆசிரியவூ அராசசேகரம் போன்றவூகள் மாணவவூ மட்டத்தில் நாடகங்களை பயிற்றுவித்து மேடை ஏற்றி வந்துள்ளனவூ. ஆசிரியவூ



நாகராசா அவூகள் இலங்கையில் தயாரிக்கப்பட்ட தமிழ் சினிமாப் படத்திலும் நடித்து அனுபவம் பெற்றுள்ளவூ. "கட்டப்பொம்மன்" இ சோக்கிறற்றீஸ்" இ "சாம்ராட் அசோகன்" இ "நக்கீரவூ" இ "சிலம்பின் நாதம்" இ "இதயவாயில்" போன்றவை அவ்வாறு மேடை ஏற்றப்பட்ட சில நாடகங்களாகும். அத்தோடு பொது வேலை நிதி சேகரிப்புக்காகவும் நாடகங்கள் மேடை ஏற்றப்பட்டு வந்துள்ளன. அந்த வகையில் அருணோதயக் கல்லூரியின் கட்டிட நிதிக்கான கதம்பவிழா நிகழ்வில் "வள்ளல் குமாரன்" என்ற நாடகம் கவிஞூ கந்தவனம் அவூகளின் நெறியாழ்கையில் மேடை ஏற்றப்பட்டது. கல்லூரி ஆசிரியவூகளே எல்லா நாடகப் பாத்திரங்களையும் ஏற்று நடிக்கும் புதியமுறை அந்நாடகத்தில்

புகுத்தப்பட்டமை நாடகத்துறையில் ஒரு சிறப்பம்சமாகும். அந்நாடகத்தில் அளவெட்டியைச் சேஉந்த ஆசிரியஉகளான அருட்கவி வினாசித்தம்பி இ க.அருளம்பலம் இ V.இராசசேகரம் இ மு.செல்லையா இ சி.சிவசுப்பிரமணியம் இ வே.ஆலுப்பிள்ளை போன்றோஉ முக்கிய பாத்திரங்களை ஏற்று நடித்துள்ளனஉ. ஆசிரியஉ அருளம்பலம் ஆசிரியஉ மட்டத்தில் மேடை ஏற்றப்பட்ட சிந்து நடைக்கூத்து காத்தவராயன் நாடகத்திலம் பங்கேற்று நடித்துள்ளாஉ.

அண்மைக் காலத்தில் கிராமிய இசைக்கும் இசை நாடகங்கக்கும் பல்கலைக்கழக மட்டத்தில் முக்கியத்துவம் கொடுக்கத் தொடஉந்து இ அவெட்டியில் இசை நாடகங்களும் இ சிந்து நடைக்கூத்தும் புத்துயிஉ பெறத்தொடங்கி உள்ளன. அந்த வகையில் இக்கிராமத்தைச் சேஉந்த இளம் நாடகக் கலைஞஉகளான ஆசிரியஉ விஜயபாஸ்கரன் இ ஆசிரியஉ கிருபானந்தன் போன்றோஉ பல்கலைக்கழக மட்டத்தில் பல இசை நாடகங்களில் நடித்து புகழ்பெற்ற நாடகக்கலைஞஉகளாக வளஉந்து வருகின்றனஉ.

இவஉகள் பாடசாலை மட்டத்தில் மாணவஉகளை இசை நாடகத்துறையில் பயிற்றுவித்து பழைமையான இக்கலையை அடுத்த சந்ததியினரும் பெற்று தேஉச்சியடைய வாய்ப்பளித்து வருகின்றனஉ. அவெட்டி வடக்கைச் சேஉந்த சஉவேஸ்வராஇ இந்திரன் இ சிவராசா இ ஜெயரத்தினம் இ விநாயகலிங்கம் இ பாஉவதி சிவபாதம் போன்றோஉ இளம் கலைஞஉகளாக நாடகத்துறையில் ஈடுபாடு கொண்டு வளஉந்து வருகின்றனஉ. இக்கால கட்டத்தில் அளவெட்டி நாடகங்களுககெல்லாம் பின்னனி இசையாக மிருதங்கம் வாசித்து வந்த அளவெட்டியைச் சேஉந்த பல்துறை மன்னன் ஐ.சிவபாதம் இ முரகையா போன்றோரது சேவை மதிப்பிட முடியாததாகும். அண்மைக்காலமாக கல்வித் திணைக்களம் பாடசாலை மட்டத்தில் நாடகப் போட்டிகளை நாடாத்தி வருவதால் இ அளவெட்டி பாடசாலைகள் எல்லாம் மாணவஉகளுக்கு சிறுவஉ நாடகம் இ இசை நாடகம் இ சமூக நாடகம் போன்றவற்றைப் பழக்கி போட்டிகளுக்கு அனுப்பி வருகின்றன. இதனால் நாடகக்கலை அவெட்டியின் அடுத்த சந்ததிக்கும் பகிரப்பட்டு வருவது மகிழ்ச்சிக்குரிய விடயமபஷாகும்.

இறுதியாக இ அளவெட்டியில் இருந்து புலம் பெயஉந்து வாழும் இ நாடகக்கலையில் ஈடுபாடு கொண்ட சிலஉ தாம் புலம் பெயஉந்து வாழும் நாடுகளில் நாடகக்கலையை வளஉத்து வரும் செய்தி இத்தொகுப்பில் பதியப்பட வேண்டியது தவிஉக்க முடியததாகும். அந்த வகையில் நோஉவேயில் "பாஉதிதிபனும்" இ டென்மாஉக்கில் "ஆதவனும்" இ ஜேஉமனியில் "உதயனும்" வேறுபல நாடுகளில் இன்னும் பலரும் உள்ளனஉ. இவை எல்லாம் அளவெட்டியின் நாடகக்கலை வீரியத்தை புலப்படுத்தி நிற்கும் என்பதில் ஐயமில்லை. அளவெட்டியைச் சேஉந்த நாடகத்துறையில் ஈடுபாடுகள் கொண்டஇ எமது தேடலுக்குள் அகப்படாது தவறிய இன்னும் சிலஉ இருக்கலாம். அவஉகளையும் இத்தொகுப்பில் நினைவு கூறுகின்றோம்.

தொகுப்பு:-

***ஆசிரியர் திரு.க. அருளம்பலம்***
***ஓய்வுபெற்ற ஆசிரிய ஆலோசகர்***

# விளையாட்டுத் துறையில் அளவெட்டி

## வை. கைலைநாதன்

அளவெட்டிக் கிராமத்தின் விளையாட்டுத் துறைப் பதிவுகளை ஆவணமாக்க முயலும் போது தனியொரு அத்தியாயமாக திகழ்பவர் பிரபல சைக்கிளோட்ட வீரர் வைத்திலிங்கம் கைலைநாதன் என்றால் மிகையாகாது. 1950ம் ஆண்டு பங்குனித்திங்கள் 10ம் நாள் அளவெட்டி வடக்கிலே செட்டிச்சோலை எனும் குறிச்சியிலே வைத்திலிங்கம் ஆசிரியரின் மகனாக இவரது பிறப்பு நிகழ்கின்றது.

தனது முறைசார் கல்வியை சீனன்கலட்டி ஞானோதயா வித்தியாசாலை, தெல்லிப்பழை மகாஜனக் கல்லூரி என்பவற்றிலே நிறைவு செய்துகொண்டு யாழ்ப்பாணம் கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியிலே இணைகின்றார். கூட்டுறவுத்துறையின்மீது கொண்ட பிடிப்பினால் பின்னர் பொல்கொல்லை கூட்டுறவுக் கல்லூரியில் மேலும் தொழில்சார் பயிற்சியைப்பெற்று இன்று கூட்டுறவுத்துறைக் கணக்காய்வாளராக நிமிர்ந்து நிற்கின்றார். இது இவரது தனிப்பட்ட வாழ்வாக இருக்க, இவரது விளையாட்டுத்துறை அனுபவங்கள் பல பரிமாணங்களாக விரிகின்றன.

தற்போது நீண்டகாலமாக தன்னை ஒரு நெடுந்தூர சைக்கிளோட்ட வீரராகத் தக்க வைத்துக்கொண்டுள்ள கைலைநாதன் பாடசாலை நாட்களில் உதைபந்தாட்டம், கரப்பந்தாட்டம், ஹொக்கி, நீண்டதூர மரதனோட்டங்கள் எனவும் தனக்கான சாதனைப் பதிவுகளை சேகரித்துக்கொண்டவர். தனது பிரதான துறையான சைக்கிளோட்டத் துறை வாழ்வை 1971-01-14 தைப்பொங்கல் தினத்தன்று காங்கேசன்துறையிலே ஆரம்பிக்கின்றார். அன்று ஆரம்பித்த பயணம் இன்று 185 போட்டிகளைத் தாண்டிப் பயணித்துக்கொண்டிருக்கின்றது. தனது முதலாவது போட்டியில் 15 வயதிலேயே பங்குபற்றி வயது குறைந்தவர்களுக்கான பரிசினையும் பெற்றுக்கொண்டார். அதேபோன்று தனது 52ஆவது வயதிலும் சைக்கிளோட்டப் போட்டியில் பங்குபற்றி வயது கூடியவர்களுக்கான சிறப்புப் பரிசினையும் பெற்றுக்கொண்டார். தனது 37 வருட சைக்கிளோட்டப்போட்டித்துறை வாழ்விலே அவர் கடந்துவந்த சுவடுகளைத் தொகுத்து நோக்கின்,

***1971 தொடக்கம் 2008வரை***

| | |
|---|---|
| பங்குபற்றிய போட்டிகளின் எண்ணிக்கை | -185 |
| முதலாமிடம் | - 38 |
| இரண்டாமிடம் | - 27 |
| மூன்றாமிடம் | - 22 |
| ஓடிமுடித்த போட்டிகள் | - 92 |
| சைக்கிள் பழுதடைந்தது | - 02 |
| தடைப்பட்டது | - 04 |
| | 185 |

பிரதேச செயலக ரீதியாக தெல்லிப்பழை பிரதேச செயலகத்தில் 3 வெற்றிக்கேடயங்களையும், சங்கானையில் ஒன்றையும் பெற்றுக் கொண்டார். மாவட்ட ரீதியாகவும் 1979, 1981, 1985 என மூன்று தடவைகள் சைக்கிளோட்டச் சம்பியானாகத் தெரிவு செய்யப்பட்டார். 1981இல் மன்னாரில் வைத்து மாகாண மட்டச் சம்பியனாகவும் தெரிவு செய்யப்பட்டார். இவர் பங்குபற்றிய ஆகக்கூடிய தூரத்தைக் கொண்ட போட்டியாக Tour of Lanka cycle race என அழைக்கப்பட்ட கிளிநொச்சிக்கும் குருநாகலுக்கும் இடைப்பட்ட 186 மைல் தூரத்தைக் கொண்ட போட்டியைக் குறிப்பிட முடியும்.

சாதனை வீரர் கைலைநாதன் தனது அசாத்தியத் திறமைகளுக்காக பத்திரிகைகளிலும் அவ்வப்போது செய்தியாகவும் பேட்டியாகவும் இடம்பிடித்துக் கொண்டார்.

# தங்க அளவெட்டி

## அளவெட்டியின் தேசிய விளையாட்டுச் சாதனைகள்

விளையாட்டு விஞ்ஞானம் உயர்ந்த நிலையில் இருக்கின்ற இன்றைய நவீன உலகில் வளப்பற்றாக்குறையுடன் போதிய வசதிகளற்ற ஓர் கிராமத்திலிருந்து சென்று தேசிய மட்டத்தில் தங்கப்பதக்கங்களையும் சாதனைகளையும் நிலைநாட்டுவதென்பது சாதாரணமான ஒரு விடயமல்ல. இந்நிலையில் எமது அளவெட்டிக் கிராமத்தின் மைந்தர்கள் தேசிய மட்டத்தில் தங்கப் பதக்கங்களையும் சுவீகரித்து சாதனைகளையும் நிலைநாட்டியிருக்கின்றார்கள் என்றால் அவர்களின் மனோதிடத்தையும் உடல் வலிமையையும் ஊக்கம் கொடுத்த கல்லூரிச் சமூகத்தின் ஆர்வத்தையும் பாராட்டாமல் இருக்கமுடியாது. இதற்கு மேலாக கிடைக்கின்ற குறுகிய வளங்களைக் கொண்டு சிறப்பாக பயிற்றுவித்த பயிற்றுவிப்பாளர்களையும் பொறுப்பாசிரியர்களையும், ஆக்கமும் ஊக்கமும் கொடுத்து நிற்கும் அதிபர்களையும் பாராட்டவேண்டிய கடமை அளவெட்டி மண்ணில் பிறந்த ஒவ்வொருவருக்கும் உரியதாகும். அந்தவகையில் அளவெட்டி அருணோதயக் கல்லூரி, தெல்லிப்பழை மகாஜனக் கல்லூரி ஆகிய பாடசாலைகளைச் சேர்ந்த அளவெட்டி மண்ணின் மைந்தர்களின் சாதனை பற்றிய ஓர் அனுபவப் பகிர்வே இக்கட்டுரையாகும். தேசிய மட்டப் போட்டியில் 1980ஆம் ஆண்டிலேயே முதன் முதல் தங்கப் பதக்கத்தினை அருணோதயக் கல்லூரி பெற்றது. அக்காலகட்டத்தில் அருணோதயக் கல்லூரியின் உடற்கல்வி ஆசிரியராக இருந்த திரு. யு. தம்பித்துரை அவர்களின் பயிற்சியில் தேர்ச்சி பெற்ற உடற்பயிற்சிக் குழுவே கல்லூரி அன்னைக்கு தேசிய ரீதியில் தங்கப் பதத்தினைப் பெற்று கல்லூரியின் பெருமையை நாடறியச் செய்தது. இப்போட்டி கொழும்பு சுகதாஸ விளையாட்டரங்கில் நடைபெற்றமை குறிப்பிடத்தக்கது.

இப்போட்டியில் வெற்றிபெற்ற மாணவர்களுக்கு அளவெட்டி சார் மக்களால் கொழும்பில் அளிக்கப்பட்ட பாராட்டு விழாவும், பின்னர் பாடசாலையில் கல்லூரிச் சமூகத்தால் எடுக்கப்பட்ட பாராட்டு விழாவும் அருணோதய அன்னையின் சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய நிகழ்வுகளாகும். இதனைவிட அருணோதயக் கல்லூரியின் மாணவன் மா. ஞானவதன் தேசிய மட்டத்தில் நடைபெற்ற உயரம் பாய்தல் போட்டியில் பங்குபற்றி மூன்றாம் இடத்தைப் பெற்றுக்கொடுத்தமை அளவெட்டி மைந்தர்களின் விளையாட்டுத்துறை வளர்ச்சிக்கான அடுத்த மைல்க்கல்லாகவே கொள்ளவேண்டும்.

மேற்கூறிய சாதனைகள் பற்றிய விபரங்களை நூல்களின் மூலமாகவே என்னால் அறிந்துகொள்ள முடிந்தது. இப்போது எனது நினைவுகளை சற்றுப் பின்னோக்கித் திருப்புகின்றேன். 1997ஆம் ஆண்டு என எண்ணுகின்றேன் அப்போது அருணோதயக் கல்லூரி இடம்பெயர்ந்து மருதனார்மடம் இராமநாதன் கல்லூரியில் பல இன்னல்களுக்கும் இடர்களுக்கும் மத்தியில் இயங்கிக் கொண்டிருந்தது. அவ்வேளையில்கூட அருணோதயக் கல்லூரி உதைபந்தாட்டம் மற்றும் மெய்வல்லுநர் நிகழ்ச்சிகளில் குறிப்பிடத்தக்க வெற்றிகளைப் பெற்றுவந்தது. அக்காலகட்டத்தில் கல்லூரியின் உடற்கல்வி ஆசிரியராக

இருந்தவர் திரு. க. சிவராஜா ஆவார். கிடைக்கின்ற வளங்களோடு சிறப்பாக மெய்வல்லுநர் நிகழ்ச்சிகளில் கல்லூரி வெற்றிநடை போட்டுக்கொண்டிருந்தது. அவ்வேளையில் மூங்கில்தடி போன்றவற்றைப் பயன்படுத்தி கோலூன்றிப் பாய்தல் நிகழ்வு இடம்பெற்றதை நான் பார்த்துள்ளேன். சி. ஐங்கரன் எனும் மாணவன் மூங்கில்தடியால் கோலூன்றிப் பாய்ந்து வலயமட்டத்தில் வெற்றியீட்டியமை குறிப்பிடத்தக்கது. 1998ஆம் ஆண்டில்தான் அலுமினியத்தினாலான ஒரு கோலும் மரத்தினாலான ஓர் ஊன்று பெட்டியும் உடற்கல்வி ஆசிரியர் திரு.க. சிவராஜா அவர்களின் முயற்சியால் பாவித்த நிலையில் ரூபா 1500 இற்கு கொள்வனவு செய்யப்பட்டது. இதைத் தொடர்ந்து கோலூன்றிப் பாய்தல் நிகழ்வில் வலய, மாவட்ட மட்டங்களில் அருணோதயக் கல்லூரி மாணவர்கள் வெற்றியீட்டத் தொடங்கினர். 2007ஆம் ஆண்டில் தேசிய மட்டத்தில் கோலூன்றிப் பாய்தல் நிகழ்வில் பங்குபற்றிய அருணோதயக் கல்லூரி மாணவன் செல்வராஜா நவநீதன் 21 வயதின்கீழ் ஆண்கள் பிரிவில் 3.35 மீற்றர் உயரம் பாய்ந்து வெண்கலப் பதக்கத்தினைப் பெற்றுக்கொண்டார். 2007இல் ஓர் பதக்கத்தினைப் பெற்ற கல்லூரி 2008ஆம் ஆண்டில் இரண்டு பதக்கங்களைப் பெற்று மேலும் ஒருபடி வளர்ச்சி கண்டது. இவ்வாண்டில் செல்வி. சண்முகராஜா தனுஷா மெய்வல்லுநர் நிகழ்வில் கோலூன்றிப் பாய்தல் நிகழ்வில் பங்குபற்றி முதலாவது தங்கப் பதக்கத்தினை தேசிய மட்டத்தில் பெற்று தங்க மங்கையாக கல்லூரி வரலாற்றில் தன் பெயரை பொன் எழுத்துக்களால் பொறித்துக் கொண்டார். இவர் 17 வயதிற்குட்பட்ட பெண்கள் பிரிவில் பங்குபற்றி 2.35 மீற்றர் உயரம் பாய்ந்து தங்கப்பதக்கம் பெற்றமை குறிப்பிடத்தக்கது. இதேயாண்டில் செல்வன். கோபாலன் கணாதீபன் இதே நிகழ்வில் 21 வயதின் கீழ் ஆண்கள் பிரிவில் பங்குபற்றி 3.20 மீற்றர் உயரம் பாய்ந்து வெண்கலப் பதக்கத்தினைப் பெற்றுக்கொண்டார்.

2009ஆம் ஆண்டு கல்லூரி வரலாற்றில் முக்கியமான காலமாகும். இவ்வாண்டில் நடைபெற்ற தேசிய மட்ட மெய்வல்லுநர் போட்டியில் கோலூன்றிப் பாய்தல் நிகழ்வில் 3 தங்கப் பதக்கங்களையும் 1 வெள்ளிப் பதக்கத்தையும் அருணோதயக் கல்லூரி பெற்றுக்கொண்டது. இவ்வாண்டும் தனது தங்கவேட்டையைத் தொடர்ந்த தனுஷா இரண்டாம் முறையாக தங்கம் வென்றதோடு 2.81 மீற்றர் உயரம் பாய்ந்து அகில இலங்கை பாடசாலை மட்ட சாதனையை நிலைநாட்டி சாதனை நாயகியாக தனது பயணத்தைத் தொடர்கின்றார். இவர் 19 வயதின் கீழ் பெண்கள் பிரிவில் பங்குபற்றியமை குறிப்பிடத்தக்கது. இதேயாண்டு செல்வன் மகாதேவன் திருபரன் 17 வயது ஆண்கள் பிரிவில் பங்குபற்றி 3.4 மீற்றர் உயரம் பாய்ந்து தங்கப்பதக்கத்தினையும், செல்வன் கோபாலன் கணாதீபன் 21 வயதின்கீழ் ஆண்கள் பிரிவில் பங்குபற்றி 3.8 மீற்றர் உயரம் பாய்ந்து கல்லூரிக்காக தனது இரண்டாவது பதக்கத்தையும், தங்கப்பதக்கத்தையும் பெற்றுக்கொண்டதோடு செல்வன் குணரட்ணம் றெக்னோ அனோஷன் 17 வயதின்கீழ் ஆண்கள் பிரிவில் 3.25 மீற்றர் உயரம் பாய்ந்து வெள்ளிப்பதக்கத்தையும் பெற்றுக்கொண்டார். இவர்களோடு செல்வி. சிவலிங்கம் பத்மசந்தியா (2.20 மீற்றர்), ரட்ணசிங்கம் யக்ஷனா (2.25 மீற்றர்) ஆகியோர் நிற விருதுகளைப் பெற்றமையும் குறிப்பிடத்தக்கது.

2010ஆம் ஆண்டும் தமது தங்க வேட்டையைத் தொடர்ந்த அளவெட்டி மண்ணின் மைந்தர்கள் தேசிய மட்டத்தில் நான்கு தங்கப் பதக்கங்களையும், ஒரு

வெள்ளிப் பதக்கத்தினையும் தமதாக்கி தங்கள் கல்லூரிக்கும் அளவெட்டி மண்ணிற்கும் பெருமை சேர்த்தனர். 17 வயதின்கீழ் பெண்கள் பிரிவில் செல்வி. அருந்தவம் பவித்திரா 2.25 மீற்றர் உயரம் பாய்ந்தும், 17 வயதின்கீழ் ஆண்கள் பிரிவில் செல்வன். அல்டின் அன்ரனி றொஹாய் றொஷான் 3.35 மீற்றர் உயரம் பாய்ந்தும், 19 வயதுப் பெண்கள் பிரிவில் செல்வி. சண்முகராஜா தனுஷா 2.70 மீற்றர் உயரம் பாய்ந்து தங்கப் பதக்கங்களைப் பெற்றுக் கொண்டனர். செல்வி. இரத்தினசிங்கம் யக்ஷனா 19 வயதின்கீழ் பெண்கள் பிரிவில் 2.0 மீற்றர் உயரம் பாய்ந்து வெள்ளிப் பதக்கத்தினையும் பெற்றுக் கொண்டார். இவர்கள் அனைவரும் அருணோதயக் கல்லூரி மாணவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அத்துடன் செல்வி. சண்முகராஜா தனுஷா ஹற்றிக் முறையில் தொடர்ச்சியாக 3 முறை தங்கம் வென்று கல்லூரிக்குப் பெருமை சேர்த்தமை பாராட்டப்படவேண்டியதாகும்.

இதேயாண்டு தெல்லிப்பழை மகாஜனக் கல்லூரி மாணவன் அளவெட்டி மைந்தன் செல்வன் தேவராசா மோகுநாத் கோலூன்றிப் பாய்தல் போட்டியில் தேசிய மட்டத்தில் 21 வயதின்கீழ் ஆண்கள் பிரிவில் பங்குபற்றி...... மீற்றர் உயரம் பாய்ந்து தங்கப் பதக்கத்தினைப் பெற்று கல்லூரிக்கும் அளவெட்டி மண்ணுக்கும் பெருமை சேர்த்தார்.

தங்கம் வென்ற சாதனையாளர்கள் அனைவரும் அளவெட்டி மைந்தர்களாக இருக்கும் அதேவேளை இவ்விரு கல்லூரிகளின் அதிபர்களான அருணோதயக் கல்லூரி அதிபர் திரு. நாகலிங்கம் கேதீஸ்வரன் மற்றும் மகாஜனக் கல்லூரி அதிபர் திருமதி. சிவமலர் அனந்தசயனன் ஆகிய இருவரும் அளவெட்டி மண்ணின் மைந்தர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. இவர்களின் சாதனைப் பயணம் தொடர்வதன் மூலமாக எங்கள் அளவெட்டி தங்க அளவெட்டியாக தரணியில் நிலைக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

பா. பிரதீபன்
உடற்கல்வி ஆசிரியர்
உடுவில் மகாஜனக்கல்லூரி

# அறம் வளர்க்கும் அளவெட்டியின் ஆலயங்கள்

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்பதைப் போற்றி வாழ்வது மானிட தர்மமாகும். தாம் போற்றி வணங்கும் தெய்வீக வடிவங்களுக்கு அவரவர் பின்பற்றும் வழியில் கோயில்கள் அமைத்து வழிபாடியற்றிவருவது பண்டு தொண்டு இன்றுவரை பின்பற்றப்பட்டு வருகின்ற மரபாகும். இக்கோயில்கள் ஒரு இனத்தின் பண்பாடு, நாகரிகம், ஆகியவற்றை எடுத்தியம்பும் முக்கிய கூறாகக் காணப்படுகின்றது. இறைவன் எங்கும் நிறைந்திருப்பினும் கோயிலிலுள்ள திருவுருவங்கள் மூலமாகத் திருவருளை இலகுவில் பெறமுடியும் என்ற நம்பிக்கை காலங்காலமாக மக்கள் மனதில் வேர்விட்டு வந்துள்ளது. "உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பாலயம்" என்ற தத்துவத்தின் வெளிப்பாடாகக் காணப்படுபவை கோவில்கள் ஆகும்.

ஆலயத்தின் தோற்றம் பற்றி நோக்குகையில் திசையுக்கிரக சோழன் மகள் மாருதப்புரவீகவல்லி என்பவள் தனக்கிருந்த குன்மவியாதியால் மெலிந்தவளாய் வியாதியை வைத்தியர் ஒருவராலும் குணமாக்க முடியாததனால் இனித் தீர்த்த யாத்திரை செய்து பார்த்தால் சுகம் வரக்கூடும் என்றெண்ணி காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து புறப்பட்டு அங்கும் இங்கும் போய்த் தீர்த்தமாடியீ வருகையில் சாந்தலிங்கன் எனும் சந்நியாசி கண்டு "உன் வியாதி பண்டிதர் ஒருவராலும் குணமாக்கத்தக்கதன்று. நீ இப்பொழுது எடுத்த முயற்சியே உனக்கு சுகம் தரத்தக்கது.இலங்கையின் வடமுனையிலே கீரிமலை என்று ஒரு மலையுண்டு. அது சமுத்திர தீர்த்தத்தில் உள்ளது. அங்கே உவர்சல மத்தியில் சுத்ததீர்த்தமும் மலையருவித் தீர்த்தமும் கலந்த உத்தம தீர்த்தம் ஒன்று உண்டு. அது உலகிலுள்ள எந்தத் தீர்த்தங்களிலும் முக்கிய தீர்த்தமாய் இருக்கின்றது. அதிலே நீ போய் நீராடிச் சிலகாலம் தங்கியிருந்தால் சுகம் பெறுவாய்" என்ற அத்தவசிரேஷ்டர் வாக்குப்படி யாழ்ப்பாணத்திலுள்ள கீரிமலை என்ற புண்ணியபதியை அடைந்தாள். கீரிமலைப் புண்ணிய தீர்த்தத்தில் தீர்த்தமாடி நகுலேஸ்வரப் பெருமானை வழிபட்டு வந்தாள். நகுலேஸ்வரரின் கட்டளைப்படி கோயிற்கடவை முருகனையும் சென்று வழிபட்டு வந்தாள். அங்கே அவளது குதிரை முகம் நீங்கியது. குதிரை முகம் அகன்ற இடமாதலால் அப்பதி "மாவிட்டபுரம்" என அழைக்கப்படலாயிற்று.

மாருதப்புரவீகவல்லியின் குதிரை முகம் மாறியபோதும் அவள் மனதில் அவள் மனதில் குதிரைமுகம் இருப்பதாக உணர்விருந்தது. எக்காரியத்தைச் செய்ய முற்படும் முன்னரெல்லாம் வல்ல விநாயகரை வணங்கியே செயற்படவேண்டும்.விநாயகரை வணங்காமல் முருகன் கோயில் கட்டியமையால்தான் இக்குறைபாடு இருக்கிறதென ஒரு பெரியவர் கூறினார். தன் தவறை உணர்ந்த இளவரசி கணபதியைப் பல முறை வணங்கி "மெய்யடியாரின் மெய்யன்பை ஏற்று மெய்யருள் பாலிக்கும் மெய்ப்பொருளாய் உள்ள பெருமானே அறியாமையால் நான் செய்த பிழையைப் பொறுத்தருள்வீர்" என வேண்டி தென்திசை நோக்கி ஏழு விநாயர் ஆலயங்களைக் கட்டுவித்து அங்கு விநாயர் விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்து வணங்கி வந்தாள். அத்தலங்கள் கொல்லங்கலட்டி விநாயகர் ஆலயம், வரத்தலம் விநாயகர் ஆலயம், அழகொல்லை விநாயகர் ஆலயம்,

குப்பிழாவளை விநாயகர் ஆலயம், பெருமாக்கடவை விநாயகர் ஆலயம், ஆலங்குழாய் விநாயகர் ஆலயம், கல்வளை விநாயகர் ஆலயம் என்பனவே ஆகும். இவற்றுள் மூன்று ஆலயங்கள் அளவெட்டிக் கிராமத்தில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அதிலும் இவ்வாலயங்களின் மத்தியில் காணப்படும் கும்பிழாவளை விநாயகரை வழிபட்டபோது குதிரை முகம் அவளது சொந்த உணர்விலிருந்து முற்றாக நீங்கியதாக உணர்ந்தார். இதனால் கும்பிழாவளை விநாயகர் ஆலயம் அமைந்துள்ள இடம் மாவிடுதிட்டி அழைக்கலாயிற்று.

இனி இவ்வாலயங்கள் ஒவ்வொன்றினதும் விரிவான வரலாறுகளை நோக்குவோம்.

## கும்பழாவளை விநாயகர் ஆலயம்



அளவெட்டி ஆலயங்கள் நிரம்பிய கிராமம் என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. விநாயகர் ஆலயங்கள், சிவாலயங்கள், அம்மன் ஆலயங்கள், ஐயனார் ஆலயங்கள், நரசிங்க வைரவர் ஆலயம், விஷ்ணு ஆலயம், வீரபத்திரர், முதலியவேள் ஆலயம், அரசடி வைரவர் ஆலயம், தாமர்வளவு வைரவர் ஆலயம் என பலவகைப்பட்ட ஆலயங்கள் அளவெட்டிக் கிராமத்தில் உள்ளன. அவை பற்றி எல்லாம் குறிப்பிடுவதற்கு இந்நூல் இடந்தராது. எனினும் இக்கிராமத்தில் உள்ளதும், சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததுமான ஆலயங்கள் பற்றி பார்க்கவேண்டியது அவசியமானதாகும்.

அந்த வகையில், கும்பழாவளை ஆலயம் கூட்டுறவாளர் வீதியில் கேணிக்கரை வைரவர் ஆலயத்திற்கு மேற்காக அங்கிருந்து நூற்றைம்பது மீற்றர் தூரத்தில் அமைந்துள்ளது. சோழ இளவரசியாகிய மாருதப்புரவீகவல்லியின் குதிரை முகம் அரச குமாரத்தி கண்ணுக்குத் தெரியாது மறைந்த இடம் அளவெட்டி கும்பழாவளை விநாயகர் ஆலயமென கர்ணபரம்பரைக் கதையுண்டு. குதிரை முகம் முற்றாக நீங்கப்பெற்றதால் அவ்விடத்திற்கு மாவிடுதிட்டி என்னும் பெயர் இன்றும் வழங்கக் காண்கின்றோம். இப்பெயர் முதலில் மாவிழி திட்டி என்ற பெயருடன் இருந்ததெனவும், அது மருவி மாவிடு திட்டியென ஆயிற்றெனவும் கூறுவாருமுளர். மா, விழி, திட்டி என்பது குதிரைமுகம் இழிந்த திட்டியெனப் பொருள்படும். இழிதல் நீக்குதல் என்ற பொருளுடைத்து இவ்வாலயத்தின் தென்கிழக்கு மூலையில் குமாரத்தி திருக்குளமும் வயல் நிலமும் இருந்ததாக அறிந்தோர் வாய்க்கேட்டோர் உரைப்பர். இத்தலம் அரச குமாரத்தி வருகைக்கு முன்னரே இருந்ததெனவும், அவள்

தாபிக்கவில்லை, புதுப்பித்தாளே என வாதிடுவோருமுளர். இவ்வாலயப் பகுதி ஒரு மண்மேடாக இருந்ததெனவும் இப்பகுதியில் மாடு மேய்த்துக்கொண்டிருந்த சிறுவனுக்கு ஒரு சோதி வடிவான பிழப்பு தோன்றியதெனவும், அந்த இடத்தில் கொம்பை ஏந்தியபடி விநாயகர் காட்சியளித்தார் எனவும், கொம்பூ ஆவளை என்பது கொம்பழாவளையாய் மாறி அது மக்கள் வாயிற் திரிந்து கும்பழாவளை ஆயிற்றெனவும் அறிஞர் சாதிப்பர். பசுக்கள் கும்பலாக நின்று மேய்ந்த இடம் கும்பலாவளை (கும்பல் ˛ ஆவளை) கும்பழாவளையாய் மருவிற்று என்பதும் ஒன்று. போர்த்துக்கேயர் காலத்தில் இவ்வாலய அன்பர்கள் மூல விக்கிரகத்தை எடுத்துச் சென்று ஒரு மாமரப் பொந்தில் வைத்து வழிபாட்டார் எனவும் ஆங்கிலேயர் காலத்தில் அது மீளவும் தாபிக்கப்பட்டதாகவும் பழைய கதையொன்று உண்டு. 1811ம் ஆண்டு இவ்வாலயக் கர்ப்பக் கிரகமும் மகா மண்டபமும் கட்டப்பெற்றன. இதற்குரிய சாசனம் ஒல்லாந்த காலத் தோம்பில் உண்டு. 1847ஆம் ஆண்டில் எழுதுப்பட்ட தோம்பில் இவ்வாலய மூலஸ்தானம் கற்களால் கட்டப்பட்டு இதன் பரிபாலகர்களாக இராசதுங்க முதலியார் பழனிப்பிள்ளை என்பவரும், இராம லிங்க ஐயர் சுப்பையர் என்பவரும் விளங்கினர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 1893இல் குமார நன்னியர் என்பவர் கிராம மக்களிடம் பொருள் சேர்த்து அர்த்த மண்டபம் வரை கட்டி முடித்தார். 1903இல் மகாமண்டபம் ஆரம்பிக்கப்பட்டு 1911இல் பூர்த்தியாக்கப்பட்டது. மூலஸ்தானத்திலுள்ள தூபி மிக நுட்பமான சித்திரவேலைப்பாடுகளுடன் அப்போது கட்டப்பட்டு இப்போதும் காட்சி தருகின்றது. இத்திருப்பணிகளுக்கான சாசனம் ஆலய மண்டப முதற் சுவரில் உண்டு. 1948ஆம் ஆண்டு ஏற்பட்ட ஆலய நிர்வாகச் சீர்கேடுகளினாலும், கிராமத்தில் ஏற்பட்ட பிளவுகளாலும் ஆலய நிர்வாகம் பற்றிய சர்ச்சை நீதிமன்றம் வரை சென்றது. நீதி மன்றத் தீர்ப்பின்படி 7 பேர் கொண்ட தர்மகர்த்தார்கள் சபை நிறுவப்பட்டு இன்றுவரை இயங்கி வருகிறது. தர்மகர்த்தாக்களின் கீழ் பல வளர்ச்சிகளை இவ்வாலயம் கண்டது. 1949இல் புனருத்தாரண கும்பாபிஷேகம் நடைபெற்றது. 1953இல் 3 தளங்களைக் கொண்ட கோபுரமும், மணிக்கூட்டுக் கோபுரமும் கட்டுவதற்கு அத்திவாரமிடப்பட்டபோதும் அவை 1962ஆம் ஆண்டிலேயே பூர்த்தி செய்யப்பட்டு மகா கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. 1966இல் திருமதி. பாக்கியம் துரையப்பா அவர்களால் முகப்பு மண்டபம் கட்டப்பட்டது. 1970இல் சிங்கப்பூர் சின்னப்பு தம்பதியரால் 3 தேர்கள் விடக்கூடிய ஓர் தேர் முட்டி அமைக்கப்பட்டது. 1979இல் இத்தேர் முட்டி ஊர் பொதுமக்களின் பண உதவியோடு ஓர் தேர்க்கொட்டகையாக அமைக்கப்பெற்றது. 1984இல் ஆலயத்தின் தெற்குப் பகுதியில் வீதிக்கு அண்மித்ததாக தீர்த்தக்குளம் ஒன்றும், நீராடல் மண்டபம், சுவாமி இருக்கும் மண்டபம் என்பனவும் அமைக்கப்பட்டன. நீராடல் மண்டபம் திருமதி. சோ. நாகம்மா குடும்பத்தினராலும், மற்றைய மண்டபம் திரு.ஆ. சின்னையா குடும்பத்தினராலும் அமைக்கப்பட்டன. 2002ஆம் ஆண்டு யுத்த அனர்த்தத்தினால் சேதமுற்றிருந்த பல திருத்த வேலைகள் திருப்பணிச் சபை என்ற சபை மூலம் நிறைவேற்றப்பட்டு கும்பாபிடேகமும் நடைபெற்றது. இப்புனரமைப்புக்கு நிதி உதவியோர் பலராவர். சிலர் முக்கியமான சில வேலைகளைப் பொறுப்பேற்று முடித்துத் தந்துள்ளனர். யாகமண்டபம் திரு.பொ.சண்முகராசா அவர்களாலும், நால்வர் மண்டபம் திரு.க. சிவலிங்கம் குடும்பத்தினராலும், சண்டேஸ்வரர் கோயில் திரு.அ.விஸ்வநாதன் குடும்பத்தினராலும் முகப்பு மண்டப புனரமைப்பு திரு.மா.

மயில்வாகனம் குடும்பத்தினராலும் வசந்தமண்டபம் திரு.க. வேலுப்பிள்ளை குடும்பத்தினராலும், மணிக்கூட்டுக் கோபுரம் கண் வைத்தியர் செல்வநாயகமூர்த்தி அவர்களாலும் புனரமைக்கப்பட்டது. இவற்றை விட பல சிறிய திருப்பணிகளும் வாகனங்களும் ஏனைய பொருட்களும் அன்பர்களினால் அன்பளிப்புச்செய்யப்பட்டுள்ளன. இவ்வாலயத்தின் மகோற்சவம் வெகு விமரிசையாக வருடந்தோறும் வைகாசி மாதத்தில் நடைபெற்று வருகின்றது. மகோற்சவ காலங்களில் கலை நிகழ்ச்சிகள் விமரிசையாக நடைபெறும். காலஞ்சென்றவர்களான தவில்வித்துவான் ராகவன், நாதஸ்வர வித்துவான்கள் இராசரத்தினம்பிள்ளை, அருணாசலம்பிள்ளை, கோட்டூர் இராசரத்தினம்பிள்ளை, லயஞான குபேரபூபதி தட்சணாமூர்த்தி மற்றும் ஷேக் சின்னமௌலானா உட்பட இந்திய புகழ்பெற்ற கலைஞர்களும் இவ்வாலயத்தில் நாதகானமழை பொழிந்துள்ளனர். திருவிழாக்கள் போட்டி மனப்பான்மையோடு சிகரங்கள், வாழைக்குலைப் பந்தல்கள், மின் வெளிச்சங்கள், வானவேடிக்கைகள், சின்ன மேளங்கள் என கலகலப்பாக நடந்துள்ளன. வில்லுப்பாட்டு. கதாப்பிரசங்கம், சொற்பொழிவு சங்கீதச் கச்சேரிகள் என்பனவும் ஆலய விழா நாட்களில் நடைபெற்று வருகின்றன. இவ்வாலயத்தின் வளர்ச்சியிலும், பராமரிப்பிலும் ஆலயத் தொண்டர் சபையினர் ஆற்றிவரும் பங்களிப்பு மறக்கற்பாலது. இவ்வாலயத்தின் மேலதிக சிறப்புக்களை திருமதி. கல்யாணி லோகநாதன் எழுதிய "கும்பழாவளை விநாயகர் ஆலய தல வரலாறு" எனும் நூலில் காணலாம்.

தர்மகர்த்தா சபைத் தலைவர்கள்

1948 - 1983 திரு. செ. மயில்வாகனம்
1984 - 1993 திரு. ச. நாகநாதர்
1994 - 1995 திரு.இ.இராமச்சந்திரன்
1996 - 2001 திரு.செ. சச்சிதானந்தம்
2002 - 2004 திரு. சொ. சிவப்பிரகாசம்
2005-2006 திரு.செ. செல்வநேசன்
2006-2007 திரு.செ. வேலாயுதபிள்ளை
2007 - இன்றுவரை திரு.ம. பத்மநாதன்

ஆசிரியர். சு. செல்லையா.

# அழகொல்லை விநாயகர் ஆலயம்

இந்துமா கடலின் முத்தென விளங்குவது இலங்கை. இலங்கேசன் ஆண்ட இலங்கையின் வடபால் அமைந்தது யாழ்பாடிப் புகழ்பெற்ற யாழ்ப்பாணம். யாழ்ப்பாணத்திலிருந்து காங்கேசன்துறை செல்லும் பெருஞ்சாலையில் அமைந்துள்ள மல்லாகம் சந்தியிலிருந்து மேற்கு நோக்கிச் செல்லும் சங்கானை வீதியின் அலுக்கைச் சந்தியை அடைந்து அவ்விடத்திலிருந்து கூட்டுறவாளர் வீதியினூடாகச் செல்லுமிடத்து கவினுறு மாஞ்சோலைகள் சூழப்பெற்று வனப்புற அமைந்திருப்பதே அளவெட்டி அழகொல்லை விநாயகர் ஆலயமாகும்.

அழகொல்லை விநாயகர் ஆலயத்தின் பெயர் வரக் காரணம் பற்றி நோக்கும்போது அழகொல்லை ஆலயத்தைப் புனரமைக்கவேண்டி கட்டடம் கட்டிய வேளை முதல்நாள் கட்டிய கட்டடம் அடுத்தநாள் இடிந்து வீழ்ந்திருந்ததாகவும் அதனால் ஆச்சாரியார் உள்ளிட்ட மக்கள் அனைவரும் மனம் வருந்தி விநாயகரிடம் முறையிட்ட போது விநாயகர் ஆச்சாரியாரின் கனவிற் தோன்றி கோயில் நிர்மாண அளவுப் பிரமாணத்தில் பிழை இருப்பதாகவும் அதனால்தான் கட்டடம் இழுந்துவிழுவதாகவும் "அளவு ஓலை" ஒன்று ஓர் குறிப்பிட்ட இடத்தில் இருப்பதாகவும் அதன் பிரகாசரம் ஆலயத்தை அமைக்குமாறு கூறியதாகவும் அதன்படி கட்டியபோது எவ்வித விக்கினங்களுமின்றி கட்டடம் பூர்த்தியடைந்ததாகவும் ஓர் வரலாறு உண்டு. இதனாலேயே அளவு ஓலையென்பது மருவி அளவோலை என இடப்பெயராயிற்று. காலப் போக்கில் அதுவும் மருவி அழகொல்லையாயிற்று. அழகிய சோலைகள் சூழ்ந்த இடமாதலால் அழகொல்லை என்ற பெயர் உண்டாயிற்று என்று கூறுவாருமுளர்.

அழகொல்லை விநாயகர் ஆலயம் பற்றிய விபரங்கள் கச்சேரியில் உள்ள தோம்பில் குறிக்கப்பட்டுள்ளன. இவ்வாலயம் 1845இல் கல்லால் கட்டப்பட்டு ஓலையால் வேயப்பட்டது. நல்லதம்பி, ஆறுமுகம், விநாயகர், வீரகத்தி, சபாபதி ஐயர், சீனிவாச ஐயர் ஆகியோரின் முயற்சியால் இக்கோவில் கட்டப்பட்டது. 1852ஆம் ஆண்டு ஆலயத் தீர்த்தக் கேணி கட்டப்பட்டது. 1928இல் ச.துரையப்பா முகதாவில் 14047 ஆம் இலக்கத்தில் கோவில்காணி தருமசாதனமாக எழுதப்பட்டது.

"வடமாகாணம் யாழ்ப்பாணம், பெரும்பிரிவு வலிகாமம் வடக்குப் பகுதி, மல்லாகம் கோவிற்பற்று, அளவெட்டி இறை, அழகோலை நிலப்பரப்பு கோயிலுக்குரிய தருமசாதனமாக யாழ்ப்பாணம் கச்சேரியில் 3060/24.9.59 ஆம் இலக்கத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

ஆரம்பத்தில் வருடத்தில் ஒருமுறை அதாவது மார்கழி மாதத்தில் பத்துத் தினங்கள் திருவிழாக்கள் நடைபெற்றன. அக்காலத்தில் ஒரு திருவிழாவிற்கு சராசரி நூறு அடியார்கள் வரை பங்குபற்றினர். தற்போது மகோற்சவம் சித்திரை மாதத்தில் பத்துத் தினங்கள் நடைபெறுகின்றன. மேலும் சதுர்த்தி திருநாவுக்கரசர் குருபூஜை, ஆடிப்பூரம், நவராத்திரி, கந்தஷஷ்டி, ஐப்பசி வெள்ளி, பிள்ளையார் கதை, திருவெம்பாவை, சிவராத்திரி என்பன சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன.

கோயிற் காணியை அன்பளிப்புச் செய்த கோயிலைக் கட்டுவித்தோர் கோயிலை நிர்வகிப்பதற்கு ஒரு சபையையும் நியமித்தனர். இந்த நிர்வாகசபையில் இருந்தவர்கள் காலமாகன போது அவர்களின் இடத்திற்கு 1950ஆம் ஆண்டளவில் அங்கத்தவர் பட்டியல் தயாரிக்கப்பட்டு பொதுச்சபை கூட்டப்பட்டு புதிய யாப்பு அங்கீகரிக்கப்பட்டு அதற்கமைய புதிய நிர்வாக சபை தெரிவு செய்யப்பட்டு கோவில் சிறப்பாக நிர்வகிக்கப்பட்டு வந்தது. இன்று அதன் வளர்ச்சி நிலையில் உயர் கட்டத்தை எட்டியுள்ளது. இவ்வாலயம் தாபிக்கப்பட்ட பின்னர் 1928, 1966, 1978 ஆகிய ஆண்டுகளில் கும்பாபிஷேகம் மிகவும் சிறப்பாக குறிப்பிட்டுக்கூறக்கூடிய வகையில் நடைபெற்றதை அறியமுடிகின்றது. இதற்கான சான்றுகளும் கிடைக்கப்பெறுகின்றன. தற்போது பதவியிலுள்ள நிர்வாக சபையினரும், ஊர் மக்களினதும் பெருமுயற்சியால் திருப்பணி வேலைகள் சிறப்பாக மேற்கொள்ளப்பட்டு கர்ப்பக்கிரகம் புதிதாகப் புதுப்பிக்கப்பட்டு ஐந்து தள அமைப்பைக் கொண்ட வானளாவிய இராஜகோபுரமும் அதன் இரு புறமும் இரு துவாரபாலகர் சிலையும், இரண்டு மணிக் கோபுரங்களும் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. பபரிவாரத் தெய்வங்களுக்கு கோயில் அமைத்தும் வசந்த மண்டபம் அமைக்கப்பட்டும் உள்வீதி விசாலமாக்கப்பட்டும் வெளிமண்டபத்தில் கலையரங்கொன்றும் அமைக்கப்பட்டுள்ளது. ...... திகதியில் இறுதியாக கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மேலும் நித்திய நைமித்திய கிரியைகள் ஒழுங்காக நடைபெற்று வருகின்றன. இவ்வாலயத்தில் சிவாச்சாரியார்கள் பரம்பரை பரம்பரையாக பூசை செய்து வருவதுடன் ஆசார சீலர்களாகவும் நற்பண்பு உடையவர்களாகவும் திகழ்ந்து வருகின்றனர். சுப்பையாக் குருக்கள், அவர்பின் இரத்தினக் குருக்கள், பின் அவரது புதல்வர்கள் மகாலிங்கக் குருக்கள், மணிவாசகக் குருக்கள் ஆகியோர் ஆலய வளர்ச்சியில் பெரும் பங்காற்றி வருகின்றனர். மகாலிங்கக் குருக்களே தற்பொழுது ஆலயத்தின் பிரதம சிவாச்சியாரியாகப் பணியாற்றி வருகிறார். மேலும் ஆலய சமூகமானது சமயத் தொண்டுகள் மட்டுமமல்லாது சமூகத் தொண்டிலும் தம்மை இணைத்துக் கொண்டுள்ளனர். அறநெறிப் பாடசாலை, முன்பள்ளி வகுப்புக்கள் என்பன அவற்றுள் குறிப்பிடத்தக்கன.

திருமதி. சந்திரா பிரதீபன்
இந்து நாகரிகத்துறை ஆசிரியை

# பெருமாக்கடவை விநாயகர் ஆலயம்



அளவெட்டிக் கிராமத்தில் அமைந்துள்ள வரலாற்றுச் சிறப்பு மிக்க விநாயகர் ஆலயங்களுள் பெருமாக்கடவை விநாயகர் ஆலயமும் ஒன்றாகும். கிழக்கே மல்லாகம், சுன்னாகம், கந்தரோடை ஆகிய கிராமங்களைத் தொட்டு நிற்கும் பரந்த பசுமையான நெல்வயல்கள் அவற்றின் மத்தியில் பனாக்கை, பரவை போன்ற பெருங்குளங்களும் ஆலய முகப்பை அண்மித்து சதுர வடிவிலான புராதன செந்தாமரைத் தடாகமென ரம்மியமான ஓர் சூழலில் அமைந்திருக்கும் இவ்வாலயத்தின் பெருமை பல வரலாற்றுக் குறிப்புக்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆலயத்தின் மேற்குப் புறமாக நித்திய பூஜைகளை மேற்கொள்ளும் பரம்பரை அந்தணர்ககளின் இல்லங்களும் தெற்கே ஆலயத்தை ஸ்தாபித்து தொடர்ச்சியாகப் பரிபாலித்து வரும் மணியகாரன் பரம்பரையினரின் வழியுரிமையான ஆதனங்களும் வடக்கே துர்க்கையம்மன் கோவிலொன்றும் அமைந்துள்ளன.

ஆலய நிர்மாண காலந்தொட்டு ஆலயத்திற்குப் புரோகிதம் செய்யும் இசை வேளாளர்கள், வடக்கே உள்ள ஆதனங்களில் குடியிருந்ததாகவும் அறியப்படுகின்றது. இவையனைத்திற்கும் மேலாக இவ்வாலயச் சுற்றாடல் மா, பலா, வாழை, தென்னை மரங்கள் செறிந்த பசுமைத் தோற்றமும் சுற்றமான காற்றோட்டம் உள்தாகவும் அமைந்துள்ளது.

ஆலய வரலாறு

முன்னொரு காலத்தில் பெருமாலியன் எனும் ஓர் அரங்கன் இந்த ஆலயம் அமைந்துள்ள - பணாக்கை - பரவை ஆகிய நீர்நிலைகளைத் தொடுக்கும் வழுக்கையாற்றுப் பகுதியில் வயல்வெளிகளில் பயிர்களை நாசம் செய்து உழவர்களை வருத்தி ஆற்றின் குறுக்கே படுத்துக்கிடந்தான் எனவும் அதனால் ஆற்றின் போக்குத் தடைப்பட்டு வயல்களின் ஒரு பகுதி வரட்சியாறாலும், மறுபகுதி வெள்ளத்தினாலும் அழிந்ததாகவும் அதனால் வேதனை அடைந்த மக்கள் விநாயகக்

கடவுளிடம் வேண்டுதல் செய்ததன் நிமித்தம் விநாகப் பெருமான் தாமே நேரில் வந்து பயிர்களையும் மக்களையும் காக்கவென அரக்கனை கொன்றொழித்தார் எனவும், நிம்மதி பெற்ற மக்கள் விநாயகரை நினைவில் வைத்து சிற்றாலயம் ஒன்றை அமைத்து வழிபட்டதாகவும் பெருமாலியனின் ஆவி கடந்த இடமென்பதால் பெருமாக்கடவை எனும் பெயர் பெற்றதாகவும் கூறுவோரும் உளர். பிரபல ______ எழுத்தாளரும் பூகோளவியலாளருமான செங்கை ஆழியன் திரு. செ.குணராசஜா அவர்கள் 1960களில் சிரித்திரன் சஞ்சிகையில் எழுதிய "நடந்தாய் வாழி ! வழுக்கியாறு"எனும் தொடரில் இக்கதையினைக் குறிப்பிட்டுள்ளார்.

இந்த வட்டாரப் பகுதியில் அக்கால ஆடுசியாளர்களின் கீழ் உயர் பதவி வகித்தவர்கள் அநேகர் குதிரைகளைப் பட்டியயாக வைத்திருந்த காரணத்தினால் பெரிய குதிரைகள் அடங்கிய கடவை - பெருமாக்கடவை என அழைக்கப்பட்டதாகவும் கூறுவர். இறுதியான காரணமாக ஓரளவு நம்பத்தகுந்த காரணம் ஒன்றும் கூறப்படுகின்றது. இப்பகுதி மக்கள் உயர் சாதிப் பின்னணி கொண்டாவர்களாகவும் ஆட்சிப் பணிகளிலும் ஏனைய கல்வித் துறைகளிலும் மேம்பட்டவர்களாகவும் விளங்கிய காரணத்தினால் பெருமக்கள் கடவை என அழைக்கப்பட்டு பின்னர் பெருமாக்கடவை என மருவியதாகவும் கூறுவர்.

இவ்வாலயம் பற்றிய வரலாற்று உண்மைகளைப் பறைசாற்றும் பல உத்தியோகபூர்வமான ஆவணங்கள் உண்டு. அவற்றில் சில யாழ் அரச அதிபர் காரியாலயத்திலும், இலங்கை அரச கலாசாரத் திணைக்களத்தின் தேசிய சுவடிக் காப்பகத்தின் கண்டி காரியாலயத்திலும், யாழ்ப்பாணம் காணிகள் பதிவுத் திணைக்களத்திலும் பேணிப் பாதுகாக்கப்படுகின்றன.

1892இல் அந்நிய ஆடுசிக் காலத்தில் யாழ்ப்பாணம் முகவராக இருந்தவரினால் சேகரிக்கப்பட்ட பதிவுகளின் பிரகாரம் இவ்வாலயம் பிள்ளையாருக்கான வழிபாட்டிடம் எனவும் அப்போது அமைந்திருந்த கட்டடத்தைக் கட்டியவரும் நிலத்தின் உரிமையாளரும், வீரகத்தியர் முருகேசு உடையார் எனவும் கல்லினால் கட்டப்பட்டு கிடுகினால் வேயப்பட்டதெனவும் தெரிய வருகின்றது. மேலும் இப்பதிவு மேற்கொண்ட காலத்தில் ஆலய முகாமையாளரும், உரிமையாளருமாக அம்பலவாண முதலியார் சின்னத்தம்பர் மணியகாரர் விளங்கியதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

சின்னத்தம்பர் மணியகாரரின் தந்தையாரான அம்பலமணியம் என அழைக்கப்பட்ட அம்பலவாண முதலியார் ஆலயத் தாபகர், வீரகத்தி முருகேசு உடையாரின் மகனாவார். 1840 முதல் 1869 இல் இறக்கும்வரை காங்கேசன்துறை, வீரமாணிக்க தேவன்துறை தொடக்கம் தாவடி வரையிலான பிரதேசத்திற்கு மணியகாரராகவும் 17 உடையார் பிரிவுகளுக்கு மேலதிகாரியாகவும் விளங்கிய இவரின் சேவையை ஆங்கிலேய ஆட்சியாளர் கௌரவித்து "இராஜகாரிய - சிங்கை ஆரிய" அம்பலவாண முதலியார் என அழைத்தனர். இவரின் காலத்திலேயே ஆலய விஸ்தரிப்புக்கள், திருக்குள அமைப்பு என்பன இடம்பெற்றன. முற்குறிப்பிட்ட ஆவணத்தின்படி ஆனி மாதத்தில் பத்துத் திருவிழாக்களும், ஐப்பசியில் கந்தசஷ்டி 6 நாட்களும், மார்கழித் திருவெம்பாவை 10 நாட்களும் நியம உபயங்களெனவும் வருடத்

திருவிழாவின்போது சுமார் 400 பேர் சமுகமளிப்பதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் திருவிழாக்களின்போது சுவாமி வலம்வரும் பாதை திருவிழாவின்போது பிரசன்னமாயிருக்கக்கூடாதவர்கள், குழப்பம் விளைவிக்கக்கூடியவர்களை அரசினால் பிரகடனப்படுத்தப்பட்டவர்களின் பெயர்கள் போன்றவையும் அவ்வாவணங்களில் இடம்பெற்றிருந்தன.

இவ்வாலயம் ஓர் தனிப்பட்ட நம்பிக்கைச் சொத்தாகும். ஆலயத் தாபகரான வீரகத்தியர் முருகேசு உடையாரின் ஆண் சந்ததியினர் வழிமுறையாகப் பின்வரும் ஒழுங்குமுறையில் பரிபாலனம் செய்து வந்துள்ளனர்.

1) வீரகத்தியர் முருகேசர்

2) இராஜகாரிய - சிங்கை ஆரிய அம்பலவாண முதலியார்

3) சின்னத்தம்பர் மணியகாரர்.

4) சின்னத்தம்பர் கந்தையா மணியகாரர்

5) கந்தையா நடராசா மணியகாரர்

6) தற்போதைய மணியகாரர் நடராசா சிவராஜா

இவ்வாலய பரிபாலன உரித்தானது ஆண் வழி ஆண் வழியாக முறையாகப் பின் வைத்துச் செல்லவேண்டுமெனவும் வேறெவருக்கும் மாற்றமுடியாததும், பராதீனப் படுத்தப்பட முடியாதெனவும் பத்திரங்களில் உறுதியாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆலய அசையும் அசையா ஆதனங்கள் தொடர்பில் பேணவும் முடிவுகள் எடுக்கவும் உபயங்கள் தொடர்பில் முடிவுகள் மேற்கொள்ளவும், அந்தணர்களை நியமிக்கவும் ஒழுக்காற்று நடவடிக்கைகளை மேற்கொள்ளவும், வேறு பதிலாட்களை நியமிக்கவும் மணியகாரனுக்குப் போதிய உரித்துள்ளது.

இவ்வாலயமானது கற்பக்கிருகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், துவஜஸ்தம்ப மண்டபம், வெளி மண்டபம் போன்றவற்றோடு கூரை வேயப்பட்ட உட்பிரகாரத்தையும் மடப்பள்ளி, குருக்கள் அறை, களஞ்சியசாலை, நால்வர் மண்டபம், வாகனசாலை, வசந்தமண்டபம், யாகசாலை போன்றவற்றுடன் பரிவார மூர்த்திகளாக வைரவக் கடவுள், சுப்பிரமணியர் போன்ற உட்பிரகாரக் கோவில்களையும் துவஜஸ்தம்பம், நந்தி, பலிபீடம் போன்றவற்றையும் கொண்டுள்ளது. மூலவர் விக்கிரகம் அமர்ந்த நிலையிலுள்ள கருங்கல்லினாலான சிலையாக உள்ளது. சகல அரச ஆவணங்களிலும் பிள்ளையார் கோவில் என்றே குறிப்பிடப்பட்டுள்ள போதிலும் பலராலும் சித்திவிநாயகப் பெருமான் என்றே அழைக்கப்பட்டு வருகின்றார். ஆனாலும் கோவில் சம்பந்தமான பாடல்களிலும் ஊஞ்சல் பாட்டு போன்றவற்றிலும் ஏரம்ப விநாயகனே அல்லது ஏரம்ப வள்ளலே என விழிக்கப்படுகின்றது.

அந்தணர் பரம்பரை

இவ்வாலய நிர்மாண காலத்திலேயே ஸ்தாபகர்களான மணியகாரர்கள் தென்னிந்திய நகரங்களான தஞ்சாவூர், கும்பகோணம் போன்ற பகுதிகளிலிருந்து ஆசாரமும் தேர்ச்சியும் பெற்ற அந்தணர்களை அழைத்து வந்து அவர்களுக்குரிய இல்லங்களையும் வருமானம் தரும் தோட்டங்கள், வயல்களையும் தரும சாதனம் செய்து பூஷகர்களாக நியமித்தனர். அவர்களின் பரம்பரையினரே இன்றும் தொடர்ச்சியாக ஆலய பூசைக் கருமங்களை நடாத்தி வருகின்றனர். முன்னாள் வித்யாதரிசி முகாந்திரம் தி. சதாசிவஐயர் அவர்கள் இவ்வாலயப் பரம்பரையில் வந்தவராவார். பிள்ளையார் மேல் அநேக பதிகங்களை அவர் பாடியுமுள்ளார். தருமசாதனமாகக் கிடைத்த

நிலபுலன்களினால் வரும் வருமானத்தையும் நித்திய பூசை வருமானத்தையும் மட்டுமே வேதனமாகக் கொண்டு ஆலய பூசை முறைகளை இவ் அந்தணர்கள் முறையாக நடாத்தி வருவது சிறப்பானது.

நித்திய நைமித்தியங்களும் விசேட உற்சவங்களும்

ஆரம்பம் தொட்டு இவ்வாலயத்தின் நியம நைமித்தியங்களாக வருட மகோற்சவம் பத்து நாட்கள், கந்தஷஷ்டி 6 நாட்கள் மற்றும் திருவெம்பாவை 10 நாட்கள் என்பனவே இருந்து வந்துள்ளது காலப்போக்கில் படிப்படியாக இந்நிலை மாறி பன்னிரு மாதங்கள் தோறும் இரு பட்ச சதுர்த்தித் திருவிழாக்கள், சிவராத்திரி, தைப்பூசம், பங்குனி உத்தரம், சித்திராப் பௌர்ணமி, வைகாசி விசாகம், ஆனி உத்தரம், திருஞானசம்பந்தர் குருபூசை, ஐப்பசி வெள்ளி, திருக்கார்த்திகை, மானம்பூ, பிள்ளையார் கதை போன்றவை மேலதிக உபயங்களாக நடாத்தப்பட்டு வருகின்றன. பொருத்தமான நேரங்களில் புராண படனமும் இடம்பெறுகின்றது. கந்தசஷ்டியைத் தொடர்ந்து திருக்கல்யாண வைபவம் சிறப்பாக நடைபெறுவது வழக்கமாக உள்ளது

முக்கிய புனர்நிர்மாணங்கள்

ஆலய கர்ப்பக் கிரகம், ஆலய மணியகாரர்களால் கல்லினால் அமைக்கப்பட்டது. அது போன்றே வைரவர் மூலஸ்தானமும் பழங்கால கட்டட முறையில் அமைக்கப்பட்டு மணிக்கூடு, துவஜஸ்தம்பம் போன்றவை அவர்களாலேயே அமைக்கப்பட்டது. ஆலய முன்பாக உள்ள தாமரைத் தடாகம் அம்பலவாண முதலியாரால் அமைக்கப்பட்டது. ஆலயத்தின் மடப்பள்ளி அதைத் தொடுக்கும் உட்பிரகார மண்டபம், மணியகாரர் பரம்பரையின் பெண்வழி உரித்துடைய செண்பகவரதர் சபாரட்ணம் அவர்களாலும், மகா மண்டபம் அருணாசல உடையார் குடும்பத்தினராலும் மூலஸ்தான விமானம் **W.M.** குமாரசுவாமி குடும்பத்தினராலும் மேற்கொள்ளளப்பட்டன. 1968, 1982 மற்றும் 2002 ஆம் ஆண்டுகளில் ஆர்வமுள்ள அடியவர்கள், ஊர்மக்கள் போன்றோரின் மனமுவந்த ஒத்துழைப்புடன் ஆலயத் திருப்பணிகள் மேற்கொள்ளப்பட்டு கும்பாபிடேகம் நடாத்தப்பட்டது.

தகவல் - ஆலய பரம்பரை உரித்தாளர்

# குருக்கள் கிணற்றடி விநாயகர் ஆலயம்

குருக்கள் கிணற்றடி விநாயகர் ஆலயம் அளவெட்டி, தெல்லிப்பழை, மல்லாகம் ஆகிய மூன்று கிராமங்களும் இணையும் எல்லைப் பகுதியில் அமைந்துள்ளது. இது கணேஸ்வரம் என அழைக்கப்படுகிறது. இவ்விநாயகர் ஆலய வரலாறு மிகவும் தொன்மையானது. இற்றைக்கு 650 ஆண்டுகளுக்கு முன் துறவறத்தை ஏற்று சம்பந்த ஞானியார் வாழ்ந்தார்கள். இவர் சித்திகள் பெற்று பல அற்புதங்களை நிகழ்த்தி இவ்விடத்தில் சமாதி அடைந்தார் என்று வழிவந்த ஐதீகக் கதைகளை இன்றும் கேட்டு அறியமுடியும். புலவர் சீ.எஸ். நவரத்தினம் எழுதிய "இலங்கைத் தமிழர்கள் வரலாறு" எனும் நூலில் 1328 முதல் 1348 வரை யாழ்ப்பாணத்தை மாத்தாண்டசிங்க ஆரியன் என்னும் மன்னன் அரசு புரிந்ததாகவும், பின் அவர் பின் ஞானசம்பந்தன் 1348 முதல் 1371 வரை ஆட்சி நடத்தியதாகவும் அறியத் தருகிறார். சம்பந்தஞானியார் வாழ்ந்த காலமும் ஞானசம்பந்த மன்னன் வாழ்ந்த காலமும் ஒரே காலமெனத் தெரிகிறது. சம்பந்த ஞானியார் ஞானசம்பந்தனோ அல்லது அவரது உறவினனோ என ஐயுறந் தோன்றுகின்றது.

சம்பந்தஞானியார் சமாதியடைந்த இடத்தில் இன்று ஒரு வைரவர் ஆலயம் தெற்குத் திசை நோக்கி உள்ளது. இங்கு ஆல், அரசு, வேம்பு ஆகிய மூன்று மரங்களும் தலவிருட்சமாக பின்னிப் பிணைந்துள்ளன. சம்பந்தஞானியார் சமாதி கோயில் இருந்த இடத்தில் அளவெட்டிவாழ் மக்கள் கோயிலமைத்து வழிபாடு செய்து வந்தனர். இதனால் இக்கோயில் சம்பந்தஞானியார் கோயில் என அழைக்கப்பட்டது. இத்தல விருட்ச மரத்தின் கீழ் சம்பந்தஞானியார் தவமிருந்தபோது மூவர்ணக் குடைபோல் அவரைக் குளிர், வெப்பம் முதலியவற்றிலிருந்து இம்மரம் பாதுகாத்திருக்குமென்பது திண்ணம்.

போர்த்துக்கேயர் இலங்கையை ஆண்ட காலம் இந்துக்களின் இருண்டகாலம். 1620 ஆம் ஆண்டு பாடல்பெற்ற கோணேஸ்வரம் ஆலயம் உட்பட பல சிவாலயங்கள் தரைமட்டமாயின. இக்கோயில் அதிகாரிகள் விக்கிரகங்களை நிலத்தில் புதைத்தும் மறைத்தும் வைத்திருந்தனர். இவ்வாறே ஞானியார் கோயில் விக்கிரகமும் புதைக்கப்பட்டு விட்டது. அந்நியர் அரசாட்சிகள் ஒழிய, மீண்டும் சைவ மக்கள் கோயில்களைப் புதுப்பிக்க முற்பட்டனர். இக்காலத்தில் அளவெட்டியைச் சேர்ந்த சைவக்குருக்கள் தனது வீட்டுக்குக் கிணறு வெட்டியபோது இவ்விநாயகப் பெருமானுடைய சிலை கண்டெடுக்கப்பட்டுள்ளது. அரியதும் பெரியதும் அழகும் மிகுந்த இவ்விநாயகர் விக்கிரகத்தை கிணற்றடியருகே கோயில் அமைத்து வழிபட்டு வந்தனர். மக்கள் வழிபாடு செய்ய ஆரம்பித்த காலம் முதல் குருக்கள் கிணற்றடி விநாயகர் ஆலயமென பெயர் பெற்றது. 1845ஆம் ஆண்டு யாழ் கச்சேரி செயலகத்தால் தயாரித்த கோயிற் பட்டியலில் இவ்வாலயப் பதிவும் இடம்பெற்றமை குறிப்பிடத்தக்கது.

ஆலய கட்டடங்கள் பழுதடையத் தொடங்கியமையால் 1900ஆம் ஆண்டளவில் கோவில் திருப்பணிகளை ஆரம்பித்து பரியாரி காசிப்பிள்ளை என்பவர் தனது நிலங்களையும் பொருட்களையும் கோவிலுக்கு வாரி வழங்கினார். கும்பாபிஷேகம் செய்வதற்கு முன்னர் துரதிஷ்டவசமாக காசிப்பிள்ளை என்ற பக்தர் சிவபதம் அடைந்துவிட்டார்.

இதனைத் தொடர்ந்து சுப்பராயர் என மக்களால் அழைக்கப்படும் இவரின் மைத்துனரான கந்தப்பர் சுப்பிரமணியம் திருபப்ணியை ஏற்று நிறைவு செய்து 1910ஆம் ஆண்டு மகா கும்பாபிஷேகத்தை சிறப்பாக நடாத்தி முடித்தார். 1920ஆம் ஆண்டு முதல் தேர் கட்டி பத்து நாள் திருவிழாவாக நடைபெறும் வழக்கம் ஆரம்பமாயிற்று. ஆடித் திங்கள் உத்தர நட்சத்திரத்தில் ஆரம்பமாகும் மகோற்சவம் ஆடிப் பூரணையை அந்தமாகக் கொண்டு பத்துத் தினங்கள் நடைபெறும். ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழாவும், பத்தாம் நாள் தீர்த்தத்திருவிழாவும் நடைபெறும். தீரத்த்தத் திருநாளில் வடக்கு வீதியிலுள்ள திருமஞ்சக் கிணற்றில் விநாயகர் மற்றும் ஆலயப் பூசகர் தீர்த்தமாடுவார்கள். விநாயகர் சஷ்டி, விநாயகர் சதுர்த்திகள், விஜயதசமி, கந்த ஷஷ்டி, மார்கழித் திருவாதிரை, சிவராத்திரி, மணவாளக்கோலமென பல விழாக்களும் நடைபெறுவதுடன், விழா நிறைவில் அன்னதானமும் வழங்கப்பட்டு வருகிறது. விழிசிட்டி பண்டிதர் சி. கதிரிப்பிள்ளை இயற்றிய “திருமருவும் யாழ்ப்பாணம் நாட்டில் மேலத் தெல்லிநகர்” என்று தொடங்கும் திருவூஞ்சல் பாடலும் ஆலயத்துக்குண்டு. 1910ஆம் ஆண்டுக்குப் பின் நீண்டகாலமாக கும்பாபிஷேகம் நடைபெறவில்லை. கட்டடங்கள் பழுதடைந்தமையால் 1973ஆம் ஆண்டு பாலஸ்தான கும்பாபிஷேகம் நடைபெற்று திருப்பணி வேலைகள் நிதிப்பற்றாக்குறையால் தாமதமடைந்து 1978.06.28ஆம் திகதி மகாகும்பாபிஷேகம் நடைபெற்றது. நி. இளையதம்பி தலைமையில் க. அருளானந்தம் செயலாளராகவும், செ.சுப்பிரமணியத்தை பொருளாளராகவும் கொண்ட நிர்வாக சபை இத்திருப்பணிகளையும் மகாகும்பாபிஷேகத்தையும் சிறப்பாக நடாத்தி முடித்தது. 1918, 1975, 1985ஆம் ஆண்டுகளில் குடா நாட்டில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கால் பெரிதும் பாதிக்கப்பட்ட மக்கள் இவ்வாலயத்தில் தஞ்சமடைந்தமை குறிப்பிடத்தக்கது. அதுபோல் 1990ஆம் ஆண்டு யுத்தத்தில் பாதிக்கப்படட பலாலி விமானத் தளத்தை அண்டிய கிராம மக்களும் இவ்வாலயத்தில் தஞ்சமடைந்து தற்போதும் உள்ளவர்கள்.

1980ஆம் ஆண்டு சி.த.கந்தையாவைத் தலைவராகவும், இ.த.கந்தையாவைச் செயலாளராகவும், இ. இராஜநாயகத்தைப் பொருளாளராகவும் கொண்ட நிர்வாக சபை அமைந்தது. அப்போது முருகன், கஜலட்சுமி, நடராஜர் ஆகிய பரிவாரமூர்த்தி ஆலயங்கள் கட்டப்பட்டன. 1989ஆம் ஆண்டு செ. இராஜகுலேந்திரனைத் தலைவராகவும் தியாகராஜாவைச் செயலாளராகவும் , ச. சுப்பிரமணியத்தைப் பொருளாளராகவும் கொண்ட நிர்வாக சபை தெரிவுசெய்யப்பட்டது.

1990ஆம் ஆண்டுப் பகுதியில் உள்வீதி சுற்றுக் கொட்டகைக்கு தூண்கள் முழுமையாக நிறுவப்பட்டு கஜலக்ஷ்மி முருகன் ஆலய வாசல் பகுதி மட்டும் கூரை போடப்பட்ட நிலையில் இருந்தது. 1995ஆம் ஆண்டு தலைவர், செயலாளர் தொடர்ந்தும் இருக்க ஞானேஸ்வரன் பொருளாளராக தெரிவு செய்யப்பட்டார். அதன் பின் யுத்தத்தால் குடாநாட்டை விட்டு மக்கள் வெளியேறியபோது பூசைகள் தடைப்பட்டன. மீண்டும் 1997ஆம் ஆண்டு மீளக்குடியமர்ந்து பிராயச்சித்த அபிஷேகத்துடன் பூசைகள் தொடர்ந்து நடைபெற்றன. 14.07.1999ஆம் திகதி பாலஸ்தாபன கும்பாபிஷேகம் நடைபெற்றது. இக்காலப்பகுதியில் திருப்பணி வேலைகள் பல நடைபெற்றன. குறிப்பிடும்படியாக நவக்கிரக, வைரவர், தண்டேஸ்வரர், மனோன்மணி அம்மன் ஆகிய 4 பரிவாரமூர்த்தி ஆலயங்களும் கட்டப்பட்டதுடன் வடக்கு

உள்வீதிக் கொட்டகை பூர்த்தியாக்கப்பட்டதுடன் வசந்தமண்டபம், யாகசாலை என்பன புனரமைத்துக் கட்டப்பட்டு 29.01.2001ஆம் திகதி மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. இக்கும்பாபிஷேகத்தை சிவஸ்ரீ. சோ. பிரணதார்த்திகரக் குருக்கள் தலைமையில் குடாநாட்டின் குருமார்கள் சிவாசாரியார்கள் முன்னின்று நடாத்தி வைத்தார்கள். 1997ஆம் ஆண்டு முதல் ச. சுப்பிரமணியம் தலைவராகவும் சி. செம்பொற்சோதி செயலாளராகவும், க. ஞானேஸ்வரன் பொருளாளராகவும் தெரிவு செய்யப்பட்டனர்.

தூபியுடன் அமைந்த பல பரிவார மூர்த்திகளைக் கொண்ட இவ்வாலயம் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. விநாயகர், சிவபெருமான், உமாதேவி, முருகன், தெய்வானை, வள்ளியம்மை, மனோன்மணி அம்மன், சண்டேஸ்வரர், ஆகிய எழுத்தருளி விக்கிரகங்கள் உள்ளன. தெற்கு வீதியில் ஓர் மடமும் உண்டு.

எலி, யானை, குதிரை, மயில் சிம்மாசனமென பல வாகனங்களும் உண்டு. இரண்டு வீதிகளைக் கொண்ட இவ்வாலயம் 30 பரப்புக் காணியில் அமைந்துள்ளது. ஐந்து பரப்பு வயல், 15 பரப்பு தோட்டக் காணியும் உள்ளது. வெள்ளி அங்கி மற்றும் சில நகைகளும் விநாயகப் பெருமானுக்கு உண்டு. சிவஸ்ரீ நடராஜ சர்மா (பஞ்சையர்) குடும்பம் மலேசியா சென்றமையால் பன்னிரண்டு வருடங்களாக சிவஸ்ரீ சி. இராஜேந்திர சர்மா பணி செய்து வருகிறார்கள். மூன்றுகாலப் பூசை நடைபெறுகிறது. 7 மண்டபங்களைக் கொண்ட இவ்வாலயத்தை 11 பேர் கொண்ட நிர்வாக சபை நிர்வகித்து வருகிறது.

தகவல் : கனகசபை ஞானேஸ்வரன்
பொருளாளர் ஆலய பரிபாலன சபை

# தவளக்கிரி முத்துமாரியம்மன் ஆலயம்

சைவமும் தமிழுந் தழைத் தோங்கும் ஈழவளநாடு தக்ஷிண கைலாசம் என்னுஞ் சிறப்புப் பெயருங் கொண்டுள்ளது. ஊஉகள் தோறும் கோவில்கள் பக்தி மணம் பரப்பி நிற்கின்றன.

இவ் ஈழநாட்டில் யாழ்ப்பாணக் குடாநாட்டின் வடபால் அமைந்துள்ள அளவெட்டி என்னும் அரிய புகழ் படைத்த எம் ஊஉ வயலும் வயல் சாஉந்த பண்ணைகளும் வளஞ் செழித்த பச்சைப் பசேலென்றும் என்றும் காட்சியளிக்கும். இவ்வூஉ ஆன்றவிந்தடங்கிய கேள்விச் சான்றோஉ பலர் வாழ்ந்த பெருமை பெற்றது. இங்கு வாழ்ந்த வடமொழிஇ தென்மொழி வல்லுனரான வைத்தியநாத முனிவஉ வியாக்கிரபாத புராணம்இ புலியூஉப் புராணம் என்னும் நூல்களை ஆக்கி சைவ நல்லுலகிற்குத் தந்திருக்கிறாஉகள். சங்கீதம் நாட்டியம்இ நாடகம்இ சிற்பம்இ ஓவியம் ஆகிய இன்கலைகளின் இருப்பிடம் இவ்வூஉ.

நகுலேஸ்வரத்திற்கு நேஉ தெற்கே இரண்டு கல் தொலைவில் தெல்லிப்பழை பண்டத்தரிப்பு வீதியில் அளவையூரின் அமைதி மிகு சூழலில் ஓமெனும் மந்திரத்தின் பொருளாயிருக்கும் உலகத்து நாயகி அன்னை முத்துமாரி கோயில் கொண்டு அருள் பாலிக்கும் தவளக்கிரித் திருத்தலம் அமைந்திருக்கிறது.

## தவளக்கிரி

தவளக்கிரித் திருத்தலத்தின் வரலாற்றைச் சரிவரச் சொல்லக்கூடிய சரித்திர புராணச் சான்றுகளோ சாசன ஏடுகளோ எவையுமில்லை. கஉண பரம்பரைக் கதைகளே ஓரளவுக்குக் கைகொடுக்கின்றன. கோவிலின் பழமையை அன்னையின் திருவுருவ அமைப்பும் முன்பிருந்த தூண்கம் கட்டடம் அமைக்கப் பயன்னடுத்தப்பட்ட பொருட்களும் எடுத்துச் சொல்லுகின்றன.

## முணுமுணுத்த அம்மன்

அன்னை முத்துமாரி அளவெட்டியில் கோயில் கொண்ட வரலாறே அதிசயமானது. நீண்ட நெடுங்காலத்துக்கு முன்பு வட்டுக்கோட்டை சுழிபுரம் வாழ்மக்கள் கடலிலிருந்து எடுத்த அன்னையின் திருவுருவச் சிலையை வீடொன்றில் வைத்து ஆதரித்து வந்திருக்கிறாஉகள். இரவு நேரங்களில் அன்னையை வைத்திருந்த இடத்திலிருந்து முணுமுணுக்கும் சப்தம் வந்து கொண்டிருந்தது. அச்சமும் அதிசயமுங் கொண்ட அவ்வூரவஉ பொங்கலொன்றும் பூசையென்றும் பக்தி பரிமளிக்க எத்தனையோ சிறப்பாகச் செய்து வந்தாஉகள். முணுமுணுப்பு நிற்கவேயில்லை. அன்னை பேசியது யாருக்கும் புரியவுமில்லை. முணுமுணுத்த அம்மன் என்று பெயஉ சூட்டி விட்டாஉகள்.

## கூடத்தம்மன்

அக்காலப் பகுதியில் அளவெட்டியிலிருந்து ஆசார சீலஉகளாய சிலஉ அவ்வூஉகளுக்குப் போய் வருவதுண்டு. அங்குள்ளவஉகள் இவஉகளிடம் அம்பிகையைப் பற்றிப் பிரஸ்தாபித்து தங்கள் அச்சத்தையும் கூறினாஉகள். அம்பிகையை உரிய முறையில் ஆராதிக்க முடியாதென்பதை உணஉந்த அவஉகள் எடுத்துச் சென்று ஆராதிக்குமாறும் வேண்டிக் கொண்டாஉகள். அவஉகள் வேண்டுகோட்படி தேவியை கொண்டு வந்தவஉகள் அளவெட்டியில் தவளக்கிரிக் கோயிலுக்குத் தென்புறமாக

பிரதான வீதியோரம் இப்போதுமுள்ள மடத்தின் பின் புறமுள்ள வீட்டின் கூடத்தில் வைத்து வழிபடலாயினஉ. முதன் முதலில் தேவியை ஆராதித்து வந்தவஉ ஒரு சாமியாஉ என்று கூறப்படுகிறது. சாமியாஉ காலமான பின் மடத்து வளவின் பின் பக்கம் அவரை அடக்கம் செய்த இடத்தில் ஒரு சிறு சமாதி கட்டப்பட்டுள்ளது. கூடத்தில் வைத்து வணங்கியமையால் கூடத்தம்மன் என்ற பெயருங் கூடவே வழங்கலாயிற்று. இங்கு வந்த பின்பும் தேவியின் முணுமுணுப்பு நீடித்ததாகவும் பின்னஉ படிப்படியாகக் குறைந்து முற்றும் இல்லாமல் போய் விட்டதாகவும் கூறுகிறாஉகள்.

அம்பிகை அளவெட்டிக்கு வந்து சேஉந்தாலும் வட்டுக்கோட்டை சுழிபுரம் வாழ் மக்கள் நெல்லும் பூஜைத் திரவியங்களும் தேவி வழிபாட்டுக்கு அனுப்பிக் கொண்டிருந்தாஉகள். இடையிடையே வந்து வணங்கியும் சென்றாஉகள். மாவிட்டபுரம் சந்நிதி கோவில்களுக்குச் செல்லும் போதும் இங்கு தங்கி பொங்கலிட்டுப் பூஜை செய்யத் தவறுவதில்லை. அவஉகளின் வசதிக்காகவே இந்த மடம் ஏற்படுத்தப்பட்டது என்பாஉ சிலஉ முன்பு இருந்தது விரிவுபடுத்தப்பட்டது என்பாஉ சிலஉ. மடமும் காலப்போக்கில் பல மாறுதல்களைக் கண்டுள்ளது. மடத்தைக் கட்டுவித்தவஉ அளவெட்டியைச் சேஉந்த றங்கூன் நாகலிங்கம் அவஉகளின் முன்னோஉகள் ஆவாஉ. இவ் மடம் தற்போது புனரமைப்பு வேலைகள் கருதி இடிக்கப்பட்டுள்ளது.

இப்போது அம்பிகையை பிரதிஷ்டை செய்திருக்கும் தவளக்கிரிக் கோயிலுக்கும் மடத்து வளவுக்குமிடையே கோவில் தெற்கு வீதி மட்டுந்தான் உண்டு. கூடத்தம்மன் தவளக்கிரிக் கோவிலில் எக்காலத்தில் யாரால் பிரதிஷ்டை செய்யப் பெற்றாள் என்பது அறிய முடியாதிருக்கின்றது.

## காத்தவராயர் கோவில்

இத்தவளக்கிரிக் கோவில் கூடத்தம்மனைப் பிரதிஷ்டை செய்ய முன்பு காத்தவராயஉ கோவில் என்றே வழங்கி வந்திருக்கின்றது. இன்றும் தூரத்திலிருப்பவஉகள் காத்தவராயஉ கோவில் என்றே கூறுகிறாஉகள். மரபு வழி வந்த மாவைக் கந்தன் காவடிப் பாடல் ஒன்றில் "செங்கழனி சூழ் அளவை நடுவண் கோவில் அமஉ காத்தவராயன் சந்நிதியிலிருந்து துங்கமிகு காவடியை எடுத்து." என்று இக்காத்தவராயஉ கோவிலிருந்து காவடிகள் புறப்பட்டு மாவிட்டபுரம் சென்றதாகப் பாடப்பட்டுள்ளது. இன்னும் காத்தவராயஉ உற்சவ மூஉத்தியும் கழுமரமும் இன்றுங் கோவிலில் உள்ளன. பலியிடும் வழக்கமும் நீண்ட காலமாக இருந்திருக்கிறது. எது எப்படியாயினும் இப்போது தேவி முத்துமாரி கருவறையில் வீற்றிருந்து அருள் பாலித்துக் கொண்டிருக்கிறாள்

அன்னையின் கருவறையமைந்த பகுதி அளவையூரைச் சேஉந்தது. ஆயின் வடக்கு வீதி பன்னலையூரைச் சேஉந்தது. அன்னையை முதன் முதலில் வணங்கி வந்தவஉகள் வட்டுக்கோட்டை சுழிபுரம் வாழ் மக்கள். இந்த நான்கு ஊரவஉகளும் தேவியை தங்கள் குல தெய்வமாகக் கொள்ளுவதில் வியப்பேதுமில்லை. அயல் ஊரவஉகள் மட்டுமன்றி தொலைவிலிருந்தும் அன்னையின் அருள் வேண்டி வந்து கொண்டிருப்பவஉகளுக்கு அளவேயில்லை.

## பலியிடுதல்

நீண்ட காலமாக இக்கோவிலில் வேள்விக் கொடியேற்றி பலியிடும் வழக்கம் இருந்து வந்திருக்கிறது. நாமறிந்த வரையில் 1918ம் ஆண்டளவில் ஒரு மகா கும்பாபிஷேகம் நடைபெற்றிருக்கிறது. இக் கும்பாபிஷேகத்தைக் கோணேசஉ கோவிலைச் சேஉந்த சிவஸ்ரீ சரவணமுத்துக்

குருக்களவஉகள் நடத்தி வைத்திருக்கிறாஉகள். 1924இ 1925 அளவில் பலியிடுதல் நிறுத்தப்பட்டு மகோற்சவம் செய்யத் தொடங்கியிருக்கிறாஉகள். தொடஉந்து பத்து ஆண்டுகள் வரையில் மகோற்சவம் நடந்திருக்கின்றது. ஆயின் திரும்பவும் பலியிடும் வழக்கத்தைக் கொண்டு வரும் முயற்சியில் சிலஉ ஈடுபட்டமையால் பெரிய குழப்பநிலை தோன்றி மகோற்சவம் தடைப்படலாயிற்று. பலியிடும் முயற்சியும் பலிக்கவில்லை. 1935ம் ஆண்டளவில் தூபியின் திருத்த வேலைகள் செய்யப் பெற்று இரண்டாவதாக மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. தொடஉந்து சில ஆண்டுகளின் பின்னஉ திரும்பவும் மகோற்சவம் நடைபெறத் தொடங்கியது. கொடியேற்றத்திலிருந்து பத்தாம் நாள் தோறும் பதினொராம் நாள் ஆனி உத்தரத்தன்று தீஉத்தமும் நடைபெறலாயிற்று. கும்பாபிஷேகத்தையும் மகோற்கவத்தையும் பண்டித சிவஸ்ரீ மாணிக்கத்தியாகராஜக் குருக்களவஉகள் செய்து வைத்தாஉகள். 1965ம் ஆண்டு தை மாத அத்த நட்சத்திரத்தில் மூன்றாவது மகா கும்பாபிஷேகம் கோவிலில் செய்யப் பெற்ற பல திருத்த திருப்பணி வேலைகளைத் தொடஉந்து நடைபெற்றது. இக் கும்பாபிஷேகத்தை சிவஸ்ரீ ஐயம்பிள்ளைக் குருக்களவஉகள் செய்து வைத்தாஉகள்.

வீர சைவக்குருக்கள் மட்டுமன்றி பிராமணக் குருமாரும் சில சந்தஉப்பங்களில் மகோற்சவத்தில் பணி புரிந்திருக்கிறாஉகள். இதுவரையில் இக் கோவிலில் குருமராகப் பணிபுரிந்தோஉ.

சிவஸ்ரீ சரவணமுத்துக் குருக்கள்
வீரசைவஉ
பிரம்மஸ்ரீ சதாசிவக் குருக்கள்
மாதகல் பிராமணஉ
இஇ இரத்தினம் குருக்கள் வதிரி
இஇ
சிவஸ்ரீ சி.மாணிக்கத்தியாகராஜா குருக்கள்
வீரசைவஉ
இஇ ச.தற்பானந்தம் குருக்கள்
இஇ
இஇ ச.சொக்கலிங்கம் இஇ
இஇ
இஇ இராசையா இஇ
இஇ
இஇ கந்தையா இஇ
இஇ
இஇ ஐ.செல்வரத்தினம் இஇ
இஇ
இஇ சி.ஐயம்பிள்ளை இஇ
இஇ
இஇ செ.வைரவநாதன் இஇ
இஇ

இங்கு ஐந்து வீரசைவ குடும்பத்தைச் சேஉந்தவஉகள் பரம்பரையாகப் பூசை உரிமை பெற்றிருக்கிறாஉகள். சமீப காலத்தில் இங்கு பூஜை செய்பவஉகள் வீரா கமவிதிப்படி இலிங்க தாரணம் செய்தவஉகளாக இருக்க வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது.

இக்கோவிலுக்குரிய தலவிருட்சம் சரற்கொன்றை. இது வடக்கு வெளிவீதியில் வானுற வளஉந்து நிற்கிறது. ஆனி மகோற்சவ காலத்தில் பொன் போலப் பூச்சொரிந்து தேவியைப் பூசித்து நிற்கிறது. வயல் நிலங்களும் தோட்டக்காணிகளும் இக்கோவிலுக்குத் தஉம சாசனம் செய்யப்பட்டுள்ளன. இத்தகைய நிலமொன்றில் தவளக்கிரி கோவிலின் பின் புறமாக ஆதி வீரபத்திர சுவாமி ஆலயம் 1982ம் ஆண்டில் எடுக்கப்பட்டிருக்கிறது.

கோவிலின் முன்புறமும் வலப்புறமும் கோவில் தொண்டு செய்யும் இசையாளஉ மரபினரும்இ மலஉமாலை புனைவோரும்இ வேளாண் பெருமக்களுமஇ ஏனையோரும் வாழ்கின்றனஉ. சிற்ப சித்திர நுண்கலை

வல்லுநவுகளும் இங்கு வசிக்கின்றனவு. அன்னையின் அடித்தொண்டே வாழ்க்கையில் ஆக்கமெலாந் தருமென்று உறுதியாக நம்புகின்றனவு.

## உற்சவமூர்த்தி

முன்பு விநாயகவுஇ காத்தவராயவுஇ அம்பிகை மூவரும் உற்சவ காலங்களில் பவனி வரும் வழக்கம் இருந்திருக்கிறது. இப்போது அம்பிகை மட்டுமே உற்சவ காலங்களில் வீதி வலம் வருகிறாள். 1935ம் ஆண்டு நடந்த மகா கும்பாபிஷேகத்துக்கு சிறிது காலம் முன்னதாக இப்போதிருக்கும் உற்சவ மூவுத்தி உருவாக்கப்பட்டது. இவ் அம்பிகையின் அழகும் ஒளியும் அருட்பொலிவும் மிகமிகச் சிறப்பாக அமைந்திருக்கிறது. இந்த வகையில் சிற்ப சிறப்பம்சம் பொருந்திய தேவி திருவடிவம் இப்பகுதியில் இல்லையென்று சிற்ப நூல் வல்லுநவுகள் கூறுகின்றாவுகள். இச்சிலையை வடிவமைத்த சிற்பி மூன்று முளை முயன்றும் ஏதோ ஒரு ஊனம் சிலையில் ஏற்பட்டு வந்தமையால் மனம் சோவுந்து இருந்த போது அம்பிகையே ஒரு மூதாட்டி உருவில் வந்து ஆறுதல் கூறி ஆசி வழங்கிய பின் நான்காவதாக வடித்த திருவுருவம் தான் இது என்றும் இம்மூதாட்டி நிழல் கருவில் பதிந்திருந்ததாகவும் ஒரு கதை கூறப்படுகிறது.

நடராஜப் பெருமானுக்கு இங்கு தனிச் சந்நிதி இருக்கிறது. இது தெற்கு நோக்கி அமைக்கப் பெற்றிருக்கிறது. வருடத்தில் ஆறு விசேட அபிஷேக தினங்களோடு ஏனைய இரு தினங்களில் மட்டும் நடராஜப் பெருமான் வீதி வலம் வருகிறாவு. பரிவார மூவுத்திகளான விநாயகவுஇ முருகனஇ நாகேஸ்வரவுஇ வைரவவு சந்நிதிகளும் இங்கு இருக்கின்றன.

## சில வழக்கங்கள்

இக்கோவிலுக்கே சிறப்பாக அமைந்த சில வழக்கங்கள் நீண்ட காலமாக இருந்து வருகின்றன. சிவராத்திரி தினத்தன்று இரண்டாம் ஜாமப்பூசை முடிவுற்றதும் பூசகவு மூலஸ்தானத்திலிருந்து கவுப்பூரச்சட்டி ஒன்றை ஏந்தி வருகிறாவு. மங்கள வாத்தியங்கள் ஒலிக்க அது எதிரே சிறிது தூரத்திலிருக்கும் ஐயனாவு ஆலயத்துக்குக் கொண்டு வரப்பட்டு வீதி வலம் வந்து மூலஸ்தானத்தில் வைக்கப் பெற்ற பின்னரே அங்கு பூஜை நடைபெற்று பிரசாதம் வழங்கப்படுகிறது. விஜயதசமி அன்று தேவி கும்பிழாவளைப் பிள்ளையாவு கோவிலுக்குச் செல்கிறாள். அங்கு வாழை வெட்டி மகா நோன்பு விழா முடிந்து திரும்பி வரும் போது ஐயனாவு ஆலயத்திலும் வாழை வெட்டும் வழக்கம் இருந்திருக்கிறது.

பங்குனி மாதம் கோவில் குளிவுத்திக்கு வரும் பண்டங்களிலிருந்து சிறிய அளவில் சேவுத்து அயலிலுள்ள ஆலயங்களுக்கு முதல் நாள் மாலையிலேயே அனுப்பப்படுகிறது. குளிவுத்தி தினத்தன்று அதிகாலை நான்கு ஐந்து மணியளவில் சோறு ஆக்கும் முதல் அண்டா அடுப்பேற்றப்படுகிறது. இந்த அடுப்பேற்றும் வைபவத்தை ஒரு குடும்பத்தைச் சேவுந்தவுகளே பரம்பரையாகச் செய்து வருகின்றாவுகள். இவ் வழக்கங்கள் எப்போது ஏற்பட்டன என்பதைச் சொல்ல வல்லவவுகள் எவருமில்லை.

## புகழ் பாமாலைகள்

அன்னையின் அருட்பெருக்கினைப் போற்றிப் புகழ்ந்து பாடப்பட்ட பாடல்கள் சில நயமிக்கவை. ஆக்கியவவு யாரென்று தெரியாத தவளக்கிரி முத்துமாரியம்மை பதிகம்இ வழிவழி அண்ணாவிமாவு போற்றிப் பரவிய துதிப்பாடல் தொகுப்புஇ வைத்தியவு அம்பலவாணவு கதிரித்தம்பியவவுகள் செய்த தவளக்கிரி முத்து மாரியம்மன் இரட்டை மணிமாலைஇ பன்னலையூரைச் சேவுந்த

அறிஞஉ மு.பொன்னம்பலமவஉகள் இயற்றிய முத்முமாரியம்மன் திருவூஞ்சல்இ கவிஞஉ செ.கதிரேசஉபிள்ளையவஉகளின் திருப்பள்ளியெழுச்சி தவளக்கிரி முத்துமாரியம்மன் அந்தாதி என்பன குறிப்பிடத்தக்கவையாகும்.

### அற்புதங்கள்

அன்னை முத்துமாரியின் அருளுக்கு எல்லையேது. அவள் அருட்பாஉவை பெற்ற இவ்வூரில் விடந்தீண்டி மாய்ந்தவஉகள் எவருமில்லை. தொற்று நோய்களும் மக்களைத் துன்புறுத்தியதில்லை. மரத்திலிருந்து விழுந்தோஇ நீரில் மூழ்கியோ எவரும் இறந்ததில்லை. அம்மையைத் தஞ்சமடைந்தவஉகளுக்கு அல்லல் எதுவுமில்லை. பக்தியுடன் அணுகுவாஉக்கு அவள் ஒரு கற்பகம். கேட்டதெல்லாம் தருவாள். பிள்ளை வரம் வேண்டுவாஉக்கு அவள் பேரருளால் கிடைத்துவிடும். தீராத பிணிகளெல்லாம் அவள் திருவடிகள் தீஉத்து வைக்கும். அம்மை செய்த அற்புதங்கள் அனேகம் அனேகம். சிவராத்திரி தினத்தன்று விரதமனுஷ்டிக்க வந்தவஉகளில் சிலஉ தேவி வெண்பட்டுடுத்தி மின்னுமொளியுடன் சஉவாலங்கார பூஷிதையாக மூலஸ்தானத்தில் உலவியதை நேரில் கண்டிருக்கின்றனஉ. பூசகஉ கணபதிப்பிள்ளையின் மகள் மறுநாள் புதிய வெண்பாட்டு எடுத்து வந்து தேவிக்கு அணிவித்த பின்னரே உணவு உட்கொண்டாராம். தேவியின் வாயிலில் வந்து பொய்ச் சத்தியம் செய்தவஉ அனுபவித்த தண்டனைகள் சொல்லுந் தரமன்று. மகோற்சவத்தில் ஒரு விழாவைச் செய்பவஉ விழா பற்றி ஏனோதானோ என்றிருக்க பின்னிரவு இவஉகள் தோட்டத்துக்கு இறைத்த நீஉ முழுவதையும் மாடாக வந்து பருகிய மாயமும்இ விழாவொன்றுக்கு அலங்கரிக்க வாழை தருபவஉ ஒருதரம் மறுத்த போது அப்போது வீசிய சிறு காற்றில் அவஉ தோட்டத்தில் மட்டும் நின்ற வாழைகள் அத்தனையும் சாயச் செய்த அதிசயமும் அம்மை செய்த திருவிளையாடல்கள். சமீப காலத்தில் குளிஉத்திக்கு இளநீஉ கேட்டுச் சென்ற போது தர மறுத்த ஒருவரின் தென்னையில் இருந்த இளநீஉ மட்டுமன்றி குரும்பை முதலாக அத்தனையும் மறுநாள் விடிகாலை வீழ்ந்து விட்டன.

அன்னையிடம் ஆரா அன்பு பூண்ட தவில் மேதை தெட்சணாமூர்த்திக்கு வித்வத் சபையில் வெற்றி கிடைக்க கனவில் தோன்றி அவஉ கைவிரலில் புதுப்புது வித்தைகளைப் புகுத்திய விந்தையும் உண்டு. அன்னை தனக்கு அளிக்கும் வாசிப்புக்களை மீள வாசிக்க முடிவதில்லை எனவும் இவர் கூறுவார். கோவில் "உல்"லுக்கு ஈயம் வாஉக்கும் போது கண்களில் ஈயம் தெறித்து அதனால் கண்பாஉவை இழந்த கரக ஆட்ட வல்லுநஉ ஐயாத்துரை பிடிவதமாகத் தேவியின் தீஉத்தத்தையே மருந்தாக விட்டுக்கொள்ள அவஉ கண்பாஉவை பெற்ற கண்கட்டு வித்தையும்இ கோலிவில் பல தொண்டுகள் செய்தவஉ கண்பாஉவையிழந்து வைத்திய வகையால் பயன் கிடையாது போகவே தினமும் தேவி வாயிலில் வந்து அன்னையோடு அன்போடு பேசியே கண்பாஉவை பெற்றதுவும் குறிப்பிட வேண்டியவையாகும்.

வட்டுக்கோட்டையைச் சேஉந்த வல்லிபுரம் என்பவர் ஈசான மூலையில் உள்ள கிணற்றை வெட்டினாஉ. ஏதோ காரணத்தால் தண்ணீஉ காணும் வரை வெட்ட முடியவில்லை. பருத்தித்துறையிலிருந்த கந்தையா என்பவரிடம் தேவி கனவில் தோன்றி தாகத்துக்குத் தண்ணீஉ கிணற்றிலிருந்து மொண்டு தருமாறு கேட்க அவஉ கிணற்றைப் பாஉத்த போது தண்ணீஉ இல்லாமை கண்டு திகைத்து நிற்க "வாளியை விடு தண்ணீஉ வரும்" என்று கூறி அவஉ எடுத்துத் தந்த

தண்ணீரைப் பருகி தவளக்கிரிக் குறிப்பைக் காட்டி மறைந்திருக்கின்றாள். மறுநாள் தவளக்கிரி வந்து சேஉந்தவஉ கனவில் கண்ட அதே கிணற்றைக் கண்டு அதிசயித்துஇ தேவியின் திருவிளையாடலை நினைந்து மெய்சிலிஉத்து கிணற்றை முழுமையாக வெட்டி வேண்டிய வசதிகளை செய்து வைத்திருக்கிறாஉ.

கோவில் தேவைக்காக இருப்பை மரமொன்றைத் தருமாறு பிறமதத்தவஉ ஒருவரிடம் கேட்ட போது அவஉ மறுத்துவிட்டாஉ. சில தினங்களில் அவஉ குடும்பத்தவஉ அத்தனை பேருக்கும் சின்னம்மை வேதனையால் அவஉகள் வருந்த அயலவஉ தேவியின் திருவிளையாடலைச் சுட்டிக் காட்டிய போது தான் செய்த தவறுக்காக வருந்திய அவஉ ஆளனுப்பி இலுப்பை மரத்தைத் தறிக்குமாறு கேட்டுக் கொண்டாஉ.

குளிஉத்திக்குத் தந்த அரிசியுடன் தவறுதலாகச் சேஉந்து போன குழந்தையொன்றின் காதணிகள் ஆயிரம் ஆயிரம் மக்கள் உண்ணும் சோற்றில் போகாது அக்குழந்தையின் பாட்டனாஉ அண்ணாவி வல்லிபுரம் கொண்டு வந்த குளிஉத்தி சோற்றிலேயே வெளிவரச் செய்ததும் அன்னை புரிந்த அற்புதங்களில் ஒன்று.

சிவஸ்ரீ சண்முகம் பூசகஉ வாழ்க்கையில் தேவி விளையாடிய சுவையான செய்தி ஒன்று. அப்போது சிறுவஉ சண்முகம் சாதாரண பூசகஉ ஆனால் பக்திப் பயித்தியம். தேவி பூசையில் சிறிய தவறும் செய்யமாட்டாஉ. வழக்கம் போல ஒரு நாள் வட்டுக்கோட்டை சென்று நெல்லோஇ அரிசியோ பெற்றுக் கொண்டு வர நேரமாகிவிட்டது. பூஜை நேரம் போய் விட்டது. அவசர அவசரமாக குளித்து அமுது பொங்கி வைத்து விட்டு கஉப்பக்கிரக கதவின் பூட்டை திறந்தாஉ கதவைத் தள்ளினாஉ. கதவு திறபடவில்லை. பலங் கொண்ட மட்டும் தள்ளிப் பாஉத்தாஉ: பயன் இல்லை. கும்பிட வந்தவஉகளும் முயன்றாஉகள். கதவு திறபட மறுத்தது. சண்முகத்தாருக்குப் பயம் வந்துவிட்டது. கூடவே அழுகையும் வந்தது. அங்கேயே விழுந்து புலம்பினாஉ. " அம்மா தாயே! உனக்காகத் தானே சென்று இந்த உச்சி வெயிலில் திரும்பி வந்திருக்கின்றேன். சற்று நேரம் தாமதத்துக்காக என்னைத் தண்டிக்கிறாயா? என்று வேண்டினாஉ. ஆவேசம் வந்தவஉ போல் எழுந்து சென்றவஉ கதவைத் தொட்டதும் கதவு தானாகவே திறந்து கொண்டது. நின்றவஉகளும் மெய்மறந்து நின்றாஉகள். அன்று சண்முகத்தாஉ செய்த பூசையைப் பற்றிச் சொல்ல வேண்டுமா. தேவி விளையாடிய சின்ன விளையாட்டு இது. இச்செய்தியை சமீப காலத்தில் சிவஐக்கியப் பேறுபெற்ற சிவஸ்ரீ ஐயம்பிளைக் குருக்களவஉகள் கூறும் போது அவஉ கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீஉ சொரிந்தது.

அளவெட்டியைச் சேஉந்த தேவி பக்தஉ ஒருவஉ மன்னாஉ செட்டிக் குளத்தில் வசிக்கின்றாஉ. தவளக்கிரிக் கோயிலிலிருந்து ஒரு கல்லை எடுத்துச் சென்று தேவியாக வைத்து வணங்கினாஉ. குறுகிய காலத்தில் அன்னை முத்துமாரியின் அருள் அங்குள்ளாஉ அனைவருக்கும் கிடைக்கவே இன்று அங்கு தவளக்கிரி முத்துமாரியம்மன் கோவில் உருவாகிவிட்டது.

வெண்மையான சிகரங்களைக் கொண்டிருப்பதனால் இமயமலைக்கு தவளக்கிரி என்றும் பெயருண்டு. இமயத்தின் திருச்செல்வி பாஉவதி. பாஉவதி தேவியின் ஒரு அம்சமான அன்னை முத்துமாரி எங்கள் தவளக்கிரியிலிருந்து அருயாட்சி செய்து வருகிறாள்.

தவளக்கிரித் தாயைப் பணிந்து சஞ்சலம் தீர்த்திடுவோம்.

- வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம் -

# வெளிவயல் முத்துமாரியம்மன் ஆலயம்



புண்ணிய பூமியாகிய ஈழவள நாட்டில் யாழ்ப்பாணப் பகுதியில் கலைச் செல்வமும் தெய்வீகச் செல்வமும் நிலவளம் நீர்வளங் களும் நிறைந்து விளங்கும் எம் அளவெட்டி கிராமத்தின் தென்பால்இ வயற்கரை ஒரத்தில் மணிவண்ணக்கோயில் கொண்டு கொலு வீற்றிருக்கிறாள் ஸ்ரீ முத்துமாரியம்மை.

இவ்வாலயத்தின் பூர்வ வரலாறு மிக அற்புதமானது. சுமார் 250 ஆண்டுகட்கு மேற்பட்ட புராதனமுடையது. நோய் நீக்கி போய் நீக்கி இஷ்ட சித்திகள் கொடுத்து தொண்டர் களுக்கு உறுதுணைத் தாயாக விளங்கினார் எம் அம்பிகை.

மாகியம்பிட்டி சண்டிலிப்பாயைச் சேர்ந்த அங்கணம்மைக் கடவை என்னும் மேட்டு நிலத்தில் ஆலமர நிழலில் பெண் கூட்டம் ஒன்று இளைப்பாற வந்தது. கடின வெய்யில் தாகந்தீர்க்க எண்ணினர். வயலில் உழவு செய்து கொண்டிருக்கும் மக்களை அழைத் தனர். தாகந்தீர இளநீர் தருவீர்களா? என்றனர். கமக்காரர் 3 இளநீர் மாத்திரம் தேடிப்பறித்து வந்தனர். ஆனால் அங்கே வந்தவர் 4 பேர் இன்னும் ஒரு இளநீர் இல்லையே யாது செய்வோம் என்று கமக்காரர் மனக்கவலைப்பட்டனர். "மக்களே கவலை வேண்டாம் யான் அதோ மாட்டுக்கூட்டம் நிற்குமிடம் சென்று பால் வாங்கிக் குடிப்பேன்" என்று வடக்கே சென்றார் ஒரு நரைத்தலைக் கிழவியார். அந்தக்கிழவி வந்தமர்ந்த இடம் வெளிவயல் ஓரத்தில் நின்ற ஒரு வேப்ப மரநிழல். மாட்டுக்காரன் ஒருவனை அழைத் தாள் அப்பா மகனே உனது மாட்டிலிருந்து கொஞ்சப்பால் எடுத்துத் தரமாட்டாயா? தாகந்தீர குடிக்க வேண்டும் என்றாள் கிழவி. அம்மா தாயே இங்கு பத்து வருடமாக மழை யில்லை குளங்களில் நீரில்லை பயிரினம் விளையவில்லை பசும் புல்லின் நிறங்கள் கூட இல்லை. இந்நிலையில் பசுக்கூட்டம் நிற்கும் நிலைமையைப் பாருங்கள் ஆச்சிஇ ஈன்ற கன்றுக்கு பால் கொடுக்க முடியாமல் கன்றைப் பார்த்து தாய்ப்பசு அழுகிறது. என்ன செய்வேன் தாயே என்றான் அம்மனிதன்.

நரைக்கிழவி மிகமிக மெலிந்த பசு வொன்றைக் குறிப்பிட்டுப் பார்த்தாள் உடனே அந்தப்பசு கொழுத்த மேனியும் – பால் ததும்பும்

முலைக்காம்பும் கண்கவரும் முகப்பொலிவும் கொண்டு கிழவியாரிடம் வந்து சொந்தங் கொண்டாடியது. மடியைத் தொட்டாள் கிழவி பெருகியது பாலாறு வயிறாரக் குடித்தாள் மாட்டிடையானும் கையேந்தி வேண்டும் மட்டும் குடித்தான். உள்ளம் பூரித்தான். வந்தவள் மானிடப் பெண்ணல்லள் அகிலாண்டேஸ் வரியே என்று ஆனந்தக் கூத்தாடினான். கிழவியைக் காணவில்லை "ஆச்சி ஆச்சி" எங்கே போய்விட்டாய் என்று கத்தினான். திடீரெனக் காட்சி தந்தாள் எம்பெருமாட்டி. மகனே என் பெயர் முத்துமாரி என் சகோதரி களுடனே வந்தேன் அவர்கள் அங்கணம்மைக் கடவையில் தங்கிவிட்டார்கள். அவர்கள் மீனாட்சி, நாகேஸ்வரி, கண்ணகி என்பவர்கள். யாம் திருவிளையாடலின் பொருட்டு இவ்விடம் வந்தோம் இனி மாதம் மும்மாரி பெய்து நிலவளம் செழிக்கும் நீயும் ஊராரும் என்னை ஆதரித்தால் உங்கள் குறைகளெல்லாம் தீரும் என்று கூறி அந்தக் கிழவி மறைந்தாள். முற்பிறப்பில் பெரும் புண்ணியம் செய்த அத்தொண்டன் அந்த வேம்பின் கீழ் ஸ்ரீ முத்துமாரியை நினைத்து பூசித்து வந்தான். அவ்விடம் காலகதியில் சிறு கோயிலாகியது. பின் கல்லாற் கட்டிய பெருங் கோயிலாகியது. அந்தக் கோயிலில் ஸ்ரீ காஞ்சிபுரத்திலிருந்து அம்பிகையின் சிலையைக் கொண்டு வந்து பிரதிஷ்டை செய்தார்கள். சுமார் 250 வருடங் களுக்கு மேற்பட்ட கால எல்லையை உடைய இவ்வாலயத்தில் முதற் கும்பாபிஷேகம் நடந்த காலம் தெரியாமலிருந்தது. பலியிடுதல், பொங்கல் பூசை, 8 நாள் விழாக்கள் இவை ஆனி மாதத்தில் நிகழ்ந்து வந்தன. இக்காலம் இவ்வாலய தர்மகர்த்தாவாக விளங்கும் புண்ணியவாளன் திரு.சி.சண்முகநாதன் அவஉகள் பல அன்பரின் வேண்டுகோளுங் கிணங்கி 1967 ஆம் ஆண்டு பலி நிறுத்த ஏற்பாடு செய்து எம்பெருமாட்டிக்குத் திரு வூஞ்சலும், ஊர்வலமும் மேற்கொண்டு பக்திப் பிரவாகம் சிறக்க வழி செய்தார்.

பக்தர் கூட்டம், தொண்டர், கூட்டம் பெருகியது. திருத்தேர்ப்பணி, தேர்முட்டிக் கட்டடம்இ புதுக்கோயில் கட்டும் பணி இவற்றைத் தொண்டர்கள் கூடிப்பகுதி பகுதியாக ஒப்பேற்றுகின்றனர்.

அருட்செல்வி முத்துமாரிக்கு புதுக்கோயில் கட்டப்பட்டுப் கும்பாபிஷேகம் 31.08.84 வெள்ளிக்கிழமை உதயம் இனிது நிறை வேறியது. பரிவார மூர்த்திகளாக ஸ்ரீகணேசர், ஸ்ரீமுருகன், ஸ்ரீவைரவர் ஆகியோர் அமர்ந்துள்ளனர். 04.05.2001 அன்று அடுத்த கும்பாபிஷேக விழா நிகழ்ந்தது. அடியேனின் 6 மாத குழந்தைப் பருவத்தில் மரணத்தறுவாயில் இருந்த போது உயிர்ப் பிச்சை தந்த கிழவி இந்த முத்துமாரித்தாய் என என் தாயார் கூறிய வாக்கையும் அடியார்க்கு ஞாபகப்படுத்தி ஸ்ரீ முத்துமாரியம்மையின் அடியிணைகளைப் போற்றுகின்றேன்.

**அருட்கவி. சீ. விநாசித்தம்பி**

# நாகவரத நாராயணர் ஆலயம்



சங்கானை - வல்லை வீதியில் அளவெட்டிக் கிராமத்தின் மேற்குப்புறமாக அளவெட்டி அருணாசலம் வித்தியாசாலைக்குச் செல்லும் வழிக்கு எதிராகச் செல்லும் ஒழுங்கையில் சுமார் 300 யார் தூரத்தில் ஸ்ரீ நாகவரதநாராயணர் தேவஸ்தானம் அமைந்துள்ளது. வைணவ சமயத்தின் சிறப்புக்களையும் அளவெட்டி மக்களது பக்தியையும் மேன்மைப்படுத்து வதற்கு பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் தாமே வந்தமர்ந்து அருள்பாலித்துக் கொண்டிருக்கும் திருத்தலமே இதுவாகும்.

அருட்கவியரசு கலாநிதி. சீ. விநாசித்தம்பிப் புலவரால் ஸ்தாபிக்கப்பட்ட இத்திருத்தலம் அமைந்திருக்கின்ற இடமானது ஆரம்ப காலங்களில் பற்றைகளும் பாம்புப் புற்றுக் களும் நிறைந்து விளங்கியது. இவ்விடத்திற்கு அருகில் செல்லவே எல்லோரும் அஞ்சினர். ஆனால் 1950களில் அருட்கவி ஐயா அவர்கள் பணங்கொடுத்து அந்த நிலத்தை வாங்கினார். அங்கே ஒரு கிணறும் அதன் அருகில் பாம்புப் புற்றின் மேலிருந்த சூலத்தையும் கண்ணுற்று அதற்குக் கொட்டிலமைத்து ஆதரிக்கத் தொடங்கினார்.

அருட்கவி ஐயா அவர்கள் தெய்வீக அருள் கைவரப் பெற்றவர் என்பதனால் பின்னர் நிகழப்போகின்றவைகளை நன்குணர்ந்து சிறிய ஆலயமாக அமைத்து அதனை நாகவரதநாராயணர் என்ற பெயரில் பூசை வழிபாடுகளை மேற்கொண்டு பரிபாலித்து வந்தார். காலப்போக்கிலே தனது உத்தியோகத்தின் மூலம்கிடைத்த வருமானத்தை ஆலயப் புனருத்தாரணப் பணிகளுக்குச் செலவிட்டு 1980களில் தற்போது அமைந்திருக்கும் வைணவ ஆகம முறைக்குட்பட்ட திருச்சந்நிதானத்தை உருவாக்கி குடமுழுக்கும் செய்து வைத்தார். ஆரம்பத்தில் ஆவணி மாத ரோகினி நட்சத்திரத்தில் பொங்கல் படைத்து வழிபாடு செய்து வந்தமையால் தற்பொழுது வருடாந்த மகோற்சவத்தில் தேர் உற்சவம் ஆவணி மாத ரோகினி நட்சத்திரத்திலேயே நடைபெற்று வருகிறது. ஆலயத்திலே மூலமூர்த்தியாக

நாகவரதநாராயணர் இருந்தாலும் சுற்றுப் பரிவாரங்களிலே அவரவர் இஷ்ட தெய்வங் களாகிய ஆஞ்சநேயர், துர்க்கை, சனிஸ்வரன், மகாலஷ்மி, முருகன், நடேசர், வைரவர், கணபதி ஆகிய தெய்வங்களுக்குரிய சந்நி தானங்களும் அமைந்துள்ளன. உட்பிரகாரம், வெளிப்பிரகாரம் ஆகிய இரண்டு பிரகாரங் களைக் கொண்டு விளங்கும் இவ்வாலயத்தில் அருட்கவி ஐயாவின் காலத்தில் நிகழ்ந்த திருப்பணிகள் எண்ணற்றவை.

1) புதிய சித்திரத்தேர் அமைப்பும் தேர் முட்டி உருவாக்கமும்.
2) ஆலய முகப்பில் மேற்கொள்ளப்பட்ட அலங்கார வேலைப்பாடுகள்.
3) வெளிப்பிரகார விஷ்தீரணம்.
4) ஆலயத்திற்கான பௌதீக வளக் கொள்வனவுகள்.
5) புதிய வாகனங்கள் உருவாக்கப்பட்டமை.
6) தொண்டர் சபையின் உருவாக்கம்.

ஆகியவை இவ்வாறு குறிப்பிடக்கூடிய சில நன் முயற்சிகளாகும். அம்பிகையின் அருள் பெற்ற அருட்கவி அவர்கள் ஆலயத்தில் பல அருட்செயல்களை நிகழ்த்தியிருக்கின்றார்.

1) நான்கு வயதுள்ள துரைச்சாமி சிவசுதன் என்ற சங்கானையைச் சேர்ந்த பையன் இறந்துவிட்டான். வைணவ சமய பக்த ராகிய அவனது தந்தை அவனது உடலை நேரடியாக வைத்தியசாலையில் இருந்து கொண்டுவந்து ஆலயத்திற் போட்டு கதறியழுதார். காலநேரப் பூஜை வழிபாடு களை நிறைவு செய்து அருட்கவி அவர்கள் வந்து விபரத்தைக் கேட்டுவிட்டு தீர்த் தத்தை எடுத்து பையன் மீது தெளித்துவிட்டு வீடு கொண்டு செல்லுங்கள் எனக் கூறினார். உடனே பையனும் தூங்கிவிட்டு எழுபவன் போலே எழுந்தமை ஊர் மக்கள் யாவரும் அறிந்த அற்புதமே.

2) ஆலயத்தில் உள்ள ஸ்ரீரங்கத்திற்கு உருகில் இருக்கின்ற சிவப்பு மலர் பூத்த மந்தாரை விருட்சம் அருட்கவியின் வேண்டுதலால் வெண் மலர் பூத்தது. இன்றும் வெண்மலரே பூக்கின்றது.

3) அம்பிகையின் தூபியிலிருந்து கடும் கோடை காலத்திலே ஒரு வார காலத்திற்கு ஆகாயத் தீர்த்தம் வடிந்தோடியது. அதனைப் பலர் எடுத்துச் சென்று தீராத நோய்களையும் தீர்த்தனர்.

4) புரட்டாதி மாத சங்காபிஷேகத்திற்கு எங்கும் தேடியும் கிடைக்காத பலாப்பழம் கொக்குவிலில் ஒரு வீட்டிலிருந்து ஒரு அன்பர் மூலம் கிடைக்கப்பெற்றது. அதனைக் கொண்டுவந்து கொடுத்தவர் திருமதி. ஞானாம்பிகை சோமசுந்தரம்.

5) திருமணமாகியும் பத்து வருடங்களாக சந்தான பாக்கியம் இல்லாத பெண்ணொ ருத்தி தற்கொலைக்கு முயன்று உறவி னர்களால் காப்பாற்றப்பட்டு ஆலயத்திற்கு அழைத்துவரப்பட்டாள். காலைப் பூஜை யில் தன் குறையைச் சொல்லி அழுது போது அவளுக்கு அடுத்த வருடமே புத்திரபாக்கியம் நாராயணர் அருளால் கிடைத்தமையும், இப்பெண்ணைப் போன்றே இன்னும் பல பெண்கள் சந்தான விருத்தியை இவ்வாலயத்தில் வழிபட்டுப் பெற்றிருக்கிறார்கள்.

இவ்வாறு புராண காலத்தில் சிறப்புப் பெற்று விளங்கிய தென்னிந்திய, வட இந்தியத் திருத்தலங்களைப் போன்று அற்புதங்கள் பல நிகழ்ந்த திருத்தலமாக நாகேஸ்வரம் நாக வரதநாராயணர் தேவஸ்தானமும் விளங்கு கின்றது.

❖ ❖ ❖



எஸ். இராதாகிருஷ்ண அம்மா
சிங்கப்பூர்.

# கிறிஸ்தவ தேவாலயங்கள்

## புனித சூசையப்பர் தேவாலயம்

அளவெட்டியில் இரண்டு கத்தோலிக்க ஆலயங்கள் உள்ளன. அவற்றுள் புனித சூசையப்பர் ஆலயம் மிகவும் பழமைவாய்ந்ததாகும். பழமை வாய்ந்த இந்த ஆலயம் 1700ஆம் ஆண்டின் முன்பாகக் கட்டப்பட்டது.

நூற்றைம்பது வருடங்களுக்கு முன்பு அளவெட்டி புனித சூசையப்பர் ஆலயம் அரசத்தின முதலியார் என்பவருக்குச் சொந்தமான நிலத்திலே அமைக்கப்பெற்றது. இந்த நிலம் கும்பழாவளைப் பிள்ளையார் கோயிலுக்கு அண்மையில் இருந்தது. அளவெட்டி புனித சூசையப்பர் ஆலயத்திலே கோவாவைச் சேர்ந்த அறுக்கஞ்சி நாடார் எனும் குருவானவர் ஒருவரின் உடல் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

1873ஆம் ஆண்டு இக்குருவானவரின் எலும்புகள் எடுத்துவரப்பட்டு இப்போதுள்ள இடத்தில் ஆலயம் அமைக்கப்பட்டது. பழைய ஆலயத்தின் இடிபாடுகளை இன்றும் காணக்கூடியதாக உள்ளது. இப்போதைய ஆலயம் 1952ஆம் ஆண்டே கட்டப்பட்டது. வணக்கத்துக்குரிய பிதாவின் கல்லறையும் இந்த ஆலயத்தின் பின்புறமாக உள்ளது. 30 கத்தோலிக்க குடும்பங்கள் இந்த ஆலயத்திற்கு உரித்தானவர்களாக இருந்து வந்தனர். எனினும் யுத்த அவலம் காரணமாக பலர் இடம்பெயர்ந்துபோக சிலர் மட்டுமே எஞ்சியுள்ளனர். புனித சூசையப்பர் உழைப்பாளிகளின் காவலர் ஆவார். இதனால் அவருடைய திருநாள் மே மாதம் முதலாம் திகதி கொண்டாடப்படுகிறது.

சிறிய எண்ணிக்கையிலேயே கத்தோலிக்க குடும்பங்கள் அளவெட்டியில் இருந்தாலும் இவ்வாலயத்தின் மகிமையினால் இரண்டு அருட்தந்தையரையும் ஐந்து அருட்சகோதரிகளையும் அளவெட்டிப் பங்கு தந்துள்ளமை பெருமைக்குரிய விடயமே. தற்போது இந்த ஆலயத்தின் பங்குத் தந்தையாக வணக்கத்துக்குரிய அன்ரன் புனிதகுமார் அடிகளார் திகழ்ந்து வருகின்றார்.

## புனித செபஸ்தியார் தேவாலயம்

அளவெட்டிக் கிராமத்திற்கும் மாகியப்பிட்டி பகுதிக்கும் பொதுவான தேவாலயமாக இது அமைந்துள்ளது. அளவெட்டி தெற்கு ரோமன் கத்தோலிக்க தமிழ்க்கலவன் பாடசாலையும் இத் தேவாலயத்தின் வளாகத்தினுள்ளேயே அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. வருடந்தோறும் ஜனவரி மாதம் 20ஆம் திகதி இவ்வாலயத்தின் திருநாளாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இவ்வாலயத்தைச் சூழவும் ஏராளமான கிறிஸ்தவ மக்கள் வாழ்ந்து வருகின்றனர்.

## தென்னிந்தியத் திருச்சபைத் தேவாலயம்

அளவெட்டியிலுள்ள கத்தோலிக்க மதம் சாராத கிறிஸ்தவ தேவாலயங்களுள் மிக முக்கியமானதாக இத்தேவாலயம் திகழ்கின்றது. குருமனை மற்றும் ஓர் மழலைகள் முன்பள்ளி, சிறுவர் பகல் பராமரிப்பு நிலையம், என்பவற்றையும் கொண்டு இறை பணியோடு சமூகப் பணியும் ஆற்றும் தேவாலயமாக இது விளங்குகின்றது. அண்மையில் ஏற்பட்ட மாற்றங்களின் விளைவாக இவ்வாலயத்தின் உறுப்புரிமை மற்றும் உரித்துரிமை என்பன மாற்றங்களுக்குள்ளானதாக அறிய முடிகிறது.

# நன்றிக்குரியோர்

**நிதி அனுசரணையில்**

திரு.திருமதி.சிவபாலன் தம்பதிகள்
மற்றும் பிள்ளைகள்– சுவிஸ்

**தட்டச்சுப் பணியில்**

அன்ரா கஜன்
செ.தனராஜ்
எஸ்.இராதாகிருஸ்ண சர்மா
சர்வேஸ்
ரமணண்

**சரவை பார்ப்பில்**

கை.சரவணண்
க.நாகலிங்கம்
க.அருளம்பலம்

**ஆக்க எழுத்தில்**

பண்டிதர் க.நாகலிங்கம்
ஆசிரியர் க.அருளம்பலம்
வை.சுப்பிரமணியம்
பி. எஸ்.இராதாகிருஸ்ண சர்மா
பா.பிரதீபன்
திருமதி.சங்கீதா பிரதீபன்
இ.சர்வேஸ்வரா
சா.தணிகாசலபதி
வே.சிவராஜா
கை.சரவணண்
ஆசிரியர். மு. செல்லையா

**நூல் வடிவமைப்பில்**

சர்வேஸ்
அன்ரா கஜன்

**அச்சுப்பதிப்பில்**

அன்ரா பதிப்பகம்,
கோண்டாவில்

**அட்டைப்பட வடிவமைப்பில்**

வைத்தியகலாநிதி சி.பிரதீபன்

**புகைப்படத்தில்**

விமல்
குட்டி
சிவா
சர்வேஸ்
நாகவரன்

**தரவு இணைப்பில்**

பூச்சொரியும் பொன்னொச்சி மலர்
www.alaveddy.ch
www.jaffnareview.com
பொன்மலர்

**தோன்றாத் துணையான எல்லோருக்கும் பொதுவான இறைவன்**



பண்டிதர் க. நாகலிங்கம் பண்டிதர் பட்டப்படிப்புக்கும் மேலாக தமிழ் இலக்கண, இலக்கிய நூற்பயிற்சி பெற்றவர். புலவர்மணி க.சு. நவநீதகிருஷ்ணபாரதியார் முதலாம் பேரறிஞர்களிடத்தே படித்து அவர்களது பாராட்டைப் பெற்றவர். தொல்காப்பியம் முதலாய பழந்தமிழ் இலக்கண, இலக்கியங்களிலும் ஆழ்ந்த அறிவும் தெளிவும் பெற்றவர். தமிழ் வளர்ச்சியில், தமிழ்ப் பணியில் மிகுந்த அக்கறை உடையவர். இலக்கண, இலக்கியங்களில் வல்ல கலாநிதி பண்டிதமணி கணபதிப்பிள்ளை ஐயா அவர்களின் பின் தமிழிலக்கண, இலக்கிய சந்தேகங்களை போக்குதற்கு ஏற்ற ஒருவராக பண்டிதர் க. நாகலிங்கம் அவர்களைக் காண்கின்றோம்.

கவியோகி அருட்கவி
சீ. விநாசித்தம்பிப் புலவர் M.A.



உண்டி கொடுத்து உயிர் காக்கும் உழவர்கள் இயல், இசை, நாடக முத்தமிழ் வித்தகர்கள், கல்விப் பேரறிஞர்கள், அருளாளர்கள், ஞானிகள், சமயச் சான்றோர்கள், சட்டத்தரணிகள், நீதவான்கள், சிற்ப, ஓவிய தொழில்நுட்ப வல்லுநர்கள், அரசியல் பிரமுகர்கள், பாரம்பரிய நவீன வைத்திய நிபுணர்கள் முதலாக ஒரு நாட்டுக்கிருக்கவேண்டிய அத்தனை துறைசார் தக்கார்களும் அன்று முதல் இன்று வரை வாழும் பெருமை மிக்க பேரூர் அளவெட்டி. இத்தனை உண்மைகளையும் ஆவணப் படுத்தி அடுத்த தலைமுறையினரிடம் கையளிக்கும் பொக்கிஷமான "வேரூன்றி விழுது பரப்பும் ஆலமரம்" என்னும் இந்நூலை ஆக்க முற்றும் பொருத்தமானவரான மூதறிஞர், பண்டிதமாமணி க. நாகலிங்கம் அவர்கள் எழுத, அளவெட்டியின் இதய நாதமான மகாஜனசபை வெளியிடுவது பொன்னின் குடத்திற்குப் பொட்டு வைத்தது போன்று என்றும் நிலைத்து நிற்கும் செயற்கரிய செயல் எனப் போற்றாது இருக்கமுடியாது.

சைவப்புலவர் சு. செல்லத்துரை

